# கிருஷ்ண தந்திரம்!

*'மன்னார் தன்னை ஒரு பாகவதனாகவோ, இசையை கசடறக் கற்ற ஒரு வித்வானாகவோ எல்லாம் கருதவில்லை; அப்படிக் கருதவும் அவனுக்குத் தெரியாது. வாழ்க்கை போகிற போக்கில் போகின்ற ஒரு சாமான்ய னான அவன், அதே போக்கில்தான் அந்தப் புல்லாங்கு ழலை எடுத்து வாசிக்கவும் செய்தான். ஆனால் தேனை தெரிந்து குடித்தாலும், தெரியாமல் குடித்தாலும் அது எப் படி இனித்தே தீருமோ அப்படியே அவனது இசைக்கும் ஒரு சக்தி இருந்து, அது விலங்குகளைக்கூட மயங்கச் செய்துவிட்டது. மாட்டுக்காரனின் மாடுகள் மட்டுமல்ல, ஊரில் இருக்கும் மாடுகள் எல்லாமும் மன்னார் வாசித்த படி அமர்ந்திருக்கும் ஊரின் எல்லைப் புறம் நோக்கியே செல்ல ஆரம்பித்தன. ஊரே அதை ஆச்சரியமாகப் பார்த் தது.*

*ஆடு, மாடுகளே எனக்கென்னவென்று போகும்போது ஊர்க்காரர்கள் சும்மா இருப்பார்களா? அவர்களும் அந்த ஆடு, மாடுகளைப் பின் தொடர்ந்து சென்றனர். மன்னார் மட்டும் வாசித்துக் கொண்டே இருந்தான்.*

*கிட்டத்தட்ட ஊரே காலியாகிவிட்ட நிலையில், குளித்துவிட்டு வருவதாகக் கூறிச் சென்ற அந்த மாட்டுக் காரன் மட்டும் ஊர்ச்சபைத் தலைவர் வீட்டு முன் போய் நின்றிருந்தான்!'*

அதிர்வுடன் நின்ற ஷ்யாமளா முன்னாலும், திண்ணப்ப பூசாரி மற்றும் அன்பு மணி முன்னா லும் வந்து நின்ற வைராகி, அவர்களை சற் றும் பொருட்படுத்தாத வர்போல சன்னதிக்குள் இருக்கும் திரௌபதி யின் மரப் பெட்டியைப் பார்த்து ஒரு கும்பிடு போட்டார். பின்னர் தான் திரும்பி அவர் களை ஒரு பார்வை பார்த்தார். பூசாரியி டம் ஒரு குறுகுறுப்பு...



"சாமி யாரு? எங்க ஊர் விஷய மெல்லாம் உங்களுக்குத் தெரிஞ்சி ருக்கே!" என்று பேச்சை ஆரம்பித் தார்.

"நான் யாரா...? அதான் என் னைப் பத்தி இந்த ஊரே பேசறதே... வைராகின்னு மட்டும்தான் நான் என்னைப் பத்திச் சொன்னேன். ஆனா மாயாவி, மாந்திரிகன், பிச் சைக்காரன்னு எனக்குதான் இந்த ஊருக்குள்ள எவ்வளவு பேர்?"

"அது சரிதான்... ஒரு வகையில நீங் கதானே எல்லாரையும் பேச வைக்க றீங்க? இந்த ஊருக்கு வந்து இங்கேயே சுத்திச் சுத்தி வர்ற நீங்க எதுக்கு வந்திருக்கீங்கன்னு சொல்ல ணுமா, வேண்டாமா?" -திண்ணப்ப பூசாரி சற்று திட மாகவே கேட்டார்.

"ஓஹோ... அப்படிச் சொல்லலேன்னா கண்டபடி நீங்க பேசுவீங்களோ?"

"அப்படி இல்லீங்க சாமி... நீங்க வந்ததுல இருந்து தானே ஊருக்குள்ளேயும் தப்பு தப்பா பல விஷயங்க நடந்துச்சு?"

பூசாரியும், வைராகியும் பேசுவது ஷ்யாமளாவைப் பெரிதாக ஈர்க்கவில்லை. அவளுக்குள் தனது பிறப் பைப் பற்றி அவர் கூறிய அந்த விஷயம்தான் பிரதான மானதாக மாறியிருந்தது. முதலில் தனக்கு 'திரௌ பதி' என்கிற ஒரு பெயர் இருப்பதையே அவளால் ஜீர ணிக்க முடியவில்லை.

வைஷ்ணவ சம்பிரதாயத்தில் பெயரிலே இருந்து அனுஷ்டானங்கள் வரை எல்லாமே மிகத் தெளிவாக வும், தீர்மானமாகவும் வரையறுக்கப்பட்டவை! உல கின் ஒரே தெய்வம் அந்த நாராயணன் மட்டுமே. அவனுக்கு இணையோ இறுதியோ, கிடையவே கிடையாது. அவனைச் சரண் புகுவது ஒன்றுதான் ஒரு வைணவன் கடமை. அவனுக்கு இந்த உலகின் எந்த விதமான பிற விஷயங்களும் சர்வ சாதாரணமா னவை. வாழ்வின் ஆசார நெறிகளிலும் இந்த மாதிரி விஷயங்கள் மட்டுமே எதிரொலிக்கும். மறந்தும் புறந்தொழுதல் என்பது ஒரு பாவமான விஷயம்! இப் படி ஒரு ஆசாரமான வைணவக் குடும்பத்தில் வந்தவ ளுக்கு போய் 'திரௌபதி' என்று ஒரு பெயர் என்றால் அதிர்ச்சியாக இருக்காதா?

அது அப்பட்டமாக அவள் முகத்தில் எதிரொலித் தபடியே இருந்தது. வைராகியும் அதைக் கவனித் தார். பூசாரிக்குத் தொடர்ந்து பதில் கூறிடாமல், "அம்மாடி... உன்னை நான் திரௌபதின்னு கூப் பிட்டது உன்னை ரொம்பவே உறுத்தற துபோல இருக்கே...?" என்று கேட் டார். ஆமோதிக்கும் பாவனை படு

**இந்திரா சௌந்தர்ராஜன்**

வேகமாக ஷ்யாமளாவின் முகத்தில் ஓடியது.

"நான் சொன்னதெல்லாம் சத்தியம் குழந்தை... நீ போய் உன் அப்பாகிட்ட கேள். அவர் சொல்வார். அதெல்லாம் இல்லேன்னு அவர் ஏதாவது புளுகினா, ஹரித்வார் பஸ்ராம் பாண்டேவை தெரியுமான்னு கேள். அதுக்கு அப்புறமும் அவர் உன்கிட்ட பொய் சொல்லமாட்டார். அப்புறமா அவர்கிட்ட சொல்... என்னை எல்லாம் அவ்வளவு சுலபமா ஊரை விட்டுத் துரத்த முடியாதுன்னு... அவர் யாரையாவது எனக்கு எதிரா ஏவி விட்டா, அவனை நான் நண்பன் ஆக்கிப்பேன்னும் சொல்.

இப்பகூட ரெண்டு பேரை நண்பர்களாக்கிக்கத்தான் வந்தேன். வழியில் திரௌபதியம்மாவை பார்த்து ஒரு நமஸ்காரம் பண்ணிக்கலாம்னுதான் உள்ள நுழைஞ்சேன். இவளை நீ சாதாரணமா நினைச்சுடாதே... இவதான் மகா சக்தி. இவ அஞ்சு பேரை கல்யாணம் பண்ணிண்டவன்னு சொல்றதையும் சிலர் தப்பா புரிஞ்சிகிட்டு இருக்காங்க. அஞ்சு பேர்னா பஞ்ச பூதம்னு அர்த்தம். பஞ்ச பூதங்களுக்குதான் இவ துணைவி. அதாவது பஞ்ச பூதங்களுக்கு இவகிட்டே இருந்துதான் சக்தி போகுது. இவளை வணங்கினா பஞ்ச பூதங்களால நமக்கு எந்த உற்பாதமும் ஏற்படாது. இவளை இங்க புடவையாதான் பூட்டி வெச்சிருக்காங்க. புடவைதான் பெண்ணோட பெரிய காவல். அது இல்லேன்னா அவ பெண்ணாகவே இருக்க முடியாது. பெண்ணுன்னா காமம், பாசம், அன்பு, சாந்தம், சந்தோஷம்னு அஞ்சு உணர்வுகளையும் அள்ளித் தரணும். நிர்வாணம் இதை எல்லாம் அடிச்சுக் காலி பண்ணி, அவளை காட்டுல திரியற மிருகத்தோட சேர்த்துடும்...

என்ன புரியாத மாதிரியே பேசறேன்னு பாக்காதே... போகப்போக எல்லாமே உனக்குப் புரியும்... இப்போதைக்கு நான் கிளம்பறேன். பை த பை உனக்கு ஒரு இன்ஃபர்மேஷன்... மேல புன்னை மரத்தடில நீங்க பார்த்த காட்சிகள்ளாம் நூறு சதவீதம் இல்லூஷன்தான். அதாவது என் மனசோட பிம்பங்கள் அது. இன்னிக்கு சில பிம்பங்களை ஃபாரின்ல ஹோலோக்ராம் மெதட்ல பெரிய பெரிய கட்டடங்கள்ள காட்றாங்க. அதுக்கு பல இன்ஸ்ட்ரு மெண்ட்ஸையும் கண்டுபிடிச்சுப் பயன்படுத்தறாங்க. அதே ஹோலோக்ராமை நான் இங்க வேற விதமா காட்றேன். இதுக்கு பீதாம்பர ஜாலம்னு பேர்... விரிவா விவரமா அப்புறமா பேசுவோம். இதெல்லாம் அந்தக் கிருஷ்ண ஜாலம் முன்னாலையும், கிருஷ்ண தந்திரம் முன்னாலையும் கால் காசு பெறாது. வரட்டுமா?"

ஒரு மழை பொழிவதுபோல பொழிந்துவிட்டு அவர் கிளம்பிவிட்டார். பூசாரிக்கே சற்று மலைப்பாகத்தான் இருந்தது. மௌனமாகவே இருந்த அன்புமணிகூட, "சியாமளா... இவர் பெரிய ஆளாகத்தான் இருப்பார் போலயிருக்கு..." என்றான். "அவர் பெரிய ஆளோ, சின்ன ஆளோ... கடைசி வரை தான் எதுக்கு வந்தேன்னு சொல்லவே இல்லை பார்த்தியா?"- என்றார் பூசாரி.

ஷ்யாமளாவின் மனசோ அப்போதே அப்பாவிடம் என்னவெல்லாம் கேட்க வேண்டும் என்பதிலேயே மையம் கொள்ள ஆரம்பித்துவிட்டது!

## இரவு நேரம்...

தமிழழகன் வீட்டுக்குள் பெரிதாகப் பேச்சு சப்தம் கேட்டபடி இருந்தது. அவன் அப்பாவான மருதாசலம் அவனோடுதான் முட்டி மோதிக் கொண்டிருந்தார். அவர் ஒரு ஊற்றாய்வாளர்! நிலத்தைக் கண்ணால் ஊடுருவி, எறும்புப் புற்று, கரையான் புற்று இருக்குமிடத்தை எல்லாம் தேடிக் கண்டுபிடித்து, பூமிக்கு அடியிலான நீரோட்டத்தைக் கண்டறிவதில் மிகப் பெரிய நிபுணர். பகல் முழுக்க பூமிக்கடியில் ஓடும் நீரோட்டத்தைத் தேடி அலைவதே அவரது தொழில்... இதனால் உடம்பின் ஒருங்கிணைப்பு அவரை பல நேரங்களில் பெரும் களைப்பில் ஆழ்த்திவிடும். உடம்பின் மின்னோட்டத்தை ஒரு புள்ளிக்குள் சேமித்து, அதை பூமிக்குள் கடத்தி அதன் மூலம் நிகழும் தாக்கங்களைக் கொண்டு தண்ணீரின் ஓட்டம் இருக்கிறதா, இல்லையா என்பதை அறிய வேண்டும்.

ஒரு மாதம் முழுக்க அலைந்தாலும் ஒரு நல்ல ஊற்று அகப்படாது. அப்படி அகப்பட்ட ஊற்றும் பூமியில் நூறு அடிக்குக்கீழே இருக்கும். ஆனால் இவரை அழைத்து இவர் சொன்னபடி அந்த இடத்தில் கிணறு தோண்டுபவர்கள் ஐம்பது அடி கூட தோண்டாமல், 'தண்ணீர் வரவில்லையே!' என்று இவர்மேல் விழுந்து பிடுங்குவார்கள்... வராதவரை



பெண்ணுன்னா காமம், பாசம், அன்பு, சாந்தம், சந்தோஷம்னு அஞ்சு உணர்வுகளையும் அள்ளித் தரணும். நிர்வாணம் இதை எல்லாம் அடிச்சுக் காலி பண்ணி, அவளை காட்டுல திரியற மிருகத்தோட சேர்த்துடும்...

**"வேணாம் சாமி... இப்படி எல்லாம் பேசினா, நான் உங்க பித்தலாட்டத்தைப் பெரிய விஷயமா நினைச்சு உங்க பேச்சைக் கேட்ருவேன்னு நினைச்சிடாதீங்க..."**



காகம் தர மாட்டார்கள்! அன்றைக்குக்கூட அதே போல ஒருவர், கத்திக் கூப்பாடு போட்டுவிட்டார். அதன் எதிரொலி வீட்டில் தெரிந்தது.

"பத்து அடி தோண்டறதுக்குள்ள தண்ணி வந்து டுச்சான்னா என்ன அர்த்தம்... இது என்ன ஆறு பாயற பூமியா? காலங்காலமா வறண்டுக் கிடக்கற காஞ்சப் பய ஊர்... இன்னும் கொஞ்சம் தோண்டு வோம்கற எண்ணமே இந்தப் பயலுகளுக்கு இல்லையே..! இங்க நான் இப்படிக் கஷ்டப்பட்டுகிட்டிருக்கேன். நீ என்னடான்னா கித்தாப்பா, இப்பவே மந்திரியாயிட்ட மாதிரி கத்திக்கிட்டிருக்கே. அரசியல்லாம் நமக்கு சரிப்பட்டு வராதுடான்னா கேக்க மாட்டேங்கறே... வெங்கடாஜலம்னு வெச்ச பேரையும் தமிழழகன்னு மாத்திகிட்டு கூத்தடிக்கறே. யாராச்சும் என்கிட்ட வந்து தமிழ் இருக்கானா, இங்கிலீஷ் இருக்கானான்னு கேக்கும்போது எனக்குப் பத்திகிட்டு எரியுதுடா. காலகாலத்துக்கு தப்பில்லாத உனக்கெதுக்குடா புதுப் பேரு..? வீணாப்போனவன்டா நீ."

- மருதாசலம் இடி இடித்து சொல் மழை பொழிந்து கொண்டிருப்பதைக் கொஞ்சமும் பொருட்படுத்தாமல் ஆணியில் தொங்கியபடி இருந்த சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டு வீட்டுக்கு வெளியில் வந்தான் தமிழழகன்.

எதிரிலேயே பைராகி!

தெருவின் இருட்டில் ஒரு கருப்பு உருவமாகத்தான் தெரிந்தார்.

"யாரது?" - தமிழும் தைரியமாகவே கேட்டான்.

"யாரா... மேலே தேடிகிட்டு வந்தியே, அதே பைராகி..." -பதிலோடு மெல்லத் தெருவிளக்கு வெளிச்சத்தில் முகம் காட்டத் தொடங்கினார்.

தமிழழகனுக்கு அவரை நேரில் பார்க்கவும் கொஞ்சம் கருக்கென்றது.

"நீங்களா?"

"நானேதான்... என்னப்பா என்னை ரொம்ப ஆவேசமா தேடி வந்தே போல இருக்கே?"

"அ.. ஆமாம்... நீங்கதான் ஊருக்குள்ள மேஜிக் பண்ணிகிட்டுத் திரியறீங்களா?"

"மேஜிக்கா... அப்படின்னா?"

"இப்ப என்ன.. என்கிட்ட சண்டை போட வந்துருக்கீங்களா?"

"சண்டையா... சேச்சே.. நீதான் உன் அப்பாவோட இப்ப சண்டை போட்டுகிட்டிருந்தே... கோவிச்சுகிட்டும் வெளிய வந்தே. நான் வந்துருக்கறது என்னை உனக்குப் புரிய வைக்க...."

- பைராகியின் பேச்சு அவனுக்கே புதிராகத்தான் இருந்தது. அவரை அடுத்த கேள்விகூட கேட்கத் தெரியாதபடி வெறித்தான்.

"ஆமா... என்ன சண்டை? உங்கப்பா உன்னை தண்டச் சோறுன்னு சொல்லாம சொல்றாரா?"

"இதோ பாருங்க. உங்களுக்கு இப்ப என்ன வேணும்? நான் மத்தவங்க மாதிரி கிடையாது. என் கிட்ட உங்க மாய்மாலம்லாம் செல்லாது..."

"அட ஏம்ப்பா நீ வேற மாய்மாலம், அது, இதுன்னு ஏதேதோ பேசிகிட்டு... நான் ஒரு அப்பாவிப்பா. ஏதோ கொஞ்சம் மந்திரம் தெரியும், அவ்வளவுதான்..."

"மந்திரமா... அப்படின்னாலே பெரிய ஃப்ராடுன்னுதானே அர்த்தம்?"

"ஃப்ராடா...? அவசரப்பட்றியே... எதையும் அனுபவிச்சு ஆராய்ஞ்சுப் பாத்துட்டுச் சொல்லணும்..."

"வேணாம் சாமி... இப்படி எல்லாம் பேசினா, நான் உங்க பித்தலாட்டத்தைப் பெரிய விஷயமா நினைச்சு உங்க பேச்சைக் கேட்ருவேன்னு நினைச்சிடாதீங்க..."

"அட என்னப்பா நீ.. கோர்ட்ல தூக்கு தண்டனை கைதிகிட்டகூட உன் கடைசி விருப்பம் என்னன்னு கேப்பாங்க... நீ எனக்கு அந்த வாய்ப்பகூட தர மாட்டேங்கறியே..."

- பைராகியின் இணக்கமான பேச்சு, தமிழழகனையும் சற்று குழைத்தது.

"சரி.. நீங்க யார் சாமி? இந்த ஊர்ல உங்களுக்கு என்ன வேலை? சுத்தி வளைக்காம பளிச்சுன்னு சொல்லுங்க பார்ப்போம்."

"அப்படிக் கேள்... உன் காதை இப்படிக் கொண்டா... நான் எதுக்கு வந்துருக்கேன்னு சொல்றேன். ஆனா நீ யார் கிட்டேயும் சொல்லக்கூடாது..." என்று பீடிகை போட்டவராக அவன் காதில் ஏதோ கூறினார்.

தமிழழகன் முகத்தில் ஒரு நம்ப முடியாத அதிர்வு!

(தொடரும்)

'ஊர்ச்சபை தலைவர் வீட்டு முன் நின்ற மாட்டுக்காரனை தலைவர் ஏற இறங்கப் பார்த்தார். அவனை இதற்கு முன்பு எங்கேயோ பார்த்தது போலவும் இருந்தது- பார்க்காதது போலவும் இருந்தது அவருக்கு. அவனோ சிரித்தான்! அந்தச் சிரிப்பு அவரை எந்தக் கேள்வியும் கேட்க விடாதபடி கலங்கடித்தது.

"என்ன சாமி பாக்கறீங்க...? நான்தான் உங்க ஊர் மன்னாருக்கு புல்லாங்குழல்ல எல்லா வித ராகமும் வாசிக்கக் கற்றுக் கொடுத்தேன். அவனும் வாசிச்சான்... அவன் வாசிச்சதாலதான் ஊர்ல எல்லோரும் தப்பிப் பிழைச்சீங்க. குளத்துல கலந்திருந்த வியாதிக் கிருமிகளும் மாடுங்களோட கோமியமும், சாணமும் கலந்ததால செத்துப் போய் இப்ப குளத்து நீர் ஒரு வகைல மருந்தாயிடிச்சு. அதுல தானே எல்லோரும் சமைக்கறீங்க? அதனாலதான் அந்த மருந்துத் தண்ணி உடம்புக்குள்ள புகுந்து, எல்லார் நோயையும் குணப்படுத்திடுச்சு. இப்படி ஊருக்கு நன்மை செய்த மன்னாரைப் போய் ஊர் விலக்கு பண்ணிட்டீர்களே சாமி... " என்றான். தலைவருக்கு ஒரே பிரமிப்பாக இருந்தது. இத்தனைக்கும் ஒரு கேள்வியையும் அவர் கேட்கவில்லை. அவனே எல்லாவற்றுக்கும் விடை கூறி முடித்துவிட்டான்.

தலைவரும் மெல்ல பிரமிப்பில் இருந்து விடுபட்டு, "நீ யாரப்பா? அத முதல்ல சொல்..." என்றார். "சொல்றேன். ஆனா என் கூட நீங்க வரணும். வருவீங்களா?" என்று கேட்டான். தலைவரால் அவனோடு வர மாட்டேன் என்று கூறிட முடியவில்லை!

தமிழ்மகன் கிட்டத்தட்ட வைராகியின் ரகசியப் பேச்சால் உறைந்தே போய்விட்டிருந்தான். மலங்க மலங்க வைராகி முகத்தை பார்த்தான். பின் மெல்லிய குரலில், "நீங்க சொல்றத என்னால நம்ப முடியலீங்க...!" என்றான்.

"அப்படித்தான் தோணும்... ஏன்னா இன்னிக்கு இருக்கற கால நடப்பு அப்படி... ஆனா நான் சொல்றதெல்லாம் சத்யம்"

"வெறும் சத்யம்னு சொல்லிட்டா ஆச்சுங்களா... எதை வெச்சு நான் நம்பறது?"

"உனக்கு நான் சொன்ன விஷயத்தை நம்ப முடியலியா, இல்லை என்னை நம்ப முடியலியா?"

"இரண்டையும்தான்"

"சரி, முதல்ல நான் என்னை நிரூபிக்கறேன். நான் ஒரு சித்து விளையாட்டுக்காரன்தான். அதே சமயம் என்னைப் பயன்படுத்திக்க தெரிஞ்சவங்களுக்கு நான் ஒரு வரப்ரசாதம். இப்பகூட உங்கப்பாகூட நீ சண்டை போட்டுகிட்டிருந்தே... பாவம், அவர் பூமிக்கடியில ஓடுற நீரோட்டங்களை உடம்போட மின்காந்த சக்தியைக் கொண்டு கண்டுபிடிக்கறவர். உங்கப்பா மின்காந்த சக்தியால கண்டுபிடிக்க கஷ்டப்படுற நீரோட்டத்தை, நான் என் சித்தை உபயோகப்படுத்தி ஒரு நிமிஷத்துல சொல்லிடுவேன். நாளைக்கே உங்கப்பாகிட்ட அந்த இடங்களைச் சொல். அவரும் போய் பரிசோதிச்சுப் பார்க்கட்டும். தண்ணி அந்த இடத்துல பத்து அடில வந்தா என்னை நம்பு... சரியா?"

"இந்த மடம் நல்லாதான் இருக்கு... ஆனா இந்தச் சித்து, மாயமந்திரம்லாம் டூபாக்கூர்னு நினைக்கற பார்ட்டியாச்சே நான்."

"நீ, நீயா இரு அப்பனே... நடக்க நடக்க நம்பினா போதும்..."

"சாமி.... நீங்க சொல்லப்

# கிருஷ்ண தந்திரம்!



8



இந்திரா செளந்தர்ராஜன்

போற நீரோட்ட விஷயம்லாம் ஒரு விஷயமே இல்ல சாமி. கொஞ்சம் கஷ்டப்பட்டா எங்கப் பாவே கண்டுபிடிச்சிடுவாரு... அதானே அவர் வேலையே? வேற ஏதாவது சொல்லுங்க.."

- தமிழழகன் அவருக்கு தன் பாணியில் பிராக்கெட் போட்டான்.

"சரிப்பா... இந்த ஊர்ல ஒரு இடத்துல புதையல் இருக்கு. அதை நான் உனக்குக் கிடைக்கும் படி பண்றேன்... அப்ப நம்புவியா?"

"இல்ல... நீங்களே புதைச்சு வெச்சுட்டுகூட, என்னைத் தோண்டி எடுக்க வெச்சு ஏமாத்தலாம்..."

"அப்ப சரி... நீயே உன் விருப்பத்துக்கு எதை வேணும்னாலும் சொல். அப்புறம் பார்..."

"சரி... என்னை நம்ப வைக்கறதால உங்களுக்கு என்ன லாபம்? அதுக்கு முதல்ல பதிலைச் சொல்லுங்க.."

"நீ ரொம்பவே நேரடியா விஷயத்துக்கு வந்துட்டே... நானும் நேராகவே விஷயத்துக்கு வந்துட்றேன். நான் எதுக்கு வந்திருக்கேனோ அந்த விஷயத்துக்கு உன்னை மாதிரி ஒருத்தனோட உதவி ரொம்பவே தேவையா இருக்கு. அதுக்குத் தான்..."

"பார்றா... நான் ஒரு சாமான்யபட்டவன் சாமி. நீங்களோ புதையல், அது, இதுன்னு பெரிய பெரிய விஷயத்தையெல்லாம் கைல வெச்சுக்கிட்டு இருக்கீங்க... உங்களுக்கு என் உதவியா?"

"உனக்கு ராமாயணம் தெரியும் தானே?"

"இப்ப எதுக்கு அந்தக்



கேள்வி...?"

"கேட்டத்துக்குப் பதில் சொல்..."

"ராமாயணமும், பாரதமும் தெரியாதவங்க யாராவது இருக்க முடியுமா?"

"சந்தோஷம்... ராமாயணத்துல ராமர் யார்?"

"அவர்தான் ஹீரோ.."

"ஹீரோ சரி... அவரை நாம என்னன்னு சொல்றோம்?"

"ராமன்னுதான்.."

"ராமன்கறது பேர்... ஆனா ராமனை கடவுளாதானே பாக்கறோம்?"

"நான் பாக்கறேனோ இல்லையோ, ரொம்ப பேர் பாக்கறாங்க..."

"அப்படிப்பட்ட கடவுளான ராமனுக்கே ஒரு வானரப் படை உதவி செய்தது. குறிப்பா சேதுபாலம் கட்டும்போது ஒரு அணில்கூட உதவினதா கதை உண்டு. கேட்டுருக்கேதானே?"

"அந்த மாதிரி கதைதான் நிறையவே நம்ப ஊர்ல உண்டே?"

"கடவுளான ராமனுக்கு ஒரு அணில் உதவினதால ராமன் தாழ்ந்து போய்ட்டானா என்ன?"

"ஓ... நீங்க அப்படி வரீங்களா... சரி, சாமி உங்களுக்கு நான் உதவி செய்யறேன். அதுல எனக்கு என்ன லாபம்?"

"நான் சொன்னா நீ நம்ப மாட்டே. இருந்தாலும் சொல்றேன். என்கூட நீ நில்... என் நோக்கம் நிறைவேறட்டும்; உன் அக்கா புருஷனோட எய்ட்ஸ் வியாதியை ஓட ஓட விரட்டி அடிக்கறேன். உன்னையும் மந்திரி அளவுக்கு உயர்த்திக் காட்டறேன்..."

- பைராகி பேச்சுப் போக்கில் தமிழழகனின் அக்கா கணவன் எய்ட்ஸ் வயப்பட்டிருப்பதை போட்டு உடைக்கவும், தமிழழகனுக்கு ஒரு கணம் மூச்சே நின்றுபோனது.

"சாமி இதெல்லாம் எப்படி உங்களுக்கு?"

"அதான் பைராகி..."- அவர் கண் சிமிட்டிவிட்டு நாளைக்குப் பார்ப்போம் என்று திரும்பி நடக்கத் தொடங்கினார்.

கிட்டத்தட்ட செல்லப்பாவும் ஸ்தம்பித்துத்தான் போயிருந்தார். காரணம், வீடு திரும்பிய வேகத்தில் ஷ்யாமளா கேட்ட கேள்விகள் அப்படி? அதுவும் ராகவை வைத்துக்கொண்டே, 'அப்பா என் நிஜப்பேர் திரௌபதியா...?" என்று ஆரம்பித்து, "நான் கோயில் கல் மண்டபத்தில் பிறந்தவளா?" என்றும் கேட்டவள், "ஆமாம், யாருப்பா அந்த ஹரித்வார் பல்ராம் பாண்டே? " என்றும் கேட்டதுதான் அவர் நெஞ்சை அடைக்க வைத்துவிட்டது.

"பேர்லதான் நான் திரௌபதி மாமி... என்னமோ பஞ்ச பாண்டவா பத்தினி மாதிரியே என்னைப் பாக்கறளே..."



ராகவும் அவரையே கவனித்துக் கொண்டிருந்தான்.

"ஷ்யாமளா... இதெல்லாம் ஒரு பெரிய விஷயமா? இதைப் போய் ஏதோ பிரம்ம ரகசியம் மாதிரி நினைச்சுண்டு கேக்கறியே..." என்றான்.

"நீ சும்மா இரு ராகவ்... என் வரையில இது அப்படித்தான். எனக்கு இந்த விஷயம் எவ்வளவு பெரிய ஷாக் தெரியுமா?"

"ஷாக் இது இல்லை... அந்தப் பைராகி அங்க உன்னைப் பார்க்கவே வந்ததுதான் ஷாக்..."

"நீ கொஞ்சம் சும்மா இரு... அப்பா நீங்க சொல்லுங்கோ... நான் கேள்விப்பட்டதெல்லாம்..."

"உண்மைதான் ஷ்யாமளா... இதுல மூடி மறைக்க என்ன இருக்கு? உனக்கு திரௌபதின்னு பேர் வெச்சது, நீ அங்க அந்த நேரத்துல பொறந்ததால தான். அவளோட அம்சங்கற அர்த்தத்துல அந்தப் பேர் வெச்சோம். ஆனாலும் நம்ம சம்பிரதாயம்னு ஒண்ணு இருக்கறதால, உனக்கு ஷ்யாமளான்னும் பேர் வெச்சேன். அந்தக் கண்ணனுக்கு ஷ்யாமள வண்ணன்னும் ஒரு பேர் உண்டு... அந்தப் பொருள்லதான் பேர் வெச்சேன்..."

"சரி, யார் அந்த ஹரித்வார் பல்ராம் பாண்டே...? இந்தப் பேர்தான் அந்தப் பைராகி பேரா..?"

"அப்படித்தான் தோணுது?"

"அப்படின்னா ஒரு வகையில அவருக்கு இந்த ஊர்தான்

சொந்த ஊர்..."

"அப்படியா... அவர் ஏதோ தன்னை ஒரு நார்த் இண்டியன்னுல்ல சொல்லிண்டார்..?"

"அவரோட அம்மா ராதாபாய் இந்த ஊரைச் சேர்ந்தவ. மராட்டியக் குடும்பம். போஜ மகாராஜா காலத்துல தஞ்சாவூர் பக்கம் குடியேறின பல ஆயிரம் குடும்பங்கள்ல ஒரு குடும்பம் ராதாபாய் குடும்பம். அவ கல்யாணம் பண்ணிண்டு போனது ஹரித்வார் கல்யாண் பாண்டேங்கறவரை.... அந்த கல்யாண் பாண்டேயோட பிள்ளைதான் இந்தப் பல்ராம் பாண்டே...."

"அவருக்கு சித்து விளையாட்டெல்லாம்கூட தெரியுமா என்ன?"

"அது எனக்குத் தெரியாது... அந்தப் பைராகியை நான் இன்னும் நேர்ல பார்க்கல. ஆனா இப்ப உன்மூலமா அவர்தான் பல்ராம் பாண்டேன்னா, அவர் எதுக்கு வந்துருக்கார்ங்கறது தெரிஞ்சு போச்சு..."

"எதுக்குப்பா?"

"முதல்ல நாளைக்கு காலைல பொழுது விடியட்டும்... நான் அவரைப் பார்த்துட்டு வந்து, பிறகு சொல்றேன்..."

- செல்லப்பா தாற்காலிகமாக ஒரு பிரச்சினையில் இருந்து தப்பிக்க விரும்பியவர்போல் வேகமாகச் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டுச் சென்றுவிட்டார். ஷ்யாமளாவுக்கு ஏமாற்றமாக இருந்தது.

ராகவ் அவனை முறைத்துக் கொண்டே இருந்தான்.

"என்னப்பா... நான் உன் கூட வரலேங்கற கோபமா?"

"அந்தக் கோபத்தோட நீ இப்ப கேட்ட கேள்விகளும் சேர்ந்துண்டு, என்னை ரொம்பவே குழப்பறது ஷ்யாமி..."

"இதுல குழப்ப என்ன இருக்கு? அதான் அப்பா எதையும் மறைக்காம 'பட் பட்'டுன்னு போட்டு உடைச்சிட்டாரே..?"

"அது ரகசியமா முதல்ல... என்னமோ உடைச்சிட்டார் அப்படி இப்படிங்கறே?"

"ஆமாம் ராகவ்... நான் திரௌபதின்னு கேள்விப்பட்டதுல இருந்தே நான் என்னை எவ்வளவு டிஃப்ரண்டா ஃபீல் பண்றேன் தெரியுமா?"

"என்ன.. நீயும் அஞ்சுபேரை கல்யாணம் பண்ணிக்கப் போறியா?"

"ஷட் அப்... இப்படி எல்லாம் சீப்பா பேசாதே"

"ஸாரி... நான் சும்மா ஒரு ஜாலில அப்படிப் பேசினேன். பை, த பை நாம உங்க ஊருக்கு வந்து இன்னும் முழுசா ஒரு நாள் கூட ஆகலை. ஆனா எனக்கென்னவோ இங்க வந்து ரொம்ப நாள் ஆன மாதிரியும், நாம வந்த வேலையை விட்டுட்டுத் திசைமாறிப் போற மாதிரியும் ஒரு ஃபீலிங்..."

"ராகவ் முதல்ல நீ நல்லா ரெஸ்ட் எடு. பொழுது விடியட்டும், எல்லாத்தையும் காலைல பேசிக்கலாம்..."

-அவள் அவனை வெகு நாசூக்காகக் கத்தரித்துவிட்டு சமையல் கட்டை நோக்கி நடந்தாள். அங்கே கோமளா மாமி, புளி உப்புமா கிண்டிக் கொண்டிருந்தாள்.

"மாமி! சும்மா கமகமங்கறது..."

"தட்ட எடுத்துண்டு வா... ஒரு கரண்டி போட்றேன். சின்ன வயசுல சாப்பிடுவியே, ஞாபகம் இருக்கா?"

"ஆமா... இருங்கோ எடுத்துண்டு வரேன்..."

-ஓடிப்போய் சமையல் மேடை மீது சீராக அடுக்கப்பட்டிருந்த தட்டில் ஒன்றை எடுத்து வந்தாள். மாமியும் ஒரு கரண்டி உப்புமாவைப் போட்டு, வத்தல் குழம்பை ஒரு அரைகரண்டி விட்டாள். அதை வாயில் போட்டதில் சற்று அதிக பட்ச சூட்டோடு வாயின் மேல் அண்ணம், கீழ் பாகம் இரண்டும் சற்று வெந்து போவதுபோல் ஆகிட, ஒரே விழுங்காய் விழுங்கினாள். மோரு மிளகாயை மத்தாகக் கொண்டு கடையப்பட்ட அமுதம் அந்த ஒரு வாய் உப்புமாவாகத்தான் இருக்க வேண்டும் போல் தோன்றியது ஷ்யாமளாவுக்கு.

"ப்ரமாதம் மாமி..."

"ஆமா, எங்க அந்தப் பிள்ளையாண்டான்?"

"ராகவ்தானே?"

"ஆமாம் கூப்பிடு... கூடச்சூட அவருக்கும் போட்றேன்"

"சும்மா அவன்னே கூப்டுங்கோ... என்னைவிட ரெண்டு வயசுதான் அவன் பெரியவன்..."

"இருந்தாலும் அசலாச்சே... எந்த உரிமையில கூப்பிட்றது? அதெல்லாம் தப்பு, ஷ்யாமா..."

"சரி, உங்க இஷ்டம்... இருங்க அவனையும் கூப்பிட்றேன். இப்பதான் போய் ரெஸ்ட் எடுன்னு அனுப்பிவைச்சேன். அவனுக்கு மாடில ரூமை ரெடி பண்ணிட்டேள்தானே?"

"அதெல்லாம் நேத்தே ரெடியாயிடுத்து. அங்கேயே பாத்ரூம்ல ஹீட்டர் முதற் கொண்டு இருக்கே..?"

"அவன் கொஞ்சம் நீர் யானை மாதிரி... பாத்ரூம்குள்ள போனா, ஒரு மணிக்குக் குறையாம ஆகும் அவனுக்கு..."

- கோமளா மாமி சிரித்தாள். பின், "உன் கிட்ட ஒன்னு கேட்டா தப்பா எடுத்துக்க மாட்டியே?" என்றாள்.

"என்ன மாமி?"

"நீ உன் அப்பாகிட்ட பேசினதையும், அவர் பதிலுக்குச் சொன்னதையும் கேட்டுண்டுதான் இருந்தேன்..."

"அதுக்கென்ன இப்போ?"

"எனக்கு நீ திரௌபதிங்கறதே இப்பதான் தெரியும்..."

"போல்தான் நான் திரௌபதி மாமி... என்னமோ பஞ்ச பாண்டவா பத்தினி மாதிரியே என்னைப் பாக்கறளே..."

"இல்லப்பா... கிட்டத்தட்ட நீ அவளேதான்! ஷ்யாமளாவா ஜென்மம் எடுத்து வந்துருக்கே. நீ வேணா பார், உன் கைல தான் கிடைக்கப் போறது அந்தக் கிருஷ்ணனோட புல்லாங்குழல்!"

- மாமி இறுதியாகச் சொன்னது ஷ்யாமளாவை ஒரு விநாடி உலுக்கிப் போட்டது!

(தொடரும்)

9

# கிருஷ்ணா தந்திரம்!



இந்திரா சௌந்தர்ராஜன்

9

அந்த மாட்டுக்காரன் ஆள் அரவமற்ற தெருக்களில் இறங்கி, 'என் பின்னாலேயே வாங்க' என்கின்றவனாக நடக்கத் தொடங்கினான். தலைவரும் பின்தொடர்ந்தார். அவன் நடப்பது போலவும் இருந்தது; ஓடுகிற மாதிரியும்கூட இருந்தது. அவன் வேகத்தோடு அவரால் போட்டி போட முடியவில்லை.

அவன் யாதவகிரி குன்றின் அடிவாரத்தில் போய் நின்றான். அடிவாரத்தில் இருந்து ஊருக்குள் சென்ற மண்சாலை, ஒரு பாம்பின் உடல் போல வளைசல் நெளிசலுடன் கிடந்தது. அதில் மூச்சிரைபட நடந்து வரும் தலைவர், ஊருக்குள் கூட யாரும் இல்லாதது கண்டு ஆச்சரியப்பட்டார்.

'எல்லோரும் எங்கே போனார்கள்?' என்று கேள்வியுடன் பார்க்கவும், அவன் மலைப்படிகளில் ஏறிக் கொண்டிருந்தான். குறிப்பிட்ட ஒரு இடத்தில் நின்று கொண்டு சைகை காட்டி வேறு அழைத்தான். அவரும் மலைப்படிகளில் ஏறலானார்.

அவன் சன்னதி முன் போய் நின்றான்.

சன்னதி திறந்திருந்தது -ஆனால் பட்டரைக் காணவில்லை.

உள்ளே பருத்த திரி விளக்கின் பொன்னொளி!

அவர் அவன் அருகே வரவும் அவரை 'விட்டலன்' போல இடுப்பின் இரு புறமும் கையை வைத்துப் பார்த்தவன் ஒரு தினுசாகச் சிரித்தான். அப்படி ஒரு சிரிப்பை அவர் தன் வாழ்நாளில் பார்த்திருக்கவும் மாட்டார்; கேட்டிருக்கவும் மாட்டார். அவனும், "நான்தான் தலைவரே மன்னருக்கு வாசிக்கச் சொல்லிக் கொடுத்தேன். அவன் செஞ்சிருக்கறது பரோபகாரம். இப்பகூட அவன் கைல இருக்கறது என் புல்லாங்குழல்தான். அது இசையையும் தரும்.. இசைவையும் தரும். அதை வெறும் மூங்கிலா பார்த்தா மூங்கில்; மந்திரக்கோலா பார்த்தா மந்திரக் கோல்; குழலாப் பார்த்தா குழல். அது பத்திரம். அது வேற, நான் வேற இல்லை. எல்லாரும் அதை எடுத்துப் பயன்படுத்திடவும் முடியாது. அதுக்கு ஒரு லயம் வேணும். சரி, நான் வரேன்.. இனி நான் பேச எதுவுமேயில்லை. போகப் போக உங்களுக்கே புரியும். நானும் புறப்படறேன்.." -என்றபடியே கருவறைக்குள் உள்ளே நுழைந்தான். அப்படியே அந்தர்யாமியாய் அவன் மறையவும் தான், வந்தது கண்ணன் என்பதே தலைவருக்கும்



புரிந்தது!

சர்வாங்கமும் புல்லரிக்க, அப்படியே ஸ்தம்பித்தும் நின்றுவிட்டார்!

கோமளா மாமி சொன்னதில் ஷாக் ஆன ஷ்யாமளாவை மாமியே சிரமப்பட்டுதான் விடுவித்தாள். "என்ன ஷ்யாமளா... நான் சொன்னதைக் கேட்டு உனக்கு அதிர்ச்சியா இருக்கா?"

"அதிர்ச்சியா மட்டுமில்ல மாமி... குழப்பமாவும் இருக்கு. கிருஷ்ண பரமாத்மாவோட புல்லாங்குழல் என் கைல கிடைக்கும்னா எப்படி மாமி?"

"எப்படின்னா எனக்கு எப்படித் தெரியும்... போகப் போக உனக்கே புரியத்தானே போறது?"

"ஏன் மாமி இப்படி புராணக்கதை மாதிரி எதையாவது சொல்றேள்? கிருஷ்ணரோட புல்லாங்குழல் இன்னும் இருக்குங்கறதை நம்பறதுக்கே ஒரு தனி அறிவு வேணும். இதுல அது இந்த ஊர்ல இருக்குங்கறதை நம்ப இன்னும் கொஞ்சம் கூடுதலா வேணும். அப்படி இருக்கற அது என் கைல போய் கிடைக்கும்னு சொன்னேள் பாருங்கோ... அதான் பெரிய

ஜோக்"

"இப்போதைக்கு நீ அப்படியே நினைச்சுக்கோ. நான் என்னோட அனுமானத்தைச் சொன்னேன். இன்னொன்னும் சொல்றேன். வைராகி மாதிரி மாயம், மந்திரம் பண்றவாள்ளாம் இந்த ஊர்ல சுத்தித் திரியறதும் அதுக்காகதான். ஏன்னா, அது புல்லாங்குழலுக்கு புல்லாங்குழல்! மந்திரக்கோலுக்கு மந்திரக்கோல்!"

- மாமி அடுத்த கட்டத்துக்கும் போனாள்.

"என்னது மந்திரக்கோலா?"

"பின்ன... கிருஷ்ணர் அதைக் கைல வெச்சுண்டு தானே எல்லாரையும் அந்த ஆட்டு ஆட்டி வெச்சார்?"

"போதும் மாமி... நான் இன்னும் கொஞ்ச நாழி இங்க இருந்தேன், நீங்க அம்புலிமாமா கதை மாதிரியே அடுத்தடுத்து இன்னும் ஏதாது சொல்லிண்டே போவேள். அப்புறம் நானும் அதை எல்லாம் நம்ப முடியாமத் திணற வேண்டி இருக்கும். வரேன்..."

- ஷ்யாமா தப்பித்து ஓடுபவன்போல ஓடினான்.

**கை**, கால் கழுவிக்கொண்டு சாப்பிட வந்து உட்கார்ந்திருந்தான் அன்புமணி. கோமதிதான் சாதம் பரிமாறத் தொடங்கினாள். மதியம் செய்த சாதம். பாதி நல்ல அரிசி, பாதி ரேஷன் அரிசி... ஒரு தினுசாகத்தான் இருந்தது. புளிக்குழம்பு வைத்திருந்தாள்... அதை திரும்பக் கொதிக்க வைத்துதான் இலையில் ஊற்றினாள்.

பசிக்குச் சாப்பிடுவது ஒரு விதம்! ருசிக்குச் சாப்பிடுவது ஒரு விதம்! அன்புமணி பசிக்குச் சாப்பிடுபவன்... எனவே அதன் உப்பு, உரைப்பு பற்றி எல்லாம் எந்த எதிர்பார்ப்பும், கவலையும் இன்றி அந்தச் சோற்றை அள்ளி அள்ளி விழுங்கினான். இருந்தும் அதில் ஓரளவு ருசி இருக்கத்தான் செய்தது... கோமதியின் கைப் பக்குவம் என்று சொல்லலாம். அவன் அப்பா அந்தக் குட்டி வீட்டின் இருட்டு அறைக்குள் கட்டிலில் ஒரு நாய்க்குட்டிபோல சுருண்டிருந்தார். நடுநடுவே இருமிக்கொண்டு, தனது முதுமைக்கு அந்தச் சப்தம் மூலமாகவே வியாக்யானம் செய்தபடி இருந்தார். அவனுக்குக் கேட்க கஷ்டமாக இருந்தது.

"கஷாயம் வெச்சுக் கொடுத்தியா கோமதி?"

"நாலு தடவை கொடுத்துட்டேன். ஆனா அதுக்கெல்லாம் கேக்கமாட்டேங்குது. ரேடியோல சினிமா பாட்டு கேக்கும்போது மட்டும், கொஞ்சம் இருமல் குறைவா இருக்கு. எனக்கு அதான் புரியலண்ணே" என்றாள் அவள். அவனும் யோசித்தான்.

"ஆமா... ஐயர் வூட்டுல சியாமளாக்கா வந்துருக்குதாமே..?"

"ஆமாம் கோமி..."

"ஊர் பூரா அது பேச்சுதான்... நல்லா வளர்ந்திடிச்சு; ஆனே மாறிப் போச்சு... அப்படி, இப்படின்னு..."

"வளர்ந்துட்டா. ஆனா ஆள் ஒண்ணும் மாறல, அப்படியேதான் இருக்கா..."

"உன்கிட்ட அந்தப் பழைய பாசத்தோடதான் பேசுறாங்களா?"

"அதுல என்ன சந்தேகம்...?"

"அப்ப ஒரு நாள் நம்ம வீட்டுக்குக் கூட்டிக்கிட்டு வாயேன்..."

"அதுக்கென்ன... சியாமளா உன்னைப் பத்தியும் கேட்டா. கல்யாணம் கட்டிக் கொடுக்கணும்னு சொன்னேன்..."

"முதல்ல அதைச் சொல்லிடு. என்னை துரத்தி விடறதிலேயே இரு"

"வைத்தியக்காரி... எந்தப் பொண்ணுக்கும் அது பொறந்த இடம் அதோட இடம் கிடையாது... புரிஞ்சுக்க"

"ஆமா, யாருண்ணே அது சியாமளாக்கா கூட..?"

"அவரா... பேர் ராகவ் மியூசிக் டைரக்டர்னு சொன்னா"

"பாத்தா வில்லனாட்டம்ல இருக்காரு..."

"நீ எங்க பாத்தே?"

"கொஞ்சம் முந்திதான்... மலைக் கோயில்ல இருந்து இறங்கி தமிழ், பிச்சமுத்துவோட எல்லாம் பேசிக்கிட்டே வந்தாரு..."

> **அருகிலிருந்த வேப்ப மரத்துக் கிளையை ஒடித்து அதன் பச்சை இலைகளை உருவி, காய்ந்த சருகுகளையும் போட்டு தீ வைத்தாள்.**

"தமிழ், பிச்சமுத்து கூடவா?"

"ஆமாண்ணே... அவுககூட மேல கோயில்ல இருந்துதான் இறங்கி வந்தாங்க"

"ஆச்சரியமாயிருக்குதே..."

"எனக்கும், அப்படித்தான் இருந்துச்சு. வழக்கம் போல தமிழழகன் என்னை முறைச்சு முறைச்சுப் பாத்துச்சு. நான் முகத்தைத் திருப்பிக்கிட்டேன்"

"கெட்ட பய அவன்... தப்பித் தவறிகூட அவன்கிட்ட வாயைக்கொடுத்துடாதே..."

பேச்சோடு சாப்பிட்டு முடித்து எழுந்தவன், கையைத் துடைத்தபடி தகப்பன் அருகில் சென்றான்.

"அப்பேய்..."

"என்னடா?"

"ரொம்பத்தான் இருமுறீங்க? நாளைக்கு புதுக்கோட்டைல பெரிய டாக்டர் யாரையாவது போய்ப் பாக்கலாமா?"

"வெட்டிச் செலவுடா... நீ போய் வேலையைப் பார்..."

"என்னத்தப் பாக்க... இப்படி லொக்கு லொக்

குன்னு காதைக் கொத்துனா, அதைக் கேட்டுக்கிட்டு எப்படிச் சும்மா இருக்க?"

"எல்லாம் சரியாயிடும் போடா... ஆகாட்டி ஒரு மருந்து வெச்சருக்கேன். அதை உன்கிட்ட கேக்கறேன். அப்ப நீ கொடு... இப்ப போய்ப் படு போ..."

அவர் எப்பொழுதுமே அப்படித்தான்... பிடித்தால் பிடித்த பிடி. அலுப்போடு பாயையும், தலையணையையும் எடுக்கச் சென்றான். பாய் சாய்த்து வைக்கப்பட்டிருந்த சுவற்றுக்கு சில அடிகள் தொலைவில் ஒரு கருப்பு-வெள்ளை புகைப்படம், ஃப்ரேம் போட்டு மாட்டப்பட்டிருந்தது. அதன் மேல் 'மன்னார்சாமி ஜீவ சமாதி' என்கிற எழுத்துக்கள்! அதைத் தொட்டு கண்ணில் ஒற்றிக்கொண்டான்.

வெளியே ஒரு கயிற்றுக் கட்டில் கிடந்தது.

அதில் பாயை விரித்து ஏறிப் படுத்தான். அவனுக்குப் பக்கத்திலேயே பாதுகாப்பாகப் படுத்துக்கொள்ள கோமதியும் வந்தாள். கொசுத் தொல்லை தெரியவே, அருகிலிருந்த வேப்ப மரத்துக் கிளையை ஒடித்து அதன் பச்சை இலைகளை உருவி கருப்புத் தீச்சட்டி ஒன்றில் போட்டு, கொஞ்சம் போல காய்ந்த சருகுகளையும் போட்டு தீ வைத்தான். வேப்பம் புகைக்குக் கொசு அண்டாது!



அதை அன்புமணி ரசித்தான்.

புகை மண்டிய அந்தச் சூழல் அவனுக்கு ரம்யமாகப் பட்டது.

கோமதி படுத்தால் தூங்கிவிடும் ரகமில்லை. அப்போதுதான் நிறையப் பேசுவாள்.

"ஏண்ணே... ஊருக்குள்ள ஒரு மந்திரக்காரன் திரியறது பத்தி அக்காவுக்குத் தெரியுமா?"

"ஏன் தெரியாம..? வீட்டுக்குக்கூட வரலை... மலைக் கோயிலுக்குப் போய் முதல்ல அவர் முகத்துல தான் முழிச்சிருக்கா"

"ஐயோடி... அந்தாள் அக்காகிட்ட எதுவும் வித்தை காட்டலியா?"

"அவர பார்த்தா, வித்தை காட்ற ஆள் மாதிரி தெரியல கோமி... நம்ம ஊரைப் பத்தி நல்லா தெரிஞ்ச மனுஷனா இருக்காரு. நம்ம சியாமளாவுக்கு திரௌபதிங்கறதுதான் வெச்ச பேர்... அதை அந்தாள் அப்படியே சொன்னப்போ, நான் ஆடிப்போய்ட்டேன்..."

"ஆத்தாடி... அப்ப நீ அவரைப் பத்தி என்ன நினைக்கறே?"

"எனக்கு சொல்லத் தெரியல. எடக்குமொடக்கா ஊருக்குள்ள ஏதோ நடக்கப் போகுதுன்னு மட்டும் தோணுது."

"அண்ணே! உன்கிட்ட ஒரு முக்கியமான விஷயம்?"

"என்ன கோமி..?"

"நாளைக்கு விடிஞ்சா வியாழக்கிழமை... நான் நம்ம முப்பாட்டனோட சமாதிக்குப் போய் விளக்குப் போட்டுட்டு வரப் போறேன்"

"என்ன கோமி திடீர்ன்னு..?"

"அங்க போய்ட்டு வந்தாலே நல்லது நடக்குமாமே..?"

-அவன் சொன்ன உடனேயே சிரித்துவிட்டான்.

"இப்ப எதுக்குண்ணே சிரிச்சே..?"

"இல்ல... எப்படி எப்படியெல்லாம் நம்பிக்கைங்க பாரு- அதை நினைச்சுதான்."

"நம்பிக்கையா..? இல்லண்ணே. என் தோழி செண்பகம், ஒன்பது வாரம் போய் விளக்குப் போட்டுட்டு வந்தா. அவ வேண்டிகிட்ட மாதிரி, அவ அண்ணனுக்கு வேலை கிடைச்சிடிச்சு"

"காக்கா உக்காரப் பனம் பழம் கோமி... அந்தச் சமாதிக்குள்ள இருக்கறவர் நம்ம முப்பாட்டனார்... அவருக்கு சக்தி இருந்தா, நாம இப்படியா கஷ்டப்பட்டுகிட்டிருப்போம்? அவர் வாரிசுங்க நாம கஷ்டப்பட்டுகிட்டிருக்கிறது, அவருக்கு சக்தி இருந்தா தெரியாமலா போயிருக்கும்?"

"நீ என்னதான் சொல்ல வர்றே?"

"எப்பவோ சாமி புல்லாங்குழலை வாசிச்சு ஊருக்கு நல்லது பண்ணாராம். இதை சாமியே வேற வந்து சொல்லிட்டும் போச்சாம். அதனாலதான் அவருக்கு சாமி பட்டம். அவர் சாகவும் எல்லாரையும் எரிக்கற மாதிரி எரிக்காம, புதைச்சு ஒரு மண்டபத்தையும் கட்டிட்டாங்க. இது நடந்து நூத்தம்பது, இருநூறு வருஷமும் ஓடிப் போச்சு... அவருக்கு நிஜமா சக்தி இருந்திருந்தா, நாமெல்லாம் இப்படியா இருந்திருப்போம்? நீ கொஞ்சம் யோசிச்சுப் பார்..."

"ஏண்ணே இப்படி விரக்தியாப் பேசறே?"

"நான் அப்படித்தான் பேசுவேன். நீ படுத்துத் தூங்கு..."

- அவன் சொல்லவும் அவள் முகம் தூக்க... அப்பாவின் இருமல் அதிகமாகிவிட்டிருந்தது. கட்டில் கால் துவாரத்தில் எப்பொழுதும் ஒரு புல்லாங்குழலைச் செருகி வைத்திருப்பான். தூக்கம் வராத நிலையில் எடுத்து வாசிப்பான். இரவு நேரம்-குளிர்ந்த காற்று... அதில் அவன் கலக்கவிடும் அந்தக் காற்றிசை அமிர்தமாக இருக்கும்.

கோமதியும் அப்படியே, ரசித்தபடியே தூங்கிவிடுவாள்.

இன்றும் அப்படித்தான் நடக்கும் போல இருந்தது. அப்போது..!

(தொடரும்)




# கிருஷ்ணா தந்திரம்!

"ஊர் எல்லையில் ஊரே திரண்டிருக்க மன்னார் மிரண்டு போயிருந்தான். தன் எதிரே பெருந்திரளாக ஒரு ஊரே திரண்டிருந்தால் யாருக்குதான் மிரட்சி தோன்றாது? போதாக் குறைக்கு ஆடு, மாடுகளும் வெகு சகஜமாக அவர்களோடு கலந்து நின்று கொண்டிருப்பதும், எல்லாருமே வைத்த கண் வாங்காதபடி பார்த்துக் கொண்டிருப்பதும் அவனுக்குப் புதிய அனுபவம்.

அவர்களுக்கும் அது புதிய அனுபவம்.

அந்தக் கூட்டத்தில் அவன் தாய்-தந்தைகூட இருந்தனர். அவர்களும் அவனை, 'உம்... அடுத்து எதை வாசிக்கப் போகிறாய்? என்று கேட்பது போலவே பார்ப்பதாகவும்தான் அவனுக்கு தோன்றியது.

அப்போது ஊர் தலைவரும் வந்து சேர்ந்தார். வந்து சேர்ந்தார் என்பதைவிட மன்னாரின் காலடியில் வந்து பொத்தென்று விழுந்தார் என்பது பொருந்தும். அப்படியே அந்தப் புல்லாங்குழலை வாங்கி 'கிருஷ்ணா கிருஷ்ணா' என்று விக்கித்தபடியே கண்களிலும் ஒற்றிக் கொண்டார். பின், 'மன்னார்... இல்ல இல்ல... நீ சாமி... தப்பு தப்பு... நீங்க சாமி... உங்களுக்குப் பின்னால அந்த கிருஷ்ண பரமாத்மாவே இருக்காரு. இந்த ஊரை காப்பாத்தின பரோபகாரி நீங்க... ஆனா ஜாதிங்கற குறுகிய வட்டத்துக்குள்ள உங்களைத் தண்டிச்சுட்ட பாவி நான்... என்னை மன்னிச்சிடுங்க சாமி.' என்று மாடு மேய்க்கும் மன்னாரை 'மன்னார் சாமி' ஆக்கிவிட்டார்!"

அன்புமணி புல்லாங்குழலை எடுத்து வாசிக்கத் தொடங்கினான்.

வானில் இரண்டொரு நாளில் பௌர்ணமி வரப் போவது போல, அணில் கடித்த பழமாட்டம் ஒரு ஓரமாய் நிலா.

அப்படி ஒரு நிலைக்கு நடுவில் அன்புமணியின் குழலிசை சர்க்கரை, தேன், பால், பலா என்று ஒரு தித்திப்புக் கூட்டமே கூடிக் கலந்ததுபோல இருந்தது. அன்புமணி ஒன்றும் குருநாதரை தேடிப்

போய்பாடம் படிப்பது போலெல்லாம் இசை கற்றவ னில்லை. ஒருவர் இசைப்பதைப் பார்த்து, துவாரங்க ளில் காற்றை ஊடுருவி வரச்செய்து தப்புத்தப்பாய் ஓசை எழுப்பி கற்றுக்கொண்டதுதான் அவனது குழ லிசை. அதன்பின் கொஞ்சம்போல ஒட்டிக் கொண்ட அந்த இசையே சிறிது சிறிதாக தன்னை வளர்த்திக்கொண்டு விடுவதுதான் குழலிசையில் உள்ள சிறப்பு.

அதனால்தானோ என்னவோ... கண் தெரியாதவர் கள், பிளாட்ஃபார கடைக்காரர்கள், மாடு மேய்ப்ப வர்கள் என்று இசையை என்னவென்றே அறிந்திராத வர்கள்கூட குழலை மட்டும் எப்படியோ வாசிக்கப் பழகிவிடுகின்றனர்!

அவர்களே பழகிடும்போது, பால்யத்தில் இருந்தே குழலிசையில் ஒரு ஈடுபாட்டோடு வாசிக்கும் அன்பு மணி வாசிக்கும்போது அதில் பிசிறு தட்டவோ, இல்லை ஏற்ற இறக்கங்களில் ஒரு குறைவோ எப்படி வந்துவிட முடியும்?

கோமதி அப்படியே உறங்கிவிட்டாள். அவன் அப் பாவிற்கோ இருமல் சுத்தமாய் நின்று, கட்டிலில் எழுந்து அமர்ந்தவராக மெல்லத் தலையாட்டிக் கொண்டிருந்தார் அவர்.




தினமும் படுத்துத் தூங்குவதற்கு முன் ஒரு குட்டி வாக் போய் வரும் பழக்கமுடைய ராகவ், அப்போது பார்த்து அன்பு மணி வீட் டுப் பக்கமாய் நடந்து வந்து கொண்டிருந் தான். பகலில்தான் அவனோடு யாதவகிரிக் குப் போகவில்லை, இரவிலும் துணைக்கு வர வில்லை என்றால் படு சீரியஸாக கோபித்துக் கொண்டுவிடுவான் என்பதால் அவனோடு ஷ்யாமளாவும் வந்திருந்தாள்.

அவனுக்கு அவன் வீட்டுப் பக்கமாய் வரும் போதே அன்புமணிதான் சாதகம் செய்து கொண்டிருக்கிறான் என்பது தெரிந்துவிட்டது. ராகவோ, "வாவ்... வாட் எ பிரில்லியண்ட் பிட்ச்? ஓ... என்ன ஒரு கேப்... என்ன ஒரு பிரீத் ஷ்யாமளா இந்தத் தெருவுல யாராவது ஃப்ளூட் வித்வான் குடி இருக்காரா என்ன?" என்று கேட்க, "ஆமாம் ராகவ்... ரொம்பப் பெரிய வித்வான். அவரைப் பாத்தா நீ அசந்தே போயிடுவே..." என்று ஷ்யாமளாவும் அவ னுக்குக் கொஞ்சம் சஸ்பென்ஸ் கொடுத்தாள்.

"ஒரு சாதாரண வாக்ல நான் தேடி வந்த விஷயம் கிடைக்கும்னு கொஞ்சம்கூட எதிர்பார்க்கல... நம்ப கலெக்ஷன்ல இவருக்கு ஒரு இம்பார்ட்டண்ட் இடம் இருக்கு, என்ன சொல்றே?"

"உம்... ஒன் தேங்க்கிங் என் தஸ்லாட்... அது யார் கிட்ட இருக்கோ, அவங்கள நாம ஹைஜாக் பண்ணிக் கறதுல தப்பே இல்லை..."

- இருவர் பேச்சும் அன்புமணி வீட்டு வாசலில் முற் றுப் பெற்றது. மூங்கில் படப்பு வேலிக்கு அப்பால், புகைக் கசிவுக்கு நடுவில் கட்டில் மேல் அமர்ந்து வாசித்தபடி இருக்கும் அன்புமணியும் ராகவுக்குப் பளிச்சென அடையாளமாகாததால் அவனை யாரோ என்று கருதியவனாக அவனருகில் சென்ற வன், "ஃபன்டாஸ்டிக்... வொண்டர்ஃபுல்... கிளா ஸிக்..." என்று தனது விமர்சன குதூகலத்தோடு அவன் தோள் மேல் கை வைத்தான்; அன்புமணியின் வாசிப்பும் அத்தோடு நின்று போனது. அன்புமணி யைப் பார்த்த ராகவுக்கு கொஞ்சம் படிகாரத்தைச் சப்பியதுபோல ஆகிவிட்டது.

'நீயா?' என்கிற ஒரு ஆச்சரியப் பரவி அவன் நெற்றி மேல் ஒரு ஓட்டம் ஓடியது.

"என்ன ராகவ்... அன்புதான் அந்த வித்வான். ஆனா வேற யாரோன்னு நினைச்சுட்டே இல்லை..?"

"அ.. ஆமாம்..."

அன்புமணியும் வாரிச்சுருட்டிக் கொண்டு எழுந்த வனாக, அவர்களைக் கட்டிலில் அமரச் சொன் னான்.

"இருக்கட்டும், இருக்கட்டும்... ஐயா எப்பவும் நைட் தூங்கறதுக்கு முந்தி ஒரு வாக் போவார். அதான் இந்தப் பக்கமா வந்தோம். நீ வாசிச்சுகிட்டு இருக்கறது காதுல விழவும், ராகவ் அப்படியே மயங்கி உன் கிட்ட வந்துட்டான்" என்றாள் ஷ்யா மளா.

"என்ன சியாமளா நீ, ரெண்டு பேரும் இப்படி ராத் திரி 10 மணிக்கு மெயிா வருவீங்க..? பகல்ல வராம..." என்று சிணுங்கினான். "வந்துட்டா போச்சு அன்பு... சரி, நீ படு -நாங்க கிளம்பறோம்... உன் தங்கை வேற, நல்லாத் தூங்கிட்டா பார்..."

- என்ற ஷ்யாமளா, ராகவின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு மூங்கில் படப்பு வேலியைத் தாண்டினாள். அன்புமணிக்கு கையும் ஓடவில்லை, காலும் ஓடவில்லை.

கண்ணமங்கலம் பஞ்சாயத்து ஒரு தண்டப் பஞ்சா யத்து. அதனால்தானோ என்னவோ, தெருவிளக்குக ளில் ஒன்று எரிந்தால் ஒன்று எரியவில்லை. இருவ ரும் எரியாத இருள் சூழ்ந்த பாகத்துக்குள் நுழைந்து கண்களை விட்டு மறைந்துவிட்ட அதே தருணம், நேர் எதிர் திசையில் தலைக்கு முட்டாக்கு போட்டுக் கொண்டவராக எங்கோ போய்க் கொண்டிருந்தார் ஷ்யாமளாவின் அப்பாவான செல்லப்பா.

அவர்கள் போவதையே பார்த்தபடி வெளியே வந்து நின்றுவிட்ட அன்புமணி மட்டும், செல்லப்பா எதிர் திசையில் செல்வதைப் பார்த்தான்.

மணி பத்தில் இருந்து பதினொன்றுக்குள் இருக்கலாம். இந்த நேரத்தில் இவர் எங்கே போகிறார்? அதுவும் தனியாக!

அவனுக்குள் சந்தேகம் குறுகுறுக்கத் தொடங்கியது.

அன்புமணியை ஆச்சரியம் தொற்றிக் கொண்டது. நடுநிசியை நெருங்கும் இவ்வேளையில் செல்லப்பா எங்கோ போகிறார்... அதிலும் முக்காடு போட்டுக் கொண்டு..? நாசியை சொறிந்தபடியே நின்ற அன்புமணிக்குள் ஏதேதோ எண்ணங்கள். செல்லப்பா சென்ற சிறிது நேரத்திலேயே பின்னாலே இன்னொரு உருவம் போவதையும் பார்த்தான். அதற்கு மேல் அவனுக்கு இருப்பு கொள்ளவில்லை. பக்கத்தில் கயிற்றுக் கொடியில் கிடந்த துண்டை எடுத்து தோளையும் மார்பையும் மூடிக் கொண்டவனாய் அவர்களை பின் தொடர ஆரம்பித்தான்.

கண்ணமங்கலத்தில் நிறையவே நாய்கள் பெருத்துவிட்டன. நாய்கள் நிறைய இருந்தாலே ஊரில் இருப்பவர்கள் மிச்சம் மீதி விழுமளவுக்கு நன்றாகச் சமைத்து சாப்பிடுபவர்களாக இருக்கின்றார்கள் என்பதுதான் உள்ளடக்கம்.

அப்படிப்பட்ட நாய்களில் சில அங்கங்கே குரைத்துக் கொண்டிருந்தன. காற்று அப்படி ஒன்றும் 'ஜில்லென்று' இல்லை. பருவகாலங்களுக்கும் வயதாகி, அவை தங்கள் இயல்புகளை மாற்றிக் கொண்டுவிட்டதாகத்தான் கருதத் தோன்றியது.

இப்போதெல்லாம் யாரும் கட்டிலை தெருவில் போட்டுக் கொண்டு தூங்குவதில்லை. கொசுக்களின் தொல்லை எல்லோரையுமே ஒரு வலைச் சிறைக்குள் தள்ளிவிட்டது.

தெருவும் விஸ்ராந்தியாக கிடந்தது.

எல்லோருமே உறங்கப் போய் விட்டார்கள்- எந்த வீட்டிலும் துளிகூட வெளிச்சமில்லை. பல வீடுகளின் முகப்பில் கிருஷ்ணனும், மாடும் சேர்ந்து நிற்கும் குட்டிச் சிற்பங்கள் கண்ணில் பட்டன.

கிருஷ்ணனுக்கும் கண்ணமங்கலத்துக்கும் பலகாலமாகவே ஏதோ தொடர்பு இருந்தபடியே வந்திருக்கிறது. இது அதன் எதிரொலி... வீட்டுக்கு ஒரு மாடாவது இருப்பதுகூட அதன் தொடர்பால்தான் இருக்க வேண்டும்.. அந்த ராத்திரி நடையில் அன்புமணிக்குள் மேற்கண்ட சிந்தனைகள் எல்லாம் வந்து வந்து போயின... ஒரு கட்டத்தில் ஊர் எல்லை முடிந்து வயல் வெளி தொடங்கிவிட்டது. வயலுக்குள் வரப்பை ஒட்டிய ஒத்தையடிப் பாதைகள்தான்... ஒவ்வொரு பாதையும் ஒரு குறிப்பிட்ட இடத்துக்கு போகும். ஒன்று களத்து மைதானத்துக்கு... இன்னொன்று பாசன ஏரிக்கு... இன்னொன்று கோனார் தோப்புக்கு... இந்த மூன்றிலும் போகாமல் முள் காட்டுக்குள் போகும் பாதைதான் மன்னார் சாமியின் ஜீவ சமாதி நோக்கிச் செல்வதாக இருந்தது. மன்னார் உயிர் நீத்த நாளன்று வருடத்துக்கு ஒரு முறை மொத்த ஊரே போய்வரும். மற்ற நாட்களில் பெரிதாக யாரும் அந்த பக்கம் போவதில்லை. அன்பு மணியின் முப்பாட்டனார்களில் ஒருவர் என்பதால் அவன் அப்பா மட்டும், பௌர்ணமியானால் போய் வருவதை வாடிக்கையாக வைத்துக் கொண்டிருந்தார். உடல் நலியவும் அவரும் முன்பு போலப் போவதில்லை.

**"தைரியமா இருங்கோ... ஷ்யாமளாவுக்கு எதுவும் ஆயிடாது. இனி இந்த மகான் அவளுக்குத் துணையா இருப்பார். அந்தப் பைராகியும் வந்த சுவடு தெரியாம திரும்பிப் போயிடுவார்"**

அன்புமணிக்கு செல்லப்பா அனேகமாக ஜீவ சமாதி உள்ள பாதைக்குள்தான் நுழைந்திருக்க வேண்டும் என்று தோன்றியது. ஏனென்றால் எதிரில் விரிந்திருக்கும் மற்ற பாதைகளில் எட்டிய தூரம் பார்க்க முடிந்த அளவில் அடர் கருப்பாக யாரும் தெரியவில்லை!

அவனும் முள்காட்டுப் பாதைக்குள் காலை வைத்தான். செருப்பு அணியாமல், ஒரு சட்டைகூட போடாது ஒரு துண்டோடு வந்தது தப்பு என்பது போல அப்போதுதான் நினைத்தான். வழிநெடுக ஆடுமாடுகளின் கழிவுகள் காய்ந்து போய்க் கிடக்க, காலாலே தடவித் தடவியபடிதான் நடந்தான். முள்கிளைகள் இடைமறித்து, மார்பு மற்றும் முதுகில் ரத்த வரிகள் போடப் பார்த்தன.

'ஙொய்ய்ங்ங...!' என்கிற சின்ன வண்டுகளின் கச்சேரி, களை கட்டியிருந்தது. கிரிப்பிள்ளைகள் இடைமறித்து ஓடி மிரட்டின.

சில புதர்களுக்குள் பன்றிகள் பெருமூச்சோடு இளைப்பாறுவதை உணர முடிந்தது. ஆங்காங்கே துர்நாற்றமும் வீசியது. ஒரு குறிப்பிட்ட தூரத்தில் முள்காடு முடிந்து சமவெளி போல பொட்டல் நிலப்பரப்பு தெரிந்தது. அந்தப் பரப்புக்கு அப்பால் ஒரு ஏக்கர் பரப்புக்குள் எல்லா மரங்களும் தழைத்திருக்கும் ஒரு காட்டுப்பகுதி... அதற்குள்தான் மன்னார் சாமியின் ஜீவசமாதி இருந்தது. இருண்டு கிடக்கும் சமாதிக்குள் இன்னமும் மின்சாரத் தொடர்பு ஏற்படுத்தப்படவில்லை. திருவிழா நாளில் ஜெனரேட்டர் விளக்குகள் எரியும். மற்ற நாட்களில் தீப்பந்தம்தான்!

அன்புமணி பொட்டல் வெளியில் இறங்கி நடக்கும் போது அங்கே தீப்பந்தம் எரிவது தெரிந்து, செல்லப்பா அங்கே தான் இருக்கிறார் என்பது ஊர்ஜிதமாகியது.

சாதாரணமாக திருவிழா நாளில்கூட அவர், சமாதிப் பக்கமெல்லாம் வந்ததில்லை. பிரசாதம் என்று அவர் வீட்டுக்கே எடுத்துச் சென்று கொடுப்பதைகூட இடது கையால் வாங்கி, வலது கையால் வீட்டு வேலைக்காரர்களிடம் கொடுத்துவிடுவார். எல்லாம் பிராமண ஆச்சாரம்!

அப்படிப்பட்டவர் இப்போது ஜீவசமாதிக்கே வந்திருக்கிறார் எனும்போது அன்புமணியை அது ஆச்சரியப்படுத்தியது. அதுவும் இரவில் எதற்கு வர வேண்டும்?

மெல்ல அந்தச் சமாதிக் காட்டுக்குள் புகுந்து, ஓங்கி வளர்ந்திருக்கும் ஒரு மரத்தின் பின்னால் நின்று கொண்டு கவனிக்க ஆரம்பித்தான். சமாதி மேல் ஒரு அகல் விளக்கு எரிந்து கொண்டிருந்தது... பிருந்தாவனம் போல ஒரு மேடை கட்டி அதன் மேல் வளர்க்கப்பட்டிருந்த துளசிச் செடியும் தழைத்திருந்தது. முன்னாலே மண்டி போட்டு அமர்ந்திருந்தார் செல்லப்பா... அவருக்கு முன்னால் ஒன்பது அகல் விளக்குகளில் நெய் விட்டு திரி போட்டு தீபம் போடும் முயற்சியில் இருந்தாள் கோமளா மாமி!

அன்புமணி கொஞ்சம் போல நெருக்கமாய் முன்னேறி, இன்னொரு மரத்தின் பின்னால் நின்றபடி கவனிக்க ஆரம்பித்தான். செல்லப்பா அழுவதே அப்போதுதான் தெரிந்தது. அவர் கடவுள் சந்நிதி முன்னால் கண்ணீர் மல்க பிரார்த்திப்பதுபோல பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்.

மாமியும் விளக்கேற்றி ஒரு வரிசையாக வைத்துவிட்டு சற்று விலகி நின்றிட, செல்லப்பா அதன்பின் விழுந்து வணங்க ஆரம்பித்தார். பின் சுற்றி வந்தார். அவரை மாமியும் அப்படியே பின்பற்றினாள். பின் மெல்லிய குரலில், "தைரியமா இருங்கோ... ஷ்யாமளாவுக்கு எதுவும் ஆயிடாது. இனி இந்த மகான் அவளுக்குத் துணையா இருப்பார். அந்தப் பைராகியும் வந்த சுவடு தெரியாம திரும்பிப் போயிடுவார்" என்றாள்.

இல்ல கோமளா... அந்தப் பைராகி பொல்லாதவன். ஷ்யாமளாவை அவன் வசியப்படுத்திட்டா, எல்லாமே கெட்டுப் போயிடும். இனிமே இங்க மட்டுமில்ல.. கோயில்லயும் பூஜைகள் சிறப்பா நடக்க ஏற்பாடு பண்ணணும். அந்த நாள்ல ஊரையே காப்பாத்தின இந்த மகானால தான் இப்ப வரப் போற ஆபத்தையும் தடுக்க முடியும்" என்று அவர் மாமிக்குச் சொன்னதைக் கேட்கவும் அன்புமணிக்குள் ஒரே குறுகுறுப்பு...

அதன்பின் இருவரும் திரும்பத் தொடங்கினார்கள். "கோமளா, நீ முதல்ல போ.. நான் ஒரு அஞ்சு நிமிஷம் உட்கார்ந்துட்டு வரேன்' என்று செல்லப்பா, சந்நிதி முன் அப்படியே சம்மணமிட்டு



அமர்ந்தார். அந்த ஒன்பது தீபங்களில் ஒன்றிரண்டு காற்றுபட்டு அணையவும் அவற்றை திரும்ப ஏற்றினார்.

பார்த்துக் கொண்டே இருந்த அன்புமணிக்குள் ஒரே குழப்பம்!

விடிந்துவிட்டது.

யாதவகிரி கோயில்மணி சப்தம் ஊர் முழுக்கக் கேட்கும் விதமாய் ஒலித்தது. சிலர் அதை ஆச்சரியமாக எதிர்கொண்டார்கள். சமீபகாலமாக அது ஒலித்து அவர்கள் கேட்காததுதான் காரணம்.

சந்நிதியில் இருந்த ஆராவமுத ஐயங்காரே, தான் சந்நிதிக்குள் இருக்கும்போது மணியடித்தது யார் என்கிற மாதிரி எட்டிப் பார்த்தார். ஆச்சரியம்போல செல்லப்பாதான் அடித்துக் கொண்டிருந்தார்.

"ஓய் செல்லப்பா... நீரா?" - ஐயங்கார் கையில் பெருமாள் தீர்த்தமுடன் போய் நின்று கேட்டார்.

"நானேதான் ஓய்.."

"என்ன இது திடீர்னு...?"

"திடீரா... சரிதான், இந்தக் கோயிலுக்கும் எனக்கும் சம்பந்தமே இல்ல பாரும்.. ஏன் கேட்க மாட்டீர்?"

"நான் சம்பந்தம் இல்லேன்னு எங்க சொன்னேன்? அஞ்சாறு வருஷமா இப்படி கோயிலுக்கு வந்து பெருமாளைச் சேவிக்காத நீர் இப்ப வந்தா அது திடீர் விஜிட் தானே ஓய்..?"

"அது பழைய குப்பை... எனக்கு ஒரு நாள் உம்ம அண்ணா உரிய மரியாதை தரலை.. இனி இந்தக் கோயில் பக்கம் கால் எடுத்து வைக்கமாட்டேன்னு சொன்னேன். இப்பதான் அவர் வைகுண்டம் போய்ச் சேர்ந்து நீர் வந்துட்டீரே..?"

"நான் வந்து பொறுப்பேத்துண்டு ரெண்டு வருஷம் ஆறது..."

"குத்திக்காட்டாதீரும் ஸ்வாமி.. நான்தான் பெருமாள் விஷயத்துல கொஞ்சம் மெத்தனமா இருந்துட்டேன். அதான் இப்ப புறப்பட்டு வந்துட்டேனே..? இனி தினசரி நான் தவறாம வருவேன். பெருமாளுக்கு ஒரு குறையும் வைக்கக்கூடாது. ஆறு கால பூஜை, ததியாராதனம், ஊஞ்சல்னு எதுலயும் ஒரு குறை கூடாது..."

-செல்லப்பா விஸ்தரித்துக் கொண்டே போனார். அப்போது எங்கோ ஒரு மூலையில் இருந்து இடிச் சிரிப்பு சப்தம் கேட்க தொடங்கியது. கூடவே இதுக்கு பேர்தான் ப்ராண பயம்கறது... வந்துட்டியா வித்வானே... வந்துட்டியா கோயிலுக்கு..? ஏ! தலை கனம் புடிச்சவனே... வந்துட்டியா கோயிலுக்கு" என்று கூடவே குரலும் கேட்டது.

திரும்பிப் பார்த்தால் பைராகி!

(தொடரும்)

**11**



# இந்திரா சௌந்தர்ராஜன்

“மாடு மேய்க்கும் மன்னார், மன்னார்சாமியாக கண்ணமங்கலத்தவர்களால் பார்க்கப்பட ஆரம்பிக்கவும்தான், மன்னாருக்கே தன்னிடமும் ஏதோ ஒரு சிறப்பு இருப்பது புரிய ஆரம்பித்தது. துளிகூட தன்னலம் இல்லாத பொதுநலம்தான் அந்தச் சிறப்பு என்று பிறருக்கும் புரியத் தொடங்கியது. அதன்பின் மன்னாரை அந்த ஊரே கொண்டாடத் தொடங்கிவிட்டது. எல்லோரும் தங்கள் வீடுகளுக்கு அழைத்து விருந்து அளித்து ஆசி பெற்றுக்கொள்ள முயன்றனர். சிலர் மன்னார் தங்கள் நிலங்களில் நடந்தாலே போதும், அந்த நிலம் பொன்னாய்க் கொழிக்கும் என்று நம்பத் தொடங்கினர். ஆனால் மன்னாருக்கு அந்தப் புதிய மதிப்பும், வரவேற்பும் துளிகூடப் பிடிக்கவில்லை. தான் எப்போதும் போலவே மாடு மேய்க்கும் ஒரு மன்னாராகவே பார்க்கப்பட வேண்டும் என்றுதான் விரும்பினான். இதனால் ஊர் பெரிதாய் மதித்தபோதும் மன்னார் அதில் மயங்கிவிடாமல், ஒதுங்கிச் செல்லத் தொடங்கினான். அப்படி ஒதுங்கிச் சென்று அமர்ந்திருக்கும் போதெல்லாம் புல்லாங்குழல்தான் அவனுக்கு உற்ற நண்பன். அதை எடுத்து வாசிக்கத் தொடங்கிவிட்டால் உலகமே மறந்து போகும்.

ஒரு நாள் அப்படித்தான் திரௌபதி கோயில் குளத்தங்கரையில் அமர்ந்து கொண்டு வாசித்தபோது, 'எங்களுக்கும் காதுகள் உண்டு; இசை ஞானமும் உண்டு' என்பதுபோல குளத்து மீன்கள் அவ்வளவும் குளத்தங்கரையில் மன்னார் முன் திரண்டிருந்தன!”



பைராகியை பார்க்கவும் செல்லப்பாவுக்கு நெஞ்சை அடைக்க ஆரம்பித்துவிட்டது. “பல்ராம்...” என்றார் சற்று பதற்றமாக!

“என்ன வித்வானே...! என்னை இன்

# கிருஷ்ண தந்திரம்!

## 11

ணும் மறக்காம ஞாபகம் வெச்சுண்டுருக்கேளே... பலே!" என்றார் வைராகியும்.

"மறக்கக் கூடிய மனுஷராய்யா நீர்..? ஆமா எங்க இந்தப் பக்கம்?" -செல்லப்பாவும் பேச வேண்டுமே என்கிற மாதிரிதான் கேட்டார்.

"இது நான் கேட்க வேண்டிய கேள்வி வித்வானே... நான் கேட்க வேண்டிய கேள்வி"

"என் ஊர்... என் குலதெய்வக் கோயில்... நான் பொறந்தது இந்த ஊர்லங்கறதையும், இது என் தாயாரோட ஊர்ங்கறதையும் நீர் மறந்திருக்க மாட்டீர்."

"தாய் வீட்டுக்கு பிரசவத்துக்கு வந்த இடத்துல பிறந்ததால இது நம்ம ஊர் ஆயிடாது பல்ராம்.."

"அதுவும் சரிதான்... இங்கேயே பிறந்து வளர்ந்துட்டதால உமக்கும் இது உம்மோட ஊர் ஆயிடாது.. இது அந்த கிருஷ்ண பரமாத்வோட ஊர்..."

- வைராகியும், செல்லப்பாவும் போட்டு வாங்கிக் கொள்வது பட்டர் ஆராவமுத ஐயங்காருக்கு ஆச்சரியமளித்தது. அவருக்குப் வைராகி அந்த ஊரில் பிறந்த ஒருவர் என்பதே அப்போதுதான் தெரியும். ஆச்சரியம் குறையாதபடி அவர்களின் வாக்குவாதத்தைக் கவனித்தபடி இருந்தார்.

"பல்ராம்... போதும். உமக்கு இப்ப என்ன வேணும்...? எதுக்கு இப்படி ஊருக்குள்ள சுத்தி வந்துண்டு சித்து வேலை காட்டிண்டு இருக்கேள்?"

"நான் ஒரு சித்தும் பண்ணலை. பண்ணால் நீர் தாங்க மாட்டீர் வித்வானே.."

"அதுவும் சரிதான்... மாயம், மந்திரம்கற சமாச்சாரமெல்லாம் எனக்குத் தெரியாதுதான். நான் சாத்வீகி... இந்த கிருஷ்ணன் காலடியில கிடக்கற ஒரு அடிமை வைஷ்ணவன் நான்.."

"அடடா... என்ன ஒரு தன்னடக்கம்! என்ன ஒரு தன்னடக்கம்! ஓய் வித்வானே...! பழசு உமக்கு ஞாபகம் இருக்கும்னு நான் நம்ப



# தமிழன் எக்ஸ்பிரஸ்

இதழ்: 13-88 தேதி: 25-12-2008

A New Indian Express Group Publication
Express Gardens, 29, Second Main Road, Ambattur Industrial Estate, Chennai - 600 058.
Ph: 23457601 Fax: 044-23457619

Chairman of the Board
**Manoj Kumar Sonthalia**

Editorial Advisor
**T.J.S. George**

Director (Marketing)
**Vinod Kumar**

Vice-President (Technical)
**K. Nanda Kumar**

Sr. General Manager (PAP)
**R.K. Jhunjhunwala**

Vice President (Sales)
**Lakshmi Menon**

Director (Finance)
**S. Natarajan**

*Space Marketing Offices:*

BANGALORE:
Phone : 22860959 Fax : 080-22866617

BHUBANESWAR : **Prasanna Panda**
Phone : 2535274 Fax : 0674-2535634

CHENNAI : **K. Madan Mohan**
Phone : 23457624 Fax : 044-23457619 / 20

DELHI : **Avnish Singh**
Phone : 23703706 Fax : 011-51555059

HYDERABAD : **B. Ramakrishna Rao**
Phone : 23414212 Fax : 040-23414282

KOCHI : **R. Surendran**
Phone : 2400218 Fax : 0484-2401799

KOLKATTA : **Aloka Kapur**
Phone : 22430857 Fax : 033-22435814

MUMBAI : **V.C. Kumar**
Phone : 22882996 Fax : 022-22886954

**TAMILAN EXPRESS**
Printed and published by Mr. R.K. Jhunjhunwala on behalf of Express Publications (Madurai) Ltd., at Express Press, "Express Gardens", 29, Second Main Road, Ambattur Industrial Estate, Chennai - 600 058.
Editor : **R. Sivakumar**

ஆசிரியர் : ஆர். சிவகுமார்


றேன். கணக்குத் தீர்த்துக்கத்தான் வந்துருக்கேன். இதே கிருஷ்ணன் எனக்கும் பக்கபலமா நிப்பான். ஒண்ணு தெரிஞ்சுக்குமயா... நான் இங்க வந்ததால்தான் பல வருஷங்களுக்குப் பிறகு தீரும் இந்தக் கோயிலுக்கு வந்திருக்கீர். உம்ம வறட்டுக் கௌரவத்துக்காக இந்த கிருஷ்ணனையே தூக்கி எறிஞ்ச மகா புண்ணியவான் நீர். அது மட்டுமல்ல, என்னால நீர் இதுவரை போயிராத இடத்துக்கெல்லாலும் போய்வரத் தொடங்கிட்டீர்! நேத்து நடுநிசியில எங்க போனீர்- என்ன பண்ணீர்னு எனக்குத் தெரியாதுன்னு மட்டும் நினைச்சிட வேண்டாம்"

- வைராகி அந்த இரவு விஷயத்தைத் தொட்டதுதான் தாமதம்... செல்லப்பாவுக்கு முகம் இருளத் தொடங்கிவிட்டது. பட்டரும் துல்லியமாக அதனைக் கவனித்தார்.

"என்ன செல்லப்பா இது? இந்த மனுஷன்பாட்டுக்கும் ஏதேதோ சொல்லிண்டே போறார்..! நீர் திருதிருன்னு முழிக்கிறீரே? நேத்து ஒரு ராத்திரியில அப்படி எங்க போனீர்?" என்று அவரும் கேட்டார். செல்லப்பா அதற்கு மேல் அங்கு நிற்கவில்லை.



"பல்ராம்.. நீ பழைய குப்பையைக் கிளறணும்னே வந்துருக்கே. அநாவசியமா வம்புக்கு வரே. ஆனா ஒண்ணு மட்டும் ஞாபகம் வெச்சுக்கோ. நீ எதுக்காக இந்த ஊருக்கு வந்துருந்தாலும் சரி, அது மட்டும் நடக்காது. உனக்கு முந்தியே என் தலைமுறையில அதைத் தேடிக் களைச்சு, அதனால என் பாட்டனார் ஒருத்தருக்குப் பைத்தியமே பிடிச்சதாம்.... ஜாக்கிரதை. உனக்கும் அதுதான் நடக்கப் போறது. நான் வரேன்..." என்று இரைச்சலாகப் பேசிவிட்டு செல்லப்பா விறுவிறுவென்று படிகளில் இறங்கத் தொடங்கிவிட்டார். பட்டருக்கு செல்லப்பாவின் பேச்சு ஒரு மூடு மந்திரமாகவே இருந்தது.

அப்படியே பார்வை வைராகி பக்கம் போயிற்று. 'யாரோ? எவரோ...?' என்கிற அவரைப் பற்றிய குழப்பத்திற்கு லேசாக விடை கிடைத்தது போலவும் இருந்தது. வைராகியும் பட்டரை நெருங்கினார்.

"ஸ்வாமிக்கும் இதே ஊர்ங்கறது செல்லப்பா பேசினதுல இருந்து தெரிஞ்சது. ஸ்வாமிகளோட தாயார் யார்னு தெரிஞ்சா தேவலை..."

"நான் கஞ்சிரா வித்வான் மோகன்ராவோட மகள் ராதாபாயோட மகன்.."

"யாரு... வடக்குத் தெருவுல வாழ்ந்த வித்வான் மோகன் ராவோட ஒரே பொண்ணு ராதாபாயோட பிள்ளையா?"

"ஆமாம்..."

"ஓ... இப்ப புரியறது... ராதாபாய்க்கும் ஹரித்வாரை சேர்ந்த கல்யாண் பாண்டேக்கும் கல்யாணம் நடந்து, ராதாபாயும் ஹரித்வாருக்கே போயிட்டா... இப்ப உம்ம குடும்பத்துலாரும் ஒருத்தர் கூட ஊர்ல இல்ல.போகட்டும்... பல வருஷம் கழிச்சு இந்த ஊருக்கு நீங்க வந்துருக்கக் காரணம்?"

-பட்டாச்சாரியின் கேள்விக்கு வைராகி பதில் சொல்லாமல், "போகப் போக பார்க்கத்தானே போறீர்?" என்றபடி அந்தப் புன்ன மரத்தடி

நோக்கி செல்லத் தொடங்கினார்.

பட்டர் முகத்தில் லேசான அதிர்ச்சியும், குழப்ப மும்!

"ராகவ், வாக்மேனை காதில் மாட்டிக்கொண்டு ஏதோ ஒரு சி.டி.யின் மேற்கத்திய இசையில் மூழ்கியி ருந்தான். கைகளில் ஒருவித அபிநயமும், சொடக்குப் போட்டுக் கொள்வதுமாய் இருந்தான். பக்கமாய் ஒரு பேக் திறந்து கிடந்தது. அதில் சில இசைக் குறிப் புகள்.

கையில் காபி தம்ளருடன் நுழைந்த கோமளா மாமி, தம்ளரை வைத்துவிட்டு, "காபி ஆறிடப் போறது சாப்பிடுங்கோ" என்று சொன்னதெல்லாம் அவன் காதிலேயே ஏறவில்லை. ஜன்னலுக்கு வெளியே வானத்தில் பஞ்சு மூட்டைகளைத் தூக்கிப் போட்டு சண்டை போட்டதுபோல வானில் உதிர்ந்து கிடக்கும் மேகப் பொதிகளின் மேல் அவன் பார்வை இருந்தது.

பக்கத்தில் மாமரத்தில் காகம் ஒன்று தொண்டை யில் தனக்கு கரகரப்பு ஏற்பட்டுவிட்டதுபோல ஒரு தினுசாகக் கரைந்தபடியே இருந்தது. அவனுக்கு அதன் சப்தமும் காதில் விழவில்லை. ஷ்யாமளா குளித்து முடித்தவளாக தலையைத் துவட்டிக் கொண்டே அவனது அறைக்குள் நுழைந்திருந்தாள். காபி மணம் அவளை இழுத்தது. அவன் தன்னை மறந்து சி.டி. கேட்டபடி இருப்பதைப் பார்த்தவள், அந்தக் காபியை எடுத்துக் குடிக்க ஆரம்பித்தாள். அவனும் அவளைப் பார்த்துவிட்டு, காதிலிருந்த ஹியர்ஃபோனை கழட்டினான். "என்ன ஷ்யா மளா... எனக்கு காபி கிடையாதா?" என்று கேட் டான். "இது உனக்குக் கொண்டு வந்த காபிதான். நீ சங்கீத சாகரத்துல மொத்துண்டு இருந்தியா... நான் தான் ஆறிடப் போறதேன்னு எடுத்துக் குடிச்சுட் டேன்"

**அவன் தன்னை மறந்து சி.டி. கேட்டபடி இருப்பதைப் பார்த்தவள், அந்தக் காபியை எடுத்துக் குடிக்க ஆரம்பித்தாள்.**

"அஃப்கோர்ஸ்... சென்னையில லேண்ட்மார்க்ல வாங்கின 'கிளாட்மேன்ஸ் ஹோப்'பிங்கற சி.டி.யின் கான்ஸெப்ட் வொண்டர்ஃபுல்!"

"கொஞ்சம் நம்ம பக்கத்து சாஸ்திரிய சங்கீதத்தை யும் கேள் ராகவ்..."

"கேட்டுட்டா போச்சு... அப்படியே ரெண்டையும் மிக்ஸ் பண்ணி ஒரு நியூ ஸ்ட்ரக்சரல ஒரு ஆல்பம் போடணும்கறதுதானே என் விருப்பம் ஷ்யாமா"

"அதுக்கு முந்தி உனக்கு ஒரு செய்தி. ஒரு அரை மணி முந்தி நம்ம மாஸ்டர் ஃபோன் பண்ணார்.... அவசரமா அவருக்கு ஷ்ரூட்ல சோலோவா ஒரு அஞ்சு நிமிஷத்துக்கு ஒரு பேக்-அப் வேணுமாம். மழை பெய்யறது... அதோட எதிரொலியா ஆத்துல தண்ணி பாயறது... பயிர் பச்சைகள் எல்லாம் தழைக் கறது... நனைஞ்ச பட்சிகள் உற்சாகமா குரல் கொடுக் கின்றன. நடுவே பெய்யற மழையால கரைமேல அதோட சப்தம்...! இதான் கான்ஸெப்ட்டுன்னு சொன்னார்..."

ஷ்யாமளா கூறிடவும் அவளை சற்று சஞ்சலத்து டன் பார்த்தான் ராகவ்.

"எதுக்கு இப்ப இப்படிப் பாக்கறே?"

"இல்லை... மாஸ்டர் ஏன் எனக்கு ஃபோன் பண் ணலை...?"

"இதை நீ எந்த அர்த்தத்துல கேக்கறே?"

"இல்லை, நானும் உன்னோட இருக்கறது அவருக்குத் தெரியும்... அடுத்து நான்தான் இங்க நோட்ஸ் போட்டு கம்போஸ் பண்றவனும்கூட..."

"ஏதோ காம்ப்ளக்ஸ்ல தப்பா புரிஞ்சிக்காத ராகவ். உன் செல்ஃபோனை நீ ஸ்விட்ச் ஆஃப் பண்ணி வெச் சிருக்கறத மறந்துட்டேன்னு நினைக்கறேன்..."

- அவள் அப்படிச் சொல்லவும்தான் அவனுக்கு உயிர் வந்தது போல் இருந்தது.

"அது சரி, எப்ப வேணும்னு கேட்டார்?"

"இன்னிக்கே... ரொம்ப அவசரமாம்"

"அப்படி என்ன அவசரம் அவருக்கு...?"

"அவசரம் மட்டுமில்லை... நாம அனுப்பற கான்ஸெப்ட் வொர்க் அவுட் ஆனா, அதுக்கு நமக்கு 10 லட்ச ரூபாய் பரிசு வேற இருக் காம்"

"வாவ்! அப்ப அது ஒரு காம்பெடிஷனுக் குன்னு சொல்..."

"இருக்கலாம்...."

- அவள் சொல்லவும், 'ஷ்யாமளா' என்றபடியே ஹால் பக்கம் இருந்து அன்புமணி குரல் கேட்கவும் சரியாக இருந்தது.

"அன்பு வந்துட்டான்... இந்த கான்ஸெப்ட் பத்தி நான் அன்புமணிகிட்டேயும் சொல்லப் போறேன்..." என்றபடியே நகரப் பார்த்தவளை தடுத்த ராகவ், "நோ.. ஷ்யாமளா.. நம்ம மியூசிக் எஃபர்ட்ஸ் எதைப் பத்தியும் நீ அவன்கிட்டப் பேசாதே. அவனுக்குப் பேசினாலும் புரியாது.."

"அப்ப, புரிஞ்சா பேசலாமா ராகவ்?" -வெடுக் கென்று ஷ்யாமளா திருப்பிக் கேட்கவும், ராகவுக்கு அது முகத்தில் அறைந்த மாதிரி இருந்தது.

அவன் தடுமாறிய அந்த இடைவெளியில், "அன்பு! நான் மேல இருக்கேன். இதோ வந்துட்டேன்" என்ற வளாகக் கீழிறங்கத் தொடங்கினாள். இறங்கின வேகத்தில் அவள் எதிரில் செல்லப்பா... அவருக்குள் கோயிலில் ஏற்பட்ட தாக்கத்தின் தழும்புகள்! மன துக்குள்ளேயே 'இனி ஷ்யாமளா ஒரு நாள்கூட கன் னமங்கலத்தில் இருக்கக்கூடாது' என்கிற முடிவு! அவள் ஒருவேளை தங்க நேர்ந்தால், எது வேண்டுமா னாலும் நடக்கலாம் என்கிற பயமும்கூட!

(தொடரும்)

12

"சாதாரணமாக குளத்து மீன்கள் வயிற்றுப் பசியினால், பொரி போடப்படும்போது கூட்டமாய் ஓடி வரும். அப்படிப்பட்ட மீன்கள் இசை கேட்கக்கூடவா ஓடி வரும்? ஆச்சரியமான அந்தச் சம்பவத்தை திரௌபதி கோயில் பூசாரியும் யதார்த்தமாய் அந்தப் பக்கமாய் வந்திடும்போது கவனித்தார். அவரால் அந்தக் காட்சியை நம்ப முடியவில்லை. இசைக்கு ஆடு, மாடுகள் மயங்கிப் பார்த்திருக்கிறார். இப்படி மீன்கள் கூட மயங்கி நிற்பதை அப்போதுதான் பார்த்தார்.

குழலிசைக்கு அப்படி ஒரு சக்தியா? அவர் மனதுக்குள் கேள்வியோடு ஸ்தம்பித்துவிட்டார். இது முதல் அனுபவம்!

குளத்தங்கரையில் ஒரு பன்னீர் மரம் பாதி வளர்ந்த நிலையில் பூச்சியரித்து பட்டுப்போய்விட்டிருந்தது. அந்த மரத்தில்கூட இரண்டொரு பசும் தளிர்கள் துளிர் விட்டிருந்தன.

மீன் மயங்குகிறது -பட்ட மரம் துளிர்க்கிறது. இசைக்கு இப்படி ஒரு சக்தியா..? அவருக்குள் எழும்பிய கேள்வி, ஊர் முழுக்கப் பரவ ஆரம்பித்தது. அது ஊரின் எல்லை கடந்து, தஞ்சாவூரில் அப்போது ஆட்சி செய்தபடி இருந்த நாயக்க மன்னரின் அவை இசைக் கலைஞர்கள் காதிலும் போய்ச் சேர்ந்தது. அவர்களில் ஒருவர்தான் நாதுராம் கோகலே"

"என்னப்பா விஷயம்...?"

"ரொம்ப முக்கியமான விஷயம்மா... ஆமா, நீங்க எத்தனை நாள் தங்கற ஐடியால இங்க வந்துருக்கேள்?"

"அப்படி ஒண்ணும் கணக்குப் போட்டுண்டு வரலேப்பா..."

"மாமா... மேக்ஸிமம் ஒரு வாரத்துல இருந்து பத்து நாள்"

- மேலே ராகவிடம் இருந்து பதில் வந்தது. அதுவும் மிக வேகமாக! செல்லப்பா தாடையைத் தடவிக்கொண்டு யோசிக்க ஆரம்பித்துவிட்டார்.

"ஏம்ப்பா... இப்ப எதுக்கு இந்தக் கேள்வி?"

"ஒண்ணும் இல்லம்மா... சென்னையில உன் அத்தைக்கு திடீர்னு ரொம்ப உடம்பு சரியில்லையாம். இப்பவோ அப்பவோன்னு இருக்கறதா எனக்குத் தகவல் வந்தது..."

"அதனால?"

"என்ன அதனால... நாம போய்ப் பார்க்க வேண்டாமா?"

"ஓ... அப்ப இன்னிக்கோ, இல்ல நாளைக்கோ நாம சென்னை போகணுமா?"

-திரும்பவும் ராகவ்தான் இடையிட்டு செய்தான். ஷ்யாமனாவுக்கு என்னவோபோல் இருந்தது.




தன்னைப் பார்க்க வந்திருக்கும் அன்புமணிக்கு முன்னாலே, ஒரு முடிவெடுத்துவிட்டவர்போல செல்லப்பா அவனைப் பார்க்கவும், அன்புமணியும் 'நான் பிறகு வருகிறேன்' என்பதுபோல் பின் வாங்கப் பார்த்தான். ஷ்யாமனா தடுத்தாள்.

"அன்பு நில்லு... நான் உன்கூட கொஞ்சம் பேசணும். சரியான நேரத்துக்குதான் நீ வந்துருக்கே..."

செல்லப்பாவும் ஆரம்பித்தார்.

"ஷ்யாமனா... நானும் உன் கூட கொஞ்சம் பேசணும். டேய் அன்பு, நீ போய்ட்டு அப்புறமா வர்றியா..." என்றார். அவர் சொன்ன விதம், அந்தத் தவணி எல்லாமே ஷ்யாமனாவையே கொஞ்சம் போல அரட்டியது. அவனும் விலக ஆரம்பித்தான்.

வந்த வேகத்தில் திரும்புவது என்பதில், ஏதோ செயற்கையாக ஒரு விஷயம் இருப்பது போலவும் தோன்றியது. செல்லப்பா அந்த விஷயத்தைப் போட்டு இழுக்கத் தயாராய் இல்லை.

"ஷ்யாமனா... நாம இன்னைக்கு சாயந்தரமே சென்னைக்குப் புறப்படுறோம். புறப்படத் தயாரா இரு! அப்புறம்... அம்பி ராகவன், தப்பா எடுத்துக்காதேள். நீங்க இன்னொரு சமயம் இங்க வந்து, ஒன்னா ஒரு மாசம்கூட தங்கலாம்..." -என்று அதே பதிலை ராகவுக்கும் நீட்டித்தார்.

பார்த்துக்கொண்டே இருந்தாள் கோமளா மாமி. அவள் முகமும் மாறிவிட்டது. கெடிகாரத்தைப் பார்த்தாள். மணி பன்னிரெண்டை எட்டிக் கொண்டிருந்தது. அடுப்பில் பருப்புருண்டை குழம்பின் குதி!




அதன் வாசநெடி, 'சாப்பிடுவதற்காக மட்டுமே இந்த ஜென்மம்' என்று சொல்லுகிற மாதிரி இருந்தது. செல்லப்பா அங்கிருந்தபடியே வேலைக்காரன் கொண்டையாவை அழைத்து, "டேய், சாயந்திரமா நான் மெட்ராஸ் கிளம்பறேன். என்னோட காரைக் கழுவி, ரெடி பண்ணி வை. திரும்பி வர்றதுக்கு 10, 15 நாள் ஆகலாம். வையாபுரி துணியை வெளுத்து இஸ்திரி போட்டிருந்தான்னா, வாங்கிண்டு வந்து வை" - என்று கட்டளைகளும் பிறப்பிக்கத் தொடங்கிவிட்டார்.

ஷ்யாமளாவிற்கு ஜிவு ஜிவு என்று கோபத்தால் முகம் சிவக்கத் தொடங்கிவிட்டது. "அப்பா... நீங்க போங்கோ- நான் வரலை. நான் மியூசிக்ல கான்ஸன்ட்ரேட் பண்றதுக்காகத்தான் இங்க வந்துருக்கேன். நேத்து வந்துட்டு இன்னிக்கே கிளம்பறதுல எனக்கு இஷ்டம் இல்லை. அத்தையை நான் ஃபோன்ல விசாரிச்சுக்கறேன்" என்று அவர் சற்றும் எதிர்பார்த்திராத ஒரு பதிலைச் சொன்னவள், விறுவிறுவென்று வெளியேறத் தொடங்கிவிட்டாள்.

செல்லப்பாவுக்கு சீட்டுக் கட்டு கோபுரம் ஒரு நொடியில் சரிந்து விழுந்ததுபோல ஒரு அதிர்ச்சி. பைராகி அவர் கண்முன் நின்று பயங்கரமாகச் சிரிக்கிற மாதிரியாக இருந்தது. ராகவ்கூட அதை எதிர்பார்த்திருக்கவில்லை.

**கா**லில் செருப்புகூட இல்லாமல் கண்ணமங்க

வந்து வீதியில் இறங்கி நடந்த ஷ்யாமளாவை, தெருவைச் சேர்ந்தவர்கள் ஆச்சரியம் குறையாது பார்த்தனர். அவளுக்கு அதெல்லாமே பெரிதாகத் தெரியவில்லை. அன்புமணியை அலட்சியமாக அப்பா திருப்பி அனுப்பியதுதான் நெருடிக்கொண்டே இருந்தது. கால்களும் அவன் வீட்டையடைந்துதான் நின்றன. வீடு கூட்டியபடி இருந்த கோமதி, அவள் வரவும் ஆச்சரியப்பட்டுப் போனாள். "அடடே... ஷ்யாமளாக்காவா! வாங்க.. வாங்க.." என்றாள் வெகு உற்சாகமாக.

"கோமதி... எப்படி இருக்கே?"

"நல்லாருக்கேன்கா... அங்கேயே நிக்கறீங்களே, உள்ள வாங்க!"

"ஆமா, எங்க அன்புமணி?" -உள்ளே நுழைந்தபடியே கேட்டாள்.

"அண்ணன் உங்க வீட்டுக்குப் போறதால்லசொல்லிட்டுப் போச்சு...!"

"எங்க வீட்டுக்கு வந்து திரும்பிட்டானே...?"

"உக்காருங்கக்கா... அண்ணன் அப்படியே புதுக்கோட்டை போயிடிச்சோ என்னவோ?"

"புதுக்கோட்டைக்கா... எதுக்கு?" -ஷ்யாமளா கேட்கவும், உள்ளே இருட்டு அறையில் படுத்துக்கிடந்த அன்புமணியின் அப்பா தனது இருமல் ஆலாபனையைத் தொடங்கவும் மிகச் சரியாக இருந்தது.

"அப்பாக்கு ஒரே இருமல்... டாக்டர்கிட்ட காட்டணும் -அப்படியே நாளைக்கு ஒரு நல்ல காரியம்..."

"நல்ல காரியம்னு மொட்டையா சொன்னா எப்படி?"

"இல்ல...என் பெரிய அத்தை என் கல்யாணம் சம்மந்தமா பேச வர்றாங்க"

"ஓ... வெரிகுட் -கங்கிராஜுலேஷன்ஸ்.."

"இருக்கட்டும்கா... இதுக்கெல்லாம் கொஞ்சம் பணம் தேவைப்படுது. அதான் நெல் வியாபாரியைப் பார்த்து பணம் வாங்கிட்டு வரப் போயிருக்கும்னு நினைக்கறேன்..."

"சரி கோமதி... அண்ணன் வந்தா அவசியம் என்னை வந்து பார்க்கச் சொல்லு. நான் வீட்லதான் இருப்பேன். எங்கேயும் போயிருக்க மாட்டேன்"- வந்த வேகத்தில் ஷ்யாமளா திரும்பப் பார்த்தாள்.

"அக்கா இருங்கக்கா... வந்ததுக்கு கொஞ்சம் மோர் சாப்பிடுங்கக்கா" - என்று கோமதியும் உபசரிக்கப் பார்த்தாள். பதிலுக்கு உள்ளே இருட்டு அறைக்குள் இருந்து, "ஏலே அறிவு கெட்டவளே... யாருக்கு மோர் தாரேங்கறே... அவுக நம்ம வீடு தேடி வந்ததே பெருசு. இதுல மோர் சாப்பிடுங்கறியே. உபசாரமெல்லாம் நாம நமக்குக் கீழே இருக்கறவங்களுக்குத்தான் செய்யணும். மேல இருக்கறவங்களுக்கு கிடையாது. அப்படிச் செய்ய நினைச்சா அது அபசாரம்.." - என்றபடியே அன்புமணியின் அப்பா கத்திவிட்டார். கோமதியும் அதைக் கேட்டுவிட்டு தவறு செய்துவிட்டதைப்போல ஒரு பயத்தை முகத்தில் காட்டினாள்.

ஆனால் ஷ்யாமளாவிடம் சட்டென்று ஒரு மாற்றம்.

"கோமதி, நீ இப்ப எனக்கு மோர் கொண்டு வந்து தரே... நானும் குடிக்கறேன். குடிச்சுட்டுத்தான் போவேன்..." என்று உறுதியான குரலில் சொன்னாள்.

கோமதி முகம் பூவாணம் போல ஒளிவிடத் தொடங்கிவிட்டது. உள்ளே அவள் அப்பாவும், "அம்மாடி... உனக்கு ரொம்பப் பெரிய மனசு. ஆனா அப்பாவுக்குத் தெரிஞ்சா எங்களைத்தான் ஏதாவது சொல்வார்" என்றார்.

"நீங்க எந்தக் காலத்துல இருக்கீங்கப்பா... உங்களுக்குள்ள ஏன் இவ்வளவு தாழ்வு மனப்பான்மை? நம்ம ஊரில் எவ்வளவோ சிறப்பான விஷயங்கள் இருக்கு. கூடவே இப்படிப்பட்ட தவறான மனோபாவங்களும் இருக்கு. இதையெல்லாம் வேகமா மாத்தணும்" -என்று ஷ்யாமளா கூறிட கோமதி மோர் கொண்டு வந்து தந்திட, அதை வாங்கி அனுபவித்துக் குடித்து முடித்தாள். அதேவேகத்தில் கிளம்பியவளிடம், "அண்ணன் செல்போன் வெச்சிருக்கு... நம்பர் தரேன், பேசிப் பாக்கறீங்களா?"- என்றாள்.

"முதல்ல கொடு..." என்று கேட்டு வாங்கிக் கொண்டவள் அதே வேகத்தில் வீட்டுக் கூடத்தில் சுவரில் தொங்கியபடி இருந்த மன்னார்சாமியின் ஜீவசமாதி படத்தையும் பார்த்தாள். அந்தப் படத்துக்குப் பின்னாலே அன்புமணியின் ஃபோட்டோ, 'என்னுடைய ஜாகை இங்கேதான்' என்கிற மாதிரி கண்ணில்பட்டது. அதை ஆசையாகப் பார்த்தாள்.

"ஆமா இப்படித்தான் படத்துக்குப் பின்னால எல்லாம் புல்லாங்குழலை வைக்கறதா?" என்று கேட்டாள்.

"அங்கதான் அவ்வளவா எலி வர்றதில்ல... வேற எங்க வெச்சாலும் கடிச்சு வெச்சுடுது..." என்று கோமதி சொல்லவும் ஷ்யாமளாவுக்கு ஆச்சரியமாக இருந்தது. சிரிப்பும் வந்தது.

**யா**தவ கிரி.

புன்னை மரத்தடி....

வைராகி காலை மடக்கி அமர்ந்திருந்த விதமே ஏதோ யோக நிஷ்டை போல இருக்க, "கும்பிட்றேன் சாமி..." என்று அவர் கவனத்தைத் திருப்பினான் தமிழழகன்.

அவரும் ஏறிட்டார். அலட்சியமாக ஒரு சிரிப்பும் சிரித்தார். "என்ன சாமி... என்னை இப்ப எதிர்பார்க்கலையோ?" -என்று எதிரில் மரத்தின் மேல் சாய்ந்தபடியே பேச்சை ஆரம்பித்தான் தமிழழகன்.

"நீ இவ்வளவு சீக்கிரமா வருவேன்னு எதிர்பார்க்கல..." என்று அவன் எதிர்பார்த்திராத பதிலைச் சொன்னார் வைராகி.

"உங்கள பாக்கறதுன்னு முடிவு பண்ணியாச்சு. இதுல சீக்கிரம் என்ன, தாமதம் என்ன.... கிளம்பி வந்துட்டேன்.."

"ரொம்ப சந்தோஷம்... அப்புறம் என்ன விசேஷம்? நான் உன்கிட்ட சொன்ன விஷயத்தை இன்னும் நீ நம்பாம உனக்குள்ள குழம்பிகிட்டு இருக்கே போலிருக்கே?"

"ஆமாம் சாமி... நிஜமா சொல்றேன்; எனக்குத் தூக்கமே போயிடிச்சு. யார்கிட்டையாவது இதைப் பத்தி பேசலாம்னாலும் பயமா இருக்கு..."

"எதையும், யார்கிட்டேயும் பேசாதே... என்னை மட்டும் நம்பு, அப்புறம் பாரு..."

"நம்பப் போய்தானே வந்துருக்கேன்..?"

"சந்தோஷம்... இப்படி உட்கார்..."

- வைராகி அவனை அருகில் அழைத்து உட்காரச் சொன்னார். அவனும் உட்கார்ந்தான்.

"எங்க உன் கைய நீட்டு பார்ப்போம்..."

அவனும் நீட்டினான். அப்படியே, "ரேகை எல்லாமும் பார்ப்பீங்களா சாமி?" என்றும் கேட்டான்.

"ஏதோ ஓரளவுக்கு..."

"கைரேகைங்கறது ஒண்ணுமில்ல. கைய மூடித்திறந்து ஏதாச்சும் பண்ணிகிட்டே இருக்கறதால விழுற மடிப்புதான் அதுன்னு சொல்றாங்களே சாமி...."

"நீ என்ன சொல்றே... 'கைரேகைங்கறது ஒரு தழும்பு மாதிரி; மத்தபடி அதுக்குப் பின்னால எந்த விஷயமும் இல்லே'ன்னு சொல்ல வர்றியா?"

"அப்படித்தானே பகுத்தறிவாளர்லாம் சொல்றாங்க..."

"இப்ப நான் ஒரு விஷயம் சொல்றேன். இப்படிப் பேசறவன் கைல இதோ இந்தப் பாம்பு விரல்ல, இதோ இந்த இடத்துல பட்டையா ஒரு கோடு இருக்கும். இது இருந்தா எதையும் நம்பமாட்டான். எல்லாத்தையும் மறுத்து புத்தி, மூளைன்னு எதையாவது பேசிகிட்டே இருப்பாங்க... உன் கைலயும் இருக்கு பார்...." என்று அந்தப் பட்டைக் கோட்டைக் காட்டினார்.

"சாமி! அப்படின்னா ரேகைங்கறதும், ரேகை சாஸ்திரம்கறதும் நெஜங்களா?"

"உன்னைப் பத்தி இப்ப நான் சில விஷயங்கள் சொல்றேன்... நான் சொல்றேன்னா, நான்னு அர்த்தம் இல்ல. உன் ரேகை சொல்றத நான் படிச்சுச் சொல்றேன்னு அர்த்தம்.."

"சொல்லுங்க சொல்லுங்க..." -அவன் உற்சாகமானான்.

"நீ ஒரு பெண்ணை மனசார விரும்பிகிட்டிருக்கே... சரியா?"

"மேல சொல்லுங்க சாமி..."

"அந்தப் பொண்ணு உனக்குக் கிடைக்கமாட்டா... உன் காதல் தோக்கப்போகுது.."

"சாமி ஊஊ..!"

"பதறாதே... பொம்பள விஷயத்துல நீ ஒண்ணும் யோக்யன் கிடையாது..."

தமிழ்முகன் வெடுக்கென்று கையை இழுத்துக் கொண்டான். அவரைச் சற்று பேந்தப்பேந்தப் பார்த்தான். அவர் சிரித்தபடியே, "சொற்ப உண்மைகளைத்தான் சொன்னேன். அதுக்கே இவ்வளவு பயப்பட்றியேப்பா... நீ எப்படி என்கூட கடைசி வரை இருக்கப் போறே?"

"பயம் இல்ல சாமி இது... ஒருவிதக் கூச்சம். நான் கொஞ்சம் அசிங்கம் பிடிச்சவன்தான். திருட்டு, பொய், பித்தலாட்டம்னு வகைக்கு நாலு தப்புங்க பண்ணவன்தான். அதெல்லாம் எனக்குள்ள இருக்கற ரகசியங்கள். நீங்களோ அதை பட்டபட்டுன்னு பஜ்ரன் கட்ற மாதிரி கடும்போது கூச்சம் ஏற்படுது சாமி..."

> வீட்டுக் கூடத்தில் சுவரில் தொங்கியபடி இருந்த மன்னார்சாமியின் ஜீவசமாதி படத்தைப் பார்த்தாள். அந்தப் படத்துக்குப் பின்னாலே அன்புமணியின் ஃப்ளுட், 'என்னுடைய ஜாகை இங்கேதான்' என்கிற மாதிரி கண்ணில்பட்டது.

"அப்ப உனக்குப் பயமே இல்லேன்னு சொல்..."

"என்ன சாமி இது கேள்வி... என் கையே அதுக்கும் உங்களுக்குப் பதில் சொல்லியிருக்குமே..?"

- தமிழ்முகன் அவரை மடக்கி விட்டது போலப் பார்த்தான். அவரும் அவன் பதிலை ரசித்தவராக, "அப்பா உனக்கு நான் ஒரு முக்கியமான வேலையைத் தரப் போறேன். அதை நீ கரெக்டா செய்யணும். செய்வியா?" என்று கேட்டார்.

"என்ன சாமி அது?"

"உனக்கு மன்னார்சாமியோட ஜீவசமாதி இருக்கிற இடம் தெரியும்தானே?"

"ஊருக்கே தெரியுமே... அங்க என்ன சாமி விசேஷம்?"

"அந்தச் சமாதியே விசேஷம்தான்பா. என்கூட நீ அங்க வரணுமே..."

"என்ன சாமி அங்க இருக்கு... பயபக்தியோடதான் அங்க போகணும்; தப்பான நோக்கத்தோட போனா நல்லதில்லப்பாங்க..."

"நாமளும் பயபக்தியோடேயே இன்னிக்கு ராத்திரி போவோம்... என்ன?"

"அங்க போய் என்ன சாமி பண்ணப்போறோம்?"

"நீ என்னை கேள்வி கேட்காதே... நான் சொல்றதை மட்டும் கேள்.."

"சரி சாமி... அதுக்கு முந்தி உங்களால எனக்கு ஒரு காரியம் ஆகணுமே.."

"என்னப்பா அது?"

"இல்ல... எங்க ஊர்ல புதையலெல்லாம் இருக்கு; எடுத்துத் தரட்டுமான்னு கேட்டீங்க இல்ல..?"

- தமிழ்முகன் எங்கே வருகிறான் என்பது வைராகிக்குப் புரிந்து போயிற்று!

(தொடரும்)

13

"நரி தூரம் கோகலே ஒரு பெரிய இசை மேதை. குறிப்பாக காற்றிசை எனப்படும் புல்லாங்குழல் எடுத்து இசைப்பதில் மகாமேதை. அவருக்கு மன்னாரின் வாசிப்பும், அதன் எதிரொலிகளும் தெரிய வந்தன. அவருக்கு மட்டுமா? நாயக்க மன்னனுக்கும்தான்… மன்னன் கோகலேயை பார்த்துக் கேட்டான்:

'கோகலே… நீங்களும்தான் குழல் வாசித்து மயக்குகிறீர்கள். உங்களால் அந்த மன்னாரைப்போல ஆடு, மாடுகளை மயக்க முடியுமா? உங்கள் இசையால் பட்ட மரம் துளிர்க்குமா?'

'அரசே… நிச்சயம் குழலிசையால் அப்படியெல்லாம் எதையும் செய்ய முடியாது. அந்த நபரிடம் வேறு ஏதாவது மாயா விசேஷம் இருக்க வேண்டும்'

'மாயா விசேஷமா… அப்படி என்றால்?'

'அதெல்லாம் அவரது சித்து வேலையாக இருக்கும். மாயம் என்றால் பயத்துடன் ஒரு மந்திரவாதியாக மட்டுமே பார்ப்பார்கள். குழலால் எனும்போது தெய்வீகமாக அல்லவா கருதுவார்கள்? நிச்சயமாக எனக்கு அதில் சந்தேகமில்லை…'

'சரி… அந்த மன்னாரை நமது அவைக்கு சிறப்பு விருந்தினராக அழைத்து சோதித்துப் பார்த்துவிடலாமா?'

'தாராளமாக…'

நாயக்க மன்னனின் கட்டளை செயல் வடிவம் பெற ஆரம்பித்தது!"



தமிழழகன் புதையலைப் பற்றிப் பேசவும் சிரித்த பைராகி,

"இன்னிக்கு ராத்திரியே நான் சொல்ற இடத்துல தோண்டி, நீ புதையலையும் எடுத்துக்கலாம்…" என்றார்.

"அப்ப முதல்ல புதையல் - அப்புறம்தான் ஜீவசமாதி…" -என்று கண் சிமிட்டினான் தமிழ்!

**இந்திரா சௌந்தர்ராஜன்**



ஆமோதித்த டைராகியோ மனதுக்குள், "புதையலை எடுக்கற உனக்கு அதை அனுபவிக்கிற விதி இருக்கோ, இல்லையோ... தெரியலியே" என்று சொல்லிக்கொண்டார்!

திரௌபதி அம்மன் கோயில்... ஷ்யாமளா அன்புமணி வீட்டில் இருந்து அடுத்துப் போனது அங்கே தான்! வழியிலேயே அன்புமணியை தன் செல்ஃபோன் மூலம் தொடர்பு கொண்டபோது அவன், 'புதுக்கோட்டை பக்கமெல்லாம் போகவில்லை. திரௌபதி அம்மன் கோயிலுக்குள்தான் இருக்கிறேன்' என்று கூறியதன் எதிரொலி....

கோயிலுக்குள் நுழைந்தபோது அன்புமணி, திரௌபதி சந்நிதி முன் சப்பணமிட்டு அமர்ந்துகொண்டு உள்ளே சந்நிதியையே பார்த்தபடி இருந்தான். ஷ்யாமளாவின் வருகையை அவளது கொலுசு சப்தம் உணர்ஜிதம் செய்யவே திரும்பிப் பார்த்தான்.

அவளேதான்!

அவள் கட்டியிருந்த நீலப் புடவையும், அதன் நீண்ட முந்தியை ஒரு கையில் பிடித்தபடி அவள் வந்த அழகும் அவனை ஒரு சில வினாடிகள் தடுமாறச் செய்துவிட்டன. எல்லா வகையிலும் திருத்தமான அழகு. உயரம், கனம், வண்ணம், லாவண்யம் என்று எல்லாமே ஷ்யாமளாவிடம் தராசில் நிறுத்துப் போட்டதுபோல சம அளவில் இருப்பதை என்னவென்று சொல்ல! இப்படிப்பட்ட பெண்களைப் பார்க்கும்போது எப்படி மனதைக் கட்டுப்படுத்தி வைத்துக்கொள்ள முடியும்?

உண்மையில் பெண்கள் சுமாரான அழகில் இருப்பதுதான் ஆரோக்கியமான ஆண் சமுதாயத்துக்கு அழகு என்றெல்லாம் அவளைப் பார்த்த சில நொடிகளிலேயே அன்புமணிக்கு தோன்றிவிட்டது. பெண்களுக்கும் ஒரு ஆண் தன்னை ரசனையோடு கவனிக்கிறான் எனும்போது ஒருவித மின்சாரம் பாய ஆரம்பித்துவிடுகிறது. குனிந்த தலை, காலால் கோலம் போடுதல் என்பதெல்லாம் அந்தக் கால பெண்களுக்கான பழக்க வழக்கங்கள் என்றாகிவிட்டது. இது சானியா மிர்ஸாக்கள் காலம்! ஷ்யாமளாவிடமும் ஆளுமைக்கு எந்தப் பஞ்சமும் இல்லை.

"என்னப்பா... இங்க வந்து சாமியார் மாதிரி மௌனமா உக்காந்துட்டே... உன்னைத் தேடிகிட்டு உன் வீட்டுக்கே போய்ட்டேன் தெரியுமா?" என்று ஆரம்பித்தாள் ஷ்யாமளா.

"மனசே சரியில்ல சியாமளா... அதான் கோயில்பக்கம் வந்துட்டேன்..."

"ஸாரி அன்பு... என் அப்பா உன்ன எப்பவுமே ஒரு சிப்பந்தியா தான் பாக்கறார். அவரால அதுக்கு மேலே பாக்கவே முடியமாட்டேங்குது. ஐ ஆம் வெரி ஸாரி..."

"விடு சியாமளா... ஆமா இந்த மத்தியான வேளைல என்னைத் தேடிகிட்டு இவ்வளவு தூரம் வந்திருக்கியே... எங்க உன்கூட வந்த அந்த ராகவ்?"

"ராகவ்..? அவன விடு. நான் உன்னைப் பாக்க வந்த விஷயத்தைச் சொல்லிட்றேன். எங்களுக்கு மியூசிக்ல ஒரு குருநாதர் இருக்கார்... தேவராஜன் மாஸ்டர்னா மியூசிக் இண்டஸ்ட்ரில எல்லாருக்கும் தெரியும். நம்ம பாரம்பரிய இசையில இருந்து, வெஸ்டர்ன், ஜாஸ், இப்பப் பேசப்பட்ற குத்துப்பாட்டு வரை எல்லாத்த பத்தியுமே ரொம்பத் தெளிவா தெரிஞ்சு வெச்சுகிட்டிருக்கறவர். அவரால சங்கராபரணமும் பாட முடியும், தாக்க முக்காவும் பாட முடியும். அப்படி ஒரு இசை ஞானி!"

"அவருக்கென்ன சியாமளா..!"

"அவருக்கு அஞ்சு நிமிஷ கால அளவுக்கு புல்லாங்குழல்ல ஒரு பேக்கப் வேணுமாம்... அது என்ன கான்ஸப்ட்னு நான் உனக்கு விளக்கமாச் சொல்றேன்..."

"சியாமளா... இதை நீ என்கிட்ட பேசி உனக்கு என்ன பிரயோஜனம்? நான் என்ன உன் அப்பா மாதிரி வித்வானா?" -அன்புமணி வேகமாகவே

திருப்பிக் கேட்டான். ஷ்யாமளாவுக்கு அவனது அந்த வேகம், ஒருவித எரிச்சலைத்தான் அளித்தது.

"ஜக் அன்பு... உன்னால் முடியும்னு நான் நம்பறேன். உன்னோட பிரச்சினையே தாழ்வு மனப்பான்மைதான்! அதுக்கும் உன்னை காரணம் சொல்ல முடியாது. உன் சூழ்நிலை, அப்புறம் என் அப்பா மாதிரி ஆட்கள் பழகற முறை இதெல்லாம்தான். நீ இதையெல்லாம் தாண்டணும். உனக்கு நல்ல எக்ஸ்போஷர் வேணும். நாமெல்லாம் கை எடுத்துச் சேவிக்கற அனுமார்க்கே தாழ்வு மனப்பான்மை இருந்திருக்கு. ஜாம்பவான்னு ஒரு கரடிதான் அவருக்கு அவரோட சக்தியை எடுத்துச் சொல்லி புரிய வெச்சதாம். இங்க நானும் அப்படி ஒரு கரடின்னு வெச்சுக்கோயேன்..."

-ஷ்யாமளா நேராக விஷயத்துக்கு வந்து அவனை மறைமுகமாக 'அனுமார்' என்றும் கூறிவிட்டாள். ஆனால் அவனுக்குக் கூச்சமாக இருந்தது.

"ஸ்யாமளா... சின்ன வயசில இருந்தே உனக்கு என் மேல ஒரு கரிசனம். அதான் நீ இப்படிப் பேசறே... நான் சும்மா விளையாட்டா புல்லாங்குழல் வாசிக்கறவன். நான் வாசிக்கறதெல்லாம் எந்த ராகம்னே எனக்குத் தெரியாது. ஒரு நாள் வயக்காட்டுல மரத்தடியில வாசிச்சகிட்டு இருந்தேன். உங்கப்பா வந்ததை நான் கவனிக்கல. அவர் என் கிட்ட வந்து என்னை முறைச்சுப் பார்த்தார். எனக்கு வெலவெலத்துப் போச்சு. 'ஏண்டா இப்படி பிலஹரி ராகத்தை இந்தப் பாடு படுத்தறே? உனக்குப் புல்லாங்குழல் கத்துக்கணும்னு ஆசை இருந்தா முறையா என் வீட்டுக்கு வந்து கத்துக்கோ... அப்புறம் வாசி. இப்படி அதைக் கொலை பண்ணாதே'ன்னுட்டு போனார். அப்பதான் எனக்கே நான் வாசிச்சது பிலஹரி ராகம்னே தெரியும்..."



விறுவிறுவென்று அறைக்குள் நுழைந்தவள், ஒரு பேட்டரியில் இயங்கும் டேப்ரிக்கார்டரை எடுத்துக்கொண்டாள். கீழே இறங்கினாள்... செல்லப்பாவின் அறை திறந்திருந்தது.

"இதோ பார்... என் அப்பாவை மையமா வெச்சு என்கிட்ட நீ பேசவே பேசாதே... ஒரு விஷயத்தை நீ தெளிவா புரிஞ்சுக்கோ. என் அப்பா அடிப்படையில ஒரு கோழை. அவருக்குப் பணிச்சின்னு ஒரு திறமையை எங்க பார்த்தாலும் முதல்ல பயம்தான் வரும். உன் வரையிலும் பயம்தான் வந்துருக்கு... அதான் அப்படிப் பேசியிருக்கார். பாட்றவனுக்கு ராகம் தெரியணும்கறது ஒரு நல்ல விஷயம்தான். ஆனா கேக்கறவங்களுக்கு இனிமைதான் கணக்கு. அந்த இனிமைக்கு பிலஹரி, கல்யாணி, வசந்தா, ஆனந்த பைரவின்னு எந்த பேர் இருந்தா என்ன?"

"நீ என்ன சொல்றே ஸ்யாமளா..?"

"நீ எனக்காக ஒரு அஞ்சு நிமிஷ பேக்-அப்பைத் தரே..."

"ஸ்யாமளா..."

"சுமார் மேன்... உன் வீட்ல நீ புல்லாங்குழலை அந்த மன்னார்சாமி ஜீவசமாதி ஃபோட்டோ பின்னால செருகி வெச்சிருந்தத பார்த்தேன். உன் தங்கை கோமதி என்னடான்னா எலி எல்லாம் அந்தப் புல்லாங்குழலை கடிச்சுப் போட்றதா சொல்றா. எனக்கு ஒரு பக்கம் சிரிப்பாவும், ஒரு பக்கம் வேதனையாவும் இருந்தது..."

"நீ புல்லாங்குழல்னு ரொம்ப அழகா சொல்றே ஸ்யாமளா... இந்த ஊர்ல ரொம்பப் பேர் அதை ஓட்டைக்குச்சின்னுதான் சொல்வாங்க.."

"ஊரை விடு... எந்தக் காலத்துல ஊர்ங்கறது தெளிவாவும் திடமாவும் இருந்துருக்கு? அதுக்கு எப்பவுமே சராசரிக்கும் கீழான புத்திதான். ஐ டோன்ட் கேர் எபௌட் த ஊர். நீ இப்ப என்கூட புறப்பட்றே..?"

"எங்க ஸ்யாமளா..?"

"என் வீட்டுக்கு..."

"அங்க வந்து..?"

"நான் கான்ஸெப்ட் சொல்றேன். நீ வாசி... அதை நான் அப்படியே என் மாஸ்டருக்கு செல்போன் மூலமாகவே போட்டுக் காட்டி, பத்து நிமிஷத்துல ஓகே வாங்கிடுவேன். டைத டை, அந்த பேக்-அப் என் மாஸ்டருக்குப் பிடிச்சிட்டா, 10 லட்ச ரூபா அதுக்குக் கிடைக்கும்... உனக்கு இன்னிக்கெல்லாம் பத்து லட்ச ரூபா கிடைச்சா எவ்வளவு வசதியா இருக்கும்?"

"பத்து லட்சமா?"

- அன்புமணி வாயைப் பிளந்துவிட்டான்.

கொண்டையா சலவைத் துணிகளை பழைய தினமணி பேப்பரில்

வளைத்துக் கட்டி எடுத்து வந்திருந்தான். அதை வாங்கி தனது லெதர் பேக்கில் வைத்தபடி இருந்தார் செல்லப்பா. அவ்வப்போது மாடி அறையைவிட்டு வெளியே வந்து வந்து கவனித்துக்கொண்டிருந்தான் ராகவ்.

அவனிடம் ஒருவிதக் குழப்பம்... செல்லப்பா சென்னை போகும் முடிவில் எந்த மாற்றமும் இல்லாதவர் போல்தான் தெரிந்தார். ராகவையும், 'நீங்களும் எடுத்து வெச்சுக்குங்க...' என்று தூண்டிவிட்டிருந்தார். கோமளா மாமிக்கு மட்டும் தெளிவாக ஒரு விஷயம் புரிந்தது. செல்லப்பா ஷ்யாமளாவுடன் நிச்சயம் சென்னைக்கு கிளம்பத்தான் போகிறார் என்பதுதான் அவளது அனுமானம். அதற்குத் தோதாக அவளும் அன்புமணியும் ஒன்றாக வரவும், இன்றைக்கு அந்த வீட்டில் ஒரு பெரிய கச்சேரி களை கட்டப் போகிறது என்கிற முடிவுக்கும் வந்துவிட்டாள்.



கோயிலுக்குள் நுழைந்தபோது அன்புமணி, திரௌபதி சந்நிதி முன் சப்பணமிட்டு அமர்ந்து கொண்டு உள்ளே சந்நிதியையே பார்த்தபடி இருந்தான்.

உள்ளே நுழைந்தவன் எதிரில் பஞ்சகச்சம் ஜிப்பா, மூக்குக்கண்ணாடி என்று செல்லப்பாவிடம் ஒருவித் தயார் நிலை. 'என்னப்பா... ஊருக்கு கிளம்பிட்டீங்க போல இருக்கே..?' என்று கேட்டபடி மாடிப்படி ஏறப் போனவனை, 'நீயும்தான் கிளம்பணும் வரே. உன் பெட்டி, துணிமணியை எல்லாம் எடுத்து எப்பவோ கார்ல வெச்சாச்சு' என்றார் செல்லப்பா.

மாடிப்படியில் ஒரு நெருஞ்சி முள் இருந்து அது நறுக்கென்று குத்தியது போல இருந்தது ஷ்யாமளாவுக்கு. கூடவே 'இவர் பேச்சை மட்டும் கேட்டுவிடவே கூடாது' என்கிற அந்த வைராக்யமும்! ராகவும் அறைக்குள் இருந்து வெளியே வந்து நின்றான்.

'ஸாரிப்பா... ஐ கான்ட்! நான் வரமாட்டேன்னா வரமாட்டேன்' என்றான் ஓங்கின குரலில். செல்லப்பா அதற்கும் அசரவில்லை.

'நீ வந்துதான்டா தீரணும். ஏன்னா உன் அத்தை உயிர், நாம போற வரைகூட தாங்காதுன்னு இப்பதான் தகவல் வந்தது. உன் அத்தை இப்ப கான்ஷியஸ்ஸிலேயே இல்லை.. அவ கோமாவுல விழுந்துட்டாளாம்' என்றார்.

அந்த பிட் நன்றாகவே வேலை செய்தது. ஆனால் அது ஒரு பெரிய பொய் என்பது அந்த வேளையில் அவனுக்குத் தெரிய நியாயமில்லை. அப்படியே ஸ்தம்பித்து நின்றான்.

அதன்பின் எந்த எதிர்ப் பேச்சும் பேசாமல் மாடிப்படி ஏறினான். மேல்படிக்குச் சென்றவன், அன்புமணியை மேலே அழைத்தான். அவன் செல்லப்பாவை பார்த்தான். அவரோ, 'போப்பா.. உன் பிரெண்டு கூப்பிட்டதுக்காக என்னை எதுக்குப் பார்க்கறே..?' என்றார். அது 'அனுமதியா..? ஆத்திரமா..?' என்று அவனுக்குப் புரியவில்லை.

தயங்கித் தயங்கி மேலேறப் பார்த்தவனை, என்ன நினைத்தாரோ... 'நீ அங்கேயே இரு அன்பு... நான் டேப் ரிக்கார்டரோட வரேன். நாம திரும்ப திரௌபதி அம்மன் கோயிலுக்கே போவோம். நீ அந்த கான்ஸெப்டை எனக்குப் பாடிக் கொடுத்துரு. போறது போறேன் உன் கான்ஸெப்ட்டோடயே நான் போறேன். நாளைக்கே மாஸ்டர் கிட்டபோட்டுக் காட்டறேன்..' என்றான். ராகவுக்கு அவன் அவன் பிடியைவிட்டு விலகி வெகுதூரம் போய்விட்டதுபோல இருந்தது!

விறுவிறுவென்று அறைக்குள் நுழைந்தவன், ஒரு பேட்டரியில் இயங்கும் டேப்ரிக்கார்டரை எடுத்துக் கொண்டான். கீழே இறங்கினான்.... செல்லப்பாவின் அறை திறந்திருந்தது. உள்ளே சின்னதாய் ஒரு கிருஷ்ணன் சந்நிதி. அதன் முன் ஒரு அழகான வேலைப்பாடு கொண்ட, பெரிய திறந்த வாய் கொண்ட வெண்கலப் பாத்திரம். அதில் ஒரு ஏழெட்டு புல்லாங்குழல்கள் கிடந்தன. அந்தப் பாத்திரத்தின் மேல் அர்ச்சிக்கப்பட்டது போல பூக்கள் கிடந்தன. அதில் ஒரு புல்லாங்குழலை எடுத்தவன், உதட்டு முன் வைத்து ஊதிப் பார்த்தான். விசிலடிப்பது போல ஒரு சப்தமும் எழும்பியது.

எடுத்துக் கொண்டவன் அன்புமணியிடம் வந்து, 'வா அன்பு... நாம போகலாம். ராகவ் நான் வரதுக்கு ஒரு டூ அவர்ஸ் ஆகலாம். நீ ரெடியா இரு... இந்த பாணியின் அப்பாகூட பேசி நம்ம மாஸ்டர் கேட்ட அந்த பேக்-அப்பை உன் பாணில ரெடி பண்ணி வை. ஒரு பேக்-அப்புக்கு ரெண்டு பேக்-அப்பை மாஸ்டர்க்கு தருவோம். எது அவருக்குப் பிடிச்சிருக்கோ அதை அவர் எடுத்துக்கட்டுமே...' என்றபடியே வீட்டை விட்டு வெளியில் இறங்கிவிட்டான்.

அவனது வேகமும், செயலும் ராகவையும் சரி, செல்லப்பாவையும் சரி... கொஞ்சம் பாதிக்கத்தான் செய்தது. அது அவர்களின் முகம்போன போக்கில் அப்பட்டமாய்த் தெரிந்தது!

தொடரும்

"நாயக்க மன்னரின் கட்டளையை சிரமேற்கொண்டு மன்னாரை அழைத்து வர சில வீரர்கள், கண்ணமங்கலம் நோக்கிப் புறப்பட்டனர். அதேசமயம் கண்ணமங்கலத்தில் மன்னாருக்கு ஒரு கனவு! அதில் கண்ணனே தோன்றி, 'உன்னை யார் எங்கே அழைத்தாலும் போகாதே. உன்னைச் சோதிக்க விரும்புகின்றவர்களை நீ திரௌபதி கோயிலுக்கு வரச்சொல். அங்கே உன்னை ஒருவராலும் வெல்ல முடியாது. ஏன் என்றால் அங்கே காற்று வடிவில் நான்தான் இருக்கிறேன். என்னைப் பரிபூரணமாக நினைப்பவர்கள் அங்கே தோற்கமுடியாது' என்றான்.

கண்விழித்த மன்னாருக்கு கண்ணனின் கருணையை எண்ணி சிலிர்ப்பு. வீரர்களும் எதிரில் வந்து நின்றனர்; அவனை அழைத்தனர். கண்ணன் சொன்னதை அப்படியே அவர்களிடம் சொன்னான் மன்னார். அவர்களும் அந்தச் செய்தியோடு திரும்பினர். திரும்பும் முன், 'அரசர் அழைத்தும் வராதது பெரும் குற்றம். அவர் இதற்கு தண்டனை ஏதும் அளித்தால் ஏற்கச் சித்தமாக இருங்கள்' என்று எச்சரித்துவிட்டுத்தான் புறப்பட்டனர்.

அரசனும் திரும்பி வந்த வீரர்கள் சொன்ன செய்தி கேட்டு பெரிதும் கொந்தளித்தான். கோகலேவும் அதைக் கேட்டு, 'மன்னா! தோல்விக்குப் பயந்து அந்த மனிதர் இவ்வாறு நடந்து கொள்கிறார். அவரை விட்டுவிடுங்கள்!' என்றார். அப்போது அரசவைக்கு வந்த ஒரு வயதானவர், 'இசை மேதைகளை நாம்தான் நேரில் சென்று சந்திக்க வேண்டும். அவர்களைச் சோதிக்கும் பொருட்டு இப்படி அழைப்பதெல்லாம் தவறு. திருவிளையாடற் புராணத்தில் சுந்தரானந்த சித்தரையும் அரசன் உங்களைப் போலத்தான் அழைத்து வரப் பணித்தான். அவரோ மறுத்து, 'உன் அரசனை வேண்டுமானால் என்னைச் சந்திக்கச் சொல். எனக்கு உன் அரசனைச் சந்திக்க வேண்டிய தேவையோ, அவசியமோ இல்லை' என்று கூறிவிட்டார். எனவே கவனமாக நடந்து கொள்ளுங்கள்' என்றார். சிறிது நேரம் கழித்து மன்னனும் அந்தக் கருத்துக்கு உடன்பட்டபோது அந்த வயதானவரைக் காணவில்லை. இறுதியில் கோகலே கண்ணமங்கலம் திரௌபதி கோயில் பிராகாரத்தில் மன்னாரைச் சந்திப்பது என்று முடிவு செய்யப்பட்டது!"

ஷ்யாமளா அன்புமணியுடன் வெளியேறிவிட்டாள். அதிர்ச்சியும், ஏமாற்றமும் கலந்த ஒரு கலவை, ராகவ் முகத்தில் தெரிந்தது. அதைச் செல்லப்பாவும் கவனித்தார்.

"என்ன அம்பி... ஷ்யாமளாவோட போக்கு உங்களுக்குப் பிடிக்கல போல இருக்கே...?" என்று ஆரம்பித்தார். அதற்கு சட்டென்று ஒரு பதிலைக் கூறிடாமலும், அதே சமயம் தன் முகத்து சலன ரேகைகளை நீக்கிக்கொள்ளாமலும் மௌனமாகவே அவர் எதிரில் நின்றான் ராகவ்.

"அம்பியோட பூர்வீகம் எதுன்னு நான் தெரிஞ்சுக்கலாமா?"

"கும்பகோணம்..." -சலிப்பான உணர்வு கலந்த பதில் அது.

"இங்க பக்கம்தான்... அப்பா என்ன பண்றார்?"

"காலேஜ் புரொபஸர்.. ரிடயர்டு ஆயிட்டார். என் தாத்தா வலங்கைமான் எத்திராஜர், பெரிய பாடகர்...."

"அடடே யதிராஜர் வம்சமா நீ.... ரொம்ப சந்தோஷம்... ரொம்ப சந்தோஷம். அதான் அந்த ரத்தம் அப்படி இப்படி போகவிடாம மியூசிக்லயே பிடிச்சு வைச்சிருக்கு... போகட்டும் உடன்பிறந்தவா எத்தனை பேர்?"

"ஒரு அக்கா... அமெரிக்காவுல ஹூஸ்டன்ல இருக்கா. அத்திம்பேருக்கு அங்க ஐ.டி. இண்டஸ்ட்ரில சாஃப்ட்வேர் எஞ்ஜினியரா உத்யோகம். பில் கேட்ஸுக்கு அத்திம்பேரை பர்ஸனலா தெரியும். அந்த அளவு கம்ப்யூட்டர்ல அவர் ஒரு எக்ஸ்பர்ட்!"

# கிருஷ்ணா தந்திரம்! 14





"வம்ச கோத்ரம்?"

"பாரத்வாஜ கோத்ரம்"

"பேஷாப் போச்சு... நாங்க ஸ்ரீவத்ஸ கோத்ரம்.."

"எதுக்கு மாமா கோத்ரம்லாம் கேட்டேள்..?"

"ஜாதகம், கோத்ரமெல்லாம் எதுக்குக் கேட்பா... பொருத்தம் பார்த்து கல்யாணம் பண்ணத்தானே?"

"அப்படின்னா நீங்க இப்ப கேட்டது..?"

"நான் வேகமாகவே விஷயத்துக்கு வந்துட்றேன்... ஷ்யாமளாவுக்கு நான் எப்பவோ வரன் பார்க்கத் தொடங்கிட்டேன். நல்ல வரன் அமையணும்கறது தான் என் ப்ரார்த்தனை. உங்கள ஜோடியா பார்த்த உடனேயே, 'சரி... நம்ம பொண்ணு, மாப்ள பாக்கற வேலையை மிச்சப்படுத்திட்டான்னுதான் நினைச் சுண்டேன். மெல்ல இது சம்பந்தமா பேசலாம்னு நினைச்சுண்டிருந்தேன். இப்பவே பேசும்படி ஆயி டுத்து.."

- செல்லப்பா கிட்டத்தட்ட, 'நீதான் என் மாப் பிள்ளை' என்று சொல்லாமல் சொல்லிவிட, அதற்

கும் ராகவிடம் பெரிய ஒரு மலர்ச்சியில்லை. மாறாக மாறாத அந்தக் குழப்பத்தை விடாமல் தொடர்ந்தான்.

"என்ன அம்பி... இன்னும் என்ன குழப்பம்? நான் என்ன ஏதாவது அதிகப்படியாவோ, இல்ல தப்பாவோ பேசிட்டேனா?"

- செல்லப்பா அச்சப்படத் தொடங்கினார்.

"அப்படி எல்லாம் இல்ல... ஆனா இதுக்கு ஷ்யாமளா உடன்படுவாளா?"

"உடன்படுவாளான்னா...? உங்களுக்குள்ளதான் நல்ல ஸ்னேகம் இருக்கே... ஸ்னேகம், என்ன ஸ்னேகம். காதல்னே சொல்றேன்... இருக்குதானே?"

- அதற்கும் ராகவ் குழப்பமாகப் பார்த்தான். செல்லப்பாவிடம் பயம்கூடத்தொடங்கியது.

"அம்பி என் கேள்விக்குப் பதில் சொல்லுங்கோ..."

"என்னத்தச் சொல்றது..? உங்க பொண்ணுக்கும் எனக்கும் நடுவுல நல்ல ஸ்னேகம் இருக்கான்னே எனக்கு சந்தேகமா இருக்கு. கருக்கமாச் சொன்னா ஷ்யாமளாவை என்னால புரிஞ்சுக்க முடியலேங்கறதுதான் நிஜம். இப்பகூட எனக்குப் பிடிக்காதுன்னு தெரிஞ்சும், அந்த அன்புமணியை கூட்டிண்டு போயிருக்கா. நான் மியூசிக்ல டிப்ளமோ ஹோல்டர். எனக்குச் சுவாசமே மியூசிக்தான்.... எனக்குச் சரியா அந்த அன்புமணியை அவ நினைக்கறா... நான் எங்க போய் முட்டிக்கட்டும்?"

- ராகவ் பேசியது செல்லப்பாவை வெகுவாகவே பாதித்தது. கண்களிரண்டும் அகன்று போனது. அப்படியே போய் ஹாலின் ஊஞ்சலில் உட்கார்ந்தார். சங்கிலிகள் எலிகள் சண்டை போடுவது போலக் கத்தத் தொடங்கின.

ராகவ் பார்த்துக்கொண்டே நின்றான்.

செல்லப்பாவின் காதுகளில் எப்பொழுதோ ஒரு இரவில் ஷ்யாமளாவின் ஜாதகத்தைக் கணித்த நரசிம்ம ஐயங்கார் சொன்னது ஓட ஆரம்பித்தது.

"இது சாதாரண ஜாதகம் இல்ல ஓய்... இவ யாருக்கும் அடங்கமாட்டா.. அதே சமயம் தப்பாவும் போகமாட்டா. நிச்சயமா இவளுக்கு நம்ம ஜாதியில கல்யாணமில்ல.

அதே சமயம் இவளால பல அதிசயங்கள் நடந்து, உலகமே திரும்பிப் பார்க்கப் போறது. இவ பேச்சைத்தான் எல்லோரும் கேட்டாகணும்; இவ யார் பேச்சையும் கேட்க மாட்டா..!"

- செல்லப்பாவின் இதயம் தாறுமாறாகத் துடிக்க ஆரம்பித்துவிட்டது.

திரௌபதி அம்மன் கோயில் குளத்தங்கரை ஆலமரத்தின் திம்மென்ற நிழல்... சில விழுதுகளில் கரிக்குருவிகளின் கண்ணாமூச்சி விளையாட்டு! பேந்தப் பேந்த விழித்தபடியே நின்று கொண்டிருந்த அன்புமணி முன்னால் டேப் ரிக்கார்டரில் கேஸட்டைப் போட்டு, அது ஓடுகிறதா, குரல் பதிகிறதா என்றெல்லாம் சோதித்தபடி இருந்தாள் ஷ்யாமளா!

அவனையே வெறித்துக்கொண்டிருந்தான் அன்புமணி.

அவளும் நிமிர்ந்தாள்.

"ஓ.கே. அன்பு நீ வாசி... நான் ரெக்கார்ட் பண்ணிக்கறேன்"

"என்ன ஷ்யாமளா நீ... எனக்கு என்ன தெரியும்னு நீ இப்படி எல்லாம் நடந்துக்கறே?"

"ஃபூல் மாதிரி பேசாதே... உனக்கு எல்லாம் தெரியும். இந்த காம்ப்ளெக்ஸ் எப்பதான் உன்னைவிட்டுப் போகுமோ?"

"காம்ப்ளெக்ஸ் இல்ல ஷ்யாமளா... நீ கேக்கறது ரொம்பப் பெரிய விஷயம். நான் சும்மா பொழுது போகாம புல்லாங்குழல் வாசிக்கற ஒருத்தன்"

"ரைட்... அப்படியே நினைச்சுண்டு வாசி. நான் சொன்ன கான்ஸெப்ட்டை நீ நல்லா ஞாபகம் வெச்சிக்கோ..."

- அவன் சொல்லி வாய் மூடவில்லை. நிஜமாலுமே மழை பெய்வதற்கான அறிகுறிகள் ஆரம்பமாயிற்று. காற்று சற்று வலுவாக வீச ஆரம்பித்தது. விழுதுகளிடம் குடியாட்டம்! சூரியனை ஒரு மேகப் பொதி வந்து வளைக்கவும், ஸ்விட்சை அணைத்த மாதிரி அவ்வளவு வெளிச்சமும் போன இடம் தெரியவில்லை.

"மை காட்... நான் என்ன சிச்சுவேஷன் சொன்னேனோ அதே சிச்சுவேஷன் ரியலாவே ஃபார்ம் ஆயிண்டிருக்கு பார் அன்பு. இதுவே உனக்கு நல்ல மூடைத் தரும்..."

- அவனும் அண்ணாந்து வானம் பார்த்தான். குணம் மாறி குளிர்வாக வீசிய காற்று, அவன் பிடரியில் குளிரைப் பூசியது போல இருந்தது.

மொத்த உடம்பும் சிலிர்த்திட, புல்லாங்குழலை கையில் எடுத்தான்.

"உம்... சும்மா தைரியமா வாசி. நீதான் இப்ப அந்தக் கிருஷ்ணன்னே நினைச்சுக்கோ..."- ஷ்யாமளா அவனை ரொம்பவே உற்சாகப்படுத்தினாள்.

"நானா, கிருஷ்ணனா?"

"வேண்டாம் அர்ஜுனன்னு நினைச்சுக்கோ..."

"அர்ஜுனனா?"

"ஆமாம்... கிருஷ்ணனுக்கு அர்ஜுனன்னா ரொம்ப இஷ்டம். அர்ஜுனனுக்காக தேரோட்டின கிருஷ்ணன், உனக்காக இங்க உன் மூச்சுக்காத்துல வரட்டும். உம் வாசி..."

- அவனும் உதட்டு முன் குழல் துவாரத்தை வைத்தான். 'ஸ்ஸ்ஸ்...!' -ஒரு குட்டிச்சீறல்! குழல் சுமறியது போலக்கூட இருந்தது.

"உம்... கமான்..." அவன் சொல்லும்போதே மழை பொட்டுக்கள் உதிர ஆரம்பித்தன. குளத்து நீர்மேல் கண்ணாடி இறைப்பூச்சிகள் சிறகு விரிக்கிற மாதிரி இருந்தது. குளம் முழுக்க ஆயிரமாயிரம் நீர் வட்டச் சக்கரங்கள் சுழல ஆரம்பித்தன. அதுவே அன்புமணியைத் தூண்டியது. மழைப் பொட்டுகள் படபடவென்று விழுவதால்தானே இது சாத்தியம்? எனவே அவை சீரான இடைவெளியில் விழுவதை அப்படியே கற்பனை செய்து கொண்டு காற்றை விட்டும்,

அடக்கியும்-விட்டும், அடக்கியும் மிக வேகமாய் வாசிக்கவும், வெளியே பெய்த மழைக்கு கச்சிதமான ஒரு சப்த வடிவம் அகப்பட்டது போல இருந்தது.

'ச... பாஷ்..! மனதுக்குள் உணர்ச்சியைக் குவித்த ஷ்யாமளா, டேப் ரிக்கார்டரில் இயற்கை மழைக்கும், காற்றுக்கும் நடுவில் அவனது வாசிப்புக்கு தன்னால் பங்கம் வராதபடி பார்த்துக்கொண்டாள்.

மழையிடம் இப்போது ஒரு சீரான வேகம். தரைக்கும், வானுக்குமாய் குழிப் பறித்து நிறுத்தியதுபோல லட்சோப லட்சம் நீர்க்குச்சிகள்! ஊஹூம்... கோடியாதி கோடி.... ஆங்காங்கே அதனால் நீரின் பெருக்கு... பள்ளம் கண்ட பாகங்களில் எல்லாம், செங்குழம்பின் பாய்ச்சல். மரத்து இலைகள் மேல் மழை நீர்படுவதால் உண்டான, பாஷைக்கு அகப்படாத சப்தம்.

அன்புமணி அதோடு போட்டி போட்டான். அவனுக்கே தெரியாது; அவன் வயப்பட்ட அந்தச் சப்தம் வசந்த ராகத்தின் சாயலில் இருந்தது! ஷ்யாமளா தன்னை மறந்துவிட்டாள்.

மிகச் சரியாக ஐந்து நிமிடம்தான்! மழையும் வேலை முடிந்த மாதிரி நின்றது. அன்பு மணியும் நிறுத்தினான். ஷ்யாமளா படபடவென்று கை தட்டினாள்.

"அன்பு நீ ஜெயிச்சிட்டே... பத்து லட்சம் உனக்குத்தான்" என்றாள். அவனுக்கு இன்ப அதிர்ச்சியாக இருந்தது.

**ப**டபடவென்று பெய்த மழை, இங்கே ராகவையும் தூண்டியிருந்தது. அவனும் டேப்பில் வாசித்துப் பதிந்திருந்தான். அவனுக்கு அருகில் உற்சாகப்படுத்த செல்லப்பா... 'சபாஷ்.. அப்படித்தான் அப்படியே தான்..' என்று அவனை ஊக்கப்படுத்தியிருந்தார். கேஸட்டில் அந்தப் பதிவும் சேர்ந்துவிட்ட நிலையில், மழையில் நனைந்த ஈரத்துடன் ஷ்யாமளா வீட்டினுள் நுழைந்தான்.

வீட்டுக்குள் ஒரே அமைதி!

கோமளா மாமி மட்டும் தூக்கம் வராத ஒரு ராத்திரிக் குழந்தை மாதிரி முழித்து முழித்துப் பார்த்தாள்.

ஊஞ்சல் மேல் இறுக்கமாய் கைகட்டிக்கொண்டு செல்லப்பா!

**"இவ பேச்சைத்தான் எல்லோரும் கேட்டாகணும்; இவ யார் பேச்சையும் கேட்க மாட்டா..!"**



டேப்ரிக்கார்டரின் இண்டு இடுக்கு அழுக்குகளைத் துடைத்தபடி ராகவ்! ஷ்யாமளா மெல்ல ராகவ் அருகில் சென்றவளாக, "என்ன ராகவ்... கையில டேப்போட நீ இருக்கறத பார்த்தா, நீயும் மழைய சாக்கா வெச்சு வாசிச்ச மாதிரி தோணறது..?" என்றாள். அவன் பதில் கூறாமல் பட்டனை அழுத்தினான். கேஸட் சுழல ஆரம்பித்தது. அதில் இருந்து ராகவின் குழல் ஞானம் வெளிப்படத் தொடங்கியது.

ஷ்யாமளாவும் கூர்மைக்குக் காதைக் கொண்டு சென்றாள். ராகவும் முடிந்த மட்டும் தன் கற்பனையைக் காட்டியிருந்தான். ஏனோ அது அன்புமணி போன உயரத்திற்கு அரைபாகம் கூட இல்லாத மாதிரிதான் அவளுக்குப் பட்டது.

டேப்பை நிறுத்திவிட்டு, "எங்க... அந்த மாட்டுக்காரன் வாசிச்சத போடேன் கேட்போம்..." என்றான் சற்று கிண்டலாக. ஷ்யாமளாவும் சிரித்தபடி போடப் போனான். ஆனால் செல்லப்பா எழுந்து வந்து தடுத்தவராக, "கிளம்பும்மா நாழியாயிடுத்து..." என்றார். ஷ்யாமளாவுக்கும் என்ன சொல்வதென்றே தெரியவில்லை.

**இ**ரவு நேரம்!

பதினோரு மணியைத் தாண்டிவிட்டது பொழுது. ஒரு கையில் பலிக்கோழி... ஒரு கையில் கடப்பாரை, தோளில் மண்வெட்டி -புறப்பட்டுக் கொண்டிருந்தான் தமிழழகன்! 'விடிந்தால் சோமசுவரன்' என்கிற ஒரு நினைப்பு உள் ஓடிக் கொண்டிருந்தது. ஆனால் அவனுக்காக ஊர் எல்லையில் காத்துக்கொண்டிருந்த பைராகிக்குள் அவன்மேல் ஒரு பரிதாப உணர்வுதான் ஏற்பட்டிருந்தது!

கண்ணமங்கலம் இதுவரை மர்மமான சாவுகளை எல்லாம் பெரிதாகச் சந்தித்ததேயில்லை. இனி அப்படி இருக்க கண்ணமங்கலத்துக்கு வாய்ப்பில்லை என்றும் கருதிக் கொண்டவராய் இருண்ட வானத்தை அண்ணாந்து பார்த்தார்.

கேட்டை நட்சத்திரக் கூட்டம் அவர் கண்களுக்குத் தெரிந்தது!

(தொடரும்)

15



"நாயக்க மன்னனும், நாதுராம் கோகலேயும் இறைவன் கட்டளைப்படியே மன்னாரை கண்ணமங்கலம் கோயிலிலேயே சந்திப்பது என்று முடிவு செய்தார்கள். கோகலே நாயக்க மன்னருக்காகத்தான் இந்த முடிவை ஏற்றுக்கொண்டார். அவருக்கு தேடிச் சென்று சந்திப்பதிலே உடன்பாடு இல்லை. அப்போதுகூட மன்னார் மேல் ஒரு மதிப்பு கலந்த மரியாதை கோகலேவுக்கு ஏற்படவில்லை. அவர் உள்ளுணர்வு ஒரு மாயாவியைச் சந்திக்கப் போவதாகத்தான் கருதிக்கொண்டிருந்தது.

அரசனும், கோகலேயும் கண்ணமங்கலம் வரும் தேதி, ஊர் தலையாரிக்குச் சொல்லப்பட்டது. அவனும் ஊர் எல்லையில் மேளதாளங்களுடன் காத்திருக்க, ரெட்டைக் குதிரை ரதத்தில் நாயக்கரும், கோகலேயும் வந்து சேர்ந்தனர். ஊர் எல்லையில் இருந்தே நாயக்கர் நடக்க ஆரம்பித்துவிட்டார். கண்ணன் கன





15

இந்திரா சௌந்தர்ராஜன்

# கிருஷ்ணா தந்திரம்!

**வா**னில் தெரிந்த கேட்டை நட்சத்திரக் கூட்டம், வைராகியை சற்று மிரள வைத்தது. தேங்கி நின்றார். திரும்பிப் பார்த்து அதற்கான காரணத்தைக் கேட்டான் தமிழமுகன்.

"சாமி... என்ன நின்னுட்டீங்க?"

"......."

"சாமி உங்களைத்தான்... ஏன் நின்னுட்டீங்க?"

"ஒண்ணுமில்லே... சகுனம் அவ்வளவா சரியா இல்லை... அதான்"

"ஆரம்பிச்சிட்டீங்களா?" -தமிழமுகன் கேட்ட தொனியில் ஒரு அபாரக் கிண்டல். அது பிளேடு நுனியால் கீறியதைப் போல வைராகியை வருத்தியது.

"என்ன பாக்கறீங்க..? எனக்கு இன்னிக்கு நீங்க புதையல் எடுத்துத் தர்றீங்க... அப்புறம்தான் நான் உங்க சமாச்சாரம் பத்தி எல்லாம் ஒரு நல்ல முடிவுக்கு வருவேன்.."

- அவன் பதிலில் அவன் வைராகியை இன்னும் நம்பவில்லை என்பது துல்லியமாகத் தெரிந்தது. அவருக்கு அந்த நிலையிலும் சிரிப்புதான் வந்தது.

"என்ன சாமி சிரிக்கிறீங்க?"

"சிரிக்காம என்னத்தப் பண்ண..? உன்னோ

வில் வந்து சொன்ன அளவுக்கு சிறப்புடைய கண்ணமங்கலம் எப்படி இருக்கிறது என்று பார்த்தபடியே வந்தார்.

'வடக்கே மதுராவில் பிறந்து வளர்ந்த கண்ணனுக்கு தெற்கில் கண்ணமங்கலத்தில் ஒரு அழுத்தமான தொடர்பு இருப்பது பக்தியால் மட்டும்தானா? இல்லை வேறு காரணங்களும் உள்ளனவா?" என்று அவருக்குள் ஒரு கேள்வி.. நிறையவே காரணங்கள் உள்ளன என்பது அவருக்குத் தெரியாது!"

டெல்லாம் சேரும்படியான என் விதியை நினைச்சேன், அதான் சிரிப்பு வந்துடுச்சு..."

"சாமி... இப்ப எதுக்கு இந்தப் பேச்சு... அதான் உங்களுக்கு உதவறதுக்கு நான் வந்துட்டேன்ல? உங்கக்கிட்ட சரக்கு இருந்தா நிரூபியுங்க... எதுக்கு அநாவசியப் பேச்சு?"

"பிரச்சினை எனக்கில்லப்பா... உனக்குத்தான்!"

"எனக்கென்ன பிரச்சினை..?"

"புதையல் எடுக்கறது பிரச்சினை இல்லை... அதுக்குக் களபலி கொடுக்கணும். இல்லேன்னா ரொம்ப ஆபத்து"

"அதான் கைவசம் கோழி இருக்குல்ல..?"

"கோழியோட போய்ட்டா நல்லது. ஆனா சகுனங்கள் அதுக்கு மேலேயும் விபரீதங்கள் இருக்கறதாச் சொல்லுது..."

- இரவில் இருவரும் நடந்தபடியே பேசுவது அந்த மையிருட்டுக்குள்ளேயே கரைந்தும் போயிற்று.

"சாமி... நானும் உங்கக் கூடத்தான் வந்துகிட்டிருக்கேன்... நீங்க எந்தச் சகுனத்த சொல்றீங்க?"

"உனக்கு சொன்னா புரியாது..."

"இது ஒரு சாமர்த்தியமான பதில் சாமி... உங்கள மாதிரி ஆளுங்க இப்படிச் சொல்லியே பல பொய்களை உண்மை மாதிரி காட்டப் பாப்பீங்க. ஆனா சாமி... இது போலிச் சாமியாருங்க மாட்டிக்கற காலம். விஞ்ஞானம் அந்த அளவுக்கு வளர்ந்துகிட்டு வருது... ஞாபகம் வெச்சுக்குங்க."

"போலியா யார் இருந்தாலும் ஒரு நாள் மாட்டித்தான் தீரணும். அதுல சாமியாருக்கு மட்டுமென்ன விதிவிலக்கு..?"

"சரி, இப்ப நீங்க நம்ம விஷயத்துக்கு வாங்க... நீங்க எதைக் கெட்ட சகுனம்னு சொன்னீங்க?"

"திரும்பவும் சொல்றேன் -உனக்கு அது புரியாது. சில விஷயங்களை, சிலரால மட்டும்தான் விளங்கிக்க முடியும். அந்தச் சிலர்ல நீ இல்லை! ஆகையால எதுவும் பேசாம நட...."

"சாமி! முயற்சி செஞ்சா நடக்காததே இல்லைன்னு சொல்ற காலத்துல, சிலரால்தான் சில விஷயங்கள விளங்கிக்க முடியும்னா எப்படிங்க சாமி... உங்களுக்கே இப்படிப் பேசறது கேனத்தனமா தெரியல..?"

-தமிழழகனை அடுத்த நொடியே சுட்டெரிப்பது போலப் பார்த்தார் வைராகி. ஏற்கெனவே ஒடிசலான தோற்றம், உடம்பின் நிறைக்குச் சமமாக தலைமுடியின் நிறை... அதோடு அவர் பார்ப்பதில் கோபாக்னிக்கு ஒரு வித இலக்கணம் இருப்பது போலவும் தோன்றியது. பார்த்ததோடு நிற்கவில்லை.

"ஏய் அரை குறை..! முயற்சி செய்தா முடியாதது இல்லைன்னு சொன்னது ஒருவிதத் தன்னம்பிக்கையில... அதைப் போல ஒரு பம்மாத்துப் பழமொழியே இல்லைங்கறது உனக்குத் தெரியுமா? முட்டாளே... எவ்வளவு முயற்சி செஞ்சாலும் உன்னால கர்பம் தரிக்க முடியுமாடா? கற்பாறைல ஒரு புல்லை வளர்க்க உன்னால முடியுமா?

ஒரு பெண்ணோட மாத விலக்குத் துன்பத்தை உன்னால கற்பனையாவது செய்து பார்க்க முடியுமா? முட்டாளே... முட்டாளே..! இந்த உடம்பும், மனசும் ஒரு எல்லைக்குக் கட்டுப்பட்ட சங்கதிடா. இப்ப மணி பதினொண்ணு...-12 மணிக்கு நீ உயிரோட இருப்பியோ, மாட்டியோ..? அடுத்த நொடி என்ன நடக்கும்கறது தெரியாத குருட்டு வெளிச்சத்துல வாழுற பிரபஞ்சக் கைதிகள்டா

"12 மணிக்கு
நீ உயிரோட
இருப்பியோ,
மாட்டியோ..?"



நானும், நீயும்... போனாப் போகுதுன்னு ஆடு, மாடுகளுக்கும், புல் பூண்டுகளுக்கும் கொடுக்காத ஒரு ஆறாவது அறிவை உனக்கு அந்தக் கடவுள் கொடுத்துருக்கான். அதைக் கொண்டு நீ உனக்கு ஒரு விடுதலையைத் தேடிக்கணும். ஊன்றி நடக்கறதுக்காகக் கொடுத்த கம்பால போற வர்றவங்களைத் தாக்கறது எவ்வளவுத் தப்போ, அவ்வளவுத் தப்புடா இப்படி எதையும் சரியாப் புரிஞ்சுக்காம பார்த்ததை வெச்சும், கேட்டதை வெச்சும் மட்டுமே பேசறது..."

- வைராகியின் சீற்றம் தமிழழகனை ஒரு உலுக்கு உலுக்கிவிட்டது. இருந்தும் அசராமல் நிமிர்ந்தான். "சாமி நீங்க எவ்வளவு கத்தினாலும் சரி... எனக்கு ஒரு விஷயம் சரியாப் புரியறவரை நான் நானாகத்தான் இருப்பேன்; இப்படித்தான் பேசுவேன். இப்ப முடிவா கேட்கறேன். புதையல் எடுக்கப் போறோமா, இல்லையா?"

-அவன் கேட்டபோது மிகச் சரியாக அவர்கள் நடந்து செல்லும் பாதையில், "ஜய் அத்திரி பித்திரி பக்கிரி... ஆன மேல மந்திரி... அஞ்செவி, ஆறெலி கண்டெலி... உடைச்சுத் திம்பேன் முந்திரி..." என்று ஒரு தினுசான குரல். யாரென்று பார்த்தபோது எதிரில் யக்ஞன்!

"அட நாயே நீதானா?" -தமிழழகன் காற்று போன பலூன் போலக் கேட்டான்.

"யாருப்பா இது?" -பைராகி கேட்டார்.

"ஓரகப் பய... பேர் யக்ஞன்... எங்களுக்கெல்லாம் வாய்லையே நுழையாது. அப்பா, அம்மான்னு யாரும் கிடையாது. திரௌபதி அம்மன் கோயில் வாசல்ல படுத்துக் கிடப்பான். சமயத்துல பகல்ல தூங்குவான்; ராத்திரில முழிச்சிருப்பான். ரெண்டும் கெட்டான்..."

- தமிழழகன் விளக்கி முடிக்க, யக்ஞன் பைராகியை வைத்த கண் வாங்காமல் பார்த்தபடி இருந்தான். பைராகியும் அவனை உற்றுப் பார்த்தார். அப்படியே அவனிடம், "என் கூட வர்றியா?" என்று கேட்டார். அவனும் வாயைத் திறக்காமல் தலையை ஆட்டினான். "சாமி இவன் எதுக்கு?" -வெகு வேகமாகப் பதறினான் தமிழழகன்.

''பைத்தியக்காரா... உனக்கு ஆயுசு கெட்டிடா. அதான் இவன் வந்திருக்கான்..."

"என்ன சொல்றீங்க சாமி..."

"பேசாம நட... யக்ஞா நீயும் கூட வா..."

**பைராகியின் சீற்றம் தமிழழகனை ஒரு உலுக்கு உலுக்கி விட்டது.**

"சாமி... சொன்னா கேளுங்க. இவன் ஒரு ரெண்டுங் கெட்டான். எதையும் மனசுல வெச்சுக்க மாட்டான். இப்ப நமக்கு நடுவுல எது நடந்தாலும் காலைல ஊர் பூராவும் சொல்லிடுவான்"

"அப்பா தமிழழகா... எனக்கு எல்லாம் தெரியும். நீ கொஞ்சம் வாயை மூடிக்கிட்டு நடக்கறியா?"

- ஒரு அதட்டு அதட்டி தமிழழகனை கட்டிப் போட்டார் பைராகி. அப்படியே இடுப்பு மடிப்பில் இருந்து ஒரு எலுமிச்சம் பழத்தை எடுத்தார். நெற்றி முன் வைத்து ஏதோ மந்திரம் சொல்லி ஜெபித்தார். பின் அதை தனக்கு முன் வைத்து உற்றுப் பார்க்க, அது ஓடத் தொடங்கியது. தமிழழகன் அதிரத் தொடங்கினான்.

"சாமி... எப்படிச் சாமி அது..? உள்ளுக்குள்ள வண்டு, கிண்டு இருக்குதா?"

"பேசாம இருப்பா... அது இப்ப புதையல் பானை இருக்கற இடத்துல போய் நிக்கும். அங்கத் தோண்டினா உன் இஷ்டம் உனக்குக் கிடைக்கும்..."

"அது எப்படி தானா ஓடுது? அதச் சொல்லுங்க... அது என்ன மேஜிக்..?"

"மேஜிக் இல்லை... அதைக் கொரளிப் பேய் உருட்டிகிட்டுப் போகுதுப்பா..."

"கொரளிப் பேயா..? கண்ணுக்கு அது தெரியலியே..."

"அதைப் பாக்கற அளவுக்கு நம் கண்ணுக்கு சக்தி கிடையாது. அதான் உண்மை..."

"உருளும் எலுமிச்சையைப் பின்தொடர்ந்தபடியே பேசினார் பைராகி.

"எல்லாத்துக்கும் ஒரு பதில் உங்ககிட்ட இருக்கு சாமி... எது எப்படியோ? எனக்குப் புதையல் கிடைச்சா சரி..!"

"கிடைக்கும். உனக்கு அதிர்ஷ்டம் இருக்கு... எனக்கும் நான் நினைச்ச காரியம் நல்லபடியா நடந்து முடியும்"

"சாமி, இப்பச் சொல்றேன் சாமி... இந்தப் புதையல் மட்டும் நிஜமா இருந்து கிடைச்சுட்டா,



நீங்க தேடிக்கிட்டு வந்திருக்கற அந்தப் புல்லாங்குழல், சத்தியமா கிருஷ்ணன் வாசிச்சதுதான். அது உங்களுக்குக் கிடைக்க நான் உதவி செய்யக் கொடுப்பேன்..."

- பேச்சுப் போக்கில் பைராகி பூட்டிப் பூட்டி வைத்திருக்கும் அந்த ரகசியத்தையும் வெளிப்படுத்திவிட்டான் தமிழ்! பைராகி அவனை ஆவேசமாக உற்றுப்பார்த்தார். எலுமிச்சையோ உருண்டுகொண்டே இருந்தது. இரவில் அதைத் தெளிவாகப் பார்க்க முடிந்த விதத்தில் அதன் மேல் மட்டும் வெளிச்சம்!

ஊளயிட ஒரு நரியானது, மரணம் ஒருவனை ஆட்கொள்ள வருகிறது என்பதைப் போல ஊளையிடத் தொடங்கியது. அந்தச் சப்தம் கிலி மூட்டுவதாகவும் இருந்தது.

'ஊவ்வ்வ்... ஊவ்...!'

(தொடரும்)

“கண்ணமங்கலம் ஆலயத்தில் உள்ள கிருஷ்ணன் சன்னதியில் அமைந்திருக்கும் கிருஷ்ண விக்ரகம் சிற்பிகளால் செதுக்கப்பட்டு வடிவமைக்கப்பட்டதல்ல... அது கங்கை வெள்ளத்தில் அடித்து வரப்பட்டு கரையில் ஒதுங்கிக் கிடந்ததாகவும், அதைக் கவனித்து தன் இல்லத்திற்கு எடுத்துச் சென்றவரின் கனவில் கண்ணன் தோன்றி அதை கண்ணமங்கலம் கொண்டு சென்றுவிடப் பணித்ததாகவும் கூறுவார்கள்.

அதேபோல கண்ணமங்கலத்துக்கு அந்தச் சிலையுடன் அவர் வந்தபோது யாதவகிரி குன்றின்மேல் ஒரு கிருஷ்ண பக்தர் தவம் செய்து கொண்டிருக்க, அவரிடம் அந்தச் சிலை சென்று சேர்ந்தது. அதை வைத்து அவர் எழுப்பியதுதான் கண்ணமங்கலம் கோயில் என்பார்கள்.

ஆச்சரியமூட்டும் விதமாக கண்ணமங்கலம் ஏரியில் எப்போதும் நீர் வற்றாமல் நிலைத்திருப்பதால் கால்நடைகளுக்கான சொர்க்க பூமியாகவும் கண்ணமங்கலம் மாறிப் போனது. இதனால்

# கிருஷ்ண தந்திரம்!



# இந்திரா செளந்தர்ராஜன்



யாதவர்கள் பலர், பல்வேறு பகுதிகளிலிருந்து மெல்ல மெல்ல இடம் பெயர்ந்து வந்து கண்ணமங்கலத்தில் நிரந்தரமாகக் குடியேறிவிட்டதாகவும் கூறுவார்கள்.

கண்ணமங்கலத்தில் யாதவகிரி குன்றில் தவம் செய்தவர் 'உத்பவர்' என்னும் முனிவர். அவரது பக்திக்குச் செவிமடுத்த கண்ணன், அவர் வரையில் ஒரு நண்பனாகவே வந்து பழகியதாகவும், கண்ணனுடன் பேசியும் ஆடிப்பாடியும், பின் அவனுடனே விவாதித்தும் உத்பவர் எழுதியதுதான் 'சப்த முகுந்தம்' என்கிற இசைக் குறிப்பேடாகும்.

இறுதியாக கண்ணன் அவர் கேட்டதற்கு இணங்க தனது குழலை அவருக்குப் பரிசாகக் கொடுத்துச் சென்றானாம்.

அந்தக் குழல்... அந்தச் சப்த முகுந்த ஏடு– இரண்டும் இன்று வசப்பட்டால் புதிதாகப் பல அதிசயங்களை இந்த உலகில் நிகழ்த்தலாம் என்பதுதான் உண்மை!"

இரவில் அந்தக் கொடிய சூழல்... அதுவரை இந்த மாதிரி சமாசாரங்களுக்கெல்லாம் துளிக்கூட பயந்திராத தமிழ்முழகனையே ஒரு மிரட்டு மிரட்டிவிட்டது. நல்லவேளையாக டார்ச் லைட்டை எடுத்து வந்திருந்தான். அதைக் கொண்டு ஒரு ஒளி வட்டம் பிறக்கச் செய்து நாலா புறமும் பார்த்தான்.

அவ்வளவு இருட்டிலும் ஏதோ ரேடியம் பூசப்பட்டதுபோல எலுமிச்சம் பழம் மட்டும் ஓடியபடியே இருந்தது. சில இடங்களில் திசையை மாற்றிக்கொண்டு வளைந்தும் குதித்தும் ஓடியது. தமிழ்முழகனுக்கு, தான் அது நாள் வரையில் சிந்தித்து வைத்திருந்த அவ்வளவு கருத்துக்களும் அந்த நொடியில் அதல பாதாளத்துக்குள் போய்விட்டது போலத் தோன்றியது. அவர்களோடு புதிதாகச் சேர்ந்து கொண்டுவிட்ட யக்ஞன், அந்த எலுமிச்சையை ஒன்றும் ஆச்சரியமாகவெல்லாம் பார்க்கவில்லை.

"அது என்ன பந்தா..? என்னமா உருண்டு ஓடுது...!" -என்று அவன் சொல்லிக்கொண்டதை பைராகியும் கண்டுகொள்ளவில்லை.

"ஆமாம்... இது இப்படியே எவ்வளவு தூரம் சாமி போகும்?" -தமிழ்முழகன் மிடறு விழுங்கியபடியே கேட்டான்.

"புதையல் இருக்கற இடம் வரை..."

"அது இருக்கற இடம் இந்தப் பழத்துக்கு எப்படித் தெரியும்?"

"பழத்துக்குத் தெரியாது... ஆனா அதை உருட்டற கொரளிக்குத் தெரியும்..."

"கொரளி கண்ணுக்குத் தெரியாதா?"

"தெரியாது..."

"அது எப்படி... இருந்தா கண்ணுக்கு தெரியணும்ல?"

"நீ கூடத்தான் பேசறே... நானும் பேசறேன்... பேச்சு கண்ணுக்குத் தெரியுதா என்ன?"

"சாமி... எதுக்கு இந்த விதண்டாவாதம்?"

"உனக்கு இப்ப எதுக்கு இந்தத் தேவையில்லாத கேள்வி..."

"புரிஞ்சுக்கத்தான்..."

"சில விஷயங்களத்தான் புரிஞ்சுக்க முடியும்... சில விஷயங்களை எப்பவும் எல்லோராலயும் புரிஞ்சுக்க முடியாதுங்கறது உனக்கு முதல்ல புரியணும்..."

"சரி சாமி... புதையல் இருக்கற இடம் கொரளிக்கு மட்டும் எப்படித் தெரியும்?"

"பூமிக்கடியில கண்ணி வெடி புதைஞ்சிருந்தா டிடெக்டர்னு ஒரு குச்சி மாதிரி இருக்கற கருவி காட்டிக் கொடுக்குது இல்ல... அப்படித்தான்"

"சாமி புரியாத விஷயத்தை பத்திக் கேட்கும்போது புரியற சென்னை உதாரணம் காட்றீங்களே..."

"தொண தொணன்னு பேசாம வா... புதையல்ங்கறது ஒன்னும் லேசான விஷயம் இல்ல. எப்பவோ ஒருத்தர் புதைச்சு வெச்சது தான் புதையலாகுது. அந்தக் காலத்துல காசிக்கும், ராமேஸ்வரத்துக்கும் யாத்திரை போகும்போது தங்களோட நகை நட்டை எல்லாம்



பஞ்சலோக பாத்திரத்துல போட்டு ஒரு குறிப்பிட்ட இடத்துல புதைச்சுட்டு அங்க ஒரு அடையாளமும் வெச்சிட்டுப் போயிடுவாங்க. அப்படிப் போனவங்க திரும்பி வர பல மாசமும் ஆகலாம்; வருஷங்களும் ஆகலாம். ஏன்னா கால்நடையா கத்தானே அவங்க யாத்திரை செய்ய முடியும்?

பலர் போன இடத்துல நோய் வாய்ப்பட்டு இறந்துடுவாங்க. அப்படி இறந்தவங்களோடு, அவங்க புதைச்ச வெச்ச ரகசியமும் இறந்துடும். ஆனாலும் அவங்க ஆவிதான் புதைச்ச புதையல ஏதோ ஒரு விதத்துல சுத்தி வந்து காவல் காக்கும்கறதுதான் புதையலுக்குப் பின்னால் உள்ள ஒரு அடிப்படையான விஷயம்.

அந்த ஆவிங்கறது காத்து வடிவம்... என் கொரளியும் காத்து வடிவம்... காத்துக்கு காத்தைக் கண்டுபிடிக்கறது சுலபம்! இப்ப இன்னொரு விஷயம் நான் சொல்றேன். புதையல் இருக்கறது தெரிஞ்ச நிலையில புதையல எடுத்துடக்கூடாது. என்கூட மன்னார் சாமியோட ஜீவசமாதிக்கு வந்து, நான் சொன்ன மாதிரி அங்க நீ நடந்துக்கனும். நான் தேடி வந்தது அங்கதான் இருக்கனும். அது என் கைக்கு வந்த பின்னாலதான் உன்னை நான் புதையல் எடுக்க விடுவேன்"

"சரிங்க சாமி... முதல்ல நான் புதையலை கண்ணுல பாத்துட்றேன்"

- தமிழழகன் சொல்ல, ஒரு இடத்தில் எலுமிச்சம் பழம் தேங்கி நின்றது. அப்படியே நின்ற நிலையில் மேலெழும்பிக் குதிக்கவெல்லாம் செய்தது.

"யப்பா... அந்த எலுமிச்சம் பழத்துக்கு கீழதான் புதையல் இருக்கு. மெல்லத் தோண்டு..."

"நெஜமாவா சாமி..? இங்க தோண்டுனா புதையல் கிடைச்சிடுமா?"



"கட்டாயமா... அதுக்கு முந்தி இந்தக் கோழியை உயிரோட அதோ அந்த மரத்துல கட்டித் தொங்கவிடு..."

"எதுக்கு சாமி..."

"சொன்னதை மட்டும் செய்..."

அவனும் அப்படியே செய்து முடித்தான். கோழி பக்கத்து வேலிக்கருவேல மரத்தின் முட்கிளையில் படபட வென்று சிறகுகள் அடித்துக் கொள்ள, தலைகீழாக ஆட ஆரம்பித்திருந்தது. அவனும் வந்து மண்வெட்டியால் அந்த இடத்தைத் தோண்டப் போனான்.

"தமிழழகா... நீ தோண்டறதவிட இந்த யக்ஞன் தோண்டறது உசிதம்னு எனக்குப் படுது..."

-பைராகி மெல்லத் திசைமாற்றிவிட்டார். மண்வெட்டி யக்ஞனிடம் போனது. அவனும், "அந்தக் கோழியைக் கொன்னு புதைக்கப்போறோமா..? அதுக்குதானே குழி?" என்று தனக்குத் தெரிந்த விதத்தில் கேட்டான்.

"ரொம்ப சரி... அதுக்குத்தான். தோண்டு..."

- பைராகி ஊக்கப்படுத்தினார்.

அவனும் உற்சாகமானான். மண் கவளங்களை வாரி வாரிப் போட்டான்.

டார்ச் லைட்டு வெளிச்சம் உருண்டுக்கொண்டே இருந்தது. நடுநடுவே நரியின் ஊளைச் சப்தம் திரும்ப கேட்கத் தொடங்கியது. தொலைதூரத்தில் நாய்களின் குரைப்புச் சப்தமும் கேட்டது. பயமாய்... பதற்றமாய்.... பரபரப்பாய்... எல்லாமாய் இருந்தது தமிழழகனுக்கு.

பைராகி அவ்வப்போது ஆகாயத்தைப் பார்த்தார். அந்த நட்சத்திரக் கூட்டம் துல்லியமாகவே தெரிந்தது. சாதாரணமாக அச்சமென்பதை உதறியவர் அவர். ஆயினும் அவருக்குள்ளும் அச்ச உணர்வு, மெல்லத் தலையெடுத்தபடி இருந்தது.

யக்ஞன் ஒரு இரண்டு, மூன்றடிகள் தோண்டிவிட்டான். வெகுவாகக் களைத்துப்போய் மூச்சு இரைத்தபடி வியர்வையை வழித்துப் போட்டான். அதே வேளையில் தலைகீழாய்க் கட்டியிருக்கும் கோழி, தூளி ஆடுவதுபோல ஆட ஆரம்பித்தது. இத்தனைக்கும் துளிகூட காற்று வீசுவில்லை.

'கொக்... கொக்.... கொக்..' என்று அதனிடம் பதற்றப் படபடப்பு.

தமிழழகனுக்கு அந்த காட்சி ஆச்சரியமானதாக இருந்தது. யக்ஞனும் தோண்டுவதை நிறுத்தி

**17**

யம் இருக்கான்னு மட்டும் பார்க்கணும். அது இருந்துட்டா போதும், நான் இங்கேயே இப்பவே பாதி ஜெயிச்சவன்..."

"அப்பக்கூட பாதிதானா?"

"தொண தொணங்காம சொன்னபடி செய்..."

"எனக்குப் பயமா இருக்கு சாமி... அங்க யக்ஷன் கருண்டு விழுந்த மாதிரி, இங்க எனக்கு ஏதாவது ஆயிட்டா?"

"அப்படி எல்லாம் எதுவும் ஆகாது..."

"அது சரி, காரியம் ஆகறதுக்காக நீங்க எந்தப் பொய்யையும் சொல்வீங்க..."

"முட்டாளே... இவ்வளவு தூரம் வந்துட்டு கழுத்தறுக்காதே. இப்ப கூட உன்னை நான் வசியப்படுத்தி வேலை வாங்க முடியும். இங்க வசிய சக்தியை நான் பயன்படுத்த விரும்பலை..."

"நான் தெரியாமத்தான் கேக்கறேன்... இருநூறு, முன்னூறு வருஷம் முந்தி புதைக்கப்பட்ட ஒரு சமாதியில, எலும்பைத் தவிர வேற என்ன இருக்க முடியும்?"

"உன்கிட்ட நான் அதை எல்லாம் விளக்கமா சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. மூணு மணிங்கற பிரம்ம முகூர்த்த காலம் வரதுக்குள்ள நிசிக்கணக்குல பைசாச வேளைல நான் வந்த வேலையை முடிக்கணும்..."

-பைராகி எவ்வளவோ கத்தியும் தமிழழகன் தயங்கியபடியே நின்றான்.

"ஏய் உன்னைத்தான்... காதுல விழலை? வேலைய ஆரம்பி"

-பைராகி தீப்பந்தத்தைக் கைமாற்றிக்கொண்டே கத்தினார். அப்போது 'ஸ்ஸ்ஸ்ஸ்...!' என்று ஒருவித சீற்றமான சப்தம். தமிழழகன் சப்தம் வந்தபக்கமாய் தன் டார்ச் லைட் வெளிச்ச வட்டத்தை உருட்டினான். சர்ப்பம் ஒன்று சமாதிப் பிருந்தாவன மேடை மேல் ஏறி, படம் விரிக்கத் தொடங்கியிருந்தது.

'அது ஒரு தற்செயலா, இல்லை ஜீவசமாதிகளின் காக்கும் தேவதைகளில் ஒன்றா?' என்பது தமிழழகனுக்குத் தெரியவில்லை. ஆனால் பைராகிக்குப் புரிந்துவிட்டது.

ஆதி என்றால் தொடக்கம்.

சமாதி என்றால், தொடக்கத்தின் சமானமான ஒரு விஷயம் என்பது உட்பொருள். ஒவ்வொரு சமாதியுமே அதைத்தான் சுட்டுகிறது. தொடக்கம் என்பதைச் சிலர் தாயிடம் இருந்து என்பர். சிலர் பஞ்சபூதங்களிடம் இருந்து என்பர். அதையும் கடந்து பரம்பொருளிடம் இருந்தும் என்பர் சிலர். ஒரு சமாதி, அந்தத் தொடக்க இடத்துக்கு அதில் உள்ளவர் சென்றுவிட்டார் என்கிறது. ஜீவசமாதி என்பது, அந்தத் தொடக்கமான விஷயம், அங்கே உயிர்த் துடிப்போடு இயக்க கதியில் இருக்கிறது என்கிறது.

இயங்கு கதியில் உள்ளவர்கள் இயக்க கதிக்குள் நுழையும்போது இரண்டும் கலந்து தேக சுத்தி, ஆன்ம சுத்தி போன்றவை நிகழும். பலருக்கு தாங்கள் யார் என்பதெல்லாம் கட்டவிழ்ந்து, பன்னெடுங் காலகதியை முன்னும் பின்னுமாய்ப் பார்க்கக்கூட முடியும்.

எல்லோராலும் ஜீவ சமாதிகளின் இயக்க கதிக்குள் நுழைய முடியாது. சமாதி வழிபாடு என்பது தீக்காய்தல் போன்றது. அதன் இயக்க கதிக்குள் புகுவது தீப்புகுதல் போன்றது.... இயங்கு கதி ஒவ்வொரு விதமாய்த் தன்னைக் காட்டிக் கொள்ளும். இங்கே சர்ப வடிவம் அதில் ஒன்று!

'ஸ்ஸ்ஸ்ஸ்...!' -அந்த அரவம் தன் குரூரத்தைச் சீற்றமாய்க் காட்டி, சிரசை முன்னோக்கி விசையோடு தாழ்த்தி உயர்த்தியது.

"சாமி... ஆள விடுங்க. என்னால் முடியாது..." என்றபடி தமிழழகன் திரும்பி ஓடத் தொடங்கினான்.

"ஏய்... ஏய்..." -பைராகியும் பின் தொடரத் தொடங்கினார். ஜீவசமாதி உள்ள தோட்டப் பகுதியை விட்டு வெளியே வந்தவர், தமிழழகன் நெடுந்தூரம் ஓடிவிட்டதையும் டார்ச் லைட் ஒளியை வைத்தே உணர்ந்து கொண்டார். ஒரு பெரிய ஏமாற்ற உணர்ச்சி முகம் முழுக்கப் பரவி, தர்ம சங்கடத்தையும் அவரிடம் உருவாக்கி விட்டது.

அப்படியே அங்கேயே சப்பணமிட்டு அமர்ந்தவர், நெற்றி மேல் கை வைத்து, தியானிப்பது போல ஏதோ மந்திர உச்சாடனம் புரியத் தொடங்கினார்.

வெகு தொலைவுக்குச் சென்றுவிட்ட தமிழழகனிடமும் சட்டென்று ஒரு மாற்றம். அவனிடம் முதலில் ஓட்டம் நடையானது. பின் அதுவும் போய், அப்படியே யாராலோ ஆக்கிரமிக்கப்பட்டவன் போலாகி, மலங்க மலங்க வானத்தைப் பார்க்கத் தொடங்கிவிட்டான். நெடுநேரம் வரை அங்கேயே தொழுமுனையில் கட்டப்பட்ட பசு போல் நின்றுவிட்டவனை பைராகியும் நெருங்கி வந்தார். அவன் அவரை புதியவரைப் பார்ப்பது போல் பார்த்து, கை எடுத்துக் கும்பிட்டான்.

"போடா போ... எல்லாத்தையும் கெடுத்திட்டியேடா! பைசாச வேளை போய், கேட்டை நட்சத்திர கதியும் முடிஞ்சு, மூலம் பிறக்கப் போறது. இனி அடுத்த கேட்டை வரை நான் காத்திருக்கணும்! தொடங்கும்போதே சகுனம் சரியில்லாததை, உன் புதையலுக்குன்னுதான் நினைச்சேன். அது எனக்குன்னு பண்ணி, இப்ப என் ஏவலுக்குப் பணியாகி நிக்

**"ஏய் உன்னைத்தான்... காதுல விழலை? வேலைய ஆரம்பி" -பைராகி தீப்பந்தத்தைக் கைமாற்றிக்கொண்டே கத்தினார். அப்போது 'ஸ்ஸ்ஸ்ஸ்...!' என்று ஒருவித சீற்றமான சப்தம்.**

கறே...

வாமாச்சாரம் பக்கமே இனி போகக் கூடாதுன்னு இருந்தஎன் வைராக்யத்துக்கு, உன்னால இன்னிக்குப் பெரிய காயமே ஏற்பட்டாச்சு. எவ்வளவோ கஷ்டங்கள் வந்தப்பவும் பட்டினி கிடந்தேன்.... வாமாச்சாரம் பண்ணலை. உன்னால இன்னிக்கு நான் மாந்திரீக தாந்திரிகங்களை பயன்படுத்த வேண்டியதாப் போச்சே...

ஆனா ஒண்ணு... அந்த ஜீவசமாதியோட சக்தி எனக்கு அப்பட்டமா புரிஞ்சது. எப்ப சர்ப்ப தேவதை காவலிருக்காளோ, அப்பவே சாந்நித்யம் கொஞ்சமும் குறையிலனு தெரிஞ்சது. நான் தேடி வந்தது நிச்சயமா உள்ள இருக்கு. ஆனா உன்னால இனி



எனக்குப் பயன் இல்லை. கருடரேகை உள்ளவனாலதான் சமாதியையும் உடைக்க முடியும். அப்படி ஒருத்தனை என் த்ருஷ்டாந்தத்துல கண்டு பிடிக்கறேன். நான் நினைச்சதைச் சாதிக்கிற வரை, இந்த ஊரை விட்டு மட்டும் போக மாட்டேன்.

இப்ப நீ போய் அந்த யக்ஞன் பொணத்தை அந்தப் புதையல் குழிக்குப் பக்கத்திலேயே ஒரு குழியை வெட்டி, அதுல தூக்கிப் போட்டுட்டு போ.

ஒரு மண்டலத்துக்கு உன் வசியக்கட்டும் அவிழாது. நீ அது வரை பிரக்ஞை இல்லாதவனா இருந்துக்க வேண்டியது தான்"

- அவரது புலம்பலும், அதைத் தொடர்ந்த கட்டளையையும் செயல்படுத்த அவன் நடக்க ஆரம்பித்தான். ஒரு மண் பொம்மை ஒரே நேர்க்கோட்டில் நடப்பது போல இருந்தது!

ரெக்கார்டிங் தியேட்டர் முகப்பில் பருமனான அசோக மரங்கள்! அதன் நிழல்களில் அணில் விளையாட்டு. அருகில் நிழல்களில் மாருதியும், இண்டிகாவும், இன்னோவாக்களும் நின்றபடி இருக்க... மேற்கூரை மேல், காகங்களின் எச்சத் திப்பிகள்.

ஒரு காரில் இருந்து இறங்கிக் கொண்டிருந்தாள் ஷ்யாமனா; கூடவே ராகவ். ஏனோ அவனிடம் கொஞ்சமும் கலகலப்பில்லை. இருவரும் காரை விட்டு இறங்கி, எதிரில் ரெக்கார்டிங் தியேட்டரின் ஏ.சி. ரிஸப்சனுக்குள் புகுந்தார்கள். ஒரு ரெக்கார்டிங்கை முடித்துவிட்டு வெளியேறியபடி இருந்த இளையராஜா நின்று, ஷ்யாமனாவிடம் பேசினார். அவர் போன நிலையில் பிரபூசியாலயா சேர்மன் நாதன் வந்தார்.

"தேவராஜ் அந்தப் ஃப்ளூட் பீட்டை போட்டுக் காட்டினார்மா. அற்புதமா இருந்தது. யார் அந்தச் சங்கீத சித்தர்?" என்று ஆரம்பித்தார்.

"ரொம்ப சந்தோஷம் ஸார்... நீங்க சொல்றது எதை?"

"தேவராஜ் ஒரு கேஸட்டை தான் போட்டுக் காட்டினார். அதையே ஃபைனல் பண்ணி மும்பைக்கு அனுப்பியாச்சு. ஒரு ஆல்பத்துல நம்ம கிளாசிக்கல் இன்ஸ்ட்ருமெண்ட்ஸ்களோட ஸோலோ பதிவுகள்ள, ஃப்ளூட்டுக்கு நீ அனுப்பின கேஸட் ஓ.கே.யாகியிருக்கு. வாசிச்ச நபர் ஒரு மகாஞானி. ஆமா... யார் அது? பேரைச் சொல்லு..."

- நாதன் கேட்டபடி ஷ்யாமனா, ராகவை பார்த்தாள்.

"ஓ ராகவ்... நீங்கதானா? கங்க்ராஜுலேஷன்ஸ்..."

"அது... ஸாரி சார்... அது நான் இல்லை, அன்புமணின்னு ஒரு வில்லேஜர்..."

"வில்லேஜரா..? வாட் டு யூ மீன்?"

"ஷ்யாமனா நீயே சொல்... எனக்கு அவசர வேலை ஒண்ணு இருக்கு... ஸாரி ஸார்!"

- ராகவ் அன்புமணி பற்றி எல்லாம் தான் பேச விரும்பவில்லை என்பதை அவளுக்குச் சொல்லாமல் சொல்லிவிட்டு, தேவராஜ் மாஸ்டரைப் பார்க்க ஓடினான்.

அவளும் சிரித்தபடியே அன்புமணி பற்றிச் சொன்னாள்.

"ரியலி வொண்டர்.... விளையாட்டா ஒரு ஃப்ளூட் வாசிக்கிற நபர்கிட்ட இப்படி ஒரு ஞானமா?"

"ஆமாம் ஸார்... இந்த அறிமுகம் அன்புக்கு ஒரு நல்ல ஆரம்பம்."

"அவரை இங்க வர வைம்மா... நாம் அவரை வெச்சு, புதுசு புதுசா ட்ரை பண்ணலாம்"

"அதான் என் விருப்பமும் கூட... டெஃபனட்டா அவரை கூட்டிக்கிட்டு வரேன் ஸார்.."

"பாப்போம்.." -அவர் விலக ஆரம்பித்தார். பின் ஷ்யாமனா, தேவராஜ் மாஸ்டர் இருக்கும் கேபினுக்குள் நுழைந்தபோது, ராகவ் அவரிடம் சண்டை போட்டுக்கொண்டிருந்தான்.

"ஸார்... நீங்க ஆஸ் பண்ண பீட், ரொம்ப ரொம்ப தற்செயலா அமைஞ்ச ஒண்ணு. அவன் ஒரு மாட்டுக்காரன் ஸார்... ரயில்லயும், பீச்லையும் புல்லாங்குழல் பண்ணி விக்கற குருட்டு வித்வான்களுக்கும், இவனுக்கும் ஒரு பெரிய வித்தியாசமும் இல்லை.

அவனுக்கு ராகம்னா என்னன்னு தெரியாது. தாளம்னா என்னன்னு தெரியாது. சுருதி ஆலாபனை, ஷட்ஜமம், பிர்கா, ஆரோஹணம், அவரோஹணம்னு ஒரு எழவும் தெரியாது ஸார் அவனுக்கு. பாக்கவும் பஞ்சப் பராரி மாதிரி இருப்பான். ஷ்யாமனாவுக்கு அவன் மேல் என்ன க்ரேஸோ தெரியல..."

- ராகவ் அலுத்துக்கொள்ள, ஷ்யாமனா அதைக் கேட்டு கை தட்டச் சரியாக இருந்தது.

(தொடரும்)

"கண்ணமங்கலத்துக்குள் அதன் பூகோள ரீதியான வடிவமுறைகளைப் பார்த்தபடியே நடந்த நாயக்கரும், நாதுராம் கோகலேயும் யாதவகிரி குன்றருகே வந்து சேர்ந்தனர். ராஜ விஜயத்தை எப்பொழுதும் அதற்குண்டான தன்மைகளோடுதான் அணுகிட வேண்டும். ஊர்த் தலையாரி கோயில் பட்டாரான தோத்தாத்திரியோடு கூடி பூர்ண கும்ப மரியாதையுடன் நாயக்கரையும் கோகலேவையும் எதிர்கொண்டார்.

நாயக்கர் அந்த மரியாதைகளை ஏற்றுக்கொண்டவராக 'எங்கே மன்னார்?' என்று கேட்க, மேலே கோயிலை ஒட்டிய மண்டபத்தில் காத்திருப்பதாகப் பட்டர் கூறினார். 'இவ்வளவு தூரம் அவரை நாடி வந்துவிட்ட எங்களை எதிர்கொள்ள மன்னாருக்கு மனம் இல்லையா?' என்று ஒரு கேள்வி நாயக்கருக்குள் தோன்றினாலும், அவர் அதைக் கேட்க விரும்பாமல் மலைப்படியில் காலை வைக்கும் முன்பு முதல்படியைத் தொட்டு வணங்கிவிட்டே பின் மேலே ஏறத் தொடங்கினார். ஊரே அந்தக் காட்சியைப் பார்த்து நாயக்கரின் பணிவையும், பக்தியையும் எண்ணி பரவசம் கொண்டது. மன்னர் செயலைப் பார்த்து மற்றவர்களும் படியை வணங்கிவிட்டு மேலேறினர். ஆனால் கோகலே அதைச் செயற்கையாகக் கருதினார். தனக்குள் தனக்காகத் தோன்றாததை பிறர் நிமித்தம் செய்வதை ஒரு நடிப்பாக அவர் மனம் எண்ணியதுதான் காரணம்.

மேலே திருச்சந்நிதியில் கிருஷ்ண தரிசனமும் நிகழ்ந்தது. அப்போதுகூட மன்னார், அவர்கள்



முன் வரவில்லை. கோகலே மனம், மன்னார் மிகவும் கர்வத்தோடு இருப்பதாக நினைத்து அதற்கொரு பதிலடியைத் தந்தே தீர வேண்டும் என்று எண்ணிக் கொண்டது. அதே சமயம் நாயக்கர் கிருஷ்ண தரிசனம் புரிந்தபோது கிருஷ்ணனின் கண்ணிரண்டும் ஒரு முறை நாயக்கரை இமை திறந்து பார்ப்பதுபோல அவருக்குத் தோன்றவே, அவர் மேனியெங்கும் ஒருவிதச் சிலிர்ப்பு!

**கை**களை தட்டிக்கொண்டு அங்கு வந்து நின்ற ஷ்யாமளாவைப் பார்க்கவும் ராகவிடம் ஒரு சின்னத் தேக்கம், தடுமாற்றம். அதை மாஸ்டரும் கவனித்தார்.

"ராகவ்... கமான்! இன்னும் என்னைப் பத்தி என்னவெல்லாம் சொல்ல நினைக்கறியோ அதை எல்லாம் சொல்லி முடி. ஏன்னா, நானே கற்பனை பண்ணிப் பாக்காத திணுசுல எல்லாம் உன் அபிப்ராயங்கள் இருக்கு. கமான் மேன்..." என்று ஊக்கப்படுத்தினான்.

"போதும் ஷ்யாமளா... கைதட்டி ரொம்பத் தைரியசாலி மாதிரி நடிக்காதே. நான் சொன்னதுல எந்தத் தப்பும் இல்லேன்னுதான் நான் நினைக்கிறேன்"

"எப்படி... எதை வெச்சு தப்பு இல்லேங்கறே..? என்னைப் பத்தி நான் இல்லாதப்ப பேசறதெல்லாம் தப்பு கிடையாது..? இஸ் இட் மேனர்ஸ்?"

-ஷ்யாமளாவிடம் மெல்லிய சங்குபோல கோபம் வெளிப்படத் தொடங்கியது. மாஸ்டர் அதற்குமேல் மௌனமாய் இருக்க விரும்பவில்லை.

"ஷ்யாமளா... நீ ரொம்ப சந்தோஷமா பெருமைப்பட்டுக்க வேண்டிய நேரம் இது. ப்ளீஸ் டோன்ட் பி ஆங்ரி. பாவம் ராகவ்... மறைமுகமான ஒரு போட்டியில பரிசை இழந்தவன். ஒரு பாதிப்பு இருக்கத்தான் செய்யும். கூடவே மனசுல நமக்கே தெரியாம பொறாமை இருந்தா, அதோட சேர்ந்து அது வெளிப்படத்தான் செய்யும். நல்ல கலைஞர்களுக்கு நடுவுல ரொம்ப சகஜமான விஷயம் இது. டை த டை கங்கிராட்ஸ்... ஆமாம் யார் அந்த அன்புமணி? நீ ஏன் சென்னை வரும்போது கூட்டிக்கிட்டு வரலை..?"

மாஸ்டர் மிக மிக புத்திசாலி என்பது அவர் பேசியதிலேயே இருவருக்கும் புரிந்துவிட்டது. ராகவ் வெளிக்காட்டியது பொறாமை என்பதில் இருந்து, அதை அவர் துளிகூடப் பொருட்படுத்தத் தயாராக இல்லை என்பது வரை அவ்வளவையும் சொல்லியது மட்டுமல்ல... அன்புமணியைப் பார்க்க வேண்டும் என்கிற விருப்பத்தையும் அவர் வெளியிட்ட விதம், ராகவை வாயை மூடிக் கொள்ள வைத்து விட்டது.

ஷ்யாமளா மட்டும் உற்சாகமாய் வாய் திறந்தாள். "மாஸ்டர், அன்புவை நான் சென்னை கூட்டிகிட்டு வரத்தான் போறேன். இந்தப் பரிசு அவனுக்கு பெரிய உற்சாகத்தைத் தரும். இன்ஃபாக்ட் பல பொய்களை சொல்லித்தான் என் அப்பா கிராமத்தை விட்டே என்னை சென்னை கூட்டிண்டு வந்தார். நான் வந்ததும் அதுக்காக இல்ல, அன்புமணிக்காக.... குறிப்

# கிருஷ்ண தந்திரம்!

இந்திரா சௌந்தர்ராஜன்

18

பாக இந்தப் பரிசுக்காக..."

"டை த டைப இந்தப் பரிசு ஒண்ணும் உனக்கு இம்மீடியட்டா கிடைக்காது. மும்பையில ஒரு விழாவுல சி.டி. ரிலீஸ் இருக்கு... அப்போ ஸ்டேஜ்ல வெச்சு இசையமைப்பாளர்களை கௌரவிச்சு தான் பரிசு தரப்போறாங்க. மிருதங்கத்துக்கு குமாரபிள்ளை, கடத்துக்கு ஜெகன்னாத ராவ், ஃப்ளூட்டுக்கு அன்புமணி, ட்ரம்சுக்கு தவமணி ஜேகதாஸ், கிதாருக்கு ஹென்றின்னு ஒரு பட்டியலே இருக்கு... எல்லா டி.வி.லேயும் இவங்க முகம் தெரியும். டெஃபனட்டா இவங்களுக்கு பெரிய எதிர்காலம் இருக்கு" -என்று தேவராஜ் மாஸ்டர் கூறக் கூற, ராகவ் முகம் இருண்டுகொண்டே போனது. அதை மாஸ்டரும் கவனித்தார். உலகம் முழுக்க தான் மட்டுமே கவனிக்கப்பட வேண்டும் என்கிற விருப்பம் கொண்டிருந்த ராகவுக்கு, தான் தனித்து விடப்பட்டு விட்டது போல ஒரு அவஸ்தை.

இடையிட்டது செல்ஃபோன்... எடுத்து காது கொடுத்தாள் ஷ்யாமளா... ஆனால் சிக்னல் அறுந்து அறுந்து வந்ததில் சரியாகக் காதில் விழாததால் அந்த அறையை விட்டு வெளியே சென்று பேச ஆரம்பித்தாள். அந்த இடைவெளியில் தேவராஜன் ராகவிடம் திரும்ப வந்தார்.

"ராகவ்... உன் உணர்ச்சிகள் எனக்கு புரியாம இல்லப்பா. மியூசிக்குங்கறது ஃபைன் ஆர்ட்ஸ் வகையைச் சேர்ந்தது. என் அனுபவத்துல சொல்றேன். இங்கே திறமையவிட ஞானம்தான் பெருசு. நீ அதைப் புரிஞ்சுக்கணும். அந்த அன்புமணிகிட்ட நான் நல்ல ஞானத்தைப் பார்க்கறேன். அடுத்து இசையறிவுங்கறது பள்ளிக்கூடத்துல படிச்சு மார்க் வாங்கி பாஸ் பண்றமாதிரி ஒரு விஷயமில்லை... அதுக்கு ஜாதகத்துல இடம் இருக்கணும். இட் ஈஸ் எ க்ரேஸ் மேன்... க்ரேஸ்! ஆத்திரப்பட்றதால, விடியற்காலை 4 மணிக்கு எழுந்து பிராக்டீஸ் பண்றதால எல்லாம் மியூசிக் வசப்பட்டுடாது. இது புரியாதவரைல உனக்கு அந்த கிருஷ்ணனோட புல்லாங்குழலே கைல கிடைச்சாலும் அதைக் கொண்டு உன்னால பெருசா சாதிக்க முடியாது..."

-தேவராஜ் மாஸ்டர் தன் அபிப்ராயத்தைச் சொல்லி வந்ததில் எல்லாம் எந்தத் தவறும் இல்லை... ஆனால் இறுதியாக 'கிருஷ்ணனின் புல்லாங்குழலே' என்ற இடத்தில்தான் ராகவுக்கே ஒரு மின்னல் வெட்டியதுபோல இருந்தது.

"மாஸ்டர், கிருஷ்ணனோட புல்லாங்குழலேன்னு நீங்க இப்ப சொன்னீங்களே... யூ மீன்?" -என்று அவரை நிமிண்டிவிட்டான்.

"என்ன ராகவ்... ஷ்யாமளாவோட கண்ணமங்கலத்துக்கே போயிருந்தும் நான் சொன்னது ஒரு பேச்சுக்குப் பேசினது மாதிரி இருக்கா?"

"அப்ப நீங்க பேசினது நிஜமா எந்த சென்ஸ்ல..?"

"நான் ரைட் சென்ஸ்லதான் பேசினேன். அந்த கிருஷ்ணனோட புல்லாங்குழல்ங்கறது இசை ஞானமே இல்லாதவன் கையில கிடைச்சாலும் அவனை இசைஞானியாக்கும்னு சொல்வாங்க... அப்படி ஒண்ணு நிஜமா இருந்து அதுவே கிடைச்சாலும்னுதான் நானும் சொன்னேன்."

"அது எப்படி மாஸ்டர் ஒரு சாதாரண மெட்டீரியல், ரத்தமும் சதையுமா சதா சர்வ காலமும் இயக்கத்துல இருக்கற ஒரு மனுஷனை கன்ட்ரோல் பண்ண முடியும்?"

"என்ன லாஜிக்கல் வர்றியா?"

"மேஜிக்கா பேசற பேச்சுக்களை லாஜிக்லதானே புரிஞ்சுக்க முடியும்?"

"இம்பாஸிபிள்... இந்தப் பூமியே வெட்டவெளியில சுத்திகிட்டிருக்கற ஒரு கோள உருண்டைதான்... அது ஆகாயத்துல எந்தப் பிடிமானமும் இல்லாம மிதக்கற விஷயத்தையே பெருசா யாராலயும் கண்டுபிடிக்க முடியல. மிதக்கற அது சீரான வேகத்துல சுத்தறது எதை வெச்சுன்னும் துல்லியமா யாராலயும் சொல்ல முடியல. இந்த சுழற்சியால இரவு-பகல் ஏற்பட்ற அதிசயத்தையும், அதோட அடிப்படையில பருவ காலங்கள் உருவாகற விதங்களையும் நமக்கிருக்கற அறிவால என்னதான் புரிஞ்சுக்க முடிஞ்சாலும், இவ்வளவு பெரிய ஒரு காரியத்தை ஒரு நூலளவு பிசகின்றிச் செய்ய வெச்ச சக்தி எதுங்கற கேள்விக்கு யாராலயும் இதுவரை விடை காண முடியல"

**சிக்னல் அறுந்து அறுந்து வந்ததில் சரியாகக் காதில் விழாததால் அந்த அறையை விட்டு வெளியே சென்று பேச ஆரம்பித்தாள். அந்த இடைவெளியில் தேவராஜன் ராகவிடம் திரும்ப வந்தார்.**

"மாஸ்டர் நான் கேட்ட கேள்வியே வேற... ஆனா நீங்க எங்கேயோ போய்ட்டீங்களே..."

"எங்கேயும் போகல... எப்பவும் புரிஞ்ச விஷயங்கள், புரியாத விஷயங்கன்னு ரெண்டு விஷயங்கள் இந்தப் பூமியில இருந்துகிட்டேதான் இருக்கு. நமக்கு மேஜிக்கா மட்டுமே தெரியற விஷயங்கள் நிறையவே இருக்கு... அதுல ஒண்ணாதான் நான் இந்த கிருஷ்ணனோட புல்லாங்குழலை பாக்கறேன்"

"ஒரு பேச்சுக்கு கேக்கறேன், அப்படி ஒண்ணு இருக்குன்னே வைப்போம், அதனால எதைச் சாதிக்க முடியும்?"

"என்ன ராகவ்... பயங்கர இன்ட்ரஸ்ட்டுக்கு மாறிட்டே...

ஊருக்குப் போயிருந்தப்ப அப்படி ஏதாவது கேள்விப்பட்டியா என்ன?"

"ஆமாம் மாஸ்டர்... அங்க ஒரு மேஜீஷியனையும் பார்த்தேன். ஐ மீன் ஒரு பைராகியை..."

"அவருக்கென்ன?"

"அவர் ஃப்ளூட் வாசிக்க இல்லூஷனா சில மேஜிக் பண்ணினதை இப்ப நினைச்சாலும் எனக்கு புல்லரிக்குது மாஸ்டர்..."



"ஓ... அப்ப அவர் கையில இருக்கறது கிருஷ்ணன் வாசிச்ச குழலா இருக்கும்கறது உன் யூகமா?"

"நான் அப்படி எல்லாம் நினைக்கல... அந்த மனிதர் அந்த ஊரை சுத்தி சுத்தி வந்துகிட்டிருக்கறதுக்குப் பின்னால நீங்க சொன்ன மாதிரி விஷயங்கள் இருக்கலாம்னு தோணுது"

"அப்ப நீங்க ஊருக்குப் போயிருந்தப்ப அங்க உங்களுக்கு சில அனுபவங்கள் ஏற்பட்டிருக்குன்னு சொல்."

"ஆமாம் மாஸ்டர்... உங்ககிட்ட சொல்றதுக்கென்ன? ஷ்யாமனா அப்பா அவருக்குப் பயந்துகிட்டுதான் எங்க ரெண்டு பேரையும் சென்னைக்கே கூட்டிகிட்டு வந்துட்டார்..."

"என்னென்னமோ சொல்றே நீ... உனக்கு நான் ஒரு டிப்ஸ் கொடுக்கறேன். 'கண்ணமங்கலம் குழல் எடுத்து, காலமெல்லாம் இசை வடித்து, வண்ண வண்ண மாலை சூட்டுவேன்'னு ஒரு பாட்டே இருக்கு... இதை எழுதினவர் ஒரு பெரிய கவிஞர். நான் அந்தக் கவிஞர்கிட்டயே கேட்டேன். 'அது என்ன கண்ணமங்கலம் குழல்னு தனியா?'ன்னு கேட்டப்போ, 'இது தெரியாதா உங்களுக்கு? கண்ணமங்கலம்கற ஊர்ல இருக்கற கண்ணன் கைகுழல்னு அதுக்கு அர்த்தம்... சாகக்கிடக்கற எப்பேர்பட்ட வியாதியஸ்தன்கிட்ட அதை வாசிச்சாலும் அவன் பொழைச்சுப்பானே... தெரியாதா உங்களுக்கு?'ன்னு அவர் கேட்டார். இதுக்கு ஏதாவது ஆதாரம் இருக்கான்னு கேட்டப்போ, 'நானே இருக்கேனே ஆதாரமா'ன்னார் அவர்... எப்படின்னும் சொன்னார்.

ஒரு சமயம் அவர் கண்ணமங்கலம் கோயிலுக்கு சாமி தரிசனம் பண்ண போயிருக்கார்... அங்க சந்நிதியில நின்னு சாமி தரிசனம் பண்ணும்போது, அவருக்கு நெஞ்சுவலி வந்து மயங்கி விழுந்துட்டார்... அது நெஞ்சுவலி இல்ல, ஹார்ட் அட்டாக்! ஓடிப்போய் ஊருல இருந்து ஒரு டாக்டரை கூட்டிகிட்டு வந்து பார்க்கவும் உயிர் போயாச்சுன்னுட்டாராம் அந்த டாக்டர். அப்ப அவரோட சிஷ்யன்தான் கூட இருந்துருக்கான். அவன் கிட்ட கோயில் பட்டரும் கோயில் பெருமை, புல்லாங்குழல் பெருமையை எல்லாம் சொல்லியிருந்துருக்கார்... அதனால அந்த சிஷ்யன் ஓடிப்போய் கண்ணன் கையில இருந்த அந்தக் குழலை வெடுக்குன்னு எடுத்துகிட்டு வந்து கவிஞர் பாடி கிடந்த இடத்துல வந்து வாசிக்கவும், பத்தாவது நிமிஷம் சுவாசம் திரும்பி மெல்ல கண் திறந்து பார்த்தாராம் அந்தக் கவிஞர்..! அந்த சம்பவம் ஊர்ல பரவினா புல்லாங்குழலை சில பேராசைக்காரர்கள் களவாடக்கூடும்கிறதால யாருக்கும் தெரியாம அமுக்கிட்டதாகவும் அவரேதான் சொன்னார்..."

- மாஸ்டர் சொல்லச் சொல்ல ராகவ் முகத்தில் ஒரு தனி ஒளி! வெளியே சென்றிருந்த ஷ்யாமனாவும் திரும்பி வந்தாள். வந்தவள் அதே வேகத்தில், "மாஸ்டர் நான் இப்ப வேகமா எங்க ஊருக்குப் போக வேண்டிய கட்டாயத்துல இருக்கேன்... நேத்து ராத்திரி எங்க ஊர்ல சில அதிசய சம்பவங்கள் நடந்துருக்கு. நான் உடனே போயாகணும். போய்ட்டு வரும்போது அன்புமணியோட வரேன்..." -என்றவள், "ராகவ் நான் உன்னை அப்புறம் பாக்கறேன்...!" என்றது ராகவுக்குப் பகீர் என்றது.

"ஷ்யாமி... ஐ வில் ஆல் ஸோ கம் யா..." என்று பின்னாலேயே ஓடினான்.

"வேண்டாம்... அங்க வந்து உனக்கும் அன்புமணிக்கும் ஒரு மோதல் உருவாகறத நான் விரும்பல. நீ இங்க உன் வழில போய்க்கோ... எப்பவும்போல நீ என் நண்பன்கறதுல எந்த மாற்றமுமில்லை! பை..."

-ஷ்யாமனாவிடம் ஒரு அசுர வேகம்! ராகவ் சற்று நிலைகுலைந்துதான் போனான். அதே சமயம் அவன் தோள் மேல் கை வைத்து அவன் கவனத்தைத் திருப்பிய மாஸ்டர் தேவராஜ், "டோன்ட் ஒர்ரி ராகவ். நாம தனிப்பட்ட முறையிலேயே கண்ணமங்கலம் போகலாம். எனக்கும் இப்ப அந்தக் கோயில், நீ சொன்ன பைராகி இவங்களை எல்லாம் பாக்கணும்னு தோணுது..." -என்றார். ராகவுக்கு போன உற்சாகம் திரும்பிய மாதிரி இருந்தது!

- (தொடரும்)

**19**

"கிருஷ்ண விக்ரகத்தின் நேத்திரத் திறப்பை பார்த்து அதனால் பரவசமடைந்த நாயக்கருக்கு, அங்கேயே அப்போதே அடுத்தடுத்து அதிசயங்கள் நடக்கப்போவது புரிந்துவிட்டது. அதைத் தொடர்ந்து சந்நிதியை ஒட்டிய குழல் மண்டபத்துக்கும் அவர் அழைத்துச் செல்லப்பட்டு, அவருக்கென அங்கே பிரத்யேகமாக போடப்பட்டிருந்த ஆசனத்தில் அமர வைக்கப்பட்டார். அவர் எதிரில் மன்னார்! கையில் ஒரு மாட்டுக்காரன் வடிவில் வந்து கண்ணன் தந்த குழலுடன் காலிரண்டை மடக்கி அமர்ந்திருந்த விதமே, ஒரு யோகாசனக் கோலம் போலத்தான் இருந்தது!

நாயக்க மன்னர் வந்து அமரவும், அருகிலேயே ஒரு ஜமக்காளம் விரிக்கப்பட்டு அதில் நாதுராம் கோகலே அமர வைக்கப்பட்டார். இருவரும் அமர்ந்துவிட்ட நிலையில் மன்னார் இருவருக்கும் பணிவாக எழுந்து நின்று, இடுப்பை எவ்வளவு வளைக்க முடியுமோ அவ்வளவுக்கு வளைத்து வணக்கம் கூறினான்.

'திமிராக சட்டை செய்யாமல் அமர்ந்திருக்கிறானே இவன்' என்கிற எண்ணமெல்லாம் அந்த வணக்கத்தால் அடிபட்டுப் போயிற்று. ஊர் தலையாரியும் நாயக்க மன்னரிடம், 'அரசே.. தாங்கள் எங்கள் ஊருக்கு வந்ததில் மிகவும் மகிழ்ச்சி அடைகிறோம். இவர்தான் எங்கள் ஊரில் இன்று அதிசய மனிதர். இவரால்தான் இந்த ஊரில் எல்லோரும் உயிர் பிழைத்து உங்கள் முன்னாலும் காட்சி தந்தபடி இருக்கிறோம். இவரைக் கொண்டு அந்த கண்ணனே எங்களை எல்லாம் ரட்சித்துள்ளான். இவரையும் நாங்கள் அந்தக் கண்ணனின் வடிவமாகவே பார்க்கிறோம்' என்று அறிமுகம் செய்திட, மன்னார் முகத்தில் ஒரு சங்கோஜ பாவனை. 'தலையாரி.. நான் மிக மிகச் சாதாரண மனிதன். என்னை அந்தக் கண்ண பரமாத்மாவோடெல்லாம் ஒப்பிடாதீர்கள்' என்றான் மன்னார்.

அதுவரை பொறுமையாக இருந்த கோகலேவிடம் சட்டென்று ஒரு கோபப் பொறி.

'போதும்.. விஷயத்துக்கு வாருங்கள். இந்தப் புல்லாங்குழலால் இவர் ஆடு மாடுகளை எல்லாம் மயக்கிவிட்டதாகக் கேள்விப்பட்டேன். இசைக்கு மிருகங்களும் அடிமை என்பது ஒரு மிகைப்படுத்தப்பட்ட கருத்தாகும். ஒரு வேளை அந்த நாளில் கோகுலத்தில் கிருஷ்ண பரமாத்மாவின் குழலிசையால் ஆடு, மாடுகள் மயங்கிப் போயிருக்கலாம். அதற்குக் குழலிசையை மீறிய அவரது தெய்வீகம் காரணமாக இருக்கலாம். இன்று அது சாத்யமேயில்லை என்பது என் கருத்து.. சாத்யம்தான் என்றால் எங்கே இங்கேயே இப்போதே வாசித்து என் கருத்தைப் பொய்யாக்க முடியுமா?' என்று கோகலே ஆவேச கதியோடு கேட்டார். மன்னார் அதைக் கேட்டு துளிக்கூட பதற்றமோ, அதிர்வோ கொள்ளவில்லை.

'நீங்கள் சொன்னதுதான் உண்மை.. கண்ணனின் குழலிசைக்கு மட்டும்தான் சர்வ உயிர்களும் மயங்கும். எனக்கு எத்தனை ராகங்கள் இருக்கிறது என்பதுகூடத் தெரியாது!' என்றான் மன்னார்! கோகலே முகத்தில் உடனேயே ஒரு மதர்ப்பு.. 'அப்படி வா வழிக்கு' என்பது போல் ஒரு பார்வை!"



ராகவ், தேவராஜ் மாஸ்டரை ஆச்சரியம் குறையாமல் பார்த்தான்.

"மாஸ்டர் நீங்க... நீங்களா என்கூட வரேன்னு சொன்னது?"

"ஆமாம் ராகவ். அந்தக் கிருஷ்ணன் கோயில், அந்த ஃப்ளூட்... இதுகள ஜஸ்ட் லைக் தட் ஒரு பார்வையாவது பாத்து வெச்சுக்க றேனே..."

"ஓ... நீங்க வரேன்னு சொன்னது எனக்கு எவ்வளவு எக்ஸைட்மென்ட்டா இருக்கு தெரியுமா? டை த டை, ஷ்யாமளா இப்பக் கிளம்பிகிட்டு இருப்பா. அவளைக் கூப்பிட்டு 'இரு நாங்களும் வரோம்'னு சொல்றேன்..." என்று செல்ஃபோனை எடுக்கப்போனவனைத் தடுத்தவர், "அவ அவ போக்குல போகட்டும் ராகவ்... ஆமா அந்த அன்புமணி பத்தி நீ நிறையவே சொன்னே. அவன் ஒரு மாட்டுக்காரன், சங்கீதம் பத்தி ஆனா ஆவன்னா கூடத் தெரியாதவன்னு.."

"இப்பவும் அந்தக் கருத்துல எனக்கு மாற்றமில்லை மாஸ்டர்..."

"இம்பாஸிபிள் ராகவ்... அவன் வாசிச்ச அந்த பிட்டை நீ கேட்டியா?"

"அது தற்செயலா அமைஞ்சதா.. இருக்கலாம் இல்லையா?"

"நீ அப்படி நினைக்கறே... நான் வேற மாதிரி நினைக்கறேன்..."

"வேற மாதிரின்னா?"

- ராகவ் கேள்விக்கு மாஸ்டர் தேவராஜ் பதில் கூறாமல், ஒரு சிரிப்பு மட்டும் சிரித்தார்.

"மாஸ்டர்! இப்படிச் சிரிச்சா என்ன அர்த்தம்?"

"நான் இப்ப எதையும் சொல்ல விரும்பலை. போகப் போகப் பார்னு அர்த்தம்..." என்றார் மாஸ்டர். ராகவுக்கு சற்று ஏமாற்றமாகத்தான் இருந்தது!

**தி**ரௌபதி அம்மன் கோயில் திருக்குளம்!

படித்துறை படி ஒன்றின் மேல் எங்கோ வெறித்துப் பார்த்தபடி அமர்ந்து கொண்டிருந்தான் தமிழ்முகன்.



காலை பூஜைக்காக கோயிலுக்கு வரும்போதே, தமிழைப் பார்த்துவிட்டார் திண்ணப்ப பூசாரி. அப்போதே சந்தேகம்... பூஜை முடித்து குளத்துக்கு தண்ணீர் எடுக்க வந்த போதும் அவன் வெறித்தபடியே அமர்ந்திருந்தது தான் அவரை யோசிக்க வைத்தது. பேச்சுக் கொடுத்தும் அவன் பேசவில்லை. அப்போதே அவனுக்கு நடக்கக்கூடாத ஏதோ ஒன்று நடந்துவிட்டது என்கிற முடிவுக்கு வந்துவிட்டார் பூசாரி. செய்தி ஊருக்குள் பரவி, பலரும் வந்து பார்த்தபடி இருந்தனர். சற்று தாமதமாகத்தான் வந்தார் தமிழ்முகனின் அப்பா மருதாசலம். ஆனாலும் அவரிடம் ஒரு அசாத்திய தவிப்பு... ஆற்றாமை!

"பூசாரி... என்னவே இது பிரமை பிடிச்ச மாதிரி இருக்கான். என்னவே ஆகியிருக்கும்?" என்று பூசாரியிடமே கேட்டார்.

"எனக்கும் ஒன்றும் புரியல மருதாசலம்... இவனுக்கும் அந்த மந்திரக்கார வைராகிக்கும்தான் ஏதோ கனெக்ஷன் இருந்துச்சே... அந்த ஆள்தான் எதாவது செய்திருக்கணும்னு நினைக்கிறேன்..."

"இவன் அந்த மாதிரி ஆளுங்க கிட்டெல்லாம் சேர்ற டைப் இல்லையே பூசாரி"

"ஏன் அப்படி நினைக்கறீங்க மருதாசலம்... இவன் அந்த மனுஷன்கிட்ட ஏடாகூடமா எதாவது பேசி வெச்சு, அதனால பாதிக்கப்பட்டு அந்த மனுஷன் இப்படிப் பண்ணியிருக்கலாம் தானே?"

"அடக்கொடுமையே... இருக்கற சிக்கல் போதாதுன்னு இது வேறயா? ஏன் பூசாரி... இந்த மாதிரி பிரமை பிடிச்சவங்களை எல்லாம் உன்னால ஒண்ணும் பண்ண முடியாதா?"

"நான் திரௌபதி ஆத்தா காலடியில கிடக்கற ஒரு சாமான்யன் மருதாசலம்"

- அவர்கள் இருவரும் பேசிக்கொண்டே போனார்கள். ஆனால் அருகிலேயே இருந்தும் தமிழ்முகன் சப்தம் கேட்டுக்கூட திரும்பவில்லை. அந்த வெறிப்பும் அவனைவிட்டு விலகவேயில்லை! மருதாசலம் மகனருகே சென்றவராக, "ஏலேய்... என்னைப்பெத்த ராசா! என்னடா இது கோலம்? உன் அப்பன் வந்துருக்கேன் பாருடா..." என்றார். பின் பொறுமை இழந்து, குளத்தில் இறங்கி தண்ணீரை அள்ளி வந்து முகத்தில் அடித்துப் பார்த்தார்.

அவன் அப்படியேதான் நின்றான்... முகத்தில் வழியும் தண்ணீரைத் துடைத்துவிட்டுக் கொள்ளக்கூட தோன்றவில்லை. மருதாசலத்துக்கு கண்களிரண்டும் கலங்கிவிட்டன.

**கா**ர் ஹாரன் சப்தம் கேட்டு எட்டிப் பார்த்தாள் கோமளா மாமி. காரில் இருந்து ஷ்யாமளா இறங்கிக் கொண்டிருந்தாள். "நினைச்சேன்.. நீ எப்படியும் ரெண்டு நாள்ல வந்துடுவேன்னு நினைச்சேன். அதேமாதிரி வந்துட்டே..." என்றபடியே வரவேற்றாள். ஷ்யாமளாவிடம் பெரிதாக எந்தப் பதிலும் இல்லை.

"மாமி! குளிக்கணும்... ஹீட்டர் போட்றுங்கோ. அப்புறம் நல்ல பசி. சாத்தமுதும் அப்பளமும் போதும், ரெடி பண்ணுங்கோ.." -என்றபடி மாடிப்படி ஏறத் தொடங்கினாள்.

"ஆமா உன் அப்பா எப்ப வரார்..?"-மாமிதான் கேட்டாள்.

"யாருக்குத் தெரியும்..? நான் இப்ப வந்தது கூட அவருக்குத் தெரியாது. நான் ராகவ்கூட ரெக்கார்டிங் தியேட்டர்ல மியூசிக் ஆல்பம் சம்பந்தமா அல்லாடிண்டிருப்பேன்னு நினைச்சுண்டிருப்பார். ராகவ் போட்டுவிட்டான்னா ஒரு வேளை அவர் கிளம்பிவரலாம்.."

- அவள் சொல்லி வாய் மூடுமுன், திரும்பவும் கார் ஹாரன் சப்தம் கேட்டது.

எட்டிப் பார்த்தாள் மாமி.

செல்லப்பாதான் வந்திருந்தார்.

கார் கதவைத் திறந்துகொண்டு உள்ளே வரும் தோரணையே ஒரு மாதிரியாகத்தான் இருந்தது. துரத்திக்கொண்டு வந்தது போல ஒரு வேகம் பளிச்சென்று தெரிந்தது.

மாமி அவரை 'வாங்கோ...' என்றாள்.

"அவ எங்க?"

"யாரு ஷ்யாமளாவா?"

"நான் இந்த ஆத்துல வேற யாரை கேட்கப் போறேன்... எங்க அவ?"

"நான் இங்கதான் இருக்கேன். என்னப்பா, ராகவ் நான் ஊருக்கு கிளம்பிட்டேன்னு ரொம்ப வேகமாகவே போட்டுவிட்டுட்டான் போலத் தெரியறதே..."

"பேசாத ஷ்யாமளா.. பேசாத நீ. என் பதற்றமோ, கலக்கமோ உனக்கு துளிகூடத் தெரியாது.. புரியவும் புரியாது.."

"வேண்டாம்பா... என் வாயை அநாவசியமா கிளறாதேள். நன்னா இருக்கற அத்தை சாகக்கி

டக்கறான்னு முதல்ல ஒரு பொய். அப்புறம் செத்துட்டான்னே ஒரு பொய்... என்னை இந்த ஊரை விட்டுக் கிளப்பினா போதும்னு நீங்க நடந்துண்டது ரொம்ப அநியாயம்..."

"எல்லாம் காரணமாகத்தான் ஷ்யாமளா... ஆனா அதைப்பத்தி இப்ப என்னால விஸ்தாரியா எல்லாம் எதுவும் பேச முடியாது..."

"என்ன பெரிய காரணம்...? நீங்க ரொம்பவே அந்தப் பைராகியைப் பார்த்து பயப்பட்டேள். ஆனா எனக்கு அவரைப் பார்த்தா வேடிக்கையாதான் இருக்கு..."

"இளம் வயசு... உனக்குப் பல விஷயங்கள் தெரியாது. அதான் அப்படி நினைக்கறே. பார் அந்தாள் மருதாசலம் பிள்ளை, தமிழழகனை பிரமை பிடிச்சவனா ஆக்கிட்டான்... அவன் வேலையைக் காட்ட ஆரம்பிச்சுட்டான்..."

"எனக்கும் தகவல் வந்தது... இந்தப் பிரமை, பைத்தியம் இதெல்லாம் எப்படின்னே புரியலை. பாக்கறேன், நானும் பாக்கறேன்..."

- இருவரிடமும் தொற்றிக் கொண்ட ஆக்ரோஷத்தை கோமளா மாமி இடையிட்டுக் குறைக்கப் பார்த்தாள்.

"ஷ்யாமளா... எல்லாத்தையும் அப்புறமா உக்காந்து பேசலாம். அப்பா உன் நல்லதுக்குச் சொல்றாங்கறத புரிஞ்சுண்டு நீதான் கொஞ்சம் தன்மையாப் பேசணும். நீங்க போய் கை கால் அலம்பிண்டு வாங்கோ... நான் காபி போட்டு எடுத்துண்டு வரேன்..."

- என்று மாமி ஒரு இடைக்கால சமரசம் செய்தவளாக விலகினாள்.

அதனால் எல்லாம் செல்லப்பாவுக்கு மனது சமாதானமாக வில்லை.

"நாசமாப் போன மனுஷன்... இப்படி ஊருக்குள்ள வந்து உக்காந்துண்டு அழிச்சாட்டியம் பண்றானே. இன்னும் என்னவெல்லாம் பண்ணப்போறானோ தெரியலியே.."

- கீழே ஊஞ்சல் முன்பு கூண்டுப் புலி போல நடந்தபடியே செல்லப்பாவிடம் உறுமல்! ஷ்யாமளாவும் உடை மாற்றிக் கொள்ள, அறைக்குள் புகுந்து கொண்டு கதவைத் தாழிட்டுக் கொண்டிருந்தாள்.

**கிருஷ்ணன் சந்நிதி!**

துளசிக் கூடையுடன் வந்து சந்நிதிக் கதவைத் திறந்துவிட்டு திரும்பிய பட்டாச்சாரியின் எதிரில் படி ஏறி வந்தபடி இருந்தார் பைராகி. அவரைப் பார்க்கவும் பட்டாச்சாரிக்கே படபடப்பாக இருந்தது. கிட்டே வந்தவரை முறைத்துப் பார்த்தார்.

"என்ன ஓய்.. எதுக்கு இந்த முறைப்பு?"

"முறைக்காம..? நாளைக்கு பெரிய எம்.எல்ஏ.வா வரப் போறான்னு ஊரே நினைச்சிண்டிருக்கறவனை இப்படிப் பிரமை பிடிச்ச மாதிரி பண்ணிட்டீரே ஐயா? இப்படியெல்லாம் ஏவல் வேலை பண்ணிண்டு எப்படி உம்மால இந்த மாதிரி கோயிலுக்குள் எல்லாம் நுழைய முடியறது?"

"என் போல ஒரு குத்தமும் கிடையாது... நடு ராத்திரி தன்னந்தனியா ஜீவ சமாதி பக்கம் போய் அங்க ஒரு ராத்திரியில என்ன நடக்கறதுன்னு பார்க்க ஆசைப்பட்டதுக்கு கிடைச்ச தண்டனை அது. அவனை என்னால குணப்படுத்த முடியும். நான் இங்க வைத்தியன் புரிஞ்சுக்கும்"

- பைராகியின் பதில் பட்டாச்சாரியை அதிர வைத்தது!

(தொடரும்)




ஒரு பத்திரிகையாளனின் பயணமும், பார்வையும்
கே.சி. லட்சுமிநாராயணன்.
பக்கம்: 178, விலை: ரூ.100.
வெளியீடு : எல்.கே.எம். பப்ளிகேஷன்,
பழைய எண்: 15/4, புதிய எண்: 33/4,
ராமநாதன் தெரு, தியாகராய நகர், சென்னை- 600017.
தொலைபேசி: 24361141 / 24340599.

ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக ஒரு சிறந்த பத்திரிகையாளராக, எழுத்தாளராகத் திகழ்ந்து கொண்டிருப்பவர் கலைமாமணி கே.சி. லட்சுமிநாராயணன். தினமணி பத்திரிகையில் சுமார் 25 ஆண்டுகள், மூத்த துணை ஆசிரியராக விளங்கியவர். பத்திரிகை உலகில் ஜாம்பவானாக விளங்கிய ஏ.என். சிவராமனால் மெருகு தீட்டப்பட்டவர். ஏற்கெனவே பல்வேறு வரலாற்று நூல்கள், இலக்கிய நூல்கள், சமய நூல்கள் ஆகியவற்றைப் படைத்துள்ள லட்சுமிநாராயணன், 'ஒரு பத்திரிகையாளனின் பயணமும், பார்வையும்' என்ற இந்தச் சுயசரிதை நூலை எழுதியுள்ளார்.

பெருந்தலைவர் காமராஜர், முதல்வர் கருணாநிதி, முன்னாள் முதல்வர் பக்தவத்சலம், ப. ஜீவானந்தம், முன்னாள் பிரதமர் நரசிம்மராவ் ஆகியோருடன் தனக்கு நேர்ந்த அனுபவங்களை இந்நூலில் பதிவு செய்துள்ளார் ஆசிரியர். தேசியத் தலைவர்களுடன் அவர் பங்கேற்ற நிகழ்ச்சிகளின் அரிய புகைப்படங்களும் நூலில் இடம்பெற்றுள்ளது புத்தகத்துக்கு மெருகு ஏற்றுகிறது.

தினமணி இதழில் கே.சி. லட்சுமி நாராயணன் எழுதிய கட்டுரைகள் இக்காலத்துக்கும் பொருந்துவது வியப்பளிக்கிறது. 1992ஆம் ஆண்டில் மின்பற்றாக்குறை பற்றி அவர் எழுதிய கட்டுரையே அதற்கு சாட்சி!

வளரும் பத்திரிகையாளர்கள் துறை சார்ந்த தங்களின் அனுபவத்தை வளர்த்துக் கொள்வதற்கு கட்டாயம் படிக்க வேண்டிய நூல், கே.சி. லட்சுமிநாராயணனின் 'ஒரு பத்திரிகையாளனின் பயணமும், பார்வையும்'.




# கிருஷ்ண தந்திரம்!

***"மன்னாரின் வாசிப்பு, அந்தக் குழல் மண்டபத்தில் அநேக அதிசயங்களை நிகழ்த்தத் தொடங்கியது. ஆங்காங்கே கூட்டத்தவர் அதிர சில நாகங்கள், மனிதக் கூட்டம் பற்றிய ஒரு அச்சமேயின்றி அந்த மண்டபத்துக்குள் நெளிந்தபடி நுழைந்திருந்தன. கோயிலுக்கு வெளிப் பிராகாரத்தில் புன்னை மரத்தின் மேலும் ஏராளமான பட்சிக் கூட்டங்கள் வந்து அடைந்ததோடு, அவற்றில் சில பட்சிகள் படபடத்த சிறகோடு குழல் மண்டபத்துக்குள் நுழைந்து மண்டபக் கூரைமேல் கால் பதித்து, அமர முடிந்த இடமாகப் பார்த்து அமர்ந்துங்கொண்டன.***

***யாதவகிரி மலைக்குன்று படிகளில் சில மாடுகளும், மனிதக் கூட்டத்தின் தரிசனத்துக்காக மலை ஏறுவது போல ஏறியபடி இருந்தன. நாயக்க மன்னர் அந்தக் காட்சிகளைக் கண்டபடியும், அதே சமயம் குழலிசையின் இனிமையில் மயங்கியும் மன்னாரையே பார்த்தபடியே இருந்தார். கோகிலேயின் முகத்தில் ஒரு மெல்லிய மாற்றம்; அவர் கண்களிலும் நீர் திரையிடத் தொடங்கிவிட்டிருந்தது!"***

'தமிழ்முகனுக்குப் பிரமை பிடித்ததற்கும், தனக்கும் ஒரு சம்பந்தமும் இல்லை. அதற்குக் காரணம் அவன் மன்னாரின் ஜீவசமாதிப் பக்கம் போனது தான்' என்று அப்படியே சிக்கலை திசை திருப்பி விட்ட வைராகியை பட்டாச்சாரியார் நம்ப முடியாமல் குழப்பமாகப் பார்த்தார்.

"என்ன நம்ப முடியலையா நான் சொல்றது...?"

"ஆமாம் வைராகி... மன்னார் ஜீவ சமாதிங்கறதும், இந்தக் கோயிலும் ஒன்னு. அங்க போன தமிழ்முகனுக்கு பிரமை பிடிச்சதுன்னா எப்படி ஒத்துக்க முடியும்..? பிரமை பிடிச்சவா அங்க போனா பிரமை நீங்கும். ஆனா அங்க பிரமை பிடிக்காது. அடுத்து தமிழ்முகன் இந்தக் கோயில் பக்கமே வரமாட்டான். கோயில், பூஜை, புனஸ்காரம் எல்லாம் அவன் வரைல கூட நம்பிக்கை சார்ந்த விஷயங்கள். அப்படிப்பட்டவன் எதுக்கு ஜீவசமாதிப் பக்கம் போறான்?"

"சரி.... நான் உம்மைத் திருப்பிக் கேட்கறேன். தமிழ்முகனை பித்து பிடிக்க வைக்கறதுல எனக்குதான் என்ன ஆகிடப் போறது? இந்த ஊரே என்னை இந்த நொடி வரை வித்தியாசமாப் பாக்கும்போது, அவன் என்கிட்ட வந்து தைரியமாகப் பேசி என்னைப் புரிஞ்சிகிட்டவன். தமிழ்முகன் என்னோட பலம். நானே இப்ப பலத்தை இழந்துதான் நிக்கறேன். இதை நான் யாருக்கும் புரிய வைக்க வேண்டிய அவசியம் இல்லை...." என்றார். பட்டாச்சாரி யாருக்குள் திரும்பவும் குழப்பம்.

இதற்கு முன் வரை எதற்காகவும் வைராகியிடம் பேசியிராத பட்டாச்சாரி, இந்தச் சந்தர்ப்பத்தில் மீதம் உள்ள சந்தேகங்களையும் தீர்த்துக் கொண்டுவிட வேண்டும் என்று விரும்பியவராகத் தொடர்ந்து பேசத் தொடங்கினார்.

"சரி வைராகி, நீர் சொல்றத நான் நம்பறேன்னே வெச்சுக்குங்க. இந்த ஊர்ல உமக்கு என்ன வேலை...? பட்டுன்னு தேங்கா உடைக்கற மாதிரி உம்மால சொல்ல முடியுமா?"

"இது என் தாயோட சொந்த ஊர்.... நான் பிறந்த ஊர்... அதனால எனக்கும் இதுதான் சொந்த மண். சொந்த மண்ணுல ஒருத்தன் தங்கி இருக்கிறது ஒரு குத்தமா?"

"ஊருன்னு இருந்தா, நாலு பேர் போவா... நாலு பேர் வருவா... அந்த நாலு பேர் மாதிரி நீர் இல்லையே! உம்ம தோற்றமே சொல்லுமே நீர் எப்படிப் பட்டவர்னு...! உம்ம தாடியும், மீசையும் பாக்கற மாதிரியா இருக்கு?"

"நான் வைராகி... வாமாச்சாரம் கத்துண்டவன்! வைஷ்ணவனான நீர் கட்டுக்குடுமி, பன்னெண்டு திருமண்ணுன்னு இருக்கற மாதிரி, இது என் ரூபம்... வாமாச்சாரிகளுக்கு தலைமுடி, தாடி முடி, மீசை, கேசம் எல்லாம் சக்திக் கால்கள். மந்திரஜபம் பண்ணும்போது அதோட வைப்ரேஷனை சுமந்து நிக்கறதே இந்த முடிக்கால்கள்தான். தியானம் பண்ணும்போது பிரபஞ்ச வெளில நிலவற மின்காந்த அலைகளை ஸ்வீகரிச்சு, உடம்புக்குள்ள அனுப்பறதும் இந்த கேசம்தான். தலைமுடிக்குப் பின்னால ஏராளமான அர்த்தங்களும், ஆச்சரியங்களும் இருக்கு. அதனால்தான் என்ன மாதிரி வைராகிகளுக்கு ஒரு சட்டம், குடும்பத்துல இருக்கற கிரகஸ்தனுக்கு ஒரு சட்டம்னு பெரியவங்க போட்டு வைச்சிருக்காங்க. கர்ப்ப தீக்ஷை, மயான தீக்ஷைன்னு பல ரகமா ரிஷிகள் விதிமுறைகளை ஏற்படுத்தி வைச்சிருக்காங்க.

ஆனா நாகரீக மோகத்துல எல்லாம் தலை கீழா மாறிப் போயிடுச்சு. தலைமுடியோ, முக முடியோ

வெச்சுக்கறதுக்கும், நீக்கறதுக்கும் பின்னால நுட்ப மான காரணங்கள் நிறைய இருக்கு தெரிஞ்சுக்கோ..."

- பைராகி கிட்டத்தட்ட ஒரு உபன்யாசமே நிகழ்த்தி முடித்துவிட்டார். பட்டாச்சாரிக்கு ஏன் வாயைக் கொடுத்தோம் என்றுகூட இருந்தது. அப் படி ஒரு பேச்சு பேசிய நிலையில் தொடர்ந்து அங்கே இருந்தால் பட்டர் கேள்வி கேட்பார். அவற்றுக்கு பொய்யையும், மெய்யையும் கலந்து பதிலாகச் சொல்ல வேண்டி வரும் என்பதை உணர்ந்தவர் போல விடுவிடுவென்று விலகிப் போய்விட்டார் பைராகி. பட்டாச்சாரிக்கு, அவர் பதில் சொன்ன மாதிரியும் இருந்தது, சொல்லாத மாதிரியும் இருந் தது.

வீட்டை விட்டு வெளியே கிளம்பிக் கொண்டிருந் தாள் ஷ்யாமளா! கொஞ்சம் போலப் பதைப்பு, கொஞ்சம் போல தவிப்பு என்று கவலைகளுடன் மகளையே பார்த்துக் கொண்டிருந்தார் செல்லப்பா. மிகச் சரி யாக வாசற்படியை அவள் தொடும் சம யம், 'ஷ்யாமளா நில்லு' என்றார். அவ ளும் நின்றவளாக, திரும்பிப் பார்க்கா மலே 'என்ன?' என்று கேட்கா மல் கேட்டாள்.

"ஊர் இன்னிக்கு இருக்கற நிலையில நீ இப்படித் தனியா வெளிய போறது எனக்குக் கொஞ்சம்கூடப் பிடிக் கல..."

"ஏம்ப்பா.. என்னை யாராவது தூக்கிண்டு போய் டுவானா?"

"அப்படி நடந்தா நான் ஆச்சரியப்பட மாட் டேம்மா..." என்றதும் அவள் அதைக் கேட்டு சிரித்து விட்டாள்.

"சிரிக்காதே... முந்தா நாள் ராத்திரி இந்த ஊர்ல நடந்த விஷயம் உனக்குத் தெரியுமா?"

"தமிழ்முகன்னு ஒருத்தனுக்குப் பிரமை பிடிச்சி ருக்கு... யக்ஞன்கற ஒரு நெடுநாள் வைத்தியத்தைக் காணலை... ஊரே பைராகிதான் ஏதோ பண்ணிட் டதா பயந்துண்டு கிடக்கறா... இதெல்லாம்தானே?"

"பரவாயில்ல, உனக்கு எல்லா விஷயங்களும் தெரிஞ்சிருக்கே... யார் சொன்னது, கோமளாவா?"



"இல்ல... எனக்குத் தகவல் கொடுத்தது அன்புமணி.."

"இப்ப அவனைப் பாக்கத்தான் புறப்பட்டுட்டியோ?"

"ஆமாம்... அவனோட 'பீட்' செலக்ட் ஆயிடுத்து. அவன் இனி குத்தகைக்கார மாட்டுக்கார அன்புமணி மட்டும் கிடையாது; அவனும் ஒரு வித்வான்!"

"வித்வானா? போடலங்கா..." -செல்லப்பா பற்களை நறநறத்திட, ஷ்யாமளா அதற்கு மேல் நிற்காமல் வீதியில் இறங்கிவிட்டாள். செல்லப்பா கைகளைப் பிசைந்துகொண்டார். சரியா கோமளா மாமி எதிரில் வந்து நின்றாள்.

"நீங்க பயப்பட வேண்டாம். ஷ்யாமளாவுக்கு எதுவும் ஆயிடாது"

"போதும் கோமளா... இது நம்பிக்கைக்கு அப்பாற்பட்ட விஷயம். உனக்குத் தெரிஞ்சதெல்லாம் கொஞ்சம்தான்; தெரியாதது நிறைய இருக்கு"

"சரி, இதுக்கு மேல நான் என்ன சொல்லமுடியும்?" -மாமி பதவிசாக ஒதுங்கிக் கொண்டாள். செல்லப்பாவுக்கோ மனது கிடந்து அடித்துக் கொள்ள ஆரம்பித்தது!



**தெ**ருவில் இறங்கி நடந்த ஷ்யாமளாவை வீதியே ஒரு அதிசயத்தைப் பார்க்கிற மாதிரிதான் பார்த்தது. இடைமறித்த சிலர், "நீ வந்த வேகத்துல ஊருக்கு போய்ட்டேன்னாங்க... பரவாயில்லியே, திரும்ப வந்துட்டியே..?" என்றனர். அவர்களுக்கெல்லாம் அவள் வரையில் ஒரு சிரிப்புதான் பதில். வடக்குத் தெருவில் அவள் கால்கள் இறங்கிய போது, ஒரு வீட்டில் இருந்து ஒரு வயதானவர் ஓடி வந்தார். ஷ்யாமளா எதிரில் கை எடுத்துக் கும்பிட்டார். ஷ்யாமளாவும் தேங்கி நின்றாள்.

"ஐயரு மவதானே தாயி நீ..?"

"ஆமாம்..."

"அப்ப அந்தத் திரௌபதி ஆத்தா நீதான்... ஆத்தா! எனக்கொரு உபகாரம் பண்ணுவியா?"

"என்னன்னு சொல்லுங்க.."

"வீட்ல என் பொண்டாட்டி ஒரு வாரமா இழுத்துகிட்டுக் கிடக்கறா, அவ நல்ல விதமாக் கண்ண மூடணும்.."

"அதுக்கு... அதுக்கு நான் என்ன செய்யணும்?"

"நீ திரௌபதி. அஞ்சு பூதமும் உனக்கு அடிமை தாயி... நீ வந்து என் பொண்டாட்டி வாய்ல துளசி தண்ணி விட்டா, அவ ஆத்மா நல்ல விதமா வைகுண்டத்துக்குப் போகும் தாயி.."

"என்ன இது...? இதை நீங்களே செய்யலாமே பெரியவரே..?"

"நான் பாவப்பட்ட பிறவி கண்ணு... உன்னை மாதிரி விசேஷமெல்லாம் எனக்கு இல்லையே...!"

"நீங்க இன்ஃபீரியாரிட்டி காம்ப்ளக்ஸ் பேசறீங்க. நானும் ஒரு சாதாரண சாமான்யப்பட்ட பொண்ணுதான் பெரியவரே..."

"நீ பெருந்தன்மையா பேசறே கண்ணு... உனக்கே உன் சக்தி தெரியலைன்னுதான் சொல்வேன். கொஞ்சம் எனக்காக வந்து துளசி தண்ணி விடு கண்ணு.."

"தாராளமா... நான் அப்படிச் செய்யறதால உங்களுக்கு ஒரு சந்தோஷம்னா செய்யறேன். ஆனா என்னை நீங்க பெருசா நினைக்கறதெல்லாம் ரொம்பவே தப்பு..."

"கண்ணு நீ என்ன சொன்னாலும் சரி.. இப்ப வந்து நான் சொன்னபடி செய் தாயி.."

- ஷ்யாமளா அவரைப் பின் தொடர்ந்தாள். தழைந்த ஓட்டுக் கூரை வீடு... வீட்டு முன் எருமை, பசு கன்றுக் குட்டி என்று ஒரு கூட்டம் நிறையவே.. ஈக்களும், உண்ணிகளும் பறந்த வண்ணம் இருக்க... உள்ளே சாணி மெழுகிய தரை மேல் அனலில் வாட்டப்பட்ட வாழை இலை கணக்காக ஒரு வயதான பெண்மணி! கண்ணிரண்டும் நிலைகுத்தி இருந்தது. தொண்டைக்குழியில் விட்டு விட்டு இழுப்பும்

"ஊர் இன்னிக்கு இருக்கற நிலையில
நீ இப்படித் தனியா வெளிய போறது
எனக்குக் கொஞ்சம்கூடப் பிடிக்கல..."
"ஏம்ப்பா.. என்னை யாராவது தூக்கிண்டு
போய்டுவாளா?"

அடைப்பும்... தலைமாட்டிலும், பக்கவாட்டிலும் எப்பொழுது உயிர் பிரியும் என்கிற எதிர்பார்ப்புடன் அவளது சொந்த பந்தங்கள்.

கண்ணமங்கலத்தில் எந்த மதத்தவராக இருந்தாலும் அவர்கள் தோட்டத்தில் துளசிச் செடிகள் இருக்கும். அது ஒரு ஊர் அடையாளம். அந்தப் பெரியவரே ஓடிப் போய், துளசிச் செடியில் இருந்து சில இலைகளைப் பறித்து வந்து ஷ்யாமளாவிடம் தந்தார். ஷ்யாமளாவும் அதை வாங்கி, துடிக்கின்ற வயதான பெண்ணின் வாயில் போட்டு ஒரு தம்ளரில் தரப்பட்ட நீரை மெல்ல வாயில் விட்டாள். அந்த நொடி ஒரு ஆச்சரியம் நிகழத் தொடங்கியது.

அந்தப் பெண்மணி துளசி தீர்த்தத்தை விழுங்கிய மாத்திரத்தில் நிலை குத்திக்கொண்ட விழிகளை ஷ்யாமளா மேல் திருப்பினாள்; கூர்ந்து பார்த்தபடியே கைகளையும் கூப்பினாள். கை, கால்களை அசைக்கக்கூட சக்தியற்றவளின் அந்தச் செயல் எல்லோரையுமே ஆச்சரியத்தில் புதைக்க, அப்படியே கண்களை மூடினாள். சிரசும் ஒருபுறமாய் சரிய, உயிர் பறவை விடுபட்டுவிட்டது.

"அம்மாடி ஆத்தா.. திரௌபதி தாயே...! ரொம்ப சந்தோஷம் ஆத்தா. என் மனோன்மணி விடாம மன்னார் சமாதிக்குப் போய் கும்பிட்டுட்டு வருவா. 'சாமி! நான் நல்ல விதமா உன்னை வந்து சேரணும்'னு வேண்டிக்குவா. இன்னிக்கு ஏகாதசி நாள். உன்னால என் பொண்டாட்டி வைகுண்டத்துக்கும் போய்ட்டா.." என்று கண்கலங்கினார் அந்தப் பெரியவர்.

ஷ்யாமளாவுக்கு அவரது நம்பிக்கை ஜெயித்ததாகத்தான் தோன்றியது. மௌனமாக வெளியேறத் தொடங்கினாள். அதே சமயம் சாகும் முன் அந்தப் பெண் தன்னைப் பார்த்து கும்பிட்டது அவளுக்கே கூட ஒரு அபூர்வமான சம்பவமாகத்தான் பட்டது. விஷயம் வேகமாகப் பரவி, வீட்டுக்கு வீடு வெளியே வந்து ஷ்யாமளாவை பார்த்தனர். ஒருத்தி விபூதியும் கையுமாக ஓடி வந்து, தன் மகன் நெற்றியில் இட்டு ஆசீர்வதிக்கச் சொன்னாள். ஒப்புக் கொள்ளவும் முடியவில்லை; மறுக்கவும் முடியவில்லை. நல்லவேளையாக ஒரு சைக்கிளில், எதிரில் அன்புமணி வந்தபடி இருந்தான். அவன் அருகில் வந்து இறங்கிக் கொண்டவன், "நீ வந்துட்டேன்னு கேள்விப்பட்டு, உன்னைப் பார்க்கதான் வந்துகிட்டிருக்கேன்" என்றான்.

"நானும் உன்னை பாக்கத்தான் அன்பு வந்துகிட்டிருக்கேன்... நல்ல வேளை நீ சைக்கிள்ள வந்தே. நான் பின்னால ஏறிக்கறேன். அப்படியே கோயில் பக்கம் விடு.."

"என்ன ஷ்யாமளா என் வண்டியில நீ ஏறிக்கிறியா? வேண்டாம், வா நடந்து போவோம்..."

"அப்பப்ப உன்கிட்ட கிராமத்துப் பாதிப்பு வந்துடுது. நீ இப்ப சைக்கிள்ள ஏறப் போறியா இல்லையா?"

"ஷியாமளா! ஏற்கெனவே என்னையும், உன்னையும் ஒரு மாதிரி இந்த ஊர் பார்க்குது. இதுல ஜோடியா போனா அவ்வளவுதான்..."

"போதும் அன்பு... வண்டிய எடு.- நான் கொஞ்ச நேரம் இங்க நின்னுகிட்டிருந்தேன்... என்னை இந்த ஊர்ல சாமியாக்கிடுவாங்க. கமான்மேன்.."

- அவள் துரிதப்படுத்த, அவனும் சைக்கிளில் ஏறிட அவன் பின்னால் தொற்றிக் கொண்டாள். அந்த சைக்கிளும் திரௌபதி அம்மன் கோயில் நோக்கி உருளத் தொடங்கியது!

கோயில் வளாகத்துக்குள் குளத்துக்கரையை ஒட்டிச் சைக்கிளை திருப்பவும், எதிரே குளத்துக்கரை படிக்கட்டு மேல் ஒரு கற்சிலை போல உட்கார்ந்திருந்தான் தமிழ்முகன். அவனருகில் அன்புமணியின் தங்கையான கோமதி! அன்புமணியும், ஷ்யாமளாவும் வருவது தெரியாமல், அவள் அவனைப் பார்த்து அழுது கொண்டிருந்தாள். அந்தக் காட்சி அன்புமணிக்கு ஒரு அதிர்ச்சியான காட்சிதான். சைக்கிளை தடுமாற்றமுடன் நிறுத்தியவன், ஷ்யாமளாவும் இறங்கிக் கொள்ள அவளை நோக்கித்தான் ஓடினான். அவளும் சப்தம் கேட்டு திரும்பிப் பார்த்து, அதிர்ச்சியை முகத்தில் காட்டினாள்.

"அண்ணே... நீ...நீ.." என்று மிடறு விழுங்கினாள்.

"நீ இங்க இவன் கூட என்னம்மா பண்றே..? இவனுக்கும் உனக்கும்தான் எப்பவுமே ஆகாதே..?"

"அது... அது... அது வந்துண்ணே..."

"என்ன வந்து, போயி... ஆமா என்ன இது கண்ணுல தண்ணி, எதுக்கு அழுவுறே?"

"அது.. அது.."

"கோமதி, என்னைத் தவிக்கவிடாதே.. இங்க இவன்கூட என்ன பண்றே?" -அன்புமணி குரலில் காரத்து கூடிக் கொண்டே போனது. கோமதியிடமோ விம்மத் தொடங்கிவிட்டது.

"அண்ணே.. கோயிலுக்கு வந்தேன். தமிழுக்குப் பைத்தியம்னாங்களேன்னு எட்டிப் பாத்தேன்.. அவ்வளவுதான்."

"எட்டிப் பாத்தவ எதுக்கு அழணும்? இவன் எப்பவும் உன்னைச் சீண்டி வேடிக்கைப் பாக்கறவன்னு சொல்வியே?"

"அண்ணே அது..." -கோமதியிடம் வார்த்தைகள் அதற்கு மேல் வரவில்லை. மயக்கம்தான் வந்தது!

(தொடரும்)

"மன்னார் வாசித்தபடியே இருக்க, நாதுராம் கோகலேயிடம் பரவசமும் கூடிக்கொண்டே போனது. ஒருகட்டத்தில் எழுந்து நின்று தலையாட்டியபடி அவர் ஆடவே தொடங்கிவிட்டார்.

மன்னாரும் வாசிப்பின் உச்சத்துக்கே போய் அப்படியே போன வேகத்துக்கு வாசிப்பதை நிறுத்திவிட்டு, உதட்டில் துளிர்த்துவிட்ட எச்சிலை சிறு குழந்தைபோல துடைத்துவிட்டுக் கொண்டான்.

'அருமை, அபாரம், அற்புதம்! இசை வடிவானவன் இறைவன் என்பதை இங்கே இவர் நிரூபித்துவிட்டார். இவரது இசைச் சிறப்புக்கு மனித உயிர்கள் மட்டுமல்ல... புல் பூண்டுகள்கூட அடிமை என்பது கண் எதிரே நிரூபணமாகிவிட்டது. கோகலே இனியும் நீங்கள் இவருக்கு எதிராக அடம் பிடிக்க மாட்டீர்கள் என்று நம்புகிறேன்' என்று மன்னர் கூறிட, கோகலே தன் கருத்தை வார்த்தைகளில் கூறாமல் அப்படியே மன்னார் முன் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கித் தெரிவித்துக் கொண்டதோடு, 'இன்று முதல் இவரே என் குரு' என்றும் கூறவும், அந்தக் கூட்டமே அதிர்ந்துபோய் எல்லோரும் கரகோஷம் எழுப்பினார்கள். அதைத் தொடர்ந்து நாயக்க மன்னரும் தனது பங்கிற்கு, 'இன்று முதல் இந்த கன்னமங்கலத்து மன்னார்தான் தஞ்சையின் நாயக்கப் பேரவையின் அவைக் கலைஞர். எனக்கு அளிக்கப்படும் மரியாதையிலிருந்து, சகல வசதிகளும் மன்னாருக்கும் வழங்கப்படும்' என்று அறிவித்திட, மன்னார் முகத்தில் அதை ஏற்க மறுப்பதுபோல ஒரு பாவனை!'

கோமதியின் மயக்கத்தைத் தொடர்ந்து, ஓடிப்போய் குளத்தில் இறங்கி தண்ணீரை இரு கைகளாலும் அள்ளி வந்து முகத்தில் தெளித்து அவனது மயக்கத்தைத் தெளிவிக்க முயன்றான் அன்புமணி... அவனும் மெல்லக் கண் திறந்தான். ஆனாலும் நேருக்கு நேராக அன்புமணியைப் பார்ப்பதைத் தவிர்த்தான். அவனுக்குள் ஏதோ ஒரு இனம் புரியாத தவிப்பு!

அவ்வளவு சம்பவத்துக்கு நடுவிலும் வானத்தைப் பார்த்தபடி அமர்ந்திருந்த தமிழழகனிடம் ஒரு சிறுமாற்றமும் இல்லை. ஷ்யாமளா கூர்மையாக கோமதியின் செயலைக் கவனித்தபடியே இருந்தான். அன்புமணிக்குள் தங்களை ஊருக்குள் யாராவது பார்த்து, 'கோமதி தமிழழகனைப் பார்த்து மயங்கினான்' என்பது ஒரு பரபரப்பான செய்தியாகப் பரவிவிடுமோ என்கிற பயமும் ஆட்டி வைக்க ஆரம்பித்திருந்தது.

"சரி வா... முதல்ல வீட்டுக்குப் போவோம். அங்க போய் மத்த விஷயங்களைப் பேசுவோம்" என்ற தமிழ்மணி, சைக்கிளில் ஏறி அவனருகில் வந்து, ஷ்யாமளா ஏறிக் கொண்டது போல ஏறிக்கொள்ளச் சொன்னான்.

"இல்லண்ணே நீ போ... நான் நடந்து வரேன்..." என்றான். "இப்ப நீ வர்றியா இல்லையா...?" -என்று அதட்டி அவனை ஏற்றிக்கொண்டவன், 'ஸாரி ஷ்யாமளா' என்கிற மாதிரி அவளைப் பார்த்தான். 'நீ போ அன்பு... போய் விட்டுட்டு வா, நான் இங்கேயே இருக்கேன். கோமதியை விட்டுட்டு அவசியம் வா, உன் கிட்ட நான் நிறையப் பேசணும்' என்றான். அவனும் சைக்கிளை மிதித்துக்கொண்டு விலகத் தொடங்கினான்.

ஷ்யாமளாவின் கவனம் அடுத்து தமிழழகன் மேல்தான் சென்றது. அவன் அவளுக்குப் பரிச்சயமே இல்லை என்றுகூட கூறலாம். இருந்தும் 'தமிழ்... தமிழ்...' என்று அழைத்துப் பார்த்தாள். அவன் கவனம் கலையவே இல்லை. அவளுக்குள், "எது அவனை அப்படி ஆக்கியிருக்கும்?" என்னும் கேள்விகளின் அணிவகுப்பு. எதையாவது பார்த்து பயந்துபோய் அதனால் மூளை நரம்புகளில் அவ்விது அதன் நிக்சசெல்களில் ரத்த ஓட்டத்தில் பாதிப்பு



# கிருஷ்ணா தந்திரம்!

ஏற்பட்டு, அதன் காரணமாக குறிப்பிட்ட உணரும் நரம்பு செயலிழந்து விட்டதோ? இல்லை இவனாகக் கண்ட கண்ட எண்ணங்களில் சிக்கிக் குழம்பிப்போய், அதன் காரணமாக மூளையில் ஏதாவது ஸ்தம்பிப்பு ஏற்பட்டிருக்குமோ? -இப்படியாக அவனது கேள்விகள் நீண்ட போது பூசாரி திண்ணப்பனும் வந்து சேர்ந்தார்.

“ஊர்லேயிருந்து வந்துட்டியா கண்ணு?” -என்று கேட்டபடியே தான் அருகில் வந்தார்.

“வாங்க பூசாரி... நான் இப்பத்தான் கொஞ்ச நேரம் முந்தி வந்தேன்...”

“நீ போயிருக்கவே கூடாது. நல்ல வேளை போனவ வந்தியே, அந்த மட்டுல சந்தோஷம்...”

“நான் போயிருக்கவே கூடாதுன்னு நீங்க சொல்ற தொனியப் பார்த்தா, அதுல ஏதோ விஷயம் இருக்கற மாதிரி தெரியுதே பூசாரி..?”

- பூசாரி அவன் கேள்விக்குப் பதில் கூறாமல், ஒரு மாதிரி மழுப்பலாகச் சிரித்தார். அப்படியே, “நீ ஒருவேளை ஊர் பக்கம் போகாம இருந்திருந்தா இதோ இவனுக்கு இப்படிப் பிரமை பிடிச்சிருக்காம கூட போயிருக்கலாம்” என்றார். அது அவனை கொஞ்சம் நறுக்கென்று தைத்தது.

“என்ன பூசாரி சொல்றீங்க... நான் போனதுக்கும், இதுக்கும் என்ன சம்பந்தம்?”

“நான் வேற அர்த்தத்துல சொன்னேன். தாயி... நீ திரௌபதி அம்சம். நீ இருக்கற இடத்துல காத்து கருப்புங்களால பெருசா செயல்பட முடியாதுங்கறது என் எண்ணம்!”

“என்ன பூசாரி, விட்டா எனக்குக் கிரீடம் வெச்சு இந்தக் கோயில் சந்நிதிக்குள்ளகூட உக்காத்தி வெச்சிடுவீங்கபோல இருக்கே...”

“நான் உக்காத்தி வைக்கறதா..? நீயே போய் உக்காந்துக்கலாம். அவ்வளவு ஏன், பன்னெண்டு வருஷத்துக்கு ஒரு தடவை வர்ற திருவிழா போது கூட, அந்த மரப்பெட்டியை நாங்க கண்ணைக் கட்டிகிட்டுதான்



திறக்கணும். உள்ள இருக்கற திரௌபதி வஸ்த்ரத்தையும், கண்ண கட்டிக்கிட்டேதான் மாத்தணும். ஆனா நீ மட்டும் அதை எப்பவேணாப் போய் பாக்கலாம்; திறக்கலாம். உனக்கு அந்த உரிமை உண்டே..!"

"அதைத் திறந்து பார்த்து நான் என்ன பண்ணப்போறேன்? அதோட எனக்கென்ன சம்பந்தம்..? போகட்டும், இந்தத் தமிழ்மணிக்குப் பிரமை பிடிச்சிருக்குங்கற மாதிரி ஏதோ சொன்னீங்களே..."

"ஆமா... இதை வேற என்னன்னு சொல்ல..?"

"அப்புறம் காத்து, கருப்புன்னும் ஏதோ சொன்னீங்களே.."

"காத்து, கருப்பு சமாச்சாரம் தான்.."

"காத்து, கருப்புன்னா?"

"விடு தாயி.. நான் விளங்கிக்கிட்டதை உனக்கு விளங்க வைக்க எனக்கு சக்தி கிடையாது. சில விஷயங்களை அனுபவிச்சு மட்டுமே புரிஞ்சுக்க முடியும். பிரசவ வலி, மரண பயம், ஒரு தப்பும் பண்ணாத மனசுல எப்பவும் ஒரு சந்தோஷம் இருக்குமே அந்த சந்தோஷம்... இதெல்லாம் வார்த்தைக்கு வெளிய இருக்கற, அனுபவிச்சு மட்டுமே அறிய வேண்டிய விஷயங்க..."

"நீங்க தப்பிச்சுக்கப் பாக்கறீங்க... இந்தக் காத்துக் கருப்புங்கற சமாச்சாரமெல்லாம் ஒரு வித ஃபோபியா. என்ன சொல்றது..? ஆங்.. மூடமான எண்ணங்கள்..."

"போதும் தாயி... அப்புறம் பகுத்தறிவு, விஞ்ஞானம், அது இதுன்னு நீ போவே. ஒரு பழமொழி உண்டு. 'அறைக்குள்ள பாம்பைப் பாத்துட்டவன் பதட்டமில்லாம இருக்க மாட்டான்.. பாக்காதவன் பதட்டமில்லாமதான் இருப்பான்'னு சொல்வாங்க. நான் பாத்தவன்; நீ பாக்காதவ. நான் இப்படித்தான் பேசுவேன்... நீ அப்படித்தான் பேசுவே -விடு..."

"பூசாரி, எனக்கு தமிழழகனைப் பார்க்க பாவமா இருக்கு... இவனுக்கு எதனால இப்படி ஆனதுன்னு தெரிஞ்சாதான் இவனை நாம மீட்க முடியும்".

"இதுக்கு என்னால பதில் சொல்ல முடியாது... அந்தப் பைராகியை போய்ப் பார். ஏன்னா இவன் இப்படி ஆன சமாச்சாரமெல்லாம் அவரோட சமாச்சாரங்கள்.."

- என்றவர் குளத்தில் இறங்கி தண்ணீரை, தான் சுமந்து வந்திருந்த குடத்தில் மொண்டுகொண்டு மேலேறி, சந்நிதி நோக்கிச் செல்லத் தொடங்கினார். ஷ்யாமளா அவரிடம் அதற்கு மேல் என்ன பேசுவது என்று பிடிபடாத ஒரு குழப்பத்தோடு நின்றபடி இருந்தாள்.

'கிணிங் கிணிங்' சப்தம் கேட்டது. அன்புமணி வந்துகொண்டிருந்தான். சைக்கிளோடு ஷ்யாமளாவுக்கு வெகு அருகில் வந்து நின்றான். அவளிடமும் அவன் வந்துவிட்டதில் ஒரு மலர்ச்சி. ஆனால் அவன் முகத்தில் வருத்தச் சுவடு. சைக்கிளை சரித்து காலிப்பட்டை போடப்பட்ட கோயில் மதில் சுவர் மேல் சாய்த்து நிறுத்திவிட்டு நடந்து வந்தான். வந்த நிலையில் திரும்பி, குளத்தங்கரையையும் பார்த்தான். தமிழழகன் ஒரு உயிருள்ள சிலை போலத் தெரியவும் அவளிடம் ஒரு பெருமூச்சு.

"என்ன அன்பு... ரொம்பவே நீ ஃபீல் பண்றேங்கறது நல்லாத் தெரியுது. கோமதியை வீட்ல விட்டுட்டேதானே?"

"உம்.."

"வாயத் திறந்து பேசப்பா... ஆக்சுவலா நான் இப்ப உன்னை சந்தோஷத்துல அப்படியே மிதக்க விடணும்கற எண்ணத்துலதான் உன்னைப் பாக்க வந்தேன். ஆனா இங்க கோமதியால எல்லாம் கெட்டுப் போச்சு..."

"சரி ஷியாமளா... நீ வந்த விஷயத்தைச் சொல், எனக்கு நிறையவே வேலை இருக்கு..."

"அப்படி என்ன வேலை அன்பு?"

"உன்கிட்ட சொல்றதுக்கென்ன... கோமதியைப் பெண் பார்க்க ஒரு பார்ட்டி தயாரா இருக்கு. நான்கூட நாளைக்கு வரச்சொல்லலாம்னு இருந்தேன். ஆனா இன்னிக்கு கோமதியை இங்க இந்தத் தறுதலையோட பார்க்கவும், எனக்கு மனசே சரியில்லாமப் போயிடிச்சு ஷியாமளா..."

"ஓ... கோமதிய பெண் பார்க்க வர்றாங்களா? நல்ல விஷயம்தான். நீ இங்க பார்த்ததை வெச்சுக் குழப்பிக்காதே... அந்த ஏற்பாட்டை நல்ல படி செய். கல்யாணத்தையும் வேகமாக முடிக்கற வழியைப் பார்..."

"என்ன ஷியாமளா நீ... இது என்ன உங்க வீடா, காசு பணம் பத்தி யோசிக்கவே வேண்டாம், அது ஒரு விஷயமே கிடையாதுங்கறதுக்கு..? ஏழை விவசாய வீடு ஷியாமளா..."

"அப்படிங்களா..? எனக்கு இது தெரியாது பாருங்க..."

"தெரிஞ்சு நீ எந்தத் தைரியத்துல பேசறே..?"

"நீ வாசிச்ச ஸ்க்ரிப்ட் பிட்டுக்கு பத்து லட்ச ரூபா பரிசு கிடைக்கப் போகுதே.. அந்தத் தைரியத்துல!"

"என்னது, எனக்குப் பத்து லட்ச ரூபா கிடைக்கப் போகுதா?"

"பத்து லட்சம் மட்டுமல்ல... நீ முறையா ஸ்க்ரிப்ட் கத்துக்கப் போறே... இசையில் பெரிய

"கருவேலங்காட்டுக்குள்ள ஒரு பொணம் கிடக்கு.. நாய், நரி இழுத்துப்போடவும் ஒரே காக்கா, கழுகுக் கூட்டம்! யாரோ கொன்னுட்டுப் புதைச்சிருக்காங்க.."



| | | | |
|---|---|---|---|
| 1 | Place of Publication | : | CHENNAI |
| 2 | Periodicity of Publication | : | WEEKLY |
| 3 | Printer's Name | : | R.K. JHUNJHUNWALA |
| | Nationality | | Indian |
| | Address | | Express Gardens, 29, II Main Road, Ambattur Industrial Estate, Chennai 600 058. |
| 4 | Publisher's Name | : | R.K. JHUNJHUNWALA |
| | Nationality | | Indian |
| | Address | | Express Gardens, 29, II Main Road, Ambattur Industrial Estate, Chennai 600 058. |
| 5 | Editor's Name | : | R. SIVAKUMAR |
| | Nationality | | Indian |
| | Address | | Express Gardens, 29, II Main Road, Ambattur Industrial Estate, Chennai 600 058. |
| 6 | Names & Addresses of individuals who own the newspaper | : | EXPRESS PUBLICATIONS (MADURAI) LIMITED Express Gardens, 29, II Main Road, Ambattur Industrial Estate, Chennai 600 058. |
| | AND | | |
| | Shareholders holding more than one percent of the total capital | : | SIDDHARTH MEDIA HOLDINGS PRIVATE LIMITED Express Gardens, 29, II Main Road, Ambattur Industrial Estate, Chennai 600 058. |

I, R.K. JHUNJHUNWALA hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

R.K. JHUNJHUNWALA
PUBLISHER

Date: 1.3.2009

பெரிய புலிகளோட குழுவுலெல்லாம் வாசிக்கப் போறே..."

"சியாமளா... நீ என்னைக் கனவு காண வைக்காதே. நான் இப்படியே இருந்துட்டுறேன்..."

"கனவு காண்றது ஒண்ணும் தப்பு இல்லை, அன்புமணி. நம்ம முன்னாள் ஜனாதிபதி சொன்னதை ஞாபகப்படுத்திப் பார்..."

"போதும் சியாமளா... ஆமாம் உன்கூட வந்தாரே மிஸ்டர் ராகவ், அவர் இப்ப எங்க?"

"ராகவ் சென்னையிலதான் இருக்கான். நான் கிளம்பும்போது திரும்ப என்கூட வரப் பார்த்தான். நான்தான் 'நீ வராதே'ன்னு அவனைத் தடுத்துட்டேன். அவன் தேவையில்லாம உன்னைப் பார்த்து பொறாமைப்படறான்..."

"என்னைப் பார்த்து பொறாமைப்படக்கூட ஒருத்தர் இருக்காரா..? ஆச்சரியமா இருக்கு சியாமளா... கூடவே அதிர்ச்சியாவும் இருக்கு. இந்தக் கிராமத்தான்கிட்ட பொறாமைப் படறதுக்கு என்ன இருக்கு?"

"என்ன இல்லை உன்கிட்ட...? என்ன ஒரு விஷயம்னா அடக்கம், அமைதி, நல்ல இசை ஞானம்னு எல்லாம் இருக்குறமாதிரியே தாழ்வு மனப்பான்மையும் இருக்கு. அதை எப்படிப் போக்கறதுன்னுதான் எனக்குத் தெரியல..."

- இருவரும் சகஜமாய் கொஞ்சம் போல நட்பும் பாசமுமாய் பேசிக் கொண்ட அந்த நொடியில் ஒருவன், பூசாரியைப் பார்க்க மூச்சிரைப்பட்டபடி வந்து நின்றான்.

"பூசாரி... பூசாரி..."

"என்னப்பா?"

"கருவேலங்காட்டுக்குள்ள ஒரு பொணம் கிடக்கு... நாய், நரி இழுத்துப்போடவும் ஓரே காக்கா, கழுகுக் கூட்டம்! யாரோ கொன்னுட்டுப் புதைச்சிருக்காங்க. உடம்போட அங்க அடையாளங்களை வெச்சுப் பாத்தா, அந்தக் கிறுக்குப்பய யக்ஞன் மாதிரியே இருக்கு..."

- பூசாரிக்கு திப்பென்று மார்பில் உதைபட்ட மாதிரி இருந்தது. அன்புமணியும் அரண்டு போனான். யக்ஞன், அன்புமணியின் அன்புக்கு மிகவும் பாத்திரமான ஒருவன்.

பூசாரி திரௌபதி சந்நிதி முன் சென்று, கை கூப்பி நிற்கத் தொடங்கினார். திறந்த மார்பிலும், தோளின் மேலும் ஒரு விதத் துடிப்பு.

அன்புமணி ஷ்யாமளாவிடம், "சியாமளா! நீ வீட்டுக்குப் போ... நான் போய் பாக்கறேன்..."

என்று வெட்டிக் கொண்டு புறப்படத் தயாரானான்.

"இரு! நானும் வரேன்... ஆமா யார் அது யக்ஞன்?"

"உனக்குத் தெரியாது சியாமளா... பாவம் யக்ஞன், அவனுக்கும் சித்தப் பிரமை. அவனை ஒருத்தன் கொன்னுருக்கான்னா, அவனெல்லாம் மிருகத்தைவிட மோசம்னுதான் சொல்வேன்..."

- அன்புமணி சைக்கிள் அருகில் சென்று, அதை நிமிர்த்தி ஏறத் தயாரானான். ஷ்யாமளாவும் ஏறிக் கொள்ள முனைந்தபோது கோமளா மாமி, 'ஷ்யாமளா...' என்று கத்திக் கொண்டு வந்தபடி இருந்தாள்.

மாமியிடம் ஒரு அதிர்வுப் பதற்றம்!

(தொடரும்)

**22**

# கிருஷ்ணா தந்திரம்!

22

"மன்னரின் முகக் குறிப்புகள் நாயக்க மன்னருக்குப் புரிந்ததோ, புரியவில்லையோ.. கோசலேவுக்குப் புரிந்தது! 'குருவே.. அரசனின் கௌரவத்தை ஏற்பதில் தங்களுக்கு என்ன சிக்கல்?' என்று கேட்டுவிட்டார். மன்னாருக்கு அதற்கெல்லாம் பெரிதாகப் பதில் சொல்லத் தெரிய வில்லை. மிரள மிரளப் பார்த்தான். அமர்ந்திருந்த இடத் தில் இருந்து கண்ணன் சந்நிதியைப் பார்த்தான். பின், 'வேண்டாங்க.. நான் இங்கேயே என் சாமிகூட இருந்து டறேன்.. என்னை விட்டுங்க..' என்றான் திக்கித் திணறி. நாயக்க மன்னர் முகத்தில் உடனேயே ஏமாற்றத்தின் எதிரொலி. ஆனாலும் கோசலேவுக்கு மன்னாரின் உள் ளுணர்வு பளிச்சென்று புரிந்துவிட்டது.

'நல்லது குருவே.. நீங்கள் இங்கேயே உங்கள் சுவாமி அருகேயே இருக்கலாம். அப்படி நீங்கள் இங்கே இருப்ப தற்கு நாங்கள் உதவலாம் அல்லவா?' -என்று கேட்டு அப் போதே நூறு காணி நிலம், நூறு காராம் பசுக் கூட்டம், நூறு தென்னை மரங்கள், நூறு அடி சதுரத்தில் மன் னார் தங்கிக் கொள்ள ஒரு மனை, இதுபோக ஏவ லுக்கு ஏழு பேர், காவலுக்கு ஏழு பேர் என்று ஒரு கணக்குப் போட்டு, அவற்றை மன்னார் ஏற்கவேண்டும் என்றிடவும், மன்னார் திரும்பவும் சந்நிதியை பார்த்தான்.

'என்ன குருவே.. சந்நிதி யைப் பார்க்கிறீர்கள்? கட வுளின் உத்தரவு வேண் டுமோ?' - என்று கச்சித மாகக் கேட்டார் கோசலே. மன்னார் ஆமோதிக்க, பூ முடி போட்டு கண்ணனிடம் உத்தரவும் கேட்கப்பட்டது. உரிய பூவை எடுத்துத் தர ஒரு குட்டிக் குழந்தை கூட்டத்துக்குள் புகுந்து வந்ததுதான் ஆச் சரியம்!"

கோமளா மாமியின் பதற்றமான தோற்றமும், தென் பட்ட வேகமும் ஷ்யாமளாவை ஒரு உலுக்கு உலுக்கி தடுத்து நிறுத்தியது. மாமியும் அருகில் வந்தாள். மூச்சி ரைத்தாள்.

"என்ன மாமி..?"





இந்திரா சௌந்தர்ராஜன்

"ஷ்யாமளா... அப்பாக்கு திமர்னு நெஞ்சுவலி -ஹார்ட் அட்டாக் மாதிரித் தெரியறது..." - அடுத்த விநாடி ஷ்யாமளாவை பரபரப்பு தொற்றிக்கொண்டது. கருவேலங்காட்டுக்குள் கிடக்கும் பக்ருனின் சடலம் பின்னால் சென்றிட இருந்த அவள் கவனம், அப்பா பக்கம் திரும்பத் தொடங்கியது.

அன்புமணி ஷ்யாமளாவை சைக்கிளில் ஏறிக் கொள்ளச் சொன்னான். அவளும் தாமதிக்கவில்லை. இருவரோடும் சைக்கிள் வேகமெடுக்க ஆரம்பித்தது!

கருவேலங்காட்டுக்குள் திட்டுத் திட்டாய்க் கூட்டம்! பக்ருன் உடம்பு, நாய்கள் இழுத்துப் போட்டதில் ஒரு செம்மண் மூட்டை வானில் இருந்து கீழே விழுந்து சிதறிக் கிடப்பதுபோல கிடந்தது. உடம்பின் சில பாகங்கள் புதைந்த நிலையில்தான் இருந்தன. தகவல் தெரிந்து ஒரே ஒரு போலீஸ்காரர் வந்திருந்தார். அதுவும் தனது ஹைஹர் காலத்து சைக்கிளில்... கிட்டே சென்று குனிந்து பார்த்துவிட்டு மூச்சை பிடித்துக்கொண்டு பல அடி தூரம் சென்று கொண்டார். மேலதிகாரிகள் கூட்டமாக வந்து அடுத்தடுத்த நடவடிக்கைகள் இனிமேல் தான் தொடங்கப்பட வேண்டும்!

வீட்டுக்குள் நுழைந்த வேகத்தில் கட்டில் நோக்கித்தான் ஓடினாள் ஷ்யாமளா. செல்லப்பா அரைக் கண்கள் திறந்த நிலையில் நெஞ்சைப் பிடித்தபடி இருந்தார்.

"அப்பா..."

"வந்துட்டியா ஷ்யாமா..."

"என்னப்பா இது... நிஜமாதான் நெஞ்சு வலியா? இல்லை..." - அவள் மேற்கொண்டு எப்படிக் கேட்பது என்று தெரியாமல் அவரை வெறித்தாள்.

"சத்யமா நெஞ்சுவலிம்மா... என் மனசு கெடந்து துடிக்கறது உனக்குத் தெரியாது. தயவு செய்து ஆத்தைவிட்டு வெளியே போகாதம்மா..."

-அவரால் அதற்குமேல் பேச முடியவில்லை. நெஞ்சில் வலி எகிறி, முகம் கோணிக் கொண்டது. ஷ்யாமளாவுக்கு அந்த நொடியில் அவரது விபரீதம் அர்த்தமாகிவிட்டது.

"அப்பா! உடனே கிளம்புங்கோ.... நாம இப்பவே புதுக்கோட்டை போய் டாக்டரைப் பார்க்கறோம்..."

"கட்டாயமா... சித்த சீக்கிரம் காரை எடு..."

-ஷ்யாமளா அடுத்து ஓடத் தொடங்கினாள். மாமி அப்போதுதான் ஓடி வந்த நிலையில் வீட்டுக்குள் நுழைந்திருந்தாள். சென்னையில் இருந்து சில சபாக்காரர்கள்வேறு சந்தன மாலை, சால்வை என்று தோரணையாக வந்திருந்தார்கள். எல்லோருக்குமே செல்லப்பாவின் நெஞ்சுவலி, ஒரு அதிர்ச்சியான விஷயமாகத்தான் இருந்தது.

ஷ்யாமளா காரைப் படுவேகமாக எடுத்து வந்து நிறுத்த, அன்புமணி அவரைத் தொட்டுத் தூக்க முன் வந்திருந்தான். 'தொடாதே...' என்று அவனைத் தவிர்த்துவிட்டு அவராகவே நடந்து வரப் பார்க்க, கோமளா மாமி போய் தாங்கிப் பிடிக்க, அவனை அவர் தவிர்க்கவில்லை.

அன்புமணிக்கு அந்த



n

நிலையிலும் அவரிடம் வெளிப்பட்ட துவேஷம் நெஞ்சைக் கசக்கிற்று. இனி நாம் அங்கே நிற்பது தவறு என்கிற மாதிரி, மெல்ல நழுவத் தொடங்கினான்.

ஷ்யாமளாவும் அந்த டென்ஷனில் அவனைக் கவனிக்கவில்லை. வந்திருந்த சபாக்காரர்களிடம் 'ஸாரி' சொல்லியபடியே காரைக் கிளப்பினாள். அதுவும் புதுக்கோட்டை நோக்கிச் சீற ஆரம்பித்தது.

கண்ணமங்கலத் தெருக்களில் அதன் ஓட்டம்... அதன் வேகம், பலரை ஆச்சரியப்படுத்திற்று. மண் சாலைகளைக் கடந்து மெயினில் தார்ச்சாலையை தொட்டு மேலும் வேகமானது. அப்படியே யாதவகிரிக்குன்று பக்கமாய் போய் வளையவும், 'அம்மாடி ஒரு நிமிஷம் நிறுத்து...' என்றார் செல்லப்பா.

"எதுக்குப்பா...?"

"நிறுத்தும்மா... நான் பெருமானைச் சேவிச்சுக்கறேன்..."

"ஐயோ அப்பா... அப்படியே கார்ல இருந்துண்டே சேவிச்சுக்குங்கோ... நாம இங்க தாமதிக்கற ஒவ்வொரு நிமிஷமும் ஆபத்து..." - ஷ்யாமளா காரை நிறுத்தவில்லை. ஆனால் செல்லப்பா அலறினார். "ஷ்யாமளா நிறுத்தும்மா... அஞ்சு நிமிஷத்துல எதுவும் ஆயிடப் போறதில்ல..."

"இல்லப்பா... இப்ப நீங்க ஒரு பேஷண்ட்! உங்க பேச்சை நான் கேட்டா அது ஆபத்து... பெருமாளை மனசுக்குள்ளேயே சேவிச்சுக்குங்கோ..." ஷ்யாமளா அவர் பேச்சைக் கேட்கவேயில்லை. கார் புதுக்கோட்டை நோக்கி, நூறு கிலோமீட்டர் வேகத்துக்கு தன்னை மாற்றிக்கொண்டு விட்டது.

**ய**க்ஞனின் உடம்பு ஸ்ட்ரெச்சரில் வைத்து தூக்கப்பட்டது. ஒரு போலீஸ் கூட்டமே வந்திருந்தது. போலீஸ் இப்பொழுதெல்லாம் ரொம்பவே அட்வான்ஸ் ஆக இருக்கிறது என்பதை, அவர்கள் மோப்ப நாயுடன் வந்திருப்பதில் புரிந்துகொள்ள முடிந்தது. அந்த நாயை உரிய முறையில் தூண்டிவிட்டபடி இருந்தார் ட்ரெய்னர். அதுவும் இளைக்க இளைக்க ஓடத் தொடங்கியது... நேராக மன்னாரின் ஜீவ சமாதி வரை போய், எதற்கோ கட்டுப்பட்டதுபோல வெளியே நின்று கொண்டு குலைத்தது. பின் அங்கிருந்து திரும்பி ஓடத் தொடங்கியது. திபுதிபுவென்று சில போலீஸ்காரர்களும் பின்னால் ஓட, ஒரு போலீஸ்காரர் அதை ஹேண்டிகேம் வீடியோவில் படம் பிடித்துக் கொண்டே ஓடினார்.

கண்ணமங்கலக்காரர்களுக்கு தங்கள் ஊரே வேறு வடிவம் எடுத்து மாறிக் கொண்டிருப்பது போல ஒரு பிரமை. நாய் அங்கும் இங்கும் என்று ஓடினாலும் கச்சிதமாய் குளத்துக்கரைப் பக்கம் வந்து, மிகச் சரியாக தமிழ்முகன் முன் வந்து அவனையும் பாய்ந்து பிடித்தது. ஆனால் அவனிடம் தான் பதிலுக்கு எந்த எதிர்ப்பும் இல்லை. வானம் பார்த்த அவனது வெறிப்பு மாறவேயில்லை. பூசாரி வேறு ஓடிவந்தவராக, பதைக்கத் தொடங்கினார். போலீஸ்காரர்களிடம் கேள்விகள்.

"ஏய் பூசாரி! யாருய்யா இவன்?"

"என்னங்க நீங்க, தம்பி வட்டச் செயலாளருங்க. பேர் தமிழ்முகன். போன பஞ்சாயத்து போர்டு எலெக்ஷன்லகூட நின்னாருங்களே..."

"இவனுக்கு என்னாச்சு...? ஏன் இப்படி நிக்கறான்?"

"என்னன்னே தெரியலீங்க ஐயா... ரெண்டு நாளாவே இப்படித்தான் இருக்கான். காத்து கருப்பு அடிச்சிடிச்சோ என்னவோ?"

"காத்தாவது, கருப்பாவது... கொலையைப் பண்ணிட்டு சித்தப்பிரமை பிடிச்சவனாட்டம் நடிக்கிறான்யா. யோவ் கான்ஸ்டபிள்! இவனைப் பிடிச்சு ஜீப்ல ஏத்துய்யா... ஸ்டேஷனுக்குப் போய் வெளுக்கற வெளுவல, பிரமை பிச்சுகிட்டு ஓடப் போவுது பாரு..." என்றார். கான்ஸ்டபிளும் அவனை கையைப் பிடித்துக் கொண்டு இழுத்துப் போக முயல, தமிழ்முகனின் அப்பா மருதாசலம் செய்தியறிந்து எதிரில் ஓடி வந்தபடி இருந்தார்.

"ஐயா... ஐயா... என்னங்கயா இது... என் மகனை எங்க ஐயா கூட்டிக்கிட்டுப் போறீங்க?"

"உம், ஸ்டேஷனுக்கு கூட்டிக்கிட்டுப் போய் விருந்து கொடுக்கறதுக்குதான்... வேற எதுக்கு? ஆமா நீதான் இவன் அப்பனா?"

"ஆமாங்க... நல்லா இருந்த பையன், ரெண்டு நாளா பிரமை பிடிச்ச மாதிரி இருக்காங்க. என்னன்னே தெரியல... இப்ப போய் நீங்க வேற பிடிச்சுக்கிட்டுப் போனா என்னங்க அர்த்தம்?"

"கொலை பண்ணா, பிடிக்காம என்ன பண்ண?"

"என்னது கொலையா?" -மருதாசலம் பிளந்த வாயை மூடவில்லை. தமிழ்முகன் ஜீப்பில் ஏற்றப்பட்டு ஜீப்பும் திரும்பி நிறுத்தப்பட்டது.



"யோவ்! நீயும் ஏறுயா... உன்னையும் விசாரிக்கணும்" - என்று அவரையும் வம்படியாக ஏற்றிக்கொண்டனர். ஜீப்பும் புழுதியை புரட்டிப் போட்டபடி ஓடத் தொடங்கியது. பூசாரிக்கு மனது கிடந்து அடித்துக் கொண்டது. மௌனமாக திரும்பி, சந்நிதி முன் போய் நின்றார். எதிரே சந்நிதிக்குள் தெரியும் பூஜிக்கப்பட்ட அந்த மூங்கில் பெட்டியைப் பார்த்தார். மூச்சுக்காற்றில் அளவுக்கதிகமான உஷ்ணம்! மனதுக்குள்ளோ நடக்கும் தவறுகளின் காரணமான புழுக்கம்!

**ஆ**ஸ்பத்திரி!

ஐசியூ.வுக்குள் செல்லப்பா...

சினிமா டாக்டர் மாதிரியே அங்குள்ள டாக்டரும், 'அஞ்சு நிமிஷம் தாமதிச்சிருந்தாலும் உங்கப்பாவை நாங்க காப்பாத்தியிருக்க முடியாது. மாஸிவ் அட்டாக்!" என்றார். ஷ்யாமளாவுக்கும் போன உயிர் திரும்பிவிட்ட ஒரு திருப்தி. அப்படியே எந்த அளவு அவர் கவலை கொண்டிருந்தால் இப்படி ஒரு நெஞ்சுவலி வந்திருக்கும் என்றும் மனதில் கேள்வி.

அந்தச் சிந்தனையோடு ஆஸ்பத்திரி காரிடாரில் நடந்த அவளது செல்போனில், 'சிங்காரவேலனே...' பாடலின் ரிங்டோன்! காதைக் கொடுத்தாள். மறுபக்கத்தில் தேவராஜ் மாஸ்டரின் குரல்!

"ஷ்யாமளா! நான் மாஸ்டர் பேசறேன்..."

"மாஸ்டர் நீங்களா?"

"நானேதான்... என்னம்மா அப்பாக்கு...? இப்ப எப்படி இருக்கார்?"

> **"என்னப்பா இது... நிஜமாதான் நெஞ்சு வலியா? இல்லை..." - அவள் மேற்கொண்டு எப்படிக் கேட்பது என்று தெரியாமல் அவரை வெறித்தாள்.**

"ஐ.சி.யூ.வில்தான் மாஸ்டர் இருக்கார். ஆபத்தில்ல, தப்பிச்சுட்டார்னு இப்பதான் டாக்டரும் சொன்னாரு..."

"ஓ... சந்தோஷம். டேக் கேர்... ஆமா நீ எந்த ஆஸ்பத்திரில இருக்கே? அட்ரஸ் கொடு... நானும், ராகவும் வரோம்."

"ராகவ்?"

"ஆமாம்மா... நாங்க ரெண்டு பேரும் கண்ணமங்கலத்துல உங்க வீட்லதான் இருக்கோம். உங்க கோமளா மாமி கையால காஃபி குடிச்சுக்கிட்டே, உங்கப்பாக்கு உடம்பு சரியில்லன்னு கேள்விப்பட்டு உடனே உன்கூட பேசிக்கிட்டிருக்கேன்..."

"ஓ... அப்படியா! நான் இப்ப என்.எஸ்.ஹாஸ்பிடல்ல இருக்கேன். பஸ் ஸ்டாண்டுக்குப் பக்கத்துல..."

"அதுபோதும்.. நாங்க ஒரு ஒரு மணி நேரத்துல அங்க இருப்போம்..."

"தேங்க்யூ மாஸ்டர்..."

"பை த பை, நீ அவசரமாக கிளம்பிட்டியாம்... செக் புக்கைக் கொடுத்து விட்டுமான்னு இங்க மாமி கேட்கறாங்க..."

"ஆமாம் மாஸ்டர்.. கொடுத்தா வாங்கிட்டு வாங்க..."

-ஷ்யாமளா செல்லை அணைத்து கைக்குள் அடக்கிக் கொண்டாள். மனதுக்கு ஒரு புது தெம்பு வந்தது போலவும் இருந்தது.

கண்ணமங்கலம்... ஷ்யாமளா வீடு

மாஸ்டரும், ராகவும் மாமியிடம் சொல்லிக் கொண்டு புறப்படத் தயாராயினர்.

"நீங்க போறதுல எனக்கு ரொம்பவே சந்தோஷம்... அங்க பாவம் அவ தனியா சிரமப்பட்டுண்டு இருப்பாளேன்னு நினைச்சுண்டே இருந்தேன்..." என்றபடியே அவர்களுக்கு விடை கொடுத்தாள்.

இருவரும் ராகவின் ஸ்கார்ப்பியோ காரில் புதுக்கோட்டை நோக்கி புறப்படத் தொடங்கினர்.

ஸ்கார்ப்பியோ யாதவகிரிக் குன்று அருகே வளைந்திடும் போது எதிரில் பைராகி!

அவரைப் பார்த்த மாத்திரம் காரை நிறுத்திய ராகவ், "மாஸ்டர் இவர்தான் பைராகி.. ரொம்பப் புதிரான ஒரு கேரக்டர்னு சொன்னேனே..?" என்றான் ராகவும்.

மாஸ்டருக்கோ அவரைப் பார்த்த நொடி ஒரு பலமான அதிர்ச்சி. உதடிரண்டும், "மைகாட்... இவரா? இவர் பைராகி இல்ல, ராகவ். இவர்தான் வாரணாசி வித்வான் பல்ராம் பாண்டே..."

"வாரணாசி வித்வானா...?"

"ஆமாம் ராகவ்.. கிராமி அவார்டுக்கு இவர் பேக்கேஜ் எத்தனை தடவை போய் பிரமிக்க வெச்சிருக்குத் தெரியுமா?"

- காருக்குள் அவர் வியப்பை வார்த்தைப்படுத்த, பைராகியும் காரின் கண்ணாடி ஜன்னல் அருகே வந்து உற்றுப் பார்த்தார். கண்ணாடி கீழிறங்கிட, மாஸ்டர் மிக பவ்யமாகக் கை எடுத்துக் கும்பிட்டார்.

"நமஸ்தே வித்வான்ஜி!"

"பரவாயில்லையே...! என்னை உனக்குத் தெரிஞ்சிருக்கே..?"

"ஆமாம் ஜி... உங்கள நான் இப்படிப் பார்ப்பேன்னு நினைக்கல... கல்கட்டா ஃபெஸ்டிவல், டெல்லி சத்சங்கம், மதுரா ஃப்ரூட் கார்னிவல்னு நான் பல இடங்கள்ள உங்க இசை மழைல நனைஞ்சிருக்கேன்..."

"ஆனாலும் என்னடா பிரயோஜனம்...? பட்டமும், பதவியும் ஞானசூன்யங்களுக்குதானே கொடுக்கப்பட்டுகிட்டிருக்கு..!"

"ஆமாம் ஜி.... எனக்கும் அந்த வருத்தம் இருக்கு...."

"பரவால்லியே... நீ வித்யாசமான இசைப்பிரியனா இருக்கியே...? அது சரி, எங்க வந்தே?"

"ஷ்யாமளா என் ஸ்டூடண்ட் ஜீ... அவளைப் பாக்க வந்தேன். அப்படியே இந்த கண்ணமங்கலம் வரணும்கறதும் என் ரொம்பநாள் ஆசை..."

"எனக்குப் போட்டியா வரலையே?"

- பைராகி அப்படிக் கேட்பார் என்று மாஸ்டர் துளிகூட எதிர்பார்க்கவில்லை.

"உங்களுக்கு நான் போட்டியா..? நான் சோட்டா ஜீ. ரொம்ப, ரொம்ப சோட்டா..."

இப்ப எங்க போறே...?"

"புதுக்கோட்டைக்கு.... ஷ்யாமளா அப்பா செல்லப்பாவுக்கு திடீர்னு ஹார்ட் அட்டாக்..."

"அப்படியா..? அப்ப அவனுக்கு வேளை வந்தாச்சா?"

- பைராகியின் கேள்வியில் ஒரு விபரீத உள்ளர்த்தம்!

(தொடரும்)

23

# கிருஷ்ண தந்திரம்!

23

"பூ முடியை எடுக்க வந்த அந்தக் குழந்தை, பார்க்க அவ்வளவு அழகாக இருந்தது. மனித வாழ்க்கையில் ஒரே ஒரு முறை மட்டுமே நடக்கும் சம்பவங்கள் என்று சில உண்டு. திருமணம், மரணம் என்று அது மனிதர்க்கு மனிதர் சற்று வேறுபடவும் கூடும். இந்தக் குழந்தையை அங்குள்ளோர் பார்த்தது என்பதும்கூட அந்த ரகத்தில்தான் இருந்தது. அவ்வளவு அழகு..! அவ்வளவு தேஜஸ்..! அது பூ முடியை எடுத்து வந்து, நேராக மன்னர் கையில் தந்தது. பிரித்துப் பார்த்த மன்னர் முகத்தில் ஏமாற்றம். 'மன்னர் தரும் எதையும் ஏற்கத் தேவையில்லை' என்றது உத்தரவு. மன்னர் முகத்தில் பரவிய ஏமாற்ற உணர்ச்சிகளை வைத்தே மற்ற அனைவரும்கூட அதைப் புரிந்துகொண்டனர்.

அந்தக் குழந்தை மன்னாரிடம் சென்று, "நீ என்கூட மட்டும்தான் விளையாடணும். நான் சொல்றத மட்டும்தான் கேட்கணும்... கேட்பியா?"- என்று எல்லோர் காதுகளிலும் படும்படியாகக் கேட்டது.

மன்னார், மகுடிக்கு கட்டுப்பட்ட நாகம் போலத் தலையசைத்தான். அந்தக் குழந்தையே திரும்பி எல்லோரையும் பார்த்து, 'நீங்க எல்லாம் போங்க... நான் இவன் கூட விளையாடணும்' என்றது.



**கோகலேக்கு மட்டும் அந்தக் குழந்தை பேசுவதன் சூட்சுமப் பொருள் அப்பட்டமாக விளங்கியது. அருகில் உள்ள நாயக்க மன்னரின் காதுகளில், "மன்னா... வந்திருப்பது குழந்தை வடிவில் கண்ணன்!" என்ற நொடி மன்னரிடம் சிலிர்ப்பு!"**



வைராகியின் கேள்வியும், அதனுள் ஒளிந்திருந்த திகைப்பூட்டும் பொருளும் தேவராஜுமாஸ்டருக்கு பனிச்சென்று புரிந்தது. அதன் எதிரொலியாக பரவிய அதிர்ச்சியோடு அவரை வெறித்தார்.

"என்னப்பா பாக்கறே..? அந்தச் செல்லப்பா ஒரு துரதிர்ஷ்டம் பிடிச்சவன். கைல வெண்ணெயை வெச்சுண்டு நெய்க்கு அலையற ஜாதி. அப்படி அலைய றும்கறதுதான் அவன் விதியுங்கூட! சரி, சரி... போங்கோ... போய்ப் பாருங்கோ... ஏன்னா, கழியப் போற ஒவ்வொரு நொடிப் பொழுதும் ரொம்ப முக்கியம்..." - என்று தன் முந்தைய கருத்துக்கும் கருதியும் கூட்டினார். மாஸ்டரும் காருக்குள் ஏறி உட்கார முனைந்திட, ராகவ் மட்டும் அவரையே பார்த்தபடி நின்றிருந்தான்.



"என்ன பாக்கறே... நீ போகலையா?"

"இல்ல... உங்களண்ட சில முக்கியமான விஷயங்கள் பேசணும்"

"இது முக்கியமான விஷயம் பேசற நாழியா உனக்கு?"

"சரி... நான் மிஸ்டர் செல்லப்பாவை ஆஸ்பத்திரியில பாத்துட்டு வந்து பேசலாம்தானே?"

- ராகவ் கேட்ட விதமும், அந்தத் தொனியும், 'நீங்கள் எதைச் சொன்னாலும் நான் செய்வேன்' என்கிற அடிமைத்தனம் தெரியும் ஒரு விதப் பாவனையாகத்தான் வைராகிக்கும் தோன்றியது. அவருக்கும் தமிழழகன்போல ஒரு துணை வேண்டும். தேடலில் இருப்பவர் முன், 'இந்தா என் குடுமி- பிடித்துக் கொள்' என்பதுபோல ஒருவன் வந்து நின்றால் சும்மா விடுவாரா என்ன?

சிரித்தபடியே, "அவசியம் நீ என்னை வந்து பார்... அதுக்கு முன்னால எங்கே உன் வலது கையை நீட்டு..." என்றார். அவனும் வேகமாக நீட்டினான். உள்ளங்கை ரேகைகளைக் கண்களை இடுக்கிக் கொண்டு பார்த்தார். அவர் எதிர்பார்த்த குரு ரேகை, சுக்கிர மேட்டு மேல் பனிச்சென்று தெரிந்தது. அவர் கண்ணிரண்டும் பிரகாசமாகிவிட்டது.

'நீ அவசியம் என்னைப் பாக்க வரே...'- என்றார் மிக அழுத்தமான குரலில்.

**“பைராகிகள் காலத்தைக் கணிக்கறதுல கில்லாடிகள். பைராகிக்கு ஷ்யாமளா அப்பாவுக்கு மரணம்கறது தெரிஞ்சிருக்கு...”**

காருக்குள் ஏறி அமர்ந்து கொண்டுவிட்ட தேவராஜ் ஹரானை அழுத்த, ராகவும், ‘சரி ஸ்வாமி... நான் போய்ட்டு வந்துட்றேன்...’ என்று காரில் ஏறிக் கொண்டு அதை இயக்கவும் தயாரானான்.

காரும் கிளம்பியது. மாஸ்டரும் ஆரம்பித்தார். “ராகவ்... கிளம்பும்போது அப்படி என்ன அவர்கிட்ட பேச்சு?”

“மாஸ்டர் இவர் ஒரு பயங்கரமான மேஜிஷியன். அன்னிக்கு அவர் காட்டின அஞ்சு தலை நாகம், அப்புறம் அவர் புல்லாங்குழல் கேட்டுப் பறந்து வந்த கருடபட்சின்னு ஒவ்வொரு விஷயமும் அப்படியே ஒரு த்ரில்லர் மாதிரி என் மனசுக்குள்ளேயே இருக்கு. அந்தக் காட்சிகளை திரும்ப ஒரு முறை பார்க்கணும்; அதை ஷூட் பண்ணிக்கணும்னு நான் ரொம்பவே ஆசைப்பட்டேன். ஆனா ஷ்யாமளாவோட அப்பா எங்களை இந்த ஊர்லயே தங்கவிடாம பண்ணி, இப்ப அவரும் போய் ஆஸ்பத்திரியில படுத்துகிட்டார்.”

“ராகவ்... இந்தப் பைராகி சாதாரணமான ஆள் கிடையாது. நம்மள மாதிரி நார்மல் கேரக்டரும் இல்ல. அதை நீ புரிஞ்சுக்கணும்...”

“அதான் தெரிஞ்ச விஷயமாச்சே மாஸ்டர்..”

“தெரிஞ்சும் எதுக்கு மேல போய் விழறே? இந்த மாதிரி பைராகி சன்யாசிகள்கிட்ட எல்லாம் நாம தூரவே நின்னுடணும்...”

“எதுக்கு மாஸ்டர் இவரைப் பார்த்து பயப்படறீங்க...? நீங்கதான் சொன்னீங்க பைராகி ஒரு வித்வான்னு... ஒரு வித்வானை இன்னொரு வித்வான் இசைத் தொடர்பா சந்திச்சுப் பேசறதுல என்ன தப்பு இருக்க முடியும்?”

“கொஞ்சமாவது அறிவை உபயோகப்படுத்தி யோசி. ஒரு நல்ல இசை மேதைக்கு எதுக்கு பைராகித் தனம்னு கேட்டுக்க... அதுக்குள்ல இருக்கு விடை....”

“ஸாரி மாஸ்டர்... எனக்கு இந்தப் பைராகிங்கற வார்த்தைக்கே பெருசா அர்த்தம் தெரியாது... அது யார் பைராகி...? உங்களுக்குத் தெரியுமா?”

“தெரியும்.. ஆனா நான் இப்ப அதைப் பத்தி எல்லாம் பேச விரும்பல ராகவ். என் பயமே இப்ப வேற...”

“பயமா?”

“ஆமாம்.... ஷ்யாமளாவோட அப்பாவுக்கு ஆபத்து ராகவ்...”

“யூ மீன்?”

“புரியலையா... அவர் இறந்தா நாம ஆச்சரியப்படத் தேவையில்லை...”

“ஹார்ட் பேஷண்ட்டுன்ன உடனேயே இப்படி ஒரு முடிவுக்கு தானே எல்லோரும் வர்றாங்க...?”

“இல்ல ராகவ்... நான் பைராகி பேசினதை வைச்சு முடிவுக்கு வந்திருக்கேன். பைராகிகள் காலத்தைக் கணிக்கறதுல கில்லாடிகள். பைராகிக்கு ஷ்யாமளா அப்பாவுக்கு மரணம்கறது தெரிஞ்சிருக்கு... கூடவே கைல வெண்ணெயை வெச்சுகிட்டு நெய்க்கு அலையறதாநின்னு அவர் பேசினதுல, நுட்பமா ஏதோ ஓர் உண்மை இருக்கு.”



“மாஸ்டர்! பைராகியோட பேச்சு உங்களை ரொம்பவே பாதிச்சிருக்குன்னு நினைக்கிறேன்...”

“டெஃபனட்டா... வாரணாசில வாழவேண்டிய ஒரு நபர், அதுவும் அங்க ஒரு பெரிய வித்வானா தினசரி கச்சேரின்னு பரபரப்பா இருக்க வேண்டிய ஒருவர், இந்தக் கிராமத்துல ஒரு மந்திரவாதியா எல்லோரும் பாக்கற மாதிரி நடமாடறதுக்கு பின்னால நிச்சயம் ஒரு பெரிய காரணம் இருக்கு ராகவ்..”

“என்ன ஒரு காரணம் மாஸ்டர் அப்படி இருந்துட முடியும்?”

“என் யூகம் சரியா இருந்தா எங்க இசை உலகத்துல ஒரு கற்பனையாவும், சிலர் வரையில் ஒருமித்தாவும் கருதப்பட்ற அந்தக் கிருஷ்ணன் புல்லாங்குழல் நிச்சயமா இந்த ஊர்லதான் இருக்கணும். அதைத் தேடித்தான் இவரும் வந்துருக்கணும்..”

“மாஸ்டர்... நீங்க அதை எப்படிப் பாக்கறீங்க.. இஸ் இட் ட்ரூ ஆர் நாட்?”

“நானும் இங்க வந்துருக்கறது அதுக்கான விடையை தேடித்தான் ராகவ்...”

- மாஸ்டர் சொன்ன நொடி ராகவுக்கு சுரீர் என்றது. "மாஸ்டர்..." என்றான் காற்றுக்குரலில்...

"காரைப் பார்த்து ஓட்டு... வேகமாவும் போ... பைராகி சொன்ன மாதிரி தாமதிக்கற ஒவ்வொரு நொடியும் நமக்கு நல்லதில்ல..."

- மாஸ்டரிடம் ஒரு தீர்க்கம்!

படி ஏறி சூழல் மண்டபம் கடந்து பின்பக்கமாய் உள்ள புன்னை மரம் நோக்கி பைராகி செல்லும் போது நைவேத்ய சாதத்தை பலிபீடம் மேல் வைத்த படி வெறித்தார் பட்டாச்சாரி.

"என்ன ஓய்... எதுக்கு இந்த வெறிப்பு?"

"நான் என்னத்த பேச..? நான் எதைப் பேசினாலும் ஒரு பதில் தயாரா இருக்கு உம்மண்ட. பேசாம இருக்கவும் முடியல... மனசு கிடந்து தவிக்கிறது"

"தவிக்கல்லாம் வேண்டாம்... பேசிடும்!"

"பக்ருன்னு ஒரு கிறுக்கன்... பகங்கன்னுக் குட்டியும், அவனும் ஒன்னு... அவனைப் போய் யாரோ கொலை பண்ணிப் புதைச்சிருக்கா... பழி பாவம் அந்தத் தமிழழகன் மேல... குடும்பமே இப்ப போலீஸ் ஸ்டேஷன்ல..."



"அதுக்கு நான் என்ன பண்ணட்டும்?"

"இப்படி எதுவும் தெரியாத மாதிரி பேசறது உமக்கே நன்னா இல்லை..."

"அப்ப... அந்தக் கொலைல இருந்து அவன் ஜெயிலுக்குப் போனது வரைக்கும் நான்தான் காரணமாக்கும்?"

"பைராகி... நீர் ஏதோ தகிடுதத்தம் பண்றீர். அது மட்டும் தெரியறது. ஒன்னு மட்டும் நிச்சயம் ஓய்... இது கிருஷ்ண பூமி. இங்க சத்ய தர்மம்யார் தவறினாலும் அவா நன்னா இருக்க முடியாது..."

"என்ன மிரட்றீரா?"

"வெச்சுக்குமே... அப்படித்தான் ஓய்! இப்படி நான் சொல்றதுக்காக என்னையும் பிராந்தி பிடிச்ச மனுஷனா மாத்தினாலும் சரி; நான் என் குடும்பத்துல எல்லார் கிட்டேயும் சொல்லிட்டுத்தான் வந்துருக்கேன். எனக்கு எது ஆனாலும் அதுக்கு நிச்சயம் அந்தப் பைராகிதான் காரணமா இருக்கணும்னு. அடுத்து அந்த நாள்ள இந்தக் கோயில்ல வாழ்ந்த அந்த மன்னார்ங்கற மகான் தன் கைப்பட எங்க குடும்பத்துக்கு கொடுத்த ரட்சையை இதோ என் கைல கட்டிண்டு இருக்கேன். இதை மீறி நீர்தான் என்ன பண்றீர்னு பாக்கறேன்..."

- பட்டாச்சாரியிடம் கோபமும் தாபமும் பட்டுத் தெறித்தது. பைராகியின் கண்ணிரண்டும் ரத்தச் சிவப்புக்கு மாறிவிட்டது!

ஆஸ்பத்திரி...

'டாக்டர் அழைக்கிறார்' என்று வந்த அழைப்பைத் தொடர்ந்து ஷ்யாமனா அந்த ஐ.சி.யு.வுக்கு வெளியில் இருந்து நகரத் தொடங்கியபோது எதிரில் கண்ணமங்கலத்துக்காரர் ஒருவர் தென்பட்டு, "அம்மாடி... ஐயர் மவனே..." - என்றார் உரத்த குரலில். ஷ்யாமனாவும் அவரைப் பார்த்து, 'நீங்க யார்? எனக்குத் தெரியலியே...' என்றான். "எங்கம்மா நீ ஊர்ல இருந்தாதானே? படிப்பு, அது இதுன்னு பட்டணம் பக்கமே போயிட்டே. ஆனா நாங்க உன்னை மறக்க வேயில்லை. நீ நம்ம ஊருக்கே குல தெய்வமான திரௌபதி ஆச்சே..?"

- அவர் திரௌபதி என்று கூறவும் ஷ்யாமனாவுக்கு 'சுரீர்' என்றது.

"நல்லது... டாக்டர் கூப்பிட்டிருக்கார். நான் போய்ட்டு வந்துட்றேன்..."

- என்று அவரை விட்டு வேகமாக நகரப் பார்த்தான்.

"ஒரே ஒரு நிமிஷம் தாயி..."

"என்ன?"

"என் பொஞ்சாதிக்கு திடீர்னு நெஞ்சு வலி. கேட்டா மாரடைப்புங்கறாங்க. வலியால துடிதுடின்னு துடிக்கறா. நீ கொஞ்சம் வந்து அது மார்பைத் தடவிக் கொடுத்தா, அவ பொழைச்சு எழுந்திரிச்சிடுவா கண்ணு..."

"என்ன இது ஒரு ஆஸ்பத்திரிக்குள்ள வந்து இப்படி எல்லாம் முட்டாள்தனமா பேசிகிட்டு..? ஒருத்தர் குணமாகறது மருந்து மாத்திரைகளால... தடவிக் கொடுக்கறதால எல்லாம் கிடையாது"

"தாயி... எங்க நம்பிக்கைக்காக ஒரு நிமிஷம் தாயி" - அவர் கை இரண்டையும் கூப்பினார். கண்களிலும் கண்ணீர் திரண்டுவிட்டது. அந்தக் காட்சியே ஷ்யாமனாவை என்னவெல்லாமோ செய்தது.

"என்னை நீங்க ரொம்பவே தர்ம சங்கடப்படுத்த றீங்க. டாக்டர்கள் பார்த்தா சிரிப்பாங்க..."

- அவன் சொன்ன பதிலைக் கேட்டபடியே வந்த ஒரு டாக்டர், "நோ மேடம்... நீங்க போய் இவங்க விரும்பினபடி நடந்துக்குங்க. இந்த மாதிரி கேஸ்ல, மருந்தைவிட நம்பிக்கைக்கு சக்தி அதிகம்..."

-அவர் பதில் அவனை சற்று தடுமாறச் செய்தது.

"என்ன யோசனை..? காசா, பணமா? ஒரு முப்பது செகண்ட் மார்பை வருடித்தான் கொடுக்கனேன்..."

- அந்த டாக்டரே எடுத்துக் கொடுக்க கச்சிதமாய் அப்போது தேவராஜ் மாஸ்டரும் ராகவும் உள் நுழைந்தனர். நெஞ்சுவலியால் துடித்தபடி படுத்திருக்கும் அந்தப் பெண்ணை நோக்கி ஷ்யாமனாவும் நடக்கத் தொடங்கினான்.

(தொடரும்)

24

u

"பூ முடி எடுக்க வந்தது கண்ணன்தான்' என்று கோகிலே கூறியதும், அதைக் கேட்டு நாயக்க மன்னர் சிரித்ததும் ஒருபுறம் நிகழ்ந்தபடி இருக்க... அந்தக் குழந்தை, மன்னாரின் கையைப் பிடித்து இழுத்துச் சென்று சிறிது நேரம் விளையாடுவதுபோல் விளையாடியது. வந்திருந்த அவ்வளவு பேரும் அந்தக் காட்சியைப் பார்த்து வியந்திட, அது திடீரென்று, 'நான் ஒளிந்து கொள்கிறேன், என்னைக் கண்டுபிடி' என்று ஓடி மறையத் தொடங்கிவிட்டது. கிருஷ்ணனின் சந்நிதிக்குள்ளேயே அது ஒளிந்து கொள்வதுபோல ஓடி மறைய முயன்றபோது, பட்டாச்சாரிக்கு அந்தக் குழந்தையைத் தடுக்கவே தோன்றவில்லை. மன்னாரும் சிறு பிள்ளை போல, 'எங்கே அந்தக் குழந்தை?' என்று தேடி வந்து நிற்க, பட்டாச்சாரியாரும் திருச்சந்நிதிக்குள் புகுந்து பார்த்தார்.

அங்கே அந்தக் குழந்தை இல்லை! அடுத்த நொடியே அங்குள்ளோர், கிருஷ்ண தரிசனம் கிட்டிய மகிழ்ச்சியில் ஆனந்தக் கண்ணீர் விட்டனர். பலர் 'தங்கள் மேல் கிருஷ்ணன் உரசிச் சென்றான்' என்று உரசிய பாகத்தைத் தொட்டுப் பார்த்து மகிழ்ந்தனர்.

கோகிலேவும், நாயக்க மன்னரும் ஒரு சேர திரும்பவும் மன்னாரின் காலில் விழுந்து வணங்கினர்.

'நீங்கள் தூய மகாத்மா. அதனால்தான் உங்கள் பொருட்டு எங்களுக்கெல்லாமும் கிருஷ்ண தரிசனம் கிடைத்தது' என்று மன்னாரை சிரம் மேல் கை கூப்பித்து அவர்கள் துதித்தனர்.

அதில் ஒருவர் மட்டும் அவ்வாறு துதிக்க விருப்பமற்றுப் போய், 'சசே! என்ன கிருஷ்ணன் இவன்? நானும் என் தலைமுறைகளும் செய்யாத ஒரு பூஜையை இந்த மாட்டுக்காரன் செய்திருப்பானா? ஏகா





# கிருஷ்ண தந்திரம்! 24

## இந்திரா சௌந்தர்ராஜன்

**தசி, துவாதசி என்று ஒரு விரதம் பற்றியாவது இவன் அறிவானா? இதுவரை பல்லாயிரம் முறை நான், 'கிருஷ்ணா... கிருஷ்ணா' என்று ஜெபித்திருப்பேனே..! என் பக்திக்கு காட்சி தராத அந்தக் கண்ணன், என்ன இருக்கிறது என்று இந்த மாட்டுக் காரனுக்கு மட்டும் இவ்வளவு அருளுகிறான்..?" - என்கிற கேள்விகளிலும், வருத்தத்திலும் விழுந்திருந்தார்!"**



தேவராஜ் மாஸ்டரும், ராகவும் நுழைவதை ஷ்யாமளா கவனிக்கவில்லை. அவள் கவனம் அந்தக் கண்ணமங்கலத்துக்காரரின் மனைவி மேல் தான் இருந்தது.

அவள் முகத்தில் வலியின் அவஸ்தை நன்றாகவே தெரிந்தது. மூச்சு விடவும் அவள் சிரமப்பட்டுக் கொண்டுதானிருந்தாள். சுற்றிலும் உறவினர் கூட்டம்! நடு நடுவே டாக்டர் ஒருவரும், நர்ஸ் ஒருத்தியும் தென்பட்டனர்.

"நான் இப்ப என்ன செய்யணும்?"- ஷ்யாமளா அவர்களிடம் கேட்டாள்.

"அம்மாடி... என் பொண்டாட்டி நல்லபடியா எழுந்திரிக்கணும்னு, அவ கையைப் பிடிச்சுகிட்டு நீ நினைச்சா போதும்மா..."

அவளும் அவ்வாறே செய்யத் தொடங்கினாள்.

அந்தப் பெண்ணின் கை, பனியால் உறைந்தது போல் அவ்வளவு சில்லென்று இருந்தது. அந்தக் கையைப் பற்றிக்கொண்டு, சற்று பேந்தப் பேந்தப் பார்த்தாள்.

அடுத்த அறையில்தான் செல்லப்பா இருந்தார்.

இதயம் தொடர்பான விஷயங்களே மிக விசித்திரமானவை. உடம்பு முழுக்க ரத்தம் ஓடியபடி இருக்கும். ரத்த ஓட்டத்தில் ஏதாவது ஒரு பாகத்தில் அழுத்தமோ, இல்லை வேகக் குறைபாடோ ஏற்பட்டாலும் அது மைய பாகத்தில் வலியாக எதிரொலிக்கும்.

உலகின் மிகப் பெரிய முதல் அதிசயமும் இதயம் தான். கடைசி அதிசயமும் அதுவேதான்... இந்த ஏழு அதிசயம், எட்டு அதிசயம் சமாச்சாரமெல்லாம் நமது ஆசைக்கு நாம் வைத்துக் கொள்வது.

ஸ்விட்ச் போட்டால் விளக்கெரிகிற மாதிரி எதனால் முதல் முதலாய் இதயம் தன் இட- வல ஆட்டத்தை ஆரம்பிக்கிறது என்பது முதல், அது எது கிடைக்காத பட்சத்தில் நின்று போய்விடுகிறது என்பதற்கும் நடுவில் அதன் ஓட்டம் ஒரு ஆச்சரியமான ஆச்சரியமே!

அந்த ஆச்சரியம் செல்லப்பா வரையில் ஒரு கண்ணாமூச்சியாய் இருந்தது. திடீரென்று அவரது நெஞ்சு பக்கத்தில் 'சுரீர்' என்று ஊசி இறங்கினாற் போலவும், வட்ட வட்ட அலைகள் போல மின்சாரம் பரவுகிற மாதிரியும் ஒரு வரையறைக்கும், வார்த்தைக்கும் அகப்படாத வலி! அது அருகில் உள்ள மானிட்டரின் ஒளிக் கோடானது 'பீப்...பீப்' என்று சப்தம் எழுப்பிக் கொண்டு எம்பி எம்பிக் குதிப்பதில் நன்றாகவே தெரிந்தது. சப்தம் ஒரு நர்ஸை அழைத்து வரச் செய்தது. அருகில் வந்தவள், அடித்து புரிந்து டாக்டரை அழைத்து வர ஓடினாள். அவர் வந்து பார்த்து, கண்களை அகட்டிக் கொண்டு படபடத்தார். ஆக்ஸிஜன் சப்ளையை சற்று கூட்டிப் பார்த்தார். பின், 'வால்வெல்லாம் ரொம்ப வீக்கா இருக்கறதால நார்மல் பம்ப்பிங்கே ரொம்பச் சிரமப்படுத்துது...' என்றார்.

"ஆபரேஷன் வரை தாங்குவாரா டாக்டர்...?"

"சிம்டம்ஸ்... தாங்கமாட்டார்னுதான் சொல்லுது."

"அப்ப இன்னிக்கு நம்ம ஹாஸ்பிடல்ல ஒன்னுக்கு, ரெண்டு சாவா?"

"அஃப் கோர்ஸ்... பக்கத்து ரூம் பேஷண்ட்டுக்கு சான்ஸே இல்லை... இவருக்கு ஒரு பத்து பர்ஸன்ட் எனக்கு ஹோப் இருக்கு..."

-டாக்டர் சொல்லிக் கொண்டிருக்கும்போதே ஒரு நர்ஸ் அந்த டாக்டரை நோக்கி வந்தவளாக, "டாக்டர் பக்கத்து ரூம் பேஷண்ட்டுக்கு நல்லா ரெகவர் ஆயிடிச்சு டாக்டர். பிரீத்திங்கும் ரொம்ப நார்மலாயிடிச்சு. டைம் டு டைம், இங்க இருந்த ஷ்யாமளாங்கறவங்க அவங்கள தொட்டதால்தான் அந்த மிராகிள்னு டாக்டர் வேணுகோபாலே சொல்றார்..." என்றாள் அவள்.

அந்த நர்ஸின் குரல் செல்லப்பாவின் காதுகளிலும் விழுந்து, அவர் தன் ஓரக்கண்ணால் அவர்கள் இருவரையும் பரிதவிப்போடு பார்த்தார். அந்தக் கண்களில் ஏதோ ஒரு செய்தி! ஆனால் அவர்கள் இருவருமே, துடித்தபடி பார்த்திடும் செல்லப்பாவை கவனிக்கவேயில்லை.

இருவருமே அங்கிருந்து பக்கத்து அறை நோக்கித்தான் சென்றனர். 'கட்டாயம் அவுட்' என்று கணிக்கப்பட்ட அந்தப் பெண்ணும், ஷ்யாமளாவைப் பார்த்து கைகூப்பிக் கொண்டிருந்தாள்.

தேவராஜ் மாஸ்டரும், ராகவும் கிட்டத்தட்ட ஸ்தம்பித்துப் போய் நின்றுவிட்டிருந்தனர். ஷ்யாமளாவும் நெடுநேரம் வரை அவர்களைக் கவனிக்கவேயில்லை. யதார்த்தமாய் திரும்பியபோதுதான் பார்த்தாள்.

"மாஸ்டர்...."- என்று அவர்களை நெருங்கவும் செய்தாள்.

"ஷ்யாமளா... என்னம்மா இது அதிசயம்?"

"அதிசயமா..? மாஸ்டர் நீங்களும் என்னை அவர் மாதிரி அம்மன் லிஸ்ட்டில் சேர்த்துடாதீங்க.."

"இல்லை ஷ்யாமளா... கைராசின்னு ஒரு விஷயம் எப்பவுமே இருக்கு. அதை 'ப்ரூவ்' பண்ணியெல்லாம் நிரூபிக்க முடியாது. ஆனா பர்ஸனலா என்ஜாய் பண்ணலாம்... இன்ஃபாக்ட் இதை எல்லாம் மூட நம்பிக்கைன்னு சொல்ற நபர் கிட்டக்கூட, இந்த கைராசி நம்பிக்கை மட்டும் கொஞ்சமாவது இருக்கும்..."

- தேவராஜ் மாஸ்டர் அவளை வார்த்தைகளால் வியந்தபோது, டாக்டர் ஒருவர் அவர் அருகில் வந்தார். "மேடம்! எங்களைப் பொறுத்தவரை எல்லாமே சைன்ஸ்தான். ஒரு உடம்புக்குள்ள எங்களுக்குத் தெரியாம ஒரு கடுகத்தனை விஷயம்கூட இருக்க வாய்ப்பு இல்லை. ரத்தக் குழாய்க்குள்ள ஒரு இடத்துல புகுந்து, உடம்பு முழுக்க ஓடி வந்து பார்க்க எங்களால் முடியும். ஆனாலும் எங்களுக்கே பெரிய புதிரான விஷயம், 'இதுல உயிரோடு மையம் எது? அந்த உயிர் எப்படிப்பட்டது...? அது காற்றா, உஷ்ணமா, மின்காந்த அலைகளா? இல்லை, குறிப்பிட்ட அளவு அழுத்தமா? இல்ல இந்த உடம்புல அது எதாவது ஒரு கெமிக்கலா இருக்காங்கறதுல பெரிய தேடல் உண்டு. இது எல்லாம் ஒன்றாகக் கூடி இருக்கற ஒரு சென்ட்டர் பாய்ண்ட் எதாவது இருக்கான்னும் நாங்க யோசிக்கறது உண்டு.

எனக்கு கிட்டத்தட்ட முப்பது வருஷ அனுபவம். அந்த அனுபவத்துல சொல்றேன். ஒரு பேஷண்ட் தன் அடிமனசுல, 'எனக்கு இனி ஒன்னுமில்லை. நான் நல்லா ஆயிட்டேன்'னு நினைச்சுட்டா, அந்தக் கேஸ் மரணத்தோட வாசல்ல இருந்தாலும் பிழைச்சுக்கிடுது. அந்த நினைப்பைத் தவிர வேறு எது இருந்தும் பிழைக்காத கேஸ்களும் உண்டு. நீங்க கொடுத்தது நம்பிக்கை.... 'நான் நல்லாயிடுவேன்'கற நம்பிக்கை! அதுதான் காரணம்கறது என் புத்தி பூர்வமான கருத்து. கொஞ்சம் புத்தி, லாஜிக் இதை எல்லாம் மூட்டை கட்டி வெச்சுட்டு, பிளைண்டா ஒரு நம்பிக்கையோட உங்களைப் பார்த்தா உங்ககிட்ட ஏதோ ஒரு அபூர்வ சக்தி இருக்கு. அதுதான் அந்தப் பெண்ணை குணப்படுத்தியிருக்கணும்" என்றார்.

டாக்டரின் வியாக்யானம் ஷ்யாமளாவுக்குள் ஒரு விதக் கூச்சமாக உருவெடுத்தபோது, "ஏம்மா... இப்படி ஒரு சக்தி உடைய நீ, ஏன் உன் அப்பாகிட்டேயும் ட்ரை பண்ணிப் பார்க்கக்கூடாது..." என்றார் அதே டாக்டர். ஷ்யாமளாவிடம் ஒரு மெல்லிய தயக்கம்.

"கமான்! இங்க நடந்த அதிசயம் அங்கேயும் நடக்கட்டும்..."

- அவர் ஷ்யாமளாவை அழைத்துக்கொண்டு செல்லப்பாவின் வார்டுக்குப் போகவும், அவர் அகலமாய் கண்களை விரித்து ஷ்யாமளாவைப் பார்த்துவிட்டு தலையை உயர்த்தி எழ முயற்சிப்பது போல் முயற்சித்துவிட்டு உயிரை விடவும் சரியாக இருந்தது.

போலீஸ் ஸ்டேஷனில் தமிழ்முகனை மிரட்டி, ஓய்ந்துவிட்டிருந்தார்கள். அவனிடம் பிரக்ஞை கலையவே இல்லை.

"இவன் நடிக்கல ஸார்... நடிக்கறவனா இருந்தா, நாம எலெக்ட்ரிக் ஷாக் கொடுக்க வந்தப்பவே அலறியிருப்பான்..." என்றார் ஒரு ஏட்டு!

"அததானே ஸார் நானும் அப்ப இருந்தே சொல்லிகிட்டு இருக்கேன்? என் மகன் இப்படி ஆகவே காரணம், ஊருக்குள்ள நடமாடிகிட்டிருக்கிற அந்தப் பைராகிதான். நிச்சயமா சொல்றேன்

**"மாயம், மந்திரம்னு சொல்லிகிட்டு ஊருக்குள்ள சுத்திச் சுத்தி வந்துகிட்டிருக்கான் அந்த ஆள்..."**

ஸார், இந்தக் கொலைக்கும் அந்த ஆளுக்கும்தான் ஸார் சம்பந்தம். என்னை நம்புங்க ஸார்..."

- தமிழ்முகனின் அப்பாவான மருதாசலம் ஒரு பக்கம் இருந்து கதறினார். ஸ்டேஷனுக்கு க்ரைம் ப்ராஞ்சிலிருந்து ஒரு இன்ஸ்பெக்டர் வந்திருந்தார். இன்ஸ்பெக்டர் ருத்ரா என்றால், க்ரைம் பிராஞ்சே கொஞ்சம் நடுங்கும்.

பிடிபடாத மிக மிக மர்மமான விஷயங்களுக்கு மேலிடம் அவரைத்தான் அனுப்பி வைக்கும். மனிதர் போலீஸ்காரராக இருந்தாலும், மற்ற துறைகளிலும் நல்ல ஞானம் உடையவர். அவரது பார்வையில் மருதாசலம் குரலில் ஒரு உண்மை இருப்பதுபோல் தோன்றவே, அவரையே அழைத்து விசாரிக்கத் தொடங்கினார்.

"முதல்ல உக்காருங்க மருதாசலம்... நீங்க வாட்டர் டிவைனர் தானே?

"ஆமாம் ஸார்.."

"நான் கேள்விப்பட்டிருக்கேன்... வாட்டர் டிவைனரா இருக்கறவங்களுக்கு உடம்பு சீக்கிரம் போயிடும்னு சொல்வாங்களே, அப்படியா?"

- ருத்ரா ஒருவித நட்போடு மருதாசலத்திடம்வெகு சகஜமாகப் பேசத் தொடங்கிவிட்டார்.

"ஆமாம் ஸார்... உடம்பை உருக்கற தொழில் எங்க தொழில்... எல்லாராலயும் பண்ண முடியாது. சிலருக்கு எம்பது வயசுலயும் தலைமுடி கறுக்காது... பல்லு விழுந்திருக்காது. அந்த மாதிரி ஒரு வலுவான, கொஞ்சம் இயற்கைக்கு மாறான உடல் வாகு வேணும்."

"கரெக்ட்... நானும் அப்படித்தான் கேள்விப்பட்டேன். ஆமா யார் அந்தப் பைராகி..?"

- மெல்ல விஷயத்துக்கும் வந்தார் ருத்ரா. "யாருக்கு ஸார் தெரியும். மாயம், மந்திரம்னு சொல்லிகிட்டு ஊருக்குள்ள கத்திச் சுத்தி வந்துகிட்டிருக்கான் அந்த ஆள். அந்த ஆள் வந்ததுல இருந்தே கண்ணமங்கலமே ஆட்டம் கண்டு போச்சுன்னா பாத்துக்குங்களேன்..."

"உங்க வீட்ல டி.வி. இருக்குதா?"

"இருக்குது ஸார்..."

"அதுல என்னவெல்லாம் பார்ப்பீங்க.."

"நான் ஆன்மீகத்துல நம்பிக்கை உள்ளவங்க. அதால பக்தி சம்பந்தமான சொற்பொழிவு, பட்டிமன்றமெல்லாம் பார்ப்பேன்..."

"கிரிக்கெட், தொடர், அப்புறமா இந்த ஜாக்ரஃபி சேனல்லாம் பார்க்க மாட்டீங்களா?"

"எனக்கு இந்த கிரிக்கெட்டே பிடிக்காது ஸார். என்ன விளையாட்டு ஸார் அது? ஒருத்தன் பந்தைப் போட அதை ஒருத்தன் 'டொக்குடொக்கு'ன்னு அடிக்கறது ஒரு விளையாட்டா ஸார்?"

"அப்ப உங்க வரைல எது விளையாட்டு..?"

"கபடி, ஜல்லிக்கட்டு, சிலம்பம், ஏன் ஸார் கேரம் போர்டு கூட ஒரு நல்ல விளையாட்டுதான்.... குறி பாக்கற பழக்கம் அதனால வளருது. அப்புறம் கைக்குப் பின்னால இருக்கற காயை வெளிய எடுத்து,




குழிக்கு அனுப்பற புத்திசாலித்தனமெல்லாம் அதுல இருக்குதே..."

- மருதாசலம் மிக சகஜமாகிவிட்டார்.

மற்ற போலீஸ்காரர்கள் பார்த்துக் கொண்டே இருந்தனர். ருத்ரா இப்படி விஸ்தாரமாகப் பேசுகிறார் என்றாலே பெரிதாக ஏதோ பிடி போடப்போகிறார் என்றுதான் பொருள்.

"வெரிகுட்... கிரிக்கெட் விஷயத்துல நானும் உங்கள மாதிரி தான்.... கேரம் போர்டுதான் எனக்கும் பிடிக்கும். நான் எதுக்குக் கேட்டேன்னா... இதை எல்லாம் பாத்தும் எப்படி நீங்க இந்த மாயம், மந்திரம்கற விஷயத்தை எல்லாம் நம்பறீங்க..?"

"என்ன ஸார் கேள்வி இது? இதோ என் பையன் எப்படி இருக்கான் பாருங்க... நல்லா இருந்த பையன் ஸார். மேடைல மைக்க பிடிச்சா, ரெண்டு மணி நேரம் பேசுவான் ஸார். அசர மாட்டான். எனக்கு நினைவு தெரிஞ்ச நாள்ள இருந்து சாமி, பூதம்னாலே ஆகாது... வீட்ல குலதெய்வ வழிபாடு செய்யும் போதுகூட தூரப் போய் நின்னுக்குவான். அப்படிப்பட்டவனை அந்தப் பைராகி வசியப்படுத்தி, இப்படி ஆக்கி வெச்சுருக்கான். இதைப் பார்த்த பிறகுமா நீங்க இப்படிக் கேக்கறீங்க...?"

"மிஸ்டர் மருதாசலம்! ஏன் இது ஏதாவது ஒரு வியாதியா, இல்லாட்டி மனநிலை பாதிப்பா இருக்கக்கூடாது. டாக்டர்கிட்ட காட்டுனீங்களா?"

"என்னன்னு ஸார் சொல்லி டாக்டர்கிட்ட காட்ட? மனநிலை பாதிப்புன்னு பளிச்சினு தெரியுது... எப்படின்னு கேட்டா எதைச் சொல்ல? சிலர் இடி விழறதப் பார்த்து ஸ்தம்பிச்சிடுவாங்க. சிலர் திடீர்னு படமெடுக்கற பாம்பைப் பார்த்தா ஸ்தம்பிச்சிடுவாங்க... ஆனா இவன் விஷயத்துல டாக்டர் கேட்டா நான் எதைன்னு சொல்ல?"

"எதையும் சொல்லாதீங்க.... டாக்டர் கண்டுபிடிச்சு சொல்லட்டும்..."

"ஸார்... இவன் இங்க இருக்கும்போது நான் எப்படி ஸார் டாக்டர்கிட்ட காட்ட முடியும்?"

"கவலைப்படாதீங்க. அது இனி என் பொறுப்பு. அதே சமயம் அந்தப் பைராகி யாரு, அவர் எப்படிப்பட்டவர்னு நான் நேரடியா அனுபவப்பட விரும்பறேன். நான் ஒரு போலீஸ்காரனா வராம, உங்க உறவுக்காரன் மாதிரி வர விரும்பறேன்... உங்களுக்கு ஆட்சேபம் இல்லையே..?"

"மகராசனா வாங்க... அந்த ஆளுக்கு நீங்களாவது ஒரு மணியக் கட்டுனா சரி..." -மருதாசலத்திடம் ஒரு சிறிய அளவிலான நிம்மதிப் பெருமூச்சு வெளிப்பட்டது.

(தொடரும்)

# கிருஷ்ண தந்திரம்!

இந்திரா செளந்தர்ராஜன்



25

“எல்லோரும் பிரமிப்பிலும், பரவ சத்திலும் இருக்கும் அவ்வேளையில் அவர் மட்டும் மனப் புழுக்கத்தில் இருந்தார். அவரது பெயர் பண்டாரி. ஆசாரமான பிராமணக் குடும்பத்தில் இருந்து வந்தவர். அவருக்கு ஊருக்குள்ளே நல்ல மதிப்பும், செல்வாக்கும் இருந்தன. வீடு, வாசல், வயல்வெளி என்று எதற்கும் பஞ்சமில்லை. தலைமுறை தலைமுறையாகக் கண்ணமங்கலத்தில் வாழ்ந்து வரும் குடும்பம். அப்படிப்பட்டவருக்கு, அவர் வீட்டு மாடுகளைக் கழுவிக் குளிப்பாட்டிய ஒரு மாட்டுக்காரனான மன்னார் பெரிதாகக் கொண்டாடப்படுவது எரிச்சலைத்தான் மூட்டியது.

அந்த இடத்தைவிட்டே விறு விறுவெனப் புறப்பட்டுவிட்டார். அதை ஊர்க்காவல் பொறுப்பில் இருக்கும் கணபதி ராயன் என்பவன் கவனித்தான்.

‘என்ன பண்டாரி மாமா... உங்க முகத்துல சோபையே இல்லையே? நம்ம ஊர்ல எப்பேர்ப்பட்ட ஒரு அற்புதம் நடந்திருக்கு! அந்தச் சந்தோஷத்தையே உங்க முகத்துல பார்க்க முடியலையே?’ என்று அவரைத் தூண்டிவிட்டான்.

‘போடா போ... இதுக்கு பேர் அற்புதமாக்கும்? இதை நானும் நம்பணுமா? அந்தக் கிருஷ்ணன் என்ன, வேலை வெட்டி இல்லாதவனாக்கும்? அல்பமான இந்த மன்னாரை எல்லாம் மகான் ஆக்கறதுதான் அவன் வேலையா? இதெல்லாம் ஏதோ தகிடுதத்தம்டா. ஒரு மாட்டுக்காரனுக்கு இத்தனைப் புத்திசாலித்தனமான்னு நான் யோசிச்சிண்டிருக்கேன்’ - என்று அவர் ஒரு புதிய கோணத்தைக் காட்டிவிட்டுப் போனார். அது கணபதி ராயன் மூலமாகப் பரவவும் செய்ததில் மன்னாருக்கு ஆதரவாகப் பலர் என்றால், எதிராகவும் சிலர் உருவாகவே செய்தனர்!”



இன்ஸ்பெக்டர் ருத்ராவின் ஆதரவான பேச்சும், அதில் தென்பட்ட கனிவும் மருதாசலத்தை மெல்ல சகஜ நிலைக்குக் கொண்டு சென்றது.

“ஸார்... நீங்க சொல்ற எல்லா விஷயத்தையும் நான் கேட்டுக்க



றேன் ஸார்... அந்தப் பைராகியை நீங்க பிடிக்க நான் என்னால முடிஞ்ச எல்லா உதவியையும் செய்யறேன். ஆனா ஒண்ணு..." என்று இழுத்தார்.

"என்ன சொல்லுங்க..!"

"என் மகன் குற்றவாளி இல்லை ஸார்... அவனை நீங்க விட்டுடணும்..."

"அவனை இப்ப யார் குற்றவாளின்னு சொன்னது?"

"சொல்லாமலா எங்களைப் பிடிச்சு இழுத்துகிட்டு வந்து, மாறி மாறி விசாரிச்சிகிட்டு இருக்கீங்க? ஊருக்குள்ளயும் இந்த நொடி நீங்க எங்களைக் கைது செய்த விஷயம் பரவி இருக்குமே...! ஒன்னுன்னா ஒன்பதுங்கற ஊர்க்காரங்க, இப்பவே என் மகனுக்கு தூக்கு தண்டனை வரை நிறைவேத்தி இருப்பாங்களே ஸார்..."

"ஸாரி மிஸ்டர் மருதாசலம்... நீங்க ஊரை நினைச்சு அநாவசியமா குழம்பாதீங்க. எல்லாம் போகப் போகச் சரியாயிடும். தமிழழகனுக்கு ஒரு பக்கம் ட்ரீட்மெண்ட் கொடுக்கப் போறோம். அதை நினைச்சு சந்தோஷப்படுங்க. இப்ப நீங்க வீட்டுக்குப் போகலாம். நான் கொஞ்ச நேரத்துல வாறேன்..."

- இன்ஸ்பெக்டர் ருத்ரா பேச்சோடு பேச்சாக தன் ஜீப் டிரைவரைப் பார்த்து சைகை காட்டினார்.

"போங்க... என் ஜீப்லயே வீட்டுல போய் இறங்குங்க. யாராவது கேட்டா, 'என்னஏதுன்னு விசாரிச்சாங்க. வேற ஒண்ணுமில்லன்னு மட்டும் சொல்லுங்க..." என்றார்.

மருதாசலமும் திரும்ப ஒரு கும்பிடு போட்டுவிட்டு ஜீப் நோக்கி நடந்தார்!

செல்லப்பாவின் இல்லத்தில் ஒரு அசாத்ய நிசப்தம். இத்தனைக்கும் உறவுக்காரர்கள், தெரிந்தவர்கள், ஊர்க்காரர்கள் என்று பெரும் கூட்டம்.

ஷ்யாமளா, மாடியில் தன் அறையில் ஜன்னல் அருகே நின்று எதிர் திசையைப் பார்த்துக் கொண்டிருந்தாள். வெகுதூரத்தில் செல்லப்பாவின் சடலப் புகை, வானில் பரவிக் கொண்டிருப்பது துல்லியமாகத் தெரிந்

தது.

அவளிடம் ஆர்ப்பாட்டமான அழுகை இல்லை. அதே சமயம் அழாமல் இருக்கவும் அவளால் முடியவில்லை. ஏதோ ஒரு கனவுக் காட்சி போலக்கூட இருந்தது. கூடவே அவர் பெரிய அளவு கவலைப்பட்டிருக்கிறார் என்பதும் உறுத்திக்கொண்டே இருந்தது.

அந்தக் கவலைக்குக் காரணமும் பைராகிதான்!

'அந்தப் பைராகியிடம் அப்பாவுக்கு அப்படி என்ன பயப்படும்படியாக இருக்க முடியும்?' என்கிற கேள்வியும் அவளைக் குடைந்துகொண்டே இருந்தது.

கீழே ஹாலில் கோமளா மாமி, ஈரத்தலையை அள்ளி முடிந்து கொண்டு எல்லோருக்கும் காபி கொடுத்துக் கொண்டிருந்தாள். சில பத்திரிகையாளர்களும், தூர்தர்ஷனில் இருந்து கேமராமேனும் வந்திருந்தனர்.

தூர்தர்ஷன் கேமராமேன் வந்த வேகத்தில் வீட்டுச் சூழலையும், ஜனாதிபதி, பிரதம மந்திரி, முதல் மந்திரி என்று எல்லோராலும் செல்லப்பா கௌரவிக்கப்படும் காட்சிகளைக் கொண்ட படங்களையும் தன் கேமராவுக்குள் அடைப்பதில் மும்முரமாக இருந்தார்.

டி.வி. செய்திகளிலும் செல்லப்பாவின் அகால மரணம் ஒரு மாரடைப்புச் செய்தியாகக் கூறப்பட்டிருந்தது. ராகவும், தேவராஜ் மாஸ்டரும் குளித்து விட்டுத் தலையைத் துவட்டியபடி வந்திருந்தனர்.

கோமளா மாமி அவர்களுக்கும் காபி தந்தாள்.

"இருக்கட்டும் மாமி... ஷ்யாமளா எங்கே?"

"மாடில அவ ரூம்லதான் இருக்கா..." -மாமி கூறிட இருவருமே மேலே சென்றனர்.

அறைக்கதவு திறந்தே இருந்தது.

உள்ளே நுழைந்தனர். மெல்லிய சூழலிசை, டேப் ரிக்கார்டரில் ஒலித்தபடி இருந்தது. செல்லப்பாவின் ஒரு கச்சேரி ரிக்கார்டிங்.

"ஷ்யாமளா..."

"வாங்க மாஸ்டர், உட்காருங்க.."

"வெரி ஸாரிம்மா... எதுக்கோ நாங்க வந்தோம். ஆனா அது இப்படி ஒரு துக்க விஷயமா மாறிடிச்சு..."

"..............."

"ஒரு விஷயத்ததான் என்னால ஜீரணிக்க முடியல"

"..............."

"நீயே ஒரு மருந்து... உங்கப்பா பக்கத்துலயே இருந்தும் அவரைக் காப்பாத்த முடியல பார். கடைசியில் பைராகி சொன்னபடியே நடந்துடுச்சு..."

- மாஸ்டர் தன் பேச்சில் பைராகியை தொட்டதுதான் தாமதம்.

சுரீர் என்றது ஷ்யாமளாவுக்கு!

"மாஸ்டர்... உங்களுக்கு பைராகியைத் தெரியுமா?"

"நல்லா தெரியும்மா... உங்களுக்கும், இந்த ஊருக்கும்தான் அவர் பைராகி. என் வரையில அவர் ஒரு ஃப்ளூட்டிஸ்ட்... வாரணாசி பல்ராம் பாண்டேன்னா இசை உலகம் அவ்வளவுக்கும் தெரியும். பெரிய இசை மேதை! ஆனா அதுக்குத் தகுந்த அங்கீகாரம் தனக்குக் கிடைக்கலங்கற குறை அவருக்கு உண்டு. பல தடவை பத்மஸ்ரீ விருது அவருக்குக் கிடைக்கற மாதிரி இருந்து, பின்னர் கிடைக்காம போயிருக்கு..."

"சரி, 'அவர் சொன்ன மாதிரியே..?'ன்னு சொன்னீங்களே?"

"ஆமாம்மா... உங்கப்பாக்கு வேளை வந்துடுச்சுன்னார். பைராகிகள் காலத்தைக் கணிக்கறதுல சமர்த்தர்கள். ஆகையால் நானே உங்கப்பாவைப் பார்க்கப் பயந்துகிட்டேதான் வந்தேன். கடைசில நான் பயந்த மாதிரியே ஆயிடிச்சு..."

"அப்பா இறந்துடுவார்னா பைராகி சொன்னார்..?"

"கிட்டத்தட்ட அப்படித்தாம்மா சொன்னார்..."

- தேவராஜ் மாஸ்டர் ஆமோதிக்க, ஷ்யாமளாவுக்குள் தீப்பிடித்துக் கொண்டது. ராகவ் அதை உணர்ந்தான்.

"ஷ்யாமளா... நீ அநாவசியமா எதையும் நினைச்சுக் குழப்பிக்காதே! தைரியமா இரு! மாஸ்டரும், நானும் இங்க உன்கூடத்தான் கொஞ்ச நாள் இருக்கப்போறோம். நீ மனசைத் தேத்திக்கோ.., இப்பதான் நாமமியூசிக்ல பெருசா கான்ஸன்ட்ரேட் பண்ணனும்" என்றான்.

அப்போது கோமளா மாமியும் அந்த அறைக்குள் நுழைந்து கொண்டிருந்தாள். அவள் கையில் ஷ்யாமளாவுக்கான காபி.

"ஷ்யாமளா... இந்தா இந்தக் காபியை ஒரு வாய் குடி... நீ எனக்குத் தெரிஞ்சு, வந்ததுல இருந்து சாப்பிடவே இல்லை..." -என்றாள்.

ஷ்யாமளாவிடம் எந்தப் பதிலும் இல்லை. மாமியே அவள் எதிரில் டம்ளரில் காபியை ஆற்றியவளாக நீட்டினாள். "இல்ல மாமி... நான் இப்ப காபி சாப்பிடற மனநிலையில இல்ல. நீங்க குடிச்சிடுங்கோ..."

- அவள் தவிர்த்தாள்.

"அப்படிச் சொல்லாதே... வெறும் வயிறோட இருக்கறது நல்லதுக்கில்ல. பிடி..." -மாமியும் விடுவதாக இல்லை. மாஸ்டரும் தூண்டிவிட்டார். அவளும் கடனே என்று 'மடக் மடக்'கென்று விழுங்கி முடித்தாள்.

"அப்படியே கொஞ்சம் கீழ வந்துட்டுப் போ... உன்னைப் பார்க்க பூசாரியில இருந்து அன்புமணி வரை எல்லோரும் வந்துருக்கா..." என்றாள் மாமி.

அன்புமணி பேரைக் கேட்ட மாத்திரத்தில் ஷ்யாமளாவிடம் ஒரு அதிர்வு.

வேகமாகக் கீழ் இறங்கத் தொடங்கினாள். பூசாரி ஒரு நாற்காலியில் அமர்ந்திருந்தார். ஷ்யாமளா வரவும் எழுந்தவராக, மௌனமாக வெறித்தார். ஷ்யாமளாவுக்கு அவரைப் பார்க்கவும் கண்ணிரண்டும்

கலங்கிவிட்டது.

"தாயி... தைரியமா இரு! சாமி இவ்வளவு சீக்கிரமா போவார்னு நான் எதிர்பார்க்கல..." - என்றார்.

"எனக்கே கனவு மாதிரிதான் இருக்கு பூசாரி..."

"போகட்டும்... உயிர் பிரியும் போது ஏதாச்சும் பேசினாராம்மா...?"

"இல்ல பூசாரி... அவர் கிட்ட நான் போனப்போ, அவர் உயிர் போயிடுத்து. ஆனா அவர் என்கிட்ட முக்கியமா எதையோ சொல்ல நினைச்சார்ங்கறது மட்டும் எனக்குத் தெரியும். அந்தப் பைராகியை நினைச்சு ரொம்பவே பயப்படவும் செய்தார்..."



"பைராகிகள் காலத்தைக் கணிக்கறதுல சமர்த்தர்கள். ஆகையால நானே உங்கப்பாவைப் பார்க்கப் பயந்துகிட்டேதான் வந்தேன். கடைசில நான் பயந்த மாதிரியே ஆயிடிச்சு..."

"நினைச்சேம்மா... நம்ம கோயில்ல பலகையில உட்காருவதென்று ஒரு சடங்கு உண்டு. சாமி உத்தரவு தந்தா அதுல உக்காரலாம். அப்படி அதுல உக்காந்து, இறந்துட்ட ஆத்மாக்களோட பேசலாம். அப்புறமா வா. சாமி உத்தரவு தருதா பார்ப்போம்"

- பூசாரி ஒரு புது விஷயத்தைத் தொட்டு முடித்தவராக, "அப்ப நான் உத்தரவு வாங்கிக்கறேன்..." என்று கிளம்பினார்.

அடுத்து அன்புமணி!

அவனுக்கு இந்தத் துக்கம் கேட்பது என்பதெல்லாம் பிடிபடாத விஷயங்கள்! மலங்க மலங்கப் பார்த்தான். "அன்பு... அப்பா போய்ட்டார். நீ இனி இந்த வீட்டுக்குள்ள சகஜமா வரலாம். அவர் இருந்த வரை இந்த ஹால்ல நிக்கறதுக்குக்கூட நீ நூறு தடவை யோசிப்பே, இல்ல?" - அவள் கேட்ட விதம் அவனைப் பிசைந்தது.

"ஷ்யாமளா... என்னன்னு தெரியல! கொஞ்ச நாளாவே நினைச்சுப் பாக்க முடியாததெல்லாம் நடக்குது நம்ம ஊர்ல... இது நம்ம ஊர்தானான்னு இருக்கு. போன வாரத்துல ஒரு நாள் ராத்திரி உங்கப்பாவும், மாமியும் மன்னார் ஜீவசமாதிக்கு நடுராத்திரிக்கு மேல போனாங்க. அதை நான் பார்க்க நேர்ந்தது. எனக்கு ரொம்பவே ஆச்சரியம். பகல்ல போகாம இப்படி ராத்திரியில போறாங்களேன்னு... அப்பவே உங்கப்பாவுக்கு தான் சாகப்போறோம்னு தெரிஞ்சிடுச்சு போல..."

- அன்புமணியும் ஆறுதலாகப் பேசும் சாக்கில் ரகசியம் போன்ற அந்த ஜீவ சமாதிக்கு விளக்கு போட்ட விஷயத்தைப் போட்டு உடைத்தான்.

ஷ்யாமளாவுக்குள் ஏற்கெனவே பெருந்தீ கொழுந்துவிட்டுக் கொண்டிருந்தது. அன்புமணியின் பேச்சு அதற்கு எண்ணெய் விட்டது போல ஆனது.

"என்னது? என் அப்பா நடுராத்திரில மன்னார் சமாதிப் பக்கம் போனாரா... நீ பார்த்தியா?"

"ஆமாம் ஷ்யாமளா..."

"இதை ஏன் அன்பு அப்பவே என்கிட்ட சொல்லலை...?"

"எங்க ஷ்யாமளா... நீயும் நானும் இன்னும் முழுமனசா உக்காந்து பேசவே இல்லையே? ஒன்று மட்டும் உறுதி ஷ்யாமளா. இந்த ஊர்ல பெருசா ஏதோ ஒரு விபரீதம் நடக்கப் போகுது..."

- அவன் சொன்னது சற்று தள்ளி அமர்ந்திருந்த கோயில் பட்டாச்சாரியான ஆராவமுத ஐயங்காரின் காதுகளிலும் விழுந்தது.

"ஆமாம்மா குழந்தை... நானும் அப்படித்தான் நினைக்கறேன். எல்லாம் அந்தப் பைராகியோட திருவிளையாடல்தான். உங்கப்பா பயத்துலயே செத்துட்டார்னுகூட சொல்வேன். இனியும் நான் சும்மா இருக்கப் போறதில்லை. நாளைக்கே கோயில் சந்நிதியில இருக்கற சாளக்கிராமங்களை எடுத்து தீர்த்தப் பாத்திரத்துல போட்டுடப் போறேன்... அந்தக் கிருஷ்ணனே வந்தாதான் இந்த ஊரை காப்பாத்த முடியும்..."

- பட்டாச்சாரி சொன்னதில் ஒரு ஆச்சரியமான தகவல். தேவராஜ் மாஸ்டர் அதை அண்டர் லைன் செய்வது போலக் கேட்டார்.

"சாளக்கிராமங்களை எடுத்து தீர்த்தப் பாத்திரத்துல போட்டா கிருஷ்ணன் வருவானா?"

"என்ன அப்படிக் கேட்டுட்டேள்... இதுவரை ரெண்டு தடவை அந்த மாதிரி வந்துருக்கான். அவன் வந்தாதான் எல்லா குழப்பங்களும்கூட தீரும்..."

"என்ன பட்டாச்சாரி... என்னது இது புதுக் கதை?"

"கதைதான்..! நம்பாதவாளுக்கு கதைதான்..."

- பட்டாச்சாரியிடம் தீர்க்கமான பதில்!

(தொடரும்)



# இந்திரா சௌந்தர்ராஜன்

"நாளுக்கு நாள் மன்னாரின் புகழ் பரவிக்கொண்டே போனது. அக்கம் பக்கத்து நாடுகளான சேர, சோழ, தொண்டை மண்டலங்களில் இருந்தெல்லாம் பக்தர்கள் கூட்டம் கூட்டமாக வந்து மன்னாரையே அந்தக் கண்ணனாக நினைத்து வணங்கத் தொடங்கிவிட்டார்கள்.

அவ்வளவு பேரையும் மன்னாரும் வயல் வெளிகளிலும், மாந்தோப்புகளிலும், குளத்தங்கரையிலும் சந்திக்கத் தொடங்கினான். வருகின்றவர்கள் அவனை புல்லாங்குழல் வாசிக்கச் சொல்லி வேண்டுவார்கள். அவனும் அவர்களுக்காக வாசிப்பான். அப்படி வாசிக்கும்போது ஒருவரது தீராத தலைவலி தீர்ந்தது. ஒருவர் அரைப் பைத்தியமாக இருந்தார்; அவரும் குணமானார். பிறந்து இருபது வயதைக் கடந்தும் பூப்பெய்தாமல் இருந்த பெண்ணொருத்தி, குழலிசையைக் கேட்டுக் கொண்டிருக்கும்போதே பூப்பெய்தினாள்.

இதனால் மாயா உலகில் கர்மத்தின் பிடியில் சிக்கி ஏதோ ஒரு துன்பத்தின் வசம் சிக்கித் தவித்தபடி இருக்கும் மாந்தர்களுக்கெல்லாம், 'மன்னாரைப் பார்த்தாலே போதும், விடிவு ஏற்பட்டுவிடும்' என்கிற எண்ணம் ஏற்பட்டுவிட்டது.

ஆனால் இதன் எதிரொலிகள் சில மோசமாகவே இருந்தன.

கண்ணமங்கலம் கிருஷ்ணன் கோயிலுக்கு வந்து அந்தக் கோபால கிருஷ்ணனை வணங்கி வந்தவர்கள் கூட, மன்னாரைப் பார்த்தாலே போதும் என்று அந்தக் கிருஷ்ணனையே தரிசித்துவிட்டது போன்ற திருப்தியை அடைந்தார்கள்.

இதனால் கோயில் பட்டாச்சாரியாருக்கே வருத்தம் வந்துவிட்டது. இதை இப்படியே விடுவதும் நல்லதல்ல என்று அவருக்கும் தோன்றியபோது, ஏற்கனவே மன்னாருக்கு எதிராக இருந்த பண்டாசி, பட்டாசிடம் வந்து சேர்ந்து கொண்டார்!

துக்கம் கேட்க வந்த இடத்தில் கோயில் பட்டரான ஆராவமுத ஐயங்கார் சாளக்கிராமம் பற்றிப் பேசியதோடு அவைகளைத் தூக்கி தண்ணீருக்குள் போட்டுவிட்டால் அந்தக் கண்ணனே வந்துவிடுவான் என்று கூறியது, தேவராஜ் மாண்டரில் இருந்து ராகவ் மற்றும் ஷ்யாமளா வரை அவ்வளவு பேரையுமே ஆச்சரியத்திலும், அதிர்ச்சியிலும் போட்டுப் புதைத்தது.

மாண்டர், ஐயங்காரை கெட்டியாகப் பிடித்துக் கொண்டு தொடர்ந்து பேச ஆரம்பித்தார்.

"பட்டரே.... என்ன நீங்க போற போக்குல நம்பமுடியாத விஷயத்தை எல்லாம் சொல்ல ஆரம்பிச்சிட்டீங்க?"

"எது நம்ப முடியாத விஷயம்..? அந்தக் கிருஷ்ணனே வருவான்னு நான் சொன்னதா?"

"இல்லியா பின்னே..? எந்தக் காலத்துல சுவாமி, கடவுள் நேர்ல வந்துருக்கார்..?"

"வராமதான் மதுரைல அறுபத்து நாலு திருவிளையாடலும் நடந்ததா?"

"அதெல்லாம் புராணம் சுவாமி... ஃபோட்டோ, டேப் மாதிரி எவிடென்ஸ் இருக்கா?"

"இப்ப இப்படிக் கேக்கறது ஒரு ஃபேஷனா போச்சு. ஆனா நான் சொன்னது சத்தியமான உண்மை."

"நீங்க உங்க நம்பிக்

கிருஷ்ணா

26

# தந்திரம்!

கையைச் சொல்றீங்களா?"

"தெய்வம்னாலே நம்பிக்கைதானே ஸார் அங்கே பிரதானம்?"

"மன்னிக்கணும்... எப்ப 'இது என் நம்பிக்கை'ன்னுட்டீங்களோ, அப்பவே எனக்குப் பகக்குன்னு போச்சு..."

"உங்களுக்கு எப்படி ஆனா எனக்கென்ன..? இப்ப நான் கோயில்ல நித்யப்படி பூஜைகளை விடாம பண்ணிண்டு வரேன். ஒரு ஊர்ல ஒரு கோயில் இருந்து அங்க பூஜைகள் விடாம நடக்கறதுன்னா, அது அங்க இருக்கற பெருமாளுக்காக மட்டும் கிடையாது; ஊருக்காகவும்தான். எவ்வளவுக்கெவ்வளவு கோயில்கறது பளிச்சுன்னு நித்ய பூஜைகளோட இருக்கோ அவ்வளவுக்கவ்வளவு அந்த ஊர் க்ஷேமமாயிருக்கும்கறதுதான் ஐதீகம். அதனால ஒரு நூறு பேர் இருக்கற குக்கிராமத்துலகூட காளி, முனின்னு எதாவது ஒரு தேவதைக்கு கோயில் இருக்கும்; அங்க பூசாரின்னு ஒருத்தரும் இருப்பார்..."

"பட்டாச்சாரியாரே... இப்ப எதுக்கு இந்த வியாக்யானமெல்லாம்..? சட்டுன்னு விஷயத்துக்கு வாங்கோ"

"வரேன்... நான் ஒன்னும் உபன்யாசம்பண்ணலை. அந்தக் கிருஷ்ணன் எப்படி வருவான்னு சொல்லத்தான் இதை எல்லாம் சொல்லிண்டு வந்தேன்..."

"சரி... சுருக்கமாச் சொல்லுங்களேன்! உங்க நம்பிக்கைப்படி கிருஷ்ணன் எப்படி வருவான்..?"

"நித்யப்படி பூஜைகள், உத்சவங்கள் நடக்கற ஒரு ஊர்ல அதெல்லாம் நின்னு போனா, அதனால தெய்வ சாந்நித்யம் பாதிக்கும். அப்ப தெய்வமே நேர்ல யார் மூலமாவது வந்து, அந்தக் குறைகளை ஊரோட க்ஷேமத்துக்காக சரி செய்யப் பார்க்கும். இங்க நானும் பூஜைகளை நிறுத்தப் போறேன். அதனால அந்தக் கிருஷ்ணனும் வருவான். ஏற்கெனவே இதே ஊர்ல இரண்டு முறை கிருஷ்ணன் வந்துருக்கான்... ஒரு முறை மொத்த ஊரே பாத்துண்டு இருக்கும்போது திரௌபதி கோயில் குளத்துல குளிச்சவன் கடைசி



வரை மேலே வராமல், வந்தது கண்ணன்னு நிரூபிச்சதா சொல்வா. இன்னொரு முறை ஒரு கள்ளனா வந்து, ஊர் கொடிமரத்துல சங்கிலியால கட்டிப் போட்டும் அப்படியே கொடி மரத்தோட அவன் மறைஞ்சு போனதா சொல்வா. இப்ப மூணாவது முறை! இந்த மண்ணுக்கு நான் மூணு முறை வருவேன்னு மன்னார் சுவாமிக்கு அந்தக் கிருஷ்ணன் வாக்கும் கொடுத்திருக்கான். அதனால மூணாவது முறையா அவன் வரப்போறது என் வரைல நிச்சயம். அப்படி அவன் வந்தாதான் இந்த ஊர்ல இப்ப இருக்கற அவ்வளவு குழப்பங்களும் தீரும்.

ஒரு உயிருக்கு ரெண்டு உயிர் போயாச்சு..! ஒருத்தன் வைத்தியமா திரியறான். அடுத்து என்ன நடக்கும்னும் தெரியல..! அந்தப் பைராகியோ ஒரு மர்ம மனிதனா தினசரி மிரட்டிண்டு திரியறான். இதையெல்லாம் நம்மள மாதிரி சாமான்யப்பட்ட மனுஷாளால சரி செய்ய முடியாது. ஒரே வழிதான். அந்தக் கிருஷ்ணனே வரட்டும். இல்ல இந்தப் பைராகி இந்த ஊரையே ஒருவழி பண்ணிடுவான். குறிப்பா அம்மாடி ஷ்யாமளா! அவன் அடுத்த குறி நீயாதான் இருப்பே. ஏன்னா, நீ திரௌபதி அம்சம் உள்ளவ. மந்திர சக்தி கொண்ட உபாசனா சக்திகள், உன்ன மாதிரி தெய்வீக அம்சம் கொண்டவாளைப் பார்த்தா அச்சப்படும். ஆகையால உன்னை முழுசா தன் கைல எடுத்துண்ட பிறகு, அந்த நபர் ஆட ஆரம்பிச்சிடுவான். இதுதான் என் யூகம்..."

- ஆராவமுது ஐயங்காரின் நீண்ட விளக்கம் ஷ்யாமளாவிடம் பயம் கொண்டு நின்றது அனைவரையும் ஆச்சரியப்படுத்தியது.

ஐயங்கார் பட்டாச்சாரி அதற்கு மேல் அங்கு இருந்து கொண்டு காலநேரங்களைப் பேசி வீணாக்க விரும்பாதவர் போல, "அம்மாடி... சாவு வீட்டுக்கு வந்தவா போகும் போது போயிட்டு வரேன்னு சொல்லக் கூடாது. நானும் அடுத்தடுத்து என் காரியங்கள பாக்கறேன்" என்றவராக திறந்த மார்பு மேல் கிடந்த உத்தரீயத்தை எடுத்து விரித்துப் போர்த்திக் கொண்டு விலகத் தொடங்கினார்.

ஷ்யாமளாவுக்கு பெரிய அளவில் களைப்பாக இருந்தது. அதை பார்வையாலேயே உணர்ந்த தேவராஜ் மாஸ்டர், "ஷ்யாமளா! நீ போய் கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துக்கோ. மற்ற விஷயங்கள நாம அப்புறமா பேசலாம். நான் உங்க ஊரை, ராகவ்கூட போய் அப்படியே சுத்திப் பாத்துட்டு வரேன்" என்றார்.

ஷ்யாமளாவும் அங்கே மௌனமாக நின்றபடி இருந்த அன்புமணியை காட்டி, "மாஸ்டர்... உங்களுக்கு அன்புமணி எல்லா உதவியும் செய்வான். அன்பு, மாஸ்டரை கூட்டிகிட்டுப் போ. நம்ம திரௌபதி அம்மன் கோயிலுக்கு அவசியம் கூட்டிண்டு போ... அப்புறம் உனக்கு தெரிஞ்ச ராகங்களையும் வாசிச்சுக் காட்டு. மாஸ்டருக்கு அது உன்னை மேலும் புரிஞ்சுக்க ரொம்ப உதவியா இருக்கும்" என்று அவர்கள் இருவரோடு அன்புமணியை கோத்துவிட்டாள். அவனும் அவர்கள் இருவருடன் வெளியேறத் தொடங்கினான்.

**த**மிழழகன் வீடு!

அவன் அப்பா மருதாசலம் கோபி சந்தனத்தைக்

குழைத்து நெற்றியில் இட்டுக்கொண்டு திரும்பிய நொடி, வீட்டு வாசலில் அக்கம் பக்கத்தவர்களின் அடைசல்.

"என்ன மருதாசலம்... பையன் எப்படி இருக்கான்? போலீஸ்ல பிடிச்சிகிட்டுப் போய் ரொம்பக் கஷ்டப்படுத்திட்டாங்களோ?"

- அக்கம் பக்கத்தவர்களில் ஒருவர் நைச்சியமாக ஆரம்பித்தார்.

"கஷ்டமெல்லாம்படுத்தல... தமிழ் அரசியல்ல இருக்கறதால எம்.எல்.ஏ., போலீஸ்"க்குத் தகவல் கொடுத்துருக்காரு. நல்லா இருந்த பையன் எதுவும் பேசாம இருக்கானாம். என்னன்னு போய் பார்த்து அவனுக்கு ட்ரீட்மெண்ட்டெல்லாம் கொடுங்க'ன்னு சொல்லியிருக்காரு. அதான் தமிழ்முகனை பிடிச்சகிட்டுப் போய், இப்ப ஆஸ்பத்திரில சேர்த்துருக்காங்க..."

- மருதாசலம் கூட்டியும் குறைத்தும் ஒரு மாதிரி பேசி, நிலைமையைச் சமாளித்தார். ஆனால் அது சூழ்ந்திருப்பவர்களை சரியாகச் சமாதானப்படுத்தவில்லை என்பது அவர்கள் முகம் போன போக்கில் தெளிவாகவே தெரிந்தது.

"அப்ப அந்தப் பைத்தியக்காரப் பைய செத்துக் கிடந்தானே.. அவனைக் கொலை செஞ்சது யாராம்?"

"அது... அதெல்லாம் யாருக்குப்பா தெரியும்? அதான் ஊருக்குள்ள ஒரு மந்திரவாதி சுத்திகிட்டு இருக்கான்ல..? அவனைப் போய் கேளுங்க.."

- மருதாசலத்திடம் கொஞ்சம் போல கோபம் கூடிவிட்டது.

"அட, அந்தாளோடதானேப்பா உன் மவனும் சுத்திகிட்டிருந்தான்! நீயே அவன்தான்னு போலீஸ்ல சொல்லலாம்ல?"

"எல்லாம் சொல்லியிருக்கேன்பா... இப்பக் கொஞ்சம் என்னை நிம்மதியா இருக்க விடுங்க."

- அவரது சிடுசிடுப்பை அவர்கள் பெரிதாக லட்சியம் செய்யாத அந்த நொடிகளில், வீட்டு வாயிற்புறம் ஒரு ஆட்டோ வந்து நின்றது. அதிலிருந்து ஒரு விவசாயியைப் போன்ற தோற்றத்தோடு இறங்கிக் கொண்டிருந்தார் இன்ஸ்பெக்டர் ருத்ரா!

கையில் ஒரு பலாப்பழம், ஒரு துணிப்பை, காமராஜர் சட்டை, டயர் செருப்பு என்று போட்ட வேஷத்தில் நூறு சதவீதம் பொருந்தியிருந்தார். அக்கம் பக்கத்தவர்கள் அவரையும் பார்த்திட, 'சம்பந்தி' என்று அவர் கொடுத்த குரல் அவர் யார் என்பதை அவர்களுக்கு உணர்த்திவிட்டது.

"அடடே... பண்ருட்டிக்காரரா? வாங்க.. வாங்க..."

"நான்தான் வந்துகிட்டே இருக்கேனே. என்னாச்சு என் மாப்பிள்ளைக்கு? அரசியல்ல பெரிய ஆளா வரப்போறாரு... நாமளும் நம்ம பொண்ணைக் கொடுத்து மாப்பிள்ளையாக்கிக்கப் போறோம்னுல்லாம் கனவு கண்டுகிட்டு இருந்தேன். இப்ப போலீஸ் வந்து பிடிச்சுகிட்டுப் போயிருக்காங்கல...?"

- கூட்டத்தவர் அவ்வளவு பேரின் காதுகளிலும் விழும்படி ருத்ரா பேசியதில், 'அவர் யார்? எந்த ஊர்? எதற்கு வந்திருக்கிறார்?' என்கிற அவ்வளவு விஷயங்களும் இருந்தன. அக்கம் பக்கத்துக்கும் கேள்வி கேட்டு அவரைப் பற்றி தெரிந்து கொள்ள வேண்டிய அவசியம் இல்லாமல் போய் விட்டது.

"ஐயா சாமிங்களா... கொஞ்சம் எல்லாரும் போறீங்களா? நான் என் சம்பந்தியா வரப் போறவரோட கொஞ்சம் பேசணும்.." என்று மருதாசலமும் அவர்களையெல்லாம் விலக்கிவிட்டார். அவர்கள் விலகினர். மருதாசலம் ஓடிப் போய் வாசற்கதவைத் தாழிட்டுவிட்டு, "வாங்க ஸார்.." என்று ருத்ராவுக்கு பதற்றத்தோடு நாற்காலி ஒன்றை எடுத்துப் போட்டார். மருதாசலம் மனைவி மங்கா, பூஞ்சை விழிகளுடன் சமையற்கட்டுக்குள்ளிருந்து மெல்ல வெளியில் வந்தாள்.

"மங்கா! ஸார்தான் இன்ஸ்பெக்டர்... நான் சொல்லல..?"- என்று கைகாட்டினார்.

"வணக்கங்க... என் பையன் ஒரு பாவமும் அறியாதவனுங்க. நீங்கதான் அவனை எப்படியாவது காப்பாத்தி என் கிட்ட சேக்கணுங்க" - என்று ஒரு தாய்மைக்கேயுரிய கெஞ்சலும் தவிப்புமாய்ப் பேசினாள்.

"வருத்தப்படாதீங்கம்மா... எல்லாம் நல்லபடியா முடியணும்னு தான் நான் இப்படி ஒரு வேஷம் போட்டு வந்துருக்கேன்... தயவு செய்து நான் ஒரு போலீஸ் அதிகாரின்னு எந்த நிலையிலும் யாருக்கும் தெரியற மாதிரி நடந்துக்காதீங்க. நீங்க உங்க வேலையப் பாருங்க... எனக்கு என்ன பண்ணணும்னு தெரியும்"- என்றார் ருத்ரா.

"ரொம்ப சந்தோஷம்.. இருங்க, போய் காபி கொண்டு வரேன்..." என்று அவளும் உள்ளே ஓடினாள்.

"காபிய குடிச்சிட்டு அப்படியே கோயில் வரை போய்ட்டு வந்துடுவோமா?" -ருத்ரா மருதாசலத்திடம் கேட்டிட, மருதாசலமும் ஆமோதிப்பாய் தலையை அசைத்தார். ஆனால் அதில் உயிரே இல்லை.



திரௌபதி அம்மன் கோயில் குளம்!

பட்டாச்சாரியாரான ஆராவமுத ஐயங்கார், குளத்தில் முங்கி எழுந்து கொண்டிருந்தார். பூஜை நிமித்தம் குடத்தோடு தண்ணீர் எடுக்க வந்திருந்த பூசாரியிடம் ஆச்சரியம்.

"என்ன சாமி, நீங்க போய் நம்ம குளத்துல குளிச்சிகிட்டு..? திருவிழா சமயத்துலகூட நீங்க வீட்லதானே குளிப்பீங்க..." -என்று ஆரம்பித்தார்.

"எல்லாம் ஒரு காரணமாத்தான் திண்ணப்பா. மகாமேதையான செல்லப்பா அநியாயமா பயத்துலயேயே செத்துப் போயிட்டான். ஒரு பாவமும் அறியாத அந்த பக்தன் உசுரும் போயிடுத்து. அடுத்து யாரோட உசுரு எப்படி, எப்ப போகும்னு தெரியாத ஒரு நிலை வந்துடுத்து. அதான் ஊரைக் காப்பாத்த எங்க குடும்ப வழக்கப்படி கிருஷ்ண சாளக்ராமங்களை எல்லாம் எடுத்துண்டு வந்து, இதோ இந்தக் குளத்துல போட்டுடப் போறேன். அதான் அதுக்கு முந்தி, சாவுத்தீட்டுப் போக ஒரு ஸ்நானம் பண்ணேன்"

-பட்டாச்சாரியின் பதில் திண்ணப்ப பூசாரியை திகைக்கவிட, பட்டாச்சாரி ஈர உடம்பைத் துவட்டிக் கொள்ளக் கூடாமல் கோயில் நோக்கி நடக்கத் தொடங்கினர். அதே கோயில் நோக்கி ஒரு பக்கமாய் தேவராஜ மாண்டரும் ராகவும் வந்தபடி இருக்க, மறுபுறம் இன்ஸ்பெக்டர் ருத்ராவும் மருதாசலமும் வந்தபடி இருந்தனர்.

(தொடரும்)



"ஒரு நாள் பண்டாரியும், கோயில் பட்டாச்சாரியாரும், கோயில் சந்நிதியிலேயே மனம் விட்டுப் பேசிக்கொண்டனர்.

'என்ன பண்டாரீ... இப்பல்லாம் கோயில் பக்கம் நீங்களும் வர்றதே இல்லையே..?'

'இந்தக் கிருஷ்ணன் பொதுவானவன், பாரபட்சமில்லாதவன்னு நான் நம்பிண்டு இருந்த வரை, கோயிலுக்கு வர எனக்குப் பிடிச்சிருந்தது. இவன் இப்ப ஒரு தலைப்பட்சமானவனோன்னு தோன்றது. ஆகையால கோயிலுக்கு வரவே தோணலை..'

'புரியறது... மன்னார்ங்கற மாட்டுக்காரனுக்கு அனுக்ரஹம் பண்ணின கிருஷ்ணன், வேதவித்வான் உங்களுக்குப் பண்ணலைங்கற ஆதங்கம்... சரிதானே?'

'ஆமாம்... இன்னிக்குக்கூட இந்தக் கிருஷ்ணனை தர்சனம் பண்ண வரலை. இந்தக் கோயிலுக்குன்னு ஒரு தங்க வட்டில் கொடுத்துருந்தேன். அதை திரும்பி வாங்கிண்டு போகத்தான் வந்தேன்..'

- பண்டாரியின் பேச்சு பட்டாச்சாரியைக் கீறியது.

'உமக்கு எப்படிச் சமாதானம் சொல்றதுன்னே தெரியல... கிருஷ்ணன் அந்த மன்னாருக்கு அனுக்ரஹம் பண்ணினதுல தனக்குத்தானேகூட அவன் குழி வெட்டிண்ட மாதிரிதான் தோன்றது. பாருங்கோ... கோயில்ல ஈ, காக்கா இல்ல... இந்த ஊருக்கு வர்றவாளும் மன்னாரைப் பார்த்துட்டு அப்படியே திரும்பிப் போயிட்றா! அது தப்புன்னு அவனாவது சொல்லலாம்தானே?'

'பட்டாச்சாரீ... நான் இப்ப அந்தக் கிருஷ்ணனே இல்லேங்கற முடிவுக்குத்தான் வந்துருக்கேன்! இருந்துருந்தா இப்படி எல்லாம் நடந்துண்டுருக்க மாட்டான். பாத்திரம் அறிஞ்சு பிச்சை போடச் சொல்லியிருக்கு... அதுகூடத் தெரியாதவனா என்ன அந்தக் கிருஷ்ணன்?'

- இருவரிடமும் ஆதங்கம் கொப்பளித்துக் கொந்தளித்தபோது அவர்களை ஊடுருவத் தொடங்கியது குழலிசை... அதுவும் சந்நிதிக்குள் இருந்து வந்த குழலிசை! இருவருமே மிக்கித்துப் போய் சந்நிதியைப் பார்த்திட... சந்நிதியில் கிருஷ்ண விக்ரகம் இருக்கும் பீடம் மேல் அன்று வந்த அதே குழந்தை, கால் மேல் கால் போட்டபடி அமர்ந்து புல்லாங்குழல் வாசித்தபடி இருந்தது!"

ஈரத்தைக்கூட துவட்டிக் கொள்ளாமல் பட்டர் கண்ணமங்கலத் தெருக்களில் நடந்தபடி இருந்தார். அதை வீட்டு வாசலில் நிற்கும் பலரும் பார்த்தனர். பட்டாச்சாரியாராகிய ஆராவமுத ஐயங்காரிடம் யாரையும் துளியும் சட்டையே செய்யாத ஒரு நூல் பிடித்த நடை.

யாதவகிரி மலைக் கோயிலை அவர் சமீபித்தபோது ஒருபுறத்தில் இருந்து ராகவும், தேவராஜ் மாஸ்டரும், மறுபுறத்தில் இருந்து மருதாசலமும், ருத்ராவும் சொல்லி வைத்த மாதிரி அடிப்படிக்கட்டு அருகே வந்து சேர்ந்திருந்தனர்.

பட்டாச்சாரி அவர்கள் யாரையுமே சட்டை செய்யவில்லை.

# கிருஷ்ண தந்திரம்!

# இந்திரா சௌந்தர்ராஜன் 27

விறுவிறுவென்று படிகளில் ஏறினார். ராகவ், தேவராஜ் மாஸ்டரிடம், "மாஸ்டர்! நம்ப வீட்ல பார்த்த கோயில் பட்டாச்சாரியார். இப்ப போனா கிருஷ்ண தரிசனமும் கிடைக்கும்" என்றான்.

"அது சரி.. அவர் என்ன ஏதோ கிணத்துலயோ, குளத்துலயோ விழுந்தவர் மாதிரி ஈரம் சொட்டச் சொட்டப் போறார்?"

"சாவு வீட்டுக்கு வந்ததால ஊர் குளத்துல குளிச்சிட்டு, தீட்டு கழிஞ்ச நிலையில போறார் போலயிருக்கு.."

– என்றபடி இருவரும் மலைப்படிகளில் அவரைப் பின் தொடர்ந்தனர். ருத்ராவும், மருதாசலமும்கூட ராகவ் பேச்சைக் கேட்டபடி மெல்லப்படி ஏறத் தொடங்கினர்.

ருத்ரா மருதாசலத்திடம் கேட்டார்.

"மருதாசலம்..! முன்ன போற இந்த இரண்டு பேரும் யார்? இந்த ஊர் மாதிரியே தெரியலியே.."

"ஆமாம் ஸார்.. இவங்க இந்த ஊர் கிடையாது. அநேகமா செல்லப்பா ஐயர் வீட்டுக்கு வந்திருக்கணும்.."

"அது யார் செல்லப்பா ஐயர்?"

"என்ன ஸார் நீங்க.. புல்லாங்குழல் செல்லப்பான்னு நீங்க கேள்விப்பட்டதில்ல..?"

"ஓ.. அவரா..? ஆமா.. அவர் இப்ப..."

"நீங்க என்ன கேக்கப் போறீங்கன்னு தெரியுது. அவர் இப்ப உயி





y

ரோடு இல்ல. ஹார்ட் அட்டாக்ல போய்ட்டாரு. கொஞ்சம் தலைக்கனம் பிடிச்ச ஆள்.. ஆனா பெரிய இசை மேதை! அப்புறமா போய் நானும் துக்கம் கேட்கணும்..."

- மருதாசலம் சொல்லி முடிக்கவும் மேல்தளம் வந்திடவும் சரியாக இருந்தது. ராகவும், தேவராஜ் மாஸ்டரும் திருச்சந்நிதி முன் உள்ள கல்மண்டபத்தின் கீழ் நின்றபடி இருந்தனர்.

ஆராவமுத ஐயங்காராகிய பட்டாச்சாரியார் உள்ளே தீபத்தைத் தூண்டி, பெரிதாக எரிய விட்டபடி இருந்தார். கிருஷ்ணன், கழுத்தில் சற்றே வாடிய துளசி மாலையோடு நின்றபடி இருந்தான். அவனது திருவுருவத்துக்கு முன்னாலே சற்று இடது ஓரமாய் அவனது உற்சவ விக்ரகங்கள்.. கூடவே பஞ்சலோகத்தால் செய்யப்பட்ட ஒரு சிறு தொட்டில். அதிலும் குழந்தை வடிவத்தில் அவன். அந்தத் தொட்டிலுக்கும் முன்னால், உள்ளங்கையில் கொள்ளும் அளவில் ஒன்றுக்கு நான்கு சாளக்ராமங்கள். கருநீல நிறத்தில் ஒரு சாளக்ராமத்தில் சக்கரப் பொறி.. மற்றதில் சங்குப் பொறி.. இன்னொன்றில் திருவடித் தோற்றம். நான்காவதில் வில்லின் முனை பாகம் மட்டும் தெரிந்தது.

இமயத்தை ஒட்டி ஓடும் கண்டகி நதிக்குள் விளைந்த அந்த அபூர்வக் கற்கள், அந்த மகாவிஷ்ணுவின் அத்தனை சாந்நித்யத்தையும் தன்னகத்தே உடையது. நீர் மிசை ஆதிசேஷன் மேல் கிடப்பவன் அவன்.. நித்திரை புரிவது போன்ற தோற்றம். ஆனால் அந்த மாலவன் புரிவது ஆழ்ந்த தியானம்!

இந்தக் கற்களும் நீர்மிசை கிடப்பவையே! வைரத்துக்குப் பின்னாலே எப்படி லட்சக்கணக்கான ஆண்டுகள் என்னும் ஒரு காலகதி உள்ளதோ, அதைப் போலவே சாளக்ராமங்களுக்கு பின்னாலேயும் ஒரு நெடிய காலகதி உள்ளது.

காலங்களை வென்று வாழ்வது அது! ஒவ்வொரு வைணவனும் சாளக்ராமத்தை தனது ஆன்மாவாகவே பார்ப்பான். அதற்குப் பசி, தூக்கம் உண்டு என்று பாவித்து, அதைத் தினமும் அபிஷேகித்து, அதற்கு நிவேதனம் செய்த பின் அதை ஒரு மூங்கில் குடலையிலோ அல்லது ஓலைப் பெட்டிக்குள்ளோ பட்டு வஸ்திரத்தில் கிடத்தி உறங்கச் செய்வர்.

சாளக்ராமம் தினமும் கொண்டாடப்படும் ஒரு இல்லத்தில், மகாலக்ஷ்மியின் கூத்தாட்டம் இருக்கும். முப்பத்து முக்கோடி தேவர்களும் அந்த இல்லத்தையே பாற்கடல் வைகுண்டமாய் கருதி, சூட்சும ரூபத்தில் வந்து சென்ற வண்ணம் இருப்பர்.

வீடே வைகுண்டமான பின் அந்த இல்லத்தவனும் வைகுண்டபதியாகி, வெகுவிரைவில் உலகின் சர்வ மாயா ரோகங்களையும் வென்றவனாகி மாலவன் திருவடியில் சேர்ந்துவிடுவது என்பதுதான் இறுதி முடிவு.

அப்படிப்பட்ட அந்த நான்கு சாளக்ராம கற்களையும் பட்டு வஸ்திரத்தோடு சேர்த்து எடுத்து, பட்டாச்சாரியர் திரும்பிப் பார்த்தார். வந்திருப்பவர்களுக்கு துளசித் தீர்த்தம் தரும் எண்ணமுடன், எடுத்த சாளக்ராமங்களை அப்படியே வைத்துவிட்டு துளசித் தட்டை எடுத்துக் கொண்டு வெளியில் வந்தார். நான்கு பேருக்கும் தீர்த்தம், துளசி தந்து சடாரியும் சாத்தினார். அப்போது ருத்ராவை ஒரு மாதிரி பார்த்தவர் மருதாசலத்திடம், "யார் மருதாசலம்.. புதுசா இருக்கே?" என்று கேட்க மருதாசலமும், "உறவுக்காரரு.. என் சம்சாரம் வகைல சாமி" என்றார்.

"நீ எப்ப ஜெயில்ல இருந்து வந்தே?"

"ஜெயில்ல இருந்தா..? ஸ்டேஷன்லன்னு சொல்லுங்க."

"தப்பு.. தப்பு.. நம்ம வரைல ஸ்டேஷனுக்குப் போறதுங்கறதே ஜெயிலுக்குப் போற மாதிரிதானே?"

- மருதாசலம் பார்வை உடனே ருத்ரா பக்கம் திரும்பி அவரைப் பார்த்தது. அதிலே, 'பார்த்தீங்களா என் நிலைமைய..?' என்னும் கேள்வி.

ருத்ரா பதிலுக்கு பட்டாச்சாரியிடம், "சாமி.. இந்த ஊர்ல யாரோ ஒரு மந்திரவாதி, சேட்டை பண்ணிகிட்டு சுத்திச் சுத்தி வந்துகிட்டிருக்காராம்ல..? அவராலதான் எங்கப் பையனுக்கும் பிரமை பிடிச்சிடுச்சுன்னு கேள்விப்பட்டேன்.. அந்த மனுஷன் இங்கதான் கோயில்ல கிடப்பாராம்ல?" என்று கேட்க,

"ஆமாமா.. கோயிலைச் சுத்தி வாங்கோ.. வெளிய புன்னைமரத்தடியில் பாக்கலாம். இல்ல எங்கயாவது போயிருப்பார் அந்த மகானுபாவர்.."

"அவரைப் பாக்கணும்.. 'நீ சேட்டை பண்ண எங்க வீட்டு ஆளுங்கதான் கிடைச்சாங்களா?'ன்னு கேட்கணும்.."

"அதெல்லாம் ஒரு பிரயோஜனமும் கிடையாது. நான் கேட்காத கேள்வியாக்கும்? அந்த மனுஷனை இந்தக் கிருஷ்ணன்தான் அடக்கி அடிச்சுத் துரத்த முடியும்"

"கிருஷ்ணனா..? அட என்ன சாமி நீங்க.. எந்தக் காலத்துல சாமி நேர்ல வந்துருக்கு? நாமெல்லாம் ஒன்னா சேர்ந்து நாலு சாத்து சாத்துனா, துண்டக்காணோம் துணியக்காணோம்னு ஓடிட்டுப் போறாரு.."

"உங்களுக்கு அந்த மனுஷனோட சித்து வேலை பத்தி சரியாத் தெரியல.. அதான் இப்படிப் பேசறேள்.."

"என்ன பெரிய சித்து..? என்கிட்ட அந்தாளை காட்டச் சொல்லுங்களேன்.."

"அப்ப நீங்க அவரோட மல்லு கட்ட வந்துருக்கேள்னு சொல்லுங்கோ."

-பட்டாச்சாரியார் கேட்க ராகவ் செருமியவனாக, "மாமா.. என் பேரு தேவராஜ் மாஸ்டர். இன்னிக்கு சென்னைல இருக்கற அவ்வளவு மியூசிக் டைரக்டர்களுக்கும் இவர்தான் குரு" என்று தேவராஜ் மாஸ்டர் பக்கம் அவர் கவனத்தைத் திருப்பினான். "அதான் செல்லப்பா ஆத்துலயே பார்த்தேனே..? ரொம்ப சந்தோஷம்.. நீங்கள்லாம் பெரிய மேதைகள்.. ஆனா நீங்க வந்துருக்கற இந்தக் காலகட்டத்துல ஊர்ல ஒரே குழப்பமான நிலை.. இதோ இவரோட பிள்ளை போலதான் கொலைப்பழி.. செல்லப்பாவோ போயே சேர்ந்துட்டார். அடுத்து யார் உயிர் எப்ப எப்படிப் போகும்னு தெரியாதபடி ஒரு மர்மமான நிலை."

- பட்டாச்சாரியார் புலம்பிக்கொண்டே திரும்பிச் சென்று துளசித் தட்டை வைத்துவிட்டு, சாளக்ராம கற்களை பட்டு வஸ்திரத்தோடு சேர்த்து எடுத்தார்.

அப்படியே வெளியே வந்தவர் சந்நிதிக் கதவை இழுத்து மூடப் போனார்.

"ஒரு நிமிஷம்.." -தேவராஜ் மாஸ்டர் தடுத்தார்.

"சொல்லுங்கோ.. என்ன விஷயம்?"

"ஒரு சின்ன வேண்டுகோள்"

"என்னன்னு சொல்லுங்கோ"

"திருச்சந்நிதில சுவாமி கைல இருக்கற புல்லாங்குழலை கொஞ்சம் பாக்க முடியுமா?"

"அதை அபிஷேகம் பண்ணும்போதுகூட எடுக்கக் கூடாதுங்கறது இங்க ஐதீகம்."

"அந்தப் புல்லாங்குழலைதானே கிருஷ்ண பகவானே வந்து கொடுத்தா சொல்வாங்க..?"

"இல்ல.. இது வேற! அந்தப் புல்லாங்குழல் எங்க இருக்குன்னு யாருக்குமே தெரியாது.. அனேகமா இந்தப் பைராகி வந்து இந்த ஊரைச் சுத்தறது அதுக்காககூட இருக்கலாம்."

"அப்ப அது எங்க இருக்குன்னு யாருக்குமே தெரியாதா?"

"தெரியாது.. அது கிருஷ்ண ரகசியம்.."

"ஆச்சரியமா இருக்கே.. ஆமா நீங்க எங்கையோ கிளம்பிட்ட மாதிரி தெரியறதே..?"

"நான் திரௌபதி அம்மன் கோயில் குளத்தை நோக்கித்தான் போயிண்டிருக்கேன். இந்தச் சாளக்ராமங்களை அப்படியே இந்தப் பட்டுல ஒரு மூட்டையா கட்டி போட்றப்போறேன்.. அந்தக் கிருஷ்ணனே வந்து இந்த ஊரின் சிக்கல்களை எல்லாம் தீர்த்து வைக்கட்டும்."

"இதை நீங்க கோயில்லயே தீர்த்தப் பாத்திரத்துல போடப் போறதாயில்ல சொன்னீர்..?"

"ஆமாம்.. இங்க போட்றதவிட குளத்துல போட்றது ரொம்ப விசேஷம்.. அந்தக் கிருஷ்ணனும் சீக்கிரமா வருவான்!"

- பட்டாச்சாரி சொன்னது ருத்ராவை அதிரச் செய்தது. மருதாசலத்தைப் பார்த்து, "என்ன மாப்ளை சொல்றார் சாமி.. சாமி வருவாரா?"- என்று கேட்டார்.

"தெரியல.. எனக்கே இதெல்லாம் புதுசா இருக்கு!" என்றார் மருதாசலம்.

"என்ன சாமி நீங்க.. சாமி வர்றத ரொம்பச் சாதாரணமா சொல்றீங்க.. இந்தக் கல்ல குளத்துல போட்றதுக்கும், சாமி வர்றதுக்கும் என்ன சாமி அப்படிச் சம்பந்தமிருக்கு?"

"உங்களுக்குச் சொன்னா புரியாது. இதுதான் இந்த ஊர் வழக்கம்.."

"வழக்கம் சரி.. இதை நீங்க நம்பறீங்களா?"

"இது என்ன கேள்வி..? நம்பாமதான் இதைத் தூக்கிகிட்டுப் போய் போடப்போறேனா?"

"நான் தெரியாமதான் கேக்கறேன். ஒருத்தரால பிரச்சினைன்னா, அதைத் தீர்த்துக்க இந்தக் காலத்துல எவ்வளவோ வழி முறைகள் இருக்கு.. போலீஸ்க்குப் போகலாம். மீடியாகாரங்களைக் கூப்பிட்டு பத்திரிகையில வரவழைக்கலாம். ஊர்க்காரங்க எல்லாம் ஒன்னா சேர்ந்து எதிர்த்து நிற்கலாம். இல்ல கலெக்டரைப் பார்த்து மனு கொடுத்து, அரசாங்க உதவிய கேட்கலாம். இது எதையுமே செய்யாம இப்படி ஏதோ சில கல்லுங்கள கொண்டு போய் குளத்துல போட்டா சாமி வரும், அது பாத்துக்கும்னு

> **"எந்தக் காலத்துல சாமி நேர்ல வந்துருக்கு? நாமெல்லாம் ஒன்னா சேர்ந்து நாலு சாத்துசாத்துனா, துண்டக்காணோம் துணியக்காணோம்னு ஓடிட்டுப் போறாரு..."**

சொல்றதெல்லாம் உங்களுக்கே ஓ மச்சா தெரியல..?"

- ருத்ரா கேட்டுவிட்டார். அதை தேவராஜ் மாஸ்டர் மனதுக்குள் வழிமொழிந்தார்.

பட்டாச்சாரி உதட்டில் ஒரு கேலிச் சிரிப்புதான் பதிலுக்குத் தோன்றியது.

"இப்படிச் சிரிச்சா எப்படி.. பதில் சொல்லுங்க?"

"என்ன பெரிய போலீஸ்.. என்ன பெரிய மீடியா..? கோடிக்கணக்குல எலெக்ஷனை ஒரு பிசினஸ் மாதிரி நினைச்சு செலவு பண்ணி ஜெயிக்க வரான். இப்படி வர்றவனுக்கு கட்டுப்பட்டவாதான் போலீஸ்காரா. அந்த நாள்ல இருந்து இன்னி வரை மோட்டார் சைக்கிள்காரனைத்தான் பிரமாதமா பிடிக்கறா. எத்தனை அசல் கிரிமினலை பிடிச்சிருப்பா, இல்ல தண்டிச்சிருப்பா? ஊர் ஒன்னா சேர்ந்தான்னு ஏதோ சொன்னேள். எந்தக் காலத்துல சேர்ந்துருக்கு..? உயிர் இல்லாத அரசியல் தலைவர் சிலைக்கு எவனாவது செருப்பு மாலை போட்டா, ஊரையே உண்டு இல்லைனு பண்றா- இவா வசிக்கற தெருவுக்குத் தார் ரோடு போட்டு ஒரு மாமாங்கம் ஆச்சு.. அதுக்காக ஒன்னா சேர்ந்திருப்பாளா..? இல்ல சரியா எடை போடாத ஒரு ரேஷன் கடைக்காரனைத்தான் இவா திருத்தி வழிக்குக் கொண்டு வந்திருப்பாளா? அன்றாடம் தங்களை நொடிக்கு நொடி பாதிக்கற சிக்கல்களையே பெரிசா எடுத்துக்காத நமக்கு, எதுக்கு ஊர் வம்புங்கற? கேள்வியை அஷ்டாட்சர மந்திரம் மாதிரி விடாம ஜெபிக்கற ஊரை என்னால எல்லாம் ஒன்னா சேர்க்க முடியாதுப்பா. நான் அரசியல்வாதி இல்ல.. என்கிட்ட பணமும் இல்ல, இவாளைத் திரட்ட..

அப்புறம் கலெக்டர், கவர்மென்ட்டுன்னு ஏதோ சொன்னீங்க.. ஒரு ஆட்டோக்காரனை மீட்டர் போட்டு ஓட்ட வைக்க முடியாது. ஒரு அரசாங்கம் நான் சொல்றதுனா காது கொடுத்துக் கேட்டுடப் போறது?"

- பட்டாச்சாரியின் கேள்வி நியாயங்கள், ருத்ராவை வாயடைக்கச் செய்துவிட்டன.

"நீங்க ரொம்பவே விரக்தியா பேசறீங்க.. எல்லா இடத்துலயும் தவறுகள் இருக்கு. அதே சமயம் தேச பக்தியும், கடமை உணர்ச்சியும் கொண்டவங்களும் இருக்காங்க சாமி.." -என்றார் வேகமாய்.

"நான் மறுக்கலப்பா.. அவாளை இப்ப நான் எங்கன்னு போய்த் தேட..? எனக்குத் தெரிஞ்ச ஒரு குறுக்குவழி இது- அதான் நான் இப்படி இறங்கிட்டேன்."

"அப்ப உங்க வரைல அந்தக் கிருஷ்ணன் வருவான்னு நீங்க உறுதியா நம்பறீங்க.. அப்படிதானே?"

"இது குளத்துல மூழ்கின நிமிஷத்துல இருந்தே ஆரம்பமாயிடும் அற்புதம்.. எனக்கு நம்பிக்கை இருக்கு.."

- பட்டாச்சாரி புறப்பட்டார். அதை வெகுதூரத்தில் ஒரு கல் தூண் பின் மறைந்த நிலையில் இருந்து பார்த்தபடியே இருந்தார் பைராகி!

(தொடரும்)

# கிருஷ்ண தந்திரம்!

"சந்நிதிக்குள் காட்சி தந்த கிருஷ்ணன், பண்டாரியையும் பட்டாச்சாரியாரையும் அப்படியே மயக்கிவிட்டான். 'கண்ணனாவது, கிருஷ்ணனாவது? அவன் இல்லவே இல்லை.. அவனுக்கு அறிவே இல்லை. ஒரு மாட்டுக்காரனைப் போய் மகான் ஆக்கிவிட்டான்' என்றெல்லாம் பேசி கோபமும் கொந்தளிப்புமாய் இருந்த பண்டாரி, அந்தக் குழந்தை முன்னால், உருகிக் கொண்டிருக்கும் வெண்ணெய் கணக்காய் மாறியதுதான் ஆச்சரியமான ஆச்சரியம். பட்டாச்சாரியும் அப்படித்தான்..! அந்தக் குழந்தை கிருஷ்ணனும் வாசிப்பதை நிறுத்திவிட்டுச் சிரித்தவனாக, 'வா.. என்கூட நேர்ல சண்டை போடு' என்று வார்த்தைகளில் நேராகவே அழைக்கவும், பண்டாரிக்கு உடம்பெல்லாம் நடுங்க ஆரம்பித்துவிட்டது. 'கிருஷ்ணா.. கிருஷ்ணா..' என்றார். அதற்கு மேல் கோர்வையாக ஒரு வார்த்தையும் வரவில்லை. பட்டாச்சாரியாரோ விக்ரகத்தை அர்ச்சிக்கிற மாதிரி, அங்குள்ள திருத்துழாயும் சடாரியும் உள்ள தட்டை எடுத்துக்கொண்டு, 'அச்சுதாய நம.. அனந்தாய நம.. கோவிந்தாய நம.. வாமனாய நம.. ஸ்ரீதராய நம..' என்று அர்ச்சிக்கத் தொடங்கிவிட்டார்.

குழந்தை கிருஷ்ணன் உதட்டிலோ கொள்ளைச் சிரிப்பு. சட்டென்று ஒரு பொய்க்கோபம் வேறு! 'பட்டாச்சாரி உன் அர்ச்சனையை நிறுத்து! இந்தக் கோயிலுக்கு ஜனங்க வரலேன்னு நீ வருத்தப்பட்டது வரைதான் சரி.. அதுக்கு மன்னார்தான் காரணம்னு எப்படி நினைக்கலாம்? இதுக்குதான் நான் யாருக்கும் எதையும் கொடுக்கறதேயில்லை. கொடுத்தாலே சிக்கல்தான் போல இருக்கு' என்றது அந்தத் தெய்வக் குழந்தை. அதைக் கேட்ட பட்டாச்சாரி முகத்தில் அதிர்ச்சி. 'சின்னக் கஷ்டத்தைக்கூட அனுபவிச்சுத் தீர்க்க யாரும் தயாரா இல்லை. அதை எப்படித் தள்ளிவிடலாம்னுதான் பாக்கறாங்க.!' என்னும் அதே குழந்தை பேசியதில் ஆயிரம் உள்ளர்த்தங்கள். சட்டென்று அந்தக் குழந்தை தன் வசம் இருந்த தான் வாசித்த அந்தப் புல்லாங்குழலை பண்டாரியை நோக்கி நீட்டியது. பண்டாரி முகத்தில் திகைப்பு.

'இந்தா.. வெச்சுக்கோ.. உனக்கு நான் இப்படி ஒன்னு தரலைங்கற ஆதங்கம்தானே என்னையே இல்லைன்னு சொல்லவெச்சது?

அந்தக் குழந்தை கேட்ட கேள்வி, நெத்திப் பொட்டில் அடித்தது'

பட்டாச்சாரி, வைராகி இருந்த தூணைக் கடக்கும் போது, வைராகி அவர் பார்த்துவிடாதபடி தன்னை ஒளித்துக் கொண்டார். இதை யார் கவனித்தார்களோ, இல்லையோ... ருத்ரா கவனித்துவிட்டார்.

மாஸ்டர் தேவராஜுக்கும், ராகவுக்கும் பட்டாச்சாரியை பின் தொடர்ந்து சென்று அந்தக் குளத்தைப் பார்க்கும் ஆவல் தொற்றிக்கொண்டது. அன்புமணியோடு முதலில் அங்கே போவதாகத்தான் இருந்தது.



28

# இந்திரா சௌந்தர்ராஜன்



ஆனால், வழியில் அன்புமணியின் தங்கைக்கு உடல் நலமில்லை என்ற செய்தி வரவும் அவன் பிரிந்து சென்றுவிட்டான். இப்போது திரும்பவும் வாய்ப்பு! இருவரும் பட்டாச்சாரியைப் பின் தொடரத் தொடங்கினர். ருத்ராவுக்கு அவர்கள் விலகியது வசதியாகிவிட்டது. அங்கேயே நின்றார். மருதாசலத்துக்கு அடுத்து என்ன செய்வது என்பதில் லேசான குழப்பம்.

"இப்படி இங்கயே நின்னுட்டா எப்படி?"

"காரணம் இருக்கு மருதாசலம். அங்கே தூணுக்குப் பின்னால ஒருத்தர் ஒளிஞ்சிருக்கார். தாடியும் மீசையுமா ஒரு நொடிதான் கண்ணுலபட்டார். அநேகமா அவர்தான் அந்தப் பைராகியா இருக்கணும்கறது என் யூகம்..." -அந்தத் தூணைப் பார்த்தபடியே பேசினார் ருத்ரா.

பேசினதோடு மட்டுமில்லாமல் பூனை போல அந்தத் தூணை நோக்கி நடக்கவும் செய்தார். தூணை நெருங்கின நொடி, 'வாங்க போலீஸ்காரரே! வாங்க..!' என்ற குரலோடு பைராகியே முன் வரவும், ருத்ராவுக்கே அது சற்று அதிர்ச்சியாகத்தான் இருந்தது. பதிலுக்கு, 'நானா? போலீஸ்காரனா..?' என்றெல்லாம் மறுப்பாக எதையும் பேசவில்லை. ஒரு தீர்க்கமான ஊடுருவும் பார்வை மட்டுமே... ஆனால் பைராகி அந்தப் பார்வையைக் கொஞ்சமும் பொருட்படுத்தாமல் இடுப்பு மடிப்பில் இருந்து ஈரப்புகையிலையை எடுத்து ஒரு ருத்திராட்சம் அளவு உருட்டி, அதை வாயண்ணத்தில் வைத்துக் கொள்வதில் மும்முரமாகிவிட்டார்.

"மருதாசலம்... இவர்தான் உங்க மகனை பிரமையில விழ வெச்சவரா?"

ருத்ராவும் நேராக மோதுவதுபோல கேள்வி கேட்கத் தொடங்கிவிட்டார்.

"அப்ப மந்திரசக்தி. அதால ஒருத்தரை கட்டிப் போட்றது இதை எல்லாம் நீங்க ஒத்துக்கறேன்னு சொல்றீங்களா ருத்ராபதி..?" -பைராகியின் கேள்வி ருத்ராவை உரசியது.

"சாமிக்கு என் பேர் எப்படித் தெரியும்னுல்லாம் கேட்கமாட்டேன். என் பேரை டிபார்ட்மென்ட்ல எல்லாருக்கும் தெரியும். நான் ஒரு போலீஸ்காரன்னும் உங்களுக்கு எப்படித் தெரியும்னுல்லாம் கேட்கமாட்டேன். அதெல்லாம் கிரிமினல் புத்திக்காரங்களுக்கு சாதாரணம். இவர்தான் உங்க மகனை பிரமையில விழவெச்சவரான்னு நான் கேட்டதால, நான் அதை நம்பிட்டேன்னு அர்த்தமில்லை..."

- ருத்ராவும் கம்பீரம் குறையாமல், 'சபாஷ் சரியான போட்டி' என்பதுபோல பேசத்தொடங்கிவிட்டார்.

"பாவம் போலீஸ்காரரே நீங்க... இன்னிக்கே இந்தக் கேஸ்ல உங்களுக்கு ஒரு பெரிய ஆச்சரியம் காத்திருக்கு. நாலு நாள்ல இந்தக் கேஸே திசை திரும்பினா, நான் கொஞ்சம்கூட ஆச்சரியப்படமாட்டேன். சுருக்கமாகச் சொல்லிக்கிறேனே... இந்தக் கண்ணமங்கலத்துல உங்க டிபார்ட்மென்ட்டுக்கு ஒரு வேலையும் இருக்கப் போறதில்லை..." என்ற பைராகியை மருதாசலம் அடுத்து பிடித்துக்கொண்டார்.

"போங் சாமி... யாருய்யா நீ எதுக்குய்யா இப்படி இந்த ஊர்ல அழிச்சாட்டியம் பண்ணிகிட்டு திரியறே? என் மகன் அப்படி என்ன தப்பு பண்ணிட்டான்? அவனை இப்படிப் பிரமை பிடிச்சமாதிரி ஆக்கியிருக்கியே நீ..." என்கிற அவரது கோபத்தை பைராகி கொஞ்சமும் லட்சியம் செய்யவில்லை.

"ஆசைங்கறது ஒரு அளவோட இருக்கணும்... உன் பையன்கிட்ட இருந்தது பேராசை. அதான் அவனை சந்தி பூதம் பிடிச்சிருக்கு. அவன் இப்படி இருக்கறதுக்காக நீ சந்தோஷப்படுவே... இதோ இந்த ஆளையும், 'ஸார், தயவு செய்து நீங்க போயிடுங்க'ன்னு சொல்லே. உங்களுக்கு ஒரு சில வார்த்தைகளை மட்டும் சொல்லிக்கிறேன். இது கிருஷ்ண பூமி. இங்க எந்தத் தப்பும் நடந்துடாது. நடக்க அந்தக் கிருஷ்ணனும் விடமாட்டான். இத்தனை நாளா நான் எது நடக்கணும்னு எதிர்பார்த்துக் காத்துக் கிடந்தேனோ அது நடக்க ஆரம்பிச்சாச்சு... இதுவரை நடந்ததெல்லாம் விஷயமே கிடையாது. இனி நடக்கப் போறதுதான் விஷயம்!

போலீஸ்காரா! நான் எங்கேயும் ஓடிப் போகமாட்டேன். என் தேடலும், லட்சியமும் என்னன்னு உன்னால மட்டுமில்ல, இந்த ஊர்ல இருக்கற யாராலயும் கண்டுபிடிக்க முடியாது. நான் தேடினது கிடைக்கற வரை இதே ஊர்ல, இதோ இதே கோயில்ல, அதோ அந்தப் புன்னமரம் கீழ்தான் கிடப்பேன்.

என்னைக் கைது செய்ய சரியான சாட்சியமும், காரணமும் உனக்குக் கிடைக்கும்போது நீ எப்ப வேணா வந்து என்னை அரெஸ்ட் பண்ணிக்கோ. அதுவரை இந்த மாறு வேஷம் மட்டுமில்ல, எத்தனை வேஷம் வேணா போட்டுக்கோ, நான் வரேன்..." -பைராகி படு அலட்சியமான ஒரு பேச்சோடு அங்கிருந்து புன்னை மரம் நோக்கி நடக்கத் தொடங்கினார். ருத்ராவிடம் நிஜமாகவே ஒருவித ஸ்தம்பிப்பு!

**பட்டு வஸ்திரத்தில் கட்டிய அந்தச் சாளக்ராமங்களை அப்படியே தலைக்கு மேல் தூக்கி நடுக்குளம் நோக்கி எறிந்தார்.**

திரௌபதி கோயில் குளம்! சற்றே பாசி படிந்த பச்சை நீர்க் கூட்டம். அதனுள் கண்டு விரல் பருமனில் இருந்து முழு நீளம் வரைக்கும் வளர்ந்துவிட்ட மீன்களின் கூட்டம். எந்தக் கோஷமும் போடாமல், கொடியும் பிடிக்காமல் அவை ஊர்வலம் போகும் அழகை எல்லாம் ரசிக்க அங்கே யாருமில்லை. புழுதி பறக்க ஆராவமுத ஐயங்கார்தான் குளத்தைக் குறி வைத்து வந்து கொண்டிருந்தார். அவர் அப்படி வரும் போது ஊரைச் சேர்ந்த சிலரையும் ஒரு சாட்சி போல அழைத்து வந்துவிட்டது போலத்தான் தோன்றியது. கூடவே மாஸ்டரும், ராகவும் இருந்தனர்.

"மாஸ்டர்... பட்டர் ஒருமாதிரி ஃப்ரஸ்ட்ரேஷன்ல இருக்கார். இதெல்லாம் அவரோட தனிப்பட்ட நம்பிக்கை- உங்களுக்கு எப்படித் தோணுது?" என்று நடந்து வரும்போதே ஒரு கேள்வியை அவன் கேட்டிட, மாஸ்டர் அதற்குப் பதில் கூறாமல் சிரித்தார். "என்ன மாஸ்டர் சிரிக்கிறீங்க...? இவரைப் பின்தொடர்ந்து வந்து வேடிக்கை பார்க்கற அளவுக்கு இதுல எதுவுமில்லேங்கறதுதான் என்னோட அபிப்ராயம்..."

"அப்ப எனக்காகத்தான் ராகவ் நீ கூட வர்றியா?"

"அஃப்கோர்ஸ், அப்படிக் கூட சொல்லலாம்."

"ஸாரி ராகவ்... நான் இந்த பட்டாச்சாரியோட உணர்வுகளை மதிக்கிறேன். இவர் இப்ப செய்யப் போற காரியம் கொஞ்சமும் சுயநலம் இல்லாத ஒரு காரியம். தனக்காக, தன் குடும்பத் தேவைக்காக இவர் இங்க இப்படி எல்லாம் செய்யல. ஆகையால் இதனால் நிச்சயம் அவர் எதிர்பார்த்த மாதிரி ஒன்னு நடந்தே தீரும்..."

"யூ மீன்... இவரோட எதிர்பார்ப்பு, இப்படிச் செய்தா கிருஷ்ணன் வருவான்கறது... அப்ப கிருஷ்ணன் வருவான்னு நீங்க நம்பறீங்களா?"

"கடவுன்னா வரவே முடியாதவர்ங்கறதுதான் உன் தீர்மானமான முடிவா?"

"என்ன மாஸ்டர் இது கேள்வி..? கடவுள் நேர்ல வந்தார்ச் சொல்ற புராணங்கள்ள எனக்கு சுத்தமா நம்பிக்கை கிடையாது. ஒரு முன்னூறு வருஷ ஹிஸ்டரி நம்ம கைல பார்க்கக்கூடிய அளவுல இருக்கு. இந்த முன்னூறு வருஷத்துல எங்கயாவது கடவுள் வந்திருக்காரா?"

- ராகவ் ஏதோ ஒரு மாபெரும் கேள்வியைக் கேட்டுவிட்டவன் போல மாஸ்டரைப் பார்த்தான். அவரும் அசரவில்லை.

"அவர் வரலேன்னு உனக்குத் தெரியுமா ராகவ்?"

"வந்துருக்காரா... எங்க..? எப்ப...?"

"நிறைய தனி நபர்களுக்குத் தரிசனம் கிடைச்சிருக்கு... தியாகையர் ராமனை தரிசிச்சிருக்கார். சதாசிவ பிரம்மேந்திரர் அந்தப் பாலாஜியை தரிசனம் செய்திருக்கார். பல சக்தி உபாசகர்கள் அம்பாளை தரிசனம் செய்திருக்காங்க. அருணகிரிநாதருக்கு முருக தரிசனம் நிகழ்ந்து. திருப்புகழையே அவர் இந்த மண்ணுக்குப் பரிசா தந்தி

ருக்கார்"

"போதும் மாஸ்டர்... நீங்க சொல்ற அவ்வளவுக்கும் சாட்சிகள் கிடையாது. நம்பிக்கை அடிப்படையில நான் ஏற்க வேண்டிய விஷயங்கள் அவை. கடவுள்னு ஒருத்தர் இருந்தா பளிச்சுன்னு ஒரு தடவை, ஒரே ஒரு தடவை ஒரு நடுராத்திரில வானத்துல சூரியனும் சந்திரனும் உலகுக்கே பொதுவா தெரியற மாதிரி காட்சி தந்து, ஜஸ்ட் ஃபைவ் செகண்ட்ஸ் போதும், 'நான் இருக்கேன்- எல்லோரும் ஒழுங்கா வாழற வழியைப் பாருங்க...'ன்னு சொல்றதுக்கென்ன? எப்பவும் அவர் ஏன் ஒளிஞ்சே இருக்கணும்? அதனாலதானே என்னைப் போல பலர், 'ஒருவேளை அவர் இல்லவே இல்லையோ, நாமதான் நம்ம எண்ணத்தால அவருக்கு ஒரு வடிவம் கொடுத்து ஒரு பொய்யான நம்பிக்கையை மனசுக்குள்ள கமக்கறோமோ..?'ன்னு நினைக்கத் தோணுது...?"

- ராகவ் கேட்டதிலும் ஒரு மெல்லிசான நியாயம் இருக்கத்தான் செய்தது. தேவராஜ் மாஸ்டர் அதற்கொரு பதிலை சொல்வதற்குள் குளத்தங்கரை வந்துவிட்டது. கூட்டமாக வருபவர்களைப் பார்த்துவிட்டு, பூசாரியும் கோயிலுக்குள்ளிருந்து வந்து நின்றார். ஆராவமுத ஐயங்கார், வந்த வேகத்தில் குளத்தின் கரையில் இறங்கி நின்றார். கையில் சாளக்கிராம மூட்டை!

எல்லோரையும் ஒரு பார்வை பார்த்தார். பின்னர் பேச ஆரம்பித்தார்.

"எல்லோரும் நன்னா பார்த்துக்குங்கோ... இது நம்ம பெருமாளோட சாந்நித்தயம் உள்ள சாளக்ராமங்கள். நமக்கெல்லாம் இது உசுரைவிடப் பெருசு. இது இருக்கற ஊர்ல இப்ப நிம்மதி இல்லை. எப்ப எது நடக்கும்னும் தெரியல. சூன்யம் வெச்ச மாதிரி வைக்கோல் போர் எல்லாம் பத்தி எரிய ஆரம்பிச்சது. அப்புறம் ஆடு, மாடுகள் ஒரு காரணமும் இல்லாம செத்து விழ ஆரம்பிச்சது. பலரோட வேஷ்டி, புடவை முந்தில தீப்பிடிச்சு, அவர்கள் உயிர் தப்பிச்சதே பெரிய விஷயமாச்சு. இந்த ஊருக்கே பெருமை சேர்த்த மகாவித்வானான செல்லப்பா, வைகுண்ட பிராப்தியடையும்படி ஆச்சு. கடவுள் இல்லேன்னு மறுத்தாலும், ஊர் ஒன்னா இருக்கணும்னு நினைச்சவன் தமிழழகன்... அவனுக்குப் பைத்தியம் பிடிச்சிருக்கு! பச்சைக் குழந்தையும், இவனும் ஒன்னுன்னு சொல்ற அளவுக்கு மனவளர்ச்சியே இல்லாதவன் யக்ஞன்... அவன் உயிர் அநியாயமா கொலை செய்யப்பட்டுப் போயிருக்கு... இப்படி அடுக்கடுக்கா தப்புகள், தவறுகள்! இதுவரை நம்ம ஊர் கிருஷ்ணனை சேவிக்கத்தான் இந்த ஊருக்கு போலீஸ் வந்திருக்கு. ஆனா இன்னிக்கு, சிலரை கைது பண்ணிண்டு போறதுக்காக வந்திருக்கு.

வடக்க ஒரு பண்டரிபுரம் மாதிரி, தெற்க ஒரு திவ்ய க்ஷேத்ரம் இது. அந்தக் கிருஷ்ண பரமாத்மா காலடிபட்ட ஊரும்கூட... இங்கே வந்தா கல்மனசுக்காரனுக்குக்கூட மனசுல ஒரு உருக்கம் ஏற்படும். கத்துமா ஞானமே இல்லாதவனுக்குக்கூட ஞானம் ஏற்படும்னு சொல்வா. பல மகான்கள் இந்த மண்ணுல நடமாடி, நல்ல வழியையும் காட்டியிருக்கா. அப்படி ஒரு புகழ் மிக்க மண்ணுல தப்பு தப்பா காரியங்கள் நடக்கறத, என்னால நினைச்சே பார்க்க முடியல. எல்லாமே மூடுமந்திரமா இருக்கு. பளிச்சுன்னு இன்னார்தான் குற்றவாளின்னு சொல்ல முடியல. இப்படி ஒரு குழப்பமான சமயத்துல நமக்கெல்லாம் அந்தக் கிருஷ்ணன்தான் துணை இருக்கணும். அதுக்குதான் நான் இந்த சாளக்ராமங்களை இந்த குளத்துல போட வந்துருக்கேன். இதுகூட எங்க பெரியவா எங்களுக்குக் காட்டியிருக்கற ஒரு வழிதான். இது ஒரு உச்சபட்ச வேண்டுதல். ஊரோட பிரார்த்தனை. அந்தக் கிருஷ்ணன் இருக்கறது சத்யம்னா அவனே வந்து நம்ம பிரச்சினைகளையெல்லாம் தீர்த்து, இப்ப நான் இந்தக் குளத்துல போடப் போற இந்த சாளக்ராமங்களையும் எடுத்துத் தரணும்... தருவான்னு நான் நம்பறேன். நீங்களும் நம்புங்கோ! நான் இப்ப, 'கோபிகா ஜீவன ஸ்மரணம்'னு சொல்வேன்... நீங்களெல்லாம் பதிலுக்கு, 'கோவிந்தா கோவிந்தா'ன்னு சொல்லுங்கோ"

- என்று ஒரு நீண்ட உரை நிகழ்த்திய ஆராவமுத ஐயங்கார் உரத்த குரலில் 'கோபிகா ஜீவன ஸ்மரணம்' என்றார். 'கோவிந்தா கோவிந்தா' என்றது கூட்டம். அடுத்த நொடியே, பட்டு வஸ்திரத்தில் கட்டிய அந்தச் சாளக்ராமங்களை அப்படியே தலைக்கு மேல் தூக்கி நடுக்குளம் நோக்கி எறிந்தார்.

'பளக்' என்று ஒரு பெரும் சப்தம். அந்தப் பட்டு மூட்டை நீரில் மூழ்கிப் போனது!

புதுக்கோட்டை ஜி.ஹெச்.சின் மார்ச்சுவரி அறை!

ஒரு தற்கொலைப் பிணம் ஒன்றை அடையாளம் காட்ட உறவினர்கள் சிலர் வந்திருந்தனர். ஏ.ஸி. காரேஜின் இரும்புப் பெட்டி அறைகளுக்குள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு விதமான பிணம். அதில் ஒரு இரும்புப் பெட்டியை குளிர் ஆவி பறக்க ஸ்வீப்பர் ஒருவன் பிடித்து இழுத்தான். உள்ளே யக்ஞனின் சடலம்! அதை எட்டிப் பார்த்த அந்தச் சிலர், "இது இல்லங்க... இது யாரோ..." என்றனர். ஸ்வீப்பரும் திரும்ப மூடப் போனான். அப்போது யக்ஞனின் முகத்தில் நெற்றிப் பரப்பில் திட்டுதிட்டான ரத்தத் திப்பிகளை மீறி, புருவத்தில் ஒரு வளைவு. நெற்றியிலும் சுருக்கம் விழ ஆரம்பித்தது. ஸ்வீப்பர் மட்டுமல்ல. அதைப் பார்த்த மற்றவர்களும் விக்கித்துப் போய் நின்றனர்!

(தொடரும்)

# கிருஷ்ண தந்திரம்!

"பண்டாரி திருதிருவென்று விழித்தார். அவர் சற்றும் எதிர்பார்த்திராத ஒரு விஷயம் அது. கிருஷ்ணனோ, 'இம்... பிடி... இதுவும் அதே மாதிரி புல்லாங்குழல்தான். இதை வெச்சுண்டு நீ அந்த மன்னாரோட போட்டி போடலாம். பட்டாச்சாரி! இதைப் போய் ஊர்ல எல்லார்கிட்டேயும் சொல்லு... இதுல பூபாளம் வாசிச்சா பூக்காத மரம்கூட பூத்துடும். பண்டாரி... இனி என்னை வையாதே. அதேசமயம் உனக்கு ஒரு வார்த்தை. இதை நான் மன்னார்கிட்டக் கூட சொல்லலை. ஆனா நான் இப்ப சொல்லப்போறது அந்த மன்னாருக்கும் சேர்த்துத்தான்... உங்க ரெண்டு பேருக்குமே சுய நலமோ, கர்வமோ கூடாது. தர்மம் பிசகினா இந்தக் குழலே பாம்பா மாறிடும், ஜாக்கிரதை!' என்றிட அந்த புல்லாங்குழலையே உற்றுப் பார்த்து ஆனந்தக் கண்ணீர்விடத் தொடங்கினார் பண்டாரி.

'என்ன பாக்கறே..? வெளிய போய் உக்காந்து வாசி. அப்பத் தெரியும் இதோட சக்தி..' என்று கிருஷ்ணன் ஒரு அதட்டு அதட்டவும், 'எனக்கு இதை வாசிக்கத் தெரியாதே..' என்றார் பண்டாரி.

'அட... இது என்ன பிரமாதம்? இதோ இதை இப்படிப் பிடிச்சு, இப்படி உதடு கிட்ட வெச்சுண்டு காத்தை ஊதினா சப்தம் கேட்கப் போறது..' -என்று அந்தக் குழந்தை கிருஷ்ணனே உதட்டருகில் வைத்து ஊதவும், நாதம் பிறந்து ஒரு ஓட்டம் ஓடியது. பண்டாரி திரும்பவும் பிரமிப்பு விலகாமல், அந்தக் குழலையே உற்றுப் பார்த்தார்.



'இது ஒரு முட்டாளைக்கூட பெரிய புத்திசாலியாக்கிடும். இது கைல இருந்தா போதும், நினைச்சது நடக்கும். ஒரு வகைல இது மந்திரக் கோல் மாதிரியும்கூட... 'ஜெய் கேசவா'ன்னு சொல்லி இதை ஆட்டினா, கற்சிலைக்கும் உசுர் வரும்! உசுருள்ள யானையும் கல்லாக்கலாம்! நம்ப முடியலையா? வா, காட்றேன்..' - குட்டிக் கிருஷ்ணன் சந்நிதியை விட்டு வெளியே ஓடினான். வெளியே ஒரு தூணில் யாளி... இன்னொரு பக்கம் கல் யானை ஒன்று. கிருஷ்ணன் அந்தக் கல் யானை முன் சென்று, 'ஜெய் கேசவா' என்று மழலைக்குரலில் கூறி குழற்கோலை அசைக்கவும், அந்தக் கல் யானைக்கு அடுத்த நொடி உயிர் வந்து அது பிளிற ஆரம்பித்தது. பண்டாரியும் சரி, பட்டாச்சாரியும் சரி, உறைந்து போய்விட்டார்கள்!"

ஸ்வீப்பர் அடுத்த நொடியே அந்த ஏணி, அறைப்பெட்டியை முழுவதுமாக வெளியே இழுத்தான். சாம்பிராணி புகை போட்டது போன்ற பனிப் புகையை விலக்கிவிட்டு, வயிற்றுப் பாகத்தை உற்றுப் பார்த்தான்.



அது ஒரு பத்து மில்லி மீட்டர் உயரத்துக்கு மெல்ல எழும்பி, அந்தச் சடலம் சுவாசிப்பதை அவனுக்குக் காட்டிக்கொடுத்தது.

தற்கொலை செய்து கொண்டு விட்ட தங்கள் உறவுக்காரரின் பிணத்தைத் தேடி வந்தவர்கள், "இது என்ன அநியாயம்...? உசுரோட இருக்கற ஆளை, பிணவறைல போட்டு வெச

இந்திரா சௌந்தர்ராஜன்

சிருக்காங்களே..." என்றான். அந்த ஸ்வீப்பர் மார்ச்சுவரி டாக்டருக்குத் தகவல் தருவதற்காக ஓடத்தொடங்கினான்!

மருதாசலம் வீடு!

மருதாசலமும் ருத்ராவும் உள்ளே நுழைந்தபோது, வீட்டினுள் அன்புமணி அமர்ந்திருந்தான். அவன் எதிரில் கண்கள் கலங்கிய நிலையில் மருதாசலம் மனைவி. மருதாசலம் அதிர்ச்சியுடன் அன்புமணியைப் பார்த்தார்.

"நீ எங்கேப்பா தம்பி இங்க?" - என்று கேட்டார். அவன் பார்வை ருத்ராவைப் பார்த்தது. அதற்குப் பொருள், இவர் இருக்கும் இடத்தில் நான் எப்படிப் பேசுவது என்பது தான்...

"இவர் நமக்கு வேண்டியவர் தான்... நீ வந்த விஷயத்தைச் சொல்லு" என்றார் மருதாசலம்.

இருந்தும் அவன் பேச முடியாதபடி வெறித்தான். ஆனால் அவன் மனைவி பேசத் தொடங்கினாள்.

"பட்டகாலிலே படும்... கெட்ட குடியே கெடும்னு பெரியவங்க சொல்றது சரியாத்தான் இருக்கு. நம்ம அருமைப் பிள்ளை இந்தப் பின்னையோட தங்கச்சி கூட நெருங்கிப் பழகினதுல..."

-அவனால் அதற்கு மேல் பேசமுடியவில்லை. ஆனால் பேசாமலே ருத்ராவுக்குப் புரிந்துவிட்டது.

"என்னப்பா உன் தங்கச்சி இப்ப காப்பமா?" -என்று சரியாகக் கேட்



டார் ருத்ரா. மௌனமான ஒரு ஆமோதிப்பு அன்புமணியிடம்.

"என்னப்பா... என் மகன் கிறுக்கனா இருக்கற இந்த நேரத்துல அவன்மேல எதை வேணாச் சொல்லலாம்கற நினைப்பா உனக்கு..? இருக்கற பாரம் போதாது, இது வேறயா?"

-மருதாசலம் சீறிப் பாய்ந்தார். அந்தப் பாய்ச்சலே தமிழ்முகன் தப்பு செய்திருக்க மாட்டான் என்று சொல்லும் பாவனையில்தான் இருந்தது. அன்புமணி அதற்கு மறுப்பாகவெல்லாம் எதுவும் பேசவில்லை. மாறாக அவரை கண்கள் கலங்கப் பார்த்தான். அந்தப் பார்வையே அவன் சத்தியத்தை மட்டுமே பேசியிருக்கிறான் என்பதை ருத்ராவுக்கு க்ஷணத்தில் புரிய வைத்துவிட்டது.

"மருதாசலம், உங்க மகன் இவர் தங்கச்சியோட பழகினது உங்களுக்குத் தெரியுமா, இல்லை சுத்தமா எதுவுமே தெரியாதா?"

"இல்ல ஸார்... சின்ன ஊர் இது! அப்படி திருட்டுத்தனமா பழகியிருந்தா ஒருத்தர் இல்லே ஒருத்தர் சொல்லியிருப்பாங்களே..?"

"என்ன தம்பி... இவர் இப்படிச் சொல்றாரு. நீ எதை வெச்சு இப்படிச் சொல்றே? நாளைக்கு இந்த விஷயத்துல தமிழ்முகன் நிரபராதின்னா, உன்னைப் பிடிச்சு உள்ள போட்டுடுவேன்... நான் யாரோ இல்ல. க்ரைம் ப்ராஞ்ச் போலீஸ் இன்ஸ்பெக்டர்" -அந்த அதட்டலான பேச்சு மட்டும் அன்புமணியை கிறிக் கிழங்கெடுத்தது.

"ஸார்... என் தங்கச்சி கர்ப்பம்கற விஷயமே எனக்கே இன்னிக்குதான் தெரியும். யார் காரணம் உண்மையச் சொல்லுன்னு சொன்னப்பதான் அது, 'நானும் தமிழ்மணியும் யாருக்கும் தெரியாம ரகசியமாப் பழகினோம். புதுக்கோட்டை, தஞ்சாவூருக்கு சினிமாவுக்கெல்லாம் போயிருக்கோம். ஆனா உள்ளூர்ல சண்டைக் கோழிங்க மாதிரி காட்டிக்குவோம்'னு சொல்லிச்சு! ஒரு பெண் தன் கர்ப்ப விஷயத்துல தப்பித்தவறி கூட, பொய் சொல்லமாட்டா. ஒரு வகையில தமிழ் இப்ப இப்படி இருக்கறதுக்குப் பின்னால ஒரு நல்லது இருக்குன்னுதான் சொல்வேன். ஏன்னா தமிழ்முகன் மட்டும் இப்ப பிரமை பிடிக்காம நல்லபடி இருந்திருந்தா, ரெண்டு பேருமே ஊரை விட்டு ஓடியிருந்தாலும் ஓடியிருப்பாங்க. ரெண்டு குடும்ப மானமும் போயிருக்கும்.

இப்பகூட நான், என் அப்பா, அம்மாகிட்டகூட விஷயத்தைக் கொண்டு போகல! நேரா இங்கதான் வந்துருக்கேன். நடந்துட்ட தப்பை உங்களோட பேசி சரி செய்யணும்கறதுதான் என் எண்ணம். இது புரியாம நீங்க என்கிட்ட உணர்ச்சிவசப்பட்டுப் பேச வேண்டாம். ஏற்கெனவே ஊர்ல ஒரே குழப்பம். நீங்க என் தங்கச்சியை ஏதாவது தப்பு சொன்னா, அது தற்கொலை செய்துகிட்டாலும் செய்துக்கும். அப்புறம் பழியோட, பெரிய பாவமும் வந்து சேர்ந்துடப் போவுது?"

- அன்பு மணியின் பேச்சிலும் நிறையவே நியாயங்கள்! கூடவே தமிழ்முகன் இப்போது பிரமையில் இருப்பது ஒரு வகையில் நல்லது என்று அன்புமணி சொன்ன வார்த்தைகளில் ஒரு மின்னல்.

கிட்டத்தட்ட பைராகியுட ருத்ராவிடம் முன்பு பேசிய போது இப்படி ஒரு கருத்தைக் கூறியிருந்தார். அது ருத்ராவுக்கு ஞாபகம் வந்தது. நெற்றி தேய யோசிக்கத் தொடங்கினார். மருதாசலம் ருத்ராவையே வெறித்தார்.

"சரி தம்பி... நீ வீட்டுக்குப் போ. இப்போதைக்கு இது ரகசியமாவே இருக்கட்டும். நான் ஒரு போலீஸ்காரன்கற விஷயமும் யாருக்கும் தெரிய வேண்டாம். உன் தங்கச்சிய கவனமா பார்த்துக்கோ. எல்லாம் நல்லபடி முடியும்... அதுக்குதான் நான் இப்படி மாறுவேஷத்துல வந்துருக்கேன். தைரியமா நீ போ..." என்றார் ருத்ரா.

அன்புமணி அவரை மலங்க மலங்கப் பார்த்தான். அப்போது அவர் செல்போனில் சிணுங்கல். காதைக் கொடுத்தார்.

"ஸார்... மார்ச்சுவரில இருக்கற அந்தக் கண்ணமங்கலம் வைத்தியக்காரன் உடம்புல உசுர் இருக்கு ஸார்! அவன் இன்னும் சாகல! பாடிய ஐ.சி.யூ.வுக்கு கொண்டுபோய் ஆக்ஸிஜன் கொடுத்து ட்ரீட்மெண்ட் ஆரம்பிச்சிருக்காங்க. கொஞ்சநேரத்துல அவன் கண் திறந்து பார்த்தாலும் பார்க்கலாம்னு டாக்டர் சொல்றார்..." -என்றார் ஒரு க்ரைம் பிராஞ்ச் போலீஸ் ஆஃபீஸர்.

ருத்ராவுக்கு சுர்ர் என்றது.

பைராகி சொன்ன, 'இது கிருஷ்ணபூமி... இங்க எந்தத் தப்பும் நடந்துடாது' என்ற வார்த்தைகள் உடனே ஞாபகம் வந்தன.

"வாட் எ மிராகிள்..!" என்றது உதடுகள்.

"என்ன ஸார் சொல்றீங்க?"

"மருதாசலம் உங்க பையன் தப்பிச்சிட்டான்யா. அவன் கொலைகாரன் இல்ல..."

"ஸார் கொஞ்சம் விவரமா சொல்லுங்க..."

"அந்த பக்கிரின்கற உங்க ஊர்க்காரன் சாகலை... மார்ச்சுவரில இருக்கற அவன் உடம்புல உயிர் இருந்திருக்கு. அது தெரியவந்து அவனை பிழைக்க வைக்க ஒரு பெரிய போராட்டமே இப்ப நடந்துகிட்டிருக்கு"

"ஐயோ சார் நிஜமாவா சொல்றீங்க?"

"ஆமாம்... கோயில்ல பார்த்த அந்தப் பைராகி பேசின ஒவ்வொரு வார்த்தையும் அப்படியே நடக்குது. அவர் சாதாரண மனுஷர் இல்ல. அதே சமயம் அந்த மனுஷரை அவசரப்பட்டு குற்றவாளியா நினைக்கறதும் தப்பு"

- ருத்ராவின் தீர்மானம் அன்புமணியையும் ஆச்சரியப் படுத்தியது.

"அப்ப அந்தப் பைத்தியக்காரன் கண் திறந்தா என் மகனுக்கு என்ன ஆச்சு, எதனால ஊர்ல தப்புங்க நடந்துருக்கற எல்லா விஷயங்களும் தெளிவாகிடுமா?"

- மருதாசலம் ஆவல் பொங்கக் கேட்டார். "நிச்சயமா..." என்கிற பதிலோடு ருத்ரா, ஜீப்பைச் நோக்கி கிளம்பிவிட்டார்!

ஷியாமளாவின் வீட்டில் செல்லப்பாவின் அஸ்தியை எடுத்து வருவதற்காக ஒரு வேதபிராமணர் சகிதம் அவரது உறவினர்களில் சிலர், புறப்படத் தயாராக இருந்தனர். ராகவும் அவர்களில் ஒருவனாக இருந்தான். வேஷ்டி-ஜிப்பா என்கிற எளிய உடைகளுடன் அவன் அவர்களோடு சேர்ந்து புறப்பட, மாஸ்டர் அவர்களை அனுப்பிவிட்டு ஷியாமளாவின் அறைக்குள் எட்டிப்பார்த்தார்.

அந்தக் காலை வேளையில் அவள் விஸ்ராந்தியாக உட்

# 30



“அந்தக் குழந்தை கிருஷ்ணன் கல்யானையை உயிர்ப்பித்துக் காட்டிவிட்டு, ‘ஹையா... எப்படி?’ என்று குதித்துச் சிரித்தான். பண்டாரி கண்கலங்கப் பார்த்தார். பட்டரோ, ‘கிருஷ்ணா... கிருஷ்ணா!’ என்று உதடுகள் படபடக்க, உடம்பு நடுங்க நின்றபடி இருக்க, ‘இந்தா பிடி... இப்படி ஒன்னை நான் உனக்குத் தராம, அந்த மன்னாருக்கு கொடுத்ததுல என் மேல கோபம் உனக்கு. இப்ப அந்தப் புல்லாங்குழலை விட ஒருபடி மேல, நினைச்சதை எல்லாம் கண் முன்னால காட்டி-கேட்டதைக் கொடுக்கற இந்தப் புல்லாங்குழலையே உனக்கு நான் தரேன். பிடி...’ என்று பண்டாரி கையில் புல்லாங்குழலைத் திணித்துவிட்டு குடுகுடுவென்று திரும்ப சந்நிதி நோக்கி ஓடினான்.

சந்நிதி வாசலில் சென்று, நின்றபடி திரும்ப ஒரு பார்வை. அப்படியே கவனத்தைக் கலைக்கும் விதமாய் ஒரு கைச் சொடுக்கு. அதாவது, பண்டாரிக்கு அழைப்பு!

‘பண்டாரீ... இந்தப் புல்லாங்குழலுக்கு ஊரும், உலகும் மயங்கலாம். நான் மட்டும் மயங்க மாட்டேன். இது இந்திர தந்திர மகேந்திர ஜாலங்களையும் காட்டலாம். ஆனா கிருஷ்ண ஜாலம் காட்டாது! அதை மட்டும் நீ புரிஞ்சுண்டா போதும்’ - என்றான். சொல்லிவிட்டு உள்ளே போயே போய்விட்டான்!

பண்டாரியின் கவனமெல்லாம் அந்தப் புல்லாங்குழல் மேலேயே இருந்ததால் கிருஷ்ணனின் பொருள் பொதிந்த பேச்சு காதில் விழவே

# கிருஷ்ண தந்திரம்!

## இந்திரா சௌந்தர்ராஜன்



**யில்லை! ஆனால் கிருஷ்ண வின் பேச்சில் ஆயிரமாயிரம் நுட்பங்கள்!"**

**சு**டுகாட்டுப் புலையனின் கருத்து அங்குள்ள அவ்வளவு பேரையுமே ஒரு உலுக்கு உலுக்கி விட, ராகவ் வேகாத செல்லப்பா வின் சதைப் பாகத்தை தகன மேடையிலேயே போட்டான். அந்தப் புலையனும், 'இருங்க சாமி, இந்த மாதிரி எப்பவாவது ஆகும்னுதான் நாங்க பெட் ரோல் வெச்சிருப்போம்... அதை ஊத்தி தீயை வெச்சா அஞ்சு நிமிஷத்துல சாம்ப லாயிடும்' என்று பெட்ரோல் எடுத்துவரச் சென்றவனை, வேத பிராம்மணர் தடுத்து நிறுத்தினார்.

"நில்லுப்பா... அதெல்லாம் வேண் டாம்... இந்த மாதிரி நடந்தா, அதைப் பசும் நெய்யாலதான் எரிக்கணும்" என்ற வர் தன்னோடு வந்தவர்களில் ஒருவனைப் பார்த்திட... அவன் நெய் கொண்டு வருவ தற்காக ஊருக்குள் இறங்கி ஓடத் தொடங்கினான். கடுகாட்டில் ஏது நெய்?

ராகவ் வரையில் தன் வாழ்வில் இதுவரையில் கேள் விப்படாத ஒன்றை அவன் கேள்விப்படுகிறான். அவன் வரையில் அந்தச் சூழலே புதிது. 'எப்பேர்ப் பட்ட ராஜ வாழ்க்கை வாழ்ந்தாலும் ஒரு நாள் இப் படி ஒரு இடத்தில் இப்படி ஒரு வெட்டியானால் வேக வைக்கப்பட்டுச் சாம்பலாகிப் போவதுதான் மாறாத-மாற்றவே முடியாத முடிவான முடிவு' என் கிற அந்த நிஜம், அவனது உடம்பின் நிழல் போல உள்ளத்தின் நிழலாக உடனேயே இருந்தது.

அதுதான் சத்யமான ஆத்ம விசாரம் என்பதெல் லாம் அவனுக்குத் தெரியவே தெரியாது. அந்தச் சதைப் பாகம் பட்ட கைப்பகுதியில், எண்ணெய் பட்ட மாதிரி ஒரு வழவழப்பு! அருகில் உள்ள குட்டி குட்டிச் சட்டிகள் நான்கில் மெல்லிய ஆவிக் கோடு கள் மேல் எழும்பிட, செல்லப்பாவின் உருமாறிய சாம்பல். அதை எல்லாம் பார்த்தபோது ராகவுக்குள் புதிதாய் ஒரு கனாமி. அந்த எரிப்படுகையை விட்டு தூரமாகப் போய், ஒரு புங்க மரத்தடியில் போய் நின்று கொண்டான்.

அதை அந்தப் பிராம்ம ணரும் கவனித்தார்.

"என்னம்பி... மனசை இந்தச் சுடுகாடு பாடாப் படுத்தறதா?"

"ஆமாம் ஸ்வாமி... சுடு காடுன்னா பயமுறுத்தும்க றதுதான் நான் இவ்வளவு நாளா நினைச்சிண்டிருந்த விஷயம். இப்ப என்ன டான்னா பள்ளிக்கூடம் மாதிரி, வாத்யாரே இல்லாம பாடம் நடத்தறது..."

"கரெக்ட்.... அதுக்குதான் உறவுகள்ள சாவுன்னா விட்டுக்கொடுக்காம எழவு கேக் கப் போகணும்னு சொல்வா. சுடுகாட்டுக்கு வர்றவன்தான் கொஞ்சத்துக்கும் கொஞ்ச மாவது மனுஷனா இருப்பான். அந்த பிரம் மாவே இங்க வந்தாலும் தன்னை ஒரு நொடி பொணமா பாவிச்சு, அந்தப் பொணம் எரி யற மாதிரி கற்பனை செய்து பார்த்து கடைசியா கல யத்துல சாம்பலா மனசுக்குள்ள ஒரு பார்வை பார்த் துக்காம போகவே மாட்டார்...."

"நிஜம்தான்... எனக்குள்ள மியூஸிக்கால உலகத் தையே ஜெயிக்கணும்கறதுதான் ஆசை. நான் இன் னும் சில தடவை மயானத்துக்கு வந்தேன்னா, 'என்ன பெரிய மியூசிக்... என்ன பெரிய உலக வெற்றி? எவ்வ ளவு சாதிச்சாலும் ஒரு நாள் சாம்பலாகப் போறோம்'கற எண்ணம்தான் எனக்கு மிஞ்சும். நான் பெருசா எந்த முயற்சியும் செய்ய மாட்டேன் ஸ்வாமி..."

"அட போப்பா... இந்தப் பேச்செல்லாம் அதோ அந்த மயான எல்லையைத் தாண்டற வரைதான். அங்க ஓட்டப்பந்தயக்காரன் மாதிரியே ஓடி வந்து நம்மை எல்லாம் பிடிச்சுக்கத் தயாரா இருக்கு மாயை. அது பிடிச்சண்ட நொடி, இந்த விசாரம் எல்லாம் உதிர்ந்துடும். நாம பழையபடியே ஆசை, பாசம், அதோட அலைக்கழிப்புன்னு மாறிடுவோம்" -என்று கூறிவிட்டுச் சிரித்தார்.

"இல்லை... இந்தச் சம்பவம் என்னை அவ்வளவு கல பத்துல மாத்தாது. 'செத்தாகூட என் நெஞ்சு வேகாதுங்கற டயலாக்கை நான் நிறைய இடத்துல கேள்விப்பட்டிருக்கேன். இப்ப கண்ணால பார்த் துட்டேன். செத்துட்டா அவ்வளவுதான்..! அது ஒரு டெட் எண்ட்... தட் மீன்ஸ் அதுக்கப்புறம் வி ஆர் ஆல் நத்திங்... இந்த ஆவி, ஆத்மால்லாம் உளறல்ங் கற கருத்து நம்மை நாமளே ஏமாத்திக்கறதுக்காகச் சொல்லிக்கறது. மரணத்துக்குப் பிறகும் ஒரு வித வாழ்க்கைப் போக்கு இருக்குங்கற இந்த வேகாத

இதயம் எனக்கு உணர்த்தறது..."

"அதுல என்ன சந்தேகம்..? செல்லப்பா ஆத்மாவுக்கு சாந்தியே இல்லை. அதுதான் இதன் மூலமா நமக்குத் தெரிய வர்ற உண்மை. இதே காட்டுல செல்லப்பா ஆத்மா, நாம பேசறதக்கூட கேட்டுண்டு நின்னுண்டுருக்கலாம். இப்படி சாந்தியடையாதவா தான் பேயா, பிசாசால்லாம் சுத்திச் சுத்தி வருவா! அடங்காத ஆசாபாசங்களோட செத்துப் போனாலும் அவா அலைச்சல் கொஞ்சம் இருக்கும். அதனாலதான் செத்தா புதைச்சுட்டோ, எரிச்சுட்டோ போயிண்டே இருக்கற வழக்கம் நம்மகிட்ட மட்டும் கிடையாது... அதாவது நம்ம நாட்டுலன்னு எடுத்துக்கோ.

பத்து நாள் காரியம்கறது எதுக்கு..? சாவுச் செய்தி கேட்ட மாத்திரத்துல தலை முழுக்குப் போடறதும் எதுக்கு..? அந்த இறப்புக்குப் பின்னால உன்னவா சாந்தியடையறதுக்குதான்! உயிரோட இருக்கற ஒருத்தனுக்குக்கூட, 'போடா! உன்னைப் பத்தி நான் கவலைப்படத் தயாரா இல்லை...'ன்னு சொல்லிட்டு நாம ஒதுங்கிக்கலாம். அது பெருசா நம்மைப் பாதிக்காது. ஆனா செத்துட்டவனை நாம அதே மாதிரி நடத்தினா, நம்ம குடும்பம்தான் சாபத்துக்குள்ளாகும். எதனால கஷ்டப்படறோம்கறதே தெரியாம கஷ்டப்பட்டுண்டு இருப்போம். பித்ருக்களோட வருத்தமும், சாபமும் அவ்வளவு பொல்லாதது! அதை உத்தேசம் பண்ணித்தான் மாசா மாசம் அமாவாசை தர்ப்பணம், வருஷா வருஷம் தெவசம்னு பண்றதெல்லாம். அப்ப நீ கவனிச்சா தெரியும். நாம பாத்திருக்கவே முடியாத நம்ம எள்ளுத்தாத்தா, கொள்ளுத்தாத்தா பேரை எல்லாம் சொல்லி அப்ப எள்ளுத்தண்ணி விடுவோம்... ஒரு கோணத்துல இது எவ்வளவு நன்றிக்குரிய செயல்னு யோசிச்சுப் பாரு. ஒரு மனிதனை இந்தச் சமுதாயம் நினைக்கறதோ இல்லையோ, அவனோட சந்ததியினராவது நினைக்கணும்கறது எவ்வளவு பெரிய பண்பான செயல்! அது இந்தப் பாரத தேசத்துல மட்டும்தான் இருக்கு..."

> **சந்நிதி வாசலில் அதுவரை ஆராவமுத ஐயங்கார் உட்கார்ந்திருந்த இடத்துக்கு அருகிலேயே வெண் பொதி மூட்டைபோல ஒரு உருவம் ஆராவமுத ஐயங்கார் கண்களுக்கு மெல்லத் தெரிய ஆரம்பித்தது.**

- அந்த வேத பிராம்மணர் மயான பூமியில் நின்று கொண்டு வாழ்வின் மர்மமான பாகங்களைப் பற்றி பேசிய பேச்சுக்களில், அதை எல்லாம் மட்டும் வைத்தே ஒரு 'தீசிஸ்' செய்யலாம் என்னும் அளவுக்கு அர்த்தம் பொதிந்திருந்தது.

அதற்குள் ஓடிப்போயிருந்த அந்த நபர், ஒரு தூக்கு வாளியில் நெய்யோடு திரும்ப வந்திருந்தான். வந்தவன் மூச்சிரைக்க, "மாமா நெஞ்சு வேகலை, எரிக்க நெய் வேணும்'னு கேட்டேன். உடனே எல்லோரும் என்னைப் பிடிச்சுண்டு ஒரே அழுகை..." என்றான்.

அந்த நொடியே அந்த விஷயம் ஊர் முழுக்கப் பரவிடத் தொடங்கிவிட்டதை ராகவ் உணர ஆரம்பித்துவிட்டான்!

செய்தி யாதவகிரி மலை கிருஷ்ணன் சந்நிதி வாசலில் இருக்கும் ஆராவமுத ஐயங்கார் காதுக்கும் போய்ச் சேர்ந்தது.

"அடப்பாவி மனுஷா... ஒரு கம்பீரமான வித்வானா என்னமா வாழ்ந்தே நீ! உன்னோட சங்கீதத் திமிரால இந்தக் கோயில்கூட உனக்குப் பெருசா தெரியல. 'எனக்கு இங்க பெருசா மரியாதை இல்லை'ன்னு கோயில் பக்கமா வராமலே இருந்தே... அப்புறமா இந்தக் கோயில்னு இல்ல, அந்த ஜீவ சமாதிக்கெல்லாமும் போய் கால்ல, கைல விழுந்தே... ஒரு புண்ணியமும் கை கொடுக்காம, கடைசியில நெஞ்சு வேகாத நிலையில ஆவியா சுத்த ஆரம்பிச்சுட்டியே. பின்னை இருந்து பத்து நாள் காரியம் பண்ணினா ஆத்ம சாந்தி கிடைக்கும். ஆனா பொறந்ததும் உனக்கு பெண்ணா போச்சு....

அந்தக் கிருஷ்ணன் வந்துதான் உனக்கு ஆத்ம சாந்தி தரணும்னு இருந்தா அதை யாரால மாத்த முடியும்?"

- ஆராவமுத ஐயங்கார் சந்நிதிக்குத் திரைபோட்டுவிட்டு முன்னால சந்நிதி வாசற்படியில் அமர்ந்து கொண்டு புலம்பிக் கொண்டிருந்தது, புன்னை மரத்தடி பைராகி காதிலும் விழுந்ததோ என்னவோ..?

ஆவேசமாக எழுந்து, தன் வசம் எப்போதும் இருக்கும் அந்தப் புல்லாங்குழலுடன் ஐயங்கார் முன் வந்து விரைப்பாக நின்றார்.

ஐயங்காருக்கே பைராகியின் முட்டை முழிப் பார்வை பயங்கரமாக இருந்தது.

"ஓய்! கொழுட்டுப் பட்டாச்சாரி... உமக்குத் தெரியுமா ஓய் செத்துப்போன செல்லப்பாவுக்கு பின்னை கிடையாதுங்கறது...? உமக்குத் தெரியுமாங்கறேன்..? பின்னையை நினைச்சுதான் ஓய், அந்தச் செல்லப்பா உசுரே போச்சு. உப்பைத் தின்னா தண்ணி குடிச்சுதான் தீரணும்... உசுரோட இருந்தா தண்ணி குடிக்கணும், செத்துட்டா ஆவியா அலைஞ்சுதான் தீரணும். அலையற அந்த ஆத்மாவை காட்டட்டுமா உம் கண்ணுக்கு..?"

- பைராகியிடம் ஆவேசம்.

"ஓய் பைராகி... என்னய்யா இது? இருக்கற இம்சை போறாதுன்னு புதுசு புதுசா புளுகறே... இது கோயில், இங்கல்லாம் எந்த ஆத்மாவால வர முடியும்? இந்த யாதவகிரி மலைப்பக்கம் தலை வெச்சே

படுக்காதே?"

"அதெல்லாம் சாளக்ராமத்தை குளத்துல போட்டதுக்கு முந்தி. இப்ப இந்த சந்நிதியும், ஒரு சத்திரமும் ஒன்னு. இங்க எந்த சாந்நித்யமும் கிடையாது பாக்கறீரா?"

-பைராகி குழலை எடுத்து உதட்டில் பதித்து, 'கருடபுஜங்கம்' எனும் ஸ்லோகத்துக்கு காற்று வடிவம் கொடுக்க ஆரம்பித்தார்.

சந்நிதி வாசலில் அதுவரை ஆராவமுத ஐயங்கார் உட்கார்ந்திருந்த இடத்துக்கு அருகிலேயே வெண்பொதி மூட்டைபோல ஒரு உருவம் ஆராவமுத ஐயங்கார் கண்களுக்கு மெல்லத் தெரிய ஆரம்பித்தது.

அந்த உருவமும், 'ஆமாம் பட்டாச்சாரி... நான் ஒரு பாவி. என் புன்னையை நான் வறட்டுக் கௌரவம் பார்த்து தெருவுல விட்டுட்டவன். பாவம் அவன்..! நான் தப்பு பண்ணிட்டேன்... தப்பு பண்ணிட்டேன்' என்று அழுதது. ஆராவமுத ஐயங்காருக்கும் உச்சி முதல் பாதம் வரை வியர்த்துவிட, விறுவிறுத்துப்போய் அப்படியே பொதுக்கென்று தரைமேல் ஒரு பிண்டம் போல விழுந்தார்.



பைராகியும் வாசிப்பை நிறுத்திவிட்டு விழுந்து கிடக்கும் ஐயங்கார் அருகே சென்று, "இங்க பார்த்ததை நீர் வெளிய சொன்னாலும் சரி, இல்ல இதை ஏதோ செப்படி வித்தைன்னு நம்ப மறுத்தாலும் சரி, உமக்கு ஒன்னுமட்டும் சொல்லிக்கிறேன்... நீர் எதுக்காக சாளக்ராமத்தைத் தூக்கிக் குளத்துல போட்டீரோ, அது நடக்கணும். அதாவது அந்தக் கிருஷ்ணன் வரணும். அவன் வரட்டும், இன்னும் என்னென்ன திரையெல்லாம் விலகி, நவரசமா எத்தனைக் காட்சிகளை இந்த ஊரும் உலகமும் பாக்கப்போறது தெரியுமா? அதுக்குத்தானேயா இங்க நான் டேரா போட்டுருக்கேன்..." என்று ஏதோ ஒரு பெரிய தீர்மானத்தை அழுத்தமாய் மொழிபவர் போல மொழிந்துவிட்டு பைராகி திரும்ப புன்னை மரம் நோக்கிச் செல்ல ஆரம்பித்தார்.

நடையா அது? அடேங்கப்பா... அதகளம்!

செல்லப்பாவின் சாம்பலில் சில கைப்பிடிகள் திரௌபதி கோயில் குளத்து நீரில் கலக்கப்பட வேண்டும் என்று ராகவ் உத்தேசித்து கலயத்தோடு குளத்தங்கரைக்கு வந்தபோது பூசாரி தடுத்துவிட்டார். "வேண்டாம் தம்பி... இப்ப இது குளம் மட்டுமில்ல, இது கோயிலும் கூட. சாமி உள்ள இருக்குது. நீங்க வேற எங்க வேணாப் போய் கரையுங்க. இங்க வேண்டாம். நான் இந்தக் குளத்துல மனுஷங்க கால்கூட படக்கூடாதுன்னு கவனமா இருக்கேன்..." என்றார்.

பின் மன்னார் ஜீவ சமாதியை ஒட்டியிருக்கும் ஒரு ஏரிப்பகுதிக்குச் சென்று அங்கே சாம்பலைக் கரைத்துவிட்டு வீட்டுக்குத் திரும்ப வந்தபோது உச்சி வேளையாகிவிட்டது. வீட்டுக்குள் நுழையும்போது குழலோசைமட்டும்தான் கேட்டது.

ஆங்காங்கே அமர்ந்திருந்த எவரிடமும் பெரிதாகப் பிறர் கவனமே இல்லை. காரணம், ஹால் நடுவே அமர்ந்த நிலையில் தேவராஜ் மாஸ்டர் வாசித்துக் கொண்டிருந்ததுதான். அவருக்கு சில அடி தொலைவில் ஒரு நாகமும் படம் விரித்தபடி, தேவராஜ் மாஸ்டரின் இசையில் தன்னைத் தொலைத்திருந்ததுதான் ஆச்சரியம்.

யாரும் பெரிதாக அதைப் பார்த்து அச்சப்படாமல் இருந்தது அடுத்த கட்ட அதிசயம். ராகவ் அதையெல்லாம் பார்த்து தனக்குத்தானே கிள்ளிப் பார்த்துக் கொண்டான். ஷ்யாமளா ஒரு பெரிய தூணை ஒட்டி அமர்ந்த நிலையில், அதன்மேல் சாய்ந்திருந்தாள். அவளது புடவை முந்தி, பக்கவாட்டில் ஒரு மயில் தோகைபோல விரிந்துக் கிடந்தது.

எதிரில் செல்லப்பாவின் படம்! படத்துக்கு முன்னே புகைந்தபடி, எண்ணெய் தீர்ந்துவிட்ட குத்துவிளக்கு... ராகவ், தேவராஜ் மாஸ்டரை எப்படித் தடுப்பது என்பது தெரியாமல் பயத்தோடு அந்த நாகத்தையும் பார்க்கவும், அது அவன் பார்த்த நொடி தழைந்து அப்படியே கடப்பைக் கல் தரையில் வளைகோடு போல ஓடி ஜன்னல் வழியாக ஏறி, வெளியேயும் சென்றுவிட்டது. ராகவ், மாஸ்டரின் தோளைத் தொட... அதன் பிறகே அவரிடம் வாசிப்பும் நின்றது.

அது வரை அது ஒரு சாவு வீடாக இல்லாமல், இசைக் கோட்டமாக இருந்ததுதான் ஆச்சரியம். எல்லோரும் கலைய ஆரம்பித்தனர். ராகவ் மெல்ல ஷ்யாமளா அருகே சென்று அமர்ந்தான்.

'ஐயையோ போட்டது போட்டபடி இருக்க, இப்படி மெய் மறந்துட்டோமே?' என்னும் கோமளா மாமியின் குரல் மட்டும் காதில் கேட்டது.

மாஸ்டரும் ஹாலில் உள்ள கடிகாரத்தைப் பார்த்து, "மணி பன்னெண்டா, மை காட்!" என்றார்.

ஷ்யாமளா மட்டும் ஈன சுரத்தில், "அப்பாவோட நெஞ்சு சரியா வேகலையாமே ராகவ்... நீ பார்த்தியா?" என்றாள். அவளிடம் வார்த்தைகளற்ற பாவனையிலான ஆமோதிப்பு.

(தொடரும்)

31

# கிருஷ்ணா தந்திரம்!

"அந்தக் குழந்தை கிருஷ்ணன் மறைந்துவிடவும், பண்டாரி கிருஷ்ணன் தந்த புல்லாங்குழலுடன் கோயிலை விட்டுக் கீழே இறங்கினார். இறங்கியவர் அடிவாரத்திலேயே நின்று கொண்டு பட்டாச்சாரியை பார்த்து ஊருக்குள் தன் வீட்டுக்குள் இருக்கும் பல்லக்கை சுமந்து வரும்படிக் கூறினார். எதற்கு என்று பட்டாச்சாரி கேட்கவும், 'இந்தக் குழல் வேறு? அந்தக் கண்ணன் வேறா... கண்ணனை நான் என் கிரகத்திற்கு (வீட்டுக்கு) பல்லக்கில் அழைத்துச் செல்வது தானே மரியாதை..? என்று கேட்டார். பட்டாச்சாரி மறுப்பாக ஒரு வார்த்தை பேசவில்லை.

அடுத்த சில நிமிடங்களில் பல்லக்கு வந்து சேர்ந்தது.

கூடவே ஊரே திரண்டு வந்தது. கிருஷ்ணன் பண்டாரிக்கும் ஒரு குழலைக் கொடுத்த விஷயம் ஊர் முழுக்கப் பரவி, ஊரும் திரண்டு பின்னாலே வந்தது. பண்டாரி முகத்தில் பெருமிதமான பெருமிதம். சிலர் மன்னருக்கு எதிராக பண்டாரி ஏதோ விஷமம் செய்கிறார் என்றுகூட நினைத்தனர். ஒருவர் அதைக் கேட்டேவிட்டார்.

'பண்டாரி... நீர் ஒருவடபுலத்தவர். இங்கே எங்கள் மண்ணைச் சேர்ந்த மன்னருக்கு கிருஷ்ணன் கருணை புரிந்தது பொறுக்காமல் உங்களுக்கும் கிருஷ்ணன் ஒரு புல்லாங்குழலைத் தந்ததாக நீங்கள் கூறுவதாகத்தான் நாங்கள் நினைக்கின்றோம். இந்தப் பொறாமை உங்களுக்கு ஆகாது ஓய்..! மன்னர் துளியும் கபடமில்லாதவர். அதனால்தான் இப்போதுகூட கிருஷ்ணனின் புல்லாங்குழலைக் கொண்டு அவர் அழக சேவை செய்கிறார்' என்றார்.

"சரி... நான் என்ன செய்தால் நீங்கள் நம்புவீர்கள்?" என்று பதிலுக்குக் கேட்டார் பண்டாரி.

"எங்கே இந்த இடத்தில் ஒரு பூபாளம் பாடி ஐந்தறிவுக்கும் கீழான உயிரினங்களை இங்கே உங்கள் முன் வரவழையுங்கள் பார்ப்போம்."

- பண்டாரியும் இவ்வளவுதானே என்பது போலப் பார்த்துவிட்டு அந்தக் குழலை எடுத்து உதட்டருகே வைத்து, 'ஜெய்கேசவா... நான் பூபாளம் வாசிக்க வேண்டும்' என்றார். அற்புதமான பூபாள இசையும் பிறந்தது. ஆனால் ஒரு ஆடு, மாடுகூட அவர் முன் அங்கு வரவில்லை"

ஷ்யாமளா கேட்டதைத் தொடர்ந்து மௌனமாக, 'செல்லப்பாவின் இதயம் வேகவில்லை' என்பதை தலையை அசைத்து ஆமோதித்த ராகவை, ஷ்யாமளா விசும்பலோடுதான் அடுத்துப் பார்த்தாள்.

"டோன்ட் கரை... வெட்டியான் சரியா நெருப்பு வெச்சிருக்காம போயிருந்தாலும் இப்படி ஆகியிருக்கும். ஸோ வாட்..? அதான் பதிலுக்கு நெய்யை விட்டு எரிக்க அது சாம்பல் ஆகற வரை பொறுத்திருந்து அப்புறமா கலயத்துல எடுத்துண்டு போய் ஏரிலையும் கரைச்சாச்சு ஷ்யாமளா..." என்றான்.

"நீ என்ன சொன்னாலும் என் மனசு அடங்கமாட்டேன்கறது ராகவ்... அப்பாவுக்கு இப்படி ஒரு முடிவு வர நானும் நீயும் கூட ஒரு காரணம். நாம இந்த ஊருக்கே வராம போயிருந்தா இதுல எதுவுமே நடந்து



ருக்காதுதானே?" -என்று கேட்டவனுக்கு ஒரு சரியான பதில் சொல்ல ராகவுக்கு தெரியவில்லை.

இடையிட்டது கோமளா மாமி குரல்.

"எல்லோரும் செத்த சாப்பிட வாங்கோ... இலை போட்டாச்சு" என்றாள். அதைத் தொடர்ந்து ஷ்யாமளாவை விட்டு விட்டு ராகவும் மாஸ்டரும் அங்கிருந்து விலகினர்.

அவர்கள் விலகவும் உறவினர்களில் சிலர் வந்து ஷ்யாமளாவை சூழ்ந்து கொண்டனர். சாவு வீட்டில் யாரையும் எதுவும் சொல்ல முடியாது. பிடித்திருக்கி

றது-பிடிக்கவில்லை என்கிற எல்லாமே தூரவிலகி விட வேண்டும். ஷ்யாமளாவுக்கும் தன்னிடம் துக்கம் கேட்பவர்களிடம் இருந்து விலகவும் முடியவில்லை. அவர்களுக்கு சரியாக பேசியதையே பேசவும் பிடிக்கவில்லை.

ஆனால் மனதுக்குள் ஒரு ஓரமாக முதற்காரியமாக அந்த பைராகியை பார்த்து இரண்டில் ஒன்று பார்த்து விட வேண்டும் என்கிற கோபம் மட்டும் மூண்டப




j

டியே இருந்தது! அப்போது பார்த்து அன்புமணியும் செல்ஃபோன் வழியாக அவளை அழைத்தான்.

"ஸாரி அன்பு.... உன்கூடல்லாம் சரியாகவே பேச முடியலை. அப்பாவோட சாவு என் டைரக்ஷனையே மாத்திடுத்து... புதுசு புதுசா ட்யூன் போட்டு மியூசிக்ல மூழ்கப் போறதாதான் நினைச்சிருந்தேன். ஆனா நேர் எதிரா துக்கத்துல மூழ்கும்படி ஆயிடுத்து அன்பு..."

"சியாமளா... நான் இப்ப உனக்கு ஒரு ஆச்சரியமான விஷயத்தைச் சொல்லப் போறேன். அன்னிக்கு நாம பொணமா பார்த்தோம்தானே யசுருன்...?"

"அதுக்கென்ன அன்பு...?"

"ஐயோ சியாமளா! அவன் சாகலையாம். உயிரோடதான் இருக்கானாம்..."

"அன்பு நீ என்ன சொல்றே...? இது என்ன புது திருப்பம்?"

"திருப்பம்தான்... அவன் கண்முழிச்சா என்ன நடந்தது, ஏது நடந்ததுங்கற எல்லாமே தெரிஞ்சிடும். உனக்கு மட்டும் நான் இன்னொரு விஷயத்தைச் சொல்றேன்... அதிர்ச்சியடையாதே..."

"'அப்பா சாவைவிட ஒரு பெரிய அதிர்ச்சி ஏது அன்பு? எதுவா இருந்தாலும் சும்மா சொல்..."

"சியாமளா... என் தங்கை கோமதி இப்ப மூணு மாசம் முழுகாம இருக்கா..."

"மை காட்... அன்பு நீ என்ன சொல்றே?"

"அதிர்ச்சியா இருக்குல்ல...? கோமதி ஊமைக் கோட்டானா இருந்து என் தலையில இடியையே இறக்கிட்டா... நல்ல வேளை அவளை இந்தக் கதிக்கு ஆளாக்கினது யாருன்னு சொல்லிட்டா..."

"யாரு... யாரு அன்பு...?"

"வேற யாரு.... இந்த தமிழ்முகன்தான். அவன் அரசியல்ல மூக்கை நுழைச்சு ஊரை ஏமாத்தப் பாத்த மாதிரியே என் தங்கையையும் ஏமாத்தப் பாத்திருக்கான். நம்ப சரக்கு சரியில்லை... என்னத்தப் பேச?"

- அன்புமணி உடைந்து போய் சலித்துக் கொண்டான். அப்படியே போலீஸ் ஆஃபீஸர் ருத்ராவை பார்த்து பேசியது வரை சகலத்தையும் சொல்லி முடித்தான்.

அவளும் கேட்டாள். "சரி இப்ப தமிழ்முகன் எங்க?"

"போலீஸ் கஸ்டடியில இருக்கான்... கேட்டா அவனுக்கு வைத்தியம் பாத்துகிட்டிருக்கறதா சொல்றாங்க... எனக் கென்னவோ அவன் நடிக்கற மாதிரிகூட தோணுது..."

"இல்ல அன்பு... தமிழ்முகன் நடிக்கல... அது மட்டும் உறுதி. நானும்தான் பார்த்தேனே...?"

"அப்படின்னா நீ மனசு வெச்சா அவனைக் குணப்படுத்த முடியும் சியாமளா..."

"என்ன அன்பு... நீயும் என்னை அருள்வாக்கு அம்பாள் லெவலுக்குத்தான் யோசிக்க வெச்சிருக்கியா?"

"இல்ல சியாமளா... உன்கிட்ட ஒரு விசேஷ சக்தி இருக்கு... நீ என் வீட்டுக்கு வந்திருந்தப்ப வாசல்ல திண்ணை பக்கமா ஒரு நந்தியாவட்டைச் செடி இருந்து அதை நீ தொட்டுகிட்டேதான் பேசினே? வாஸ்தவத்துல அந்தச் செடி இதுவரை பூத்ததில்லை. ஆனா நீ அதைத் தொட்டுட்டுப் போன இந்தப் பத்து பதினைந்து நாள்ல அது அப்படியே பூத்துக் குலுங்கிடிச்சு தெரியுமா? ஒரு செடி இவ்வளவு தான் பூக்கலாம்னு ஒரு கணக்கு இருக்கு சியாமளா! ஆனா இந்தச் செடி ஒருநாள்ல மட்டும் நூத்தி அறுபது பூ பூத்தது. இதை எல்லாம் வெளிய சொன்னா நம்பமாட்டாங்க. பக்கத்து வீட்டம்மா கூட செடியைப் பார்த்துட்டு, 'இது என்ன செடியில இலையைவிட பூ அதிகமா இருக்குது...!'ன்னாங்க.

- அன்புமணி சொல்லி நிறுத்தவும், ஷ்யாமளாவை ஒருவிதத் தயக்கமும் மௌனமும் ஆட்கொண்டது. அவனுக்கு அடுத்து என்ன கூறுவதுஎன்பது புரிபடாமல் ஃபோனைப் பிடித்துக் கொண்டு மௌனமாகவே நின்றான்.

"என்ன சியாமளா... நான் பொய் சொல்றதா நினைக்கிறியா?"

"சேச்சே அப்படி எல்லாம் இல்ல... என்கிட்ட அப்படி என்ன ஸ்பெஷல்னு எனக்கே தெரியல. ஒரு வேளை நீ நினைக்கிற மாதிரி நான் ஒரு அப்நார்மலா இருந்தா அப்படி இருக்கறதுக்காக வருத்தம்தான்படுவேன். ஏன் அன்புமணி, எல்லாமே ஒரு தற்செயலாகவே இருக்கக்கூடாது...?"

"அதை நீ தமிழ்முகனை குணப்படுத்த முயற்சி செய்யும்போது நாம புரிஞ்சுக்க முடியுதான்னு பார்ப்போம். இப்போதைக்கு சரின்னு சொல் சியாமளா..."

"சரி... இந்த 'சரி' தமிழ் விஷயத்துக்கு இல்ல. அப்புறமா நாம நேர்ல சந்திப்போம்.. எங்க ஆத்துல, ஸாரி எங்க வீட்டுல இந்தச் சாவு கனோபரம் அடங்க 13 நாட்கள் ஆகும். அதுவரை நானும் எங்கேயும் வரமுடியாது. ஆமா, உன் தங்கை விஷயம் ஊர்ல யாருக்கும் தெரியாதுதானே?"

"என் அப்பா அம்மாக்கே தெரியாது சியாமளா... நான் உன்கிட்ட மட்டும்தான் சொல்லியிருக்கேன்..."

- அவன் அப்படிக் கூறவும் ஷ்யாமளாவின் இதய பாகத்தில் ஒரு துல்லிப்பு.

"அன்பு தைரியமா இரு... அப்புறம் உன்கிட்ட மட்டும் நானும் ஒரு விஷயத்தைச் சொல்லிக்கிறேன். இந்த ஊர்ல வந்து உக்காந்துகிட்டிருக்கற அந்த பைராகிகிட்ட ஏதோ மர்மம் இருக்கு. அதை நான் கண்டுபிடிக்காம விடப் போறதில்லை. நீ அப்ப என் கூட இருக்கணும்"

"நிச்சயமா சியாமளா... உனக்கு முந்தி நானே அந்தாளோட ஒரு மோது மோதிப் பார்த்துட்றதுன்னு தான் இருக்கேன்"

"வேண்டாம். தனியாப் போய் உனக்கும் ஏதாவது ஆயிடப் போகுது... ஒரு இரண்டு நாள் போகட்டும், உறவுக்கூட்டம் வெளிய போயிடும். அப்ப நானே வரேன்..."

- ஷ்யாமளா அவனை அழகாய்க் கட்டிப் போட்டான். அவனும் அதற்கு மறுபேச்சு பேசவில்லை. வீட்டிலோ கூடத்தில் பந்தி நடந்தபடி இருந்தது. உளுந்து அப்பளத்தை எண்ணெயில் பொரிக்காமல் அனலில் வாட்டிப் போட்டிருந்தார்கள். ஒருவர்கூட மிச்சம் வைக்காதபடி பட்பட் என்று நொறுக்கி உள்ளே தள்ளிக் கொண்டிருந்தனர். சாவு வீட்டுச் சமையலில் வாழைக்காய் வதக்கலுக்கும், வெந்தயக் குழம்புக்கும் பிரதானமாய் ஒரு இடம் இருக்கும். அதுதான் அன்றைய மெனு!

ஹாலின் சுவரில் புகைப்படத்தில் ஜனாதிபதியோடு கூட நின்றபடி எல்லோரும் சாப்பிடுவதை பார்த்துக் கொண்டிருந்தார் செல்லப்பா.

நிஜத்தில் வீட்டு முகப்பில் ஓங்கி உயர்ந்து வளர்ந்திருக்கும் ஒதிய மரத்துக்குக் கீழே...!

பஞ்சுப் பொதி போன்ற அந்த ஆவி சொரூபத்தை அந்த வீட்டு வாயிலுக்கு வந்திருந்த பைராகியும் பார்த்து விட்டு முதல் முறையாக எப்போதும் ஆகாத வருத்தத்துக்கும் உள்ளாகி அந்த மரத்தடியையே பார்த்தபடி வாசலுக்கும் வந்து நின்றார்.

**இந்த ஊர்ல வந்து உக்காந்துகிட்டிருக்கற அந்த பைராகிகிட்ட ஏதோ மர்மம் இருக்கு. அதை நான் கண்டுபிடிக்காம விடப் போறதில்லை.**

சாப்பிட்டு முடித்த சிலர் கை கழுவுவதற்காக வாசற்புறம் வரவும் அவரைப் பார்த்து திடுக்கிட்டனர். ராகவ் அவரை கொஞ்சம்கூட எதிர்பார்க்கவில்லை. எச்சில் கையோடு நின்றான்; வெறித்தான்.

"எங்க அந்தப் பொண்ணு?"- அவரிடம் அதட்டலான கேள்வி.

"யாரு ஷ்யாமளாவா?"

"அவதானே செல்லப்பா பொண்ணு..."

"ஆமாம்... நீங்க எதுக்கு கேக்கறீங்க?"

"துக்கம் கேக்கத்தான். என்னை அவ வில்லனா நினைச்சா நினைச்சுட்டுப் போகட்டும். அபர காரியங்களை சிரத்தையா பண்ணச் சொல்லணும்னு தோணித்து. ஏன்னா செல்லப்பனோட நெஞ்சு வேகலைங்கற விவரம் எனக்குத் தெரியும். கோயில்ல வந்து அழுத அவனோட ஆத்மா இப்ப, தான் வாழ்ந்த வீட்டை சுத்த ஆரம்பிச்சாச்சு... அதை நல்ல விதமா கரை ஏத்தணும்... என்ன நான் சொல்றத உன்னால நம்ப முடியலையா?"

- அதட்டல் குரலுக்கு பைராகி மாறிட, சப்தம் கேட்டு மாடியில் இருந்து இறங்கி ஓடி வந்தாள் ஷ்யாமளா... பைராகியை வெறிப்போடு பார்த்தாள்.

"இப்படித்தான் நீ துரியோதனனை சபையில் பார்த்தே. ஆனா நான் துரியோதனன் இல்லை... கொஞ்சம் முந்திகூட ஒருத்தன்கிட்ட நீ என்கிட்ட பேசப் போறதாவும் அப்ப அவன் துணைக்கு வரணும்னு சொல்லியிருக்கே... எல்லாம் எனக்குத் தெரியும். போகட்டும்... யார் ஸ்வாமி இங்க அபர காரியம் பண்ற வேத பிராம்மணர்...?"

- பைராகியின் அதட்டலைத் தொடர்ந்து சாப்பிட்டு முடித்து கையைத் துடைத்தபடி அவர் எதிரில் வந்தார் காரியம் செய்து வைத்த பிராம்மணர்.

"இதுவரை இந்த மாதிரி எவ்வளவு காரியம் செய்திருப்பீர்?"

"இப்ப எதுக்கு அந்தக் கேள்வி?"

"கேட்டா ஒழுங்காப் பதிலச் சொல்லுமய்யா.."

"உமக்கு எதுக்கு ஓய் நான் சொல்லணும்...? நீர் எதுக்கு இங்க வந்து அதட்றீர்? பதிலுக்கு நானும் அதட்டவா?"

"என் குரலே அப்படித்தான் ஓய்... இந்தாரும் இந்தப் புல்லாங்குழலைப் பிடியும். 'ஜெய் கேசவா'ன்னு சொல்லி, 'செல்லப்பா ஆத்மா எங்க?'ன்னு கேளும்; அப்ப தெரியும். நான் எதுக்குக் கேட்டேன்னு..."

"இது என்ன குச்சி ஜோசியக்காரி மாதிரி எதாவது சித்து வேலையாக்கும். அவ ஜக்கம்மான்னுவா-உமக்கு கேசவாவா.. அதுலயும் ஜெய் கேசவாவா... பலே!"

"உமக்கு பயம்னு சொல்லும். அம்பி ராகவ் இந்தா பிடி.. நான் சொன்னபடி செய்து பார். அப்ப தெரியும்"- அவர் ராகவ் பக்கம் திரும்பினார்.

ராகவ் ஏனோ தயங்கினான். நிறையவே தடுமாறினான். மாஸ்டர் துணிச்சலாக முன் வந்து தன் கையை நீட்டினார்.

அதை பைராகியே எதிர்பார்க்கவில்லை.

"சபாஷ்... உன்னோட தைரியத்த பாராட்டறேன்.. இந்தா பிடி.?"

- அவரும் தந்தார். மாஸ்டரும் பைராகி சொன்னது போல் சொன்ன நொடி, 'பைராகி வேண்டாம்யா... நான் போய்ட்டேன். நான் போயிடுவேன்யா... வேண்டாம்என்னை ஆத்ம நிலைலயும் துரத்தாதே..' என்று ஒரு விசும்பல் குரல் அவர் காதுகளில் ஒலித்திட, வெளியில் உள்ள மரத்தடியில் செல்லப்பாவின் ஆத்ம ரூபம் ஒரு பஞ்சுப் பொதி போலத் தெரிந்தது.

சில விநாடிகள்தான்! குழலை திரும்பவும் பைராகி வசம் தந்த மாஸ்டர், வேத பிராம்மணரைப் பார்த்து, "ஐயா.. இவர் சொல்றத தயவுசெய்து கேளுங்க, ஷ்யாமளா நீ இப்ப உள்ள போம்மா..." என்றார்.

எல்லோருக்குமே ஆச்சரியம்!

"அம்மாடி... எப்ப வேணா நீ என்னை நோக்கி வரலாம். வரணும் நீ... அப்பதான் நான் எதிர்பார்க்கற விஷயங்கள் ஒவ்வொண்ணா நடக்க ஆரம்பிக்கும்"

- பைராகியின் பேச்சுக்குள் ஒரு பலமான புதிர்!

(தொடரும்)

# கிருஷ்ண தந்திரம்!

இந்திரா சௌந்தர்ராஜன்

"பண்டாரக்கு மிகவே ஏமாற்றமாகிவிட்டது. தன் வசமிருந்த அந்தப் புல்லாங்குழலை திருப்பித் திருப்பிப் பார்த்தார். அதற்குள்ளாகவே சூழ்ந்திருப்போர்களிடம் ஒரு கேலிச்சிரிப்பு உருவாகி, அந்தச் சப்தமும் பண்டாரியை ஒரு உலுக்கு உலுக்கிவிட்டது.

'பண்டாரீ.. விஷயம் அந்தப் புல்லாங்குழல்ல இல்ல ஓய்! ஆத்மார்த்தமாவும், பக்தி பூர்வமாவும் வாசிக்கறதுல இருக்கு.. எல்லாத்துக்கும் மேலா, கொஞ்சமும் சுயநலமில்லாம இருக்கணும்கறதும் முக்கியம்.

ஆனானப்பட்ட திரௌபதியே துகிலுரியப்பட்டப்போ, அவ கூப்பிட்ட உடனே கிருஷ்ண பகவான் வந்துடலை. இரண்டு கையையும் ஆகாசத்தை நோக்கித் தூக்கினபடி சரணாகதி செய்தப்போதான் அவன் வந்தான். இது புரியாம புலியைப் பார்த்து பூனை சூடு போட்டுண்ட கதையா, மன்னார் சுவாமிகளைப் பார்த்து போட்டி போட்டா ஆச்சா என்ன..?

ஒரு விஷயத்தைப் பாராட்டறேன். புல்லாங்குழலே வாசிக்கத் தெரியாத நீர், பூபாளத்தை நன்னாவே வாசிச்சீர்! வாசிப்புல துளிக்கூட பிசிறு இல்லை. அதுல நல்ல வித்தை நுணுக்கம் தெரிஞ்சது!"- என்றார் ஒரு பிராம்மணர்.

பண்டாரிக்கு முகம் சிவந்துவிட்டது. கண்ணன் வரம் கொடுக்கிறேன் என்னும் பெயரில் கழுத்தறுத்துவிட்டதாகவே தோன்றியது. கண்கள் சிவக்க அந்தப் புல்லாங்குழலைப் பார்த்தார். அப்படியே கைகளைச் சுழற்றி அதை ஆகாசத்தில் வீசி எறிந்தார்!"

புதிராகப் பேசின பைராகி ஆங்காரமாய் எல்லோரையும் ஒரு பார்வை பார்த்துவிட்டு திரும்பி நடக்கத் தொடங்கிவிட்டார். அதற்கு முன் ராகவ் மீது மட்டும் ஒரு கரிசனப் பார்வை. அவனுக்கும் அது புரிந்தது!

தேவராஜ் மாஸ்டர், ஷ்யாமளாவை கையைப் பிடித்துக் கொண்டு உள் அழைத்துச் செல்ல முற்பட்டார். அப்படியே திரும்பி, அந்த ஒதிய மரத்தடியைப் பார்த்தார். அவர் பார்க்கவும், தெருவில் வந்து கொண்டிருந்த நாய் ஒன்று யாரோ தன்னை கல்லால் அடித்துவிட்டதைப் போல உணர்ந்து பலமாகக் குலைக்கவும் சரியாக இருந்தது.

ஆத்மாத்துக்கு ரூபம் இருக்கிறது என்பதும், அவைகளை உணரும் வல்லமை அல்லது பார்க்கும் சக்தி, நாய்களுக்கும் மேலும் சில மிருகங்களுக்கும் இருப்பதாக அவர் கேள்விப்பட்டதும் உண்மைதான் என்று அப்போது அவருக்குத் தோன்றியது.

ஹாஸ்பிடல்

ருத்ராவின் வேகமான வருகையால் பரபரப்பானது சூழல். காவலுக்கு இருந்த சென்ட்ரி போலீஸ் ஒருவர் ருத்ராவைப் பார்த்து விட்டு, அப்பொழுதுதான் பற்ற வைத்த சிகரெட்டை வேகமாகத் தூக்கி எறிந்தார். ருத்ராவின் கால்கள் யக்ஞன் இருக்கும் வார்டு நோக்கித்தான் சென்றது.

யக்ஞனும் நவீன மருத்துவ விஞ்ஞானத்தின் அவ்வளவு சாகசப் பிடிக்குள்ளும் கிடந்தான். ஒருபுறம் கம்ப்யூட்டர் மானிட்டரில் ஒளிக்கோடுகளின் ஓட்டமான ஓட்டம். மறுபுறம் மூக்குத் துவாரத்தில் ஆக்ஸிஜன் குழாயின் செருகல்... மார்புப் பாகத்தில் ஏராளமான கார்டியோ பரிசோதனைக்கான வயர்கள்.



அவன் 'உயிருடன் இருக்கிறான்' என்பது மட்டும்தான் அங்கே உண்மை. மற்றபடி அவனிடம் பெரிதாக எந்தத் தாக்கங்களும் இல்லை.



ருத்ரா வரவும்,டாக்டர் ஒருவரும் உடன் தொற்றிக் கொண்டு வந்தார். யக்ஞன் பற்றி ருத்ரா எதுவுமே கேட்காமலே விளக்கத் தொடங்கினார். "ஸார்! இந்த பேஷண்ட் இப்பக்கூட செத்துட்ட மாதிரிதான். இந்தப் பாடியோட மெட்ட பாலிஸத்துல, பிரீத்திங் பாய்ண்ட் இன்னும் கொலாப்ஸ் ஆகாம இருக்கு. ஆக்ஸிஜன் மூளைக்குப் போயிருந்தா கண் விழிச்சிருப்பார். ஆனா போகலை! எங்க வரைல இது பெக்கூலியர் கேஸ்..."

"என்ன பெக்கூலியர்? உயிர் இருக்கு, இல்லேங்கறதுகூடத் தெரியாம நீங்க மார்ச்சுவரில தூக்கிப் போட்ருவீங்களா..? சினிமாக்காரங்க எழுதற எல்லாம் உண்மையாக்கிடுவீங்க போல இருக்கே!"

"ஸார்... ஒரு விஷயத்த என்னால உறுதியாச் சொல்ல முடியும். நான்தான் மார்ச்சுவரில ஃபைனலா செக் பண்ணினவன். ஹெல்ப்பர்ஸ் பாடிய தெச்சப்போ, நான் பக்கத்துலதான் இருந்தேன். அப்ப நிச்சயமா உயிர் இல்லை. உயிர் இருந்திருந்தா அப்படியெல்லாம் பாடியைக் கிழிச்சுத் தைக்க முடியாது. இன்ஃபாக்ட் இங்க கொண்டு வந்தப்பவே, உடம்புல கிட்டத்தட்ட ஒரு முப்பது பர்ஸண்ட் சதைப்பாகம் இல்ல. அவ்வளவையும் நாயும், நரியும் கடிச்சு விழுங்கியிருந்தது பாருங்க...."

- பேச்சோடு பேச்சாக இரு காலின் தொடைப் பகுதியில் துணியை விலக்கிக் காட்டியபோது, ருத்ராவுக்கு குமட்டிக் கொண்டு வரத் தொடங்கிவிட்டது.

"என் அனுபவத்துல சொல்றேன் ஸார்... இது உங்க அதிசயத்துல சேர்க்கப்பட வேண்டிய ஒரு விஷயம். எங்க மெடிக்கல் சைன்ஸ்ல இந்த மாதிரி விஷயங்கள, சிம்ப்பிளா 'மிராகிள்'னு சொல்லிட்டு விட்ருவோம்.. அதைத் தவிர வேற வார்த்தையே கிடையாது.

ஒரு டாக்டரா உயிரோட ரகசியத்தைத் தெரிஞ்சுக்கற ஆசை எனக்கு நிறையவே உண்டு. உயிர்ங்கறது பாடி பூரா பரவலா இருக்கற ஒரு உஷ்ணமா? இல்ல ஹார்ட்டுக்குள்ள வந்துட்டுப் போற காற்றா? அதுவும் இல்ல ஆக்ஸிஜனால ஆப்பரேட் ஆகுற மூளையோட இயக்கமா? இல்ல கண்ணுக்கு புலனாகற, காதால கேட்க முடிஞ்ச ஒளி-ஒலியா...? இப்படிப் பிரிச்சுப் பிரிச்சு எவ்வளவோ கேள்விகள கேட்டுகிட்டு, அதைப் பத்தி எல்லாம் மட்டுமே மணிக்கணக்குல விவாதம் செய்திருக்கோம். எனக்குன்னு இல்லை, இந்த உலகம் முழுக்க இருக்கற எந்த டாக்டராலையும் ஒரு அசைக்க முடியாத விடையை இம்மட்டும் கண்டுபிடிக்க முடியல ஸார்..."

-டாக்டரின் நீர்க்கமான விரிவான பேச்சு, 'யக்ஞன் விஷயத்தில் நாங்கள் ஒரு தவறும் செய்யவில்லை' என்பதுபோல இருந்தது.

"சரி டாக்டர்... இந்த பேஷண்ட் எப்ப கண் விழிப்பார், எப்ப வாய் திறந்து பேசுவார்ன்னு சொல்லமுடியுமா?"

"கிட்டத்தட்ட 'எப்ப மழை பெய்யும்? எப்ப இடி இடிக்கும்?'னு நீங்க கேக்கற மாதிரிதான் இதுவும். ஐ காண்ட்..."

- பேசிக் கொண்டே வார்டுக்கு வெளியில் வந்தபோது, எதிரில் ஒரு கண்ணமங்கலத்துக்காரர். ஷ்யாமளாவால் அவர் மனைவி தப்பிவிட்டிருந்தாள். அவர் டாக்டரைப் பார்த்து கும்பிட்டார்.

"என்னையா, எப்படி இருக்காங்க உங்க மனைவி?"

"ஆண்டவன் புண்ணியத்துல ரொம்பவே சீக்கிரமா குணமாகிவிட்டாங்க ஐயா. அதை என்னன்னு சொல்றது... முன்னல்லாம் முனுக்குன்னா ஜலதோஷம் பிடிக்கும்... பத்தடி தள்ளி இருக்கிற சாமான் கூட தெளிவா தெரியாது. இப்ப அவ உடம்பே தலைகீழா மாறிப் போச்சு. 'என்னங்க, எனக்கு இப்ப நான் பெரிய புள்ள ஆனப்போ எப்படி இருந்தேனோ அப்படி இருக்குதுங்க...'ன்னு சொல்றா... எல்லாம் எங்க திரௌபதியம்மா போட்ட பிச்சை..."

ருத்ராவை அந்தப் பேச்சு ஒரு இடி இடித்தது. அவர் விலகவும், "யார் டாக்டர் அந்த திரௌபதி?" என்று கேட்டார்.

டாக்டர் முகத்தில் ஒரு சிரிப்பு. கூடவே ஆழ்ந்த பெருமூச்சு.

"என்ன டாக்டர் சிரிக்கிறீங்க?"

"இது அடுத்த மிராகிள் ஸார்.... அதை நினைச்சேன், சிரிப்பு வந்துடுச்சு. வாஸ்தவத்துல இது கேலிச் சிரிப்பு இல்ல. நிஜமான சந்தோஷச் சிரிப்பு! எல்லா டாக்டர்களும் கொஞ்சமாவது நாத்திக உணர்ச்சியோடயும் இருப்பாங்கன்னு நம்பறவன் நான். அதுக்கு எவ்வளவோ காரணங்கள்! அதே டாக்டர்கள்ள சிலர் ஒரு நாள் பெரிய சாமியார் லெவலுக்கு மாறி, பக்தியிலேயும் போயிடுவாங்க. வாஸ்தவத்துல இப்ப நான் அப்படித்தான் போயிருக்கணும்..." என்றார்.

"நான் கேட்ட கேள்விக்கு இது பதில் இல்லையே..?"

"உண்மைதான்... என்னால சட்டுன்னு ஒரு வரியில அந்தத் திரௌபதிகிட்ட போக முடியல; அதான் இவ்வளவு பெரிய பீடிகை! ஸாரி... நான் விஷயத்துக்கு வரேன். நீங்க பார்த்த இந்த யக்ஞன் உடம்பு கிடைச்ச கண்ணமங்கலத்தைச் சேர்ந்த ஒரு பெண் பேர், சியாமளா. அவதான் அந்த நபர் குறிப்பிட்ட திரௌபதி. அதாவது மகாபாரதத்துல வர்ற திரௌபதியோட அம்சமாம் அந்தப் பொண்ணு. அந்தப் பொண்ணுகிட்ட ஒரு அபார சக்தி இருக்கு. அவ கை பட்டா, பட்ட மரம் துளிர்க்கும்! எப்பேர்ப்பட்ட நோயாளியையும் அவ கை வருடிக் கொடுத்தா அவங்க உடம்பு குணமாகும்னு ஒரு நம்பிக்கை... இதை நாங்க ஆழ் மனசோட ஒரு தனிச்ச செயலா பார்ப்போம். மனோதத்துவ டாக்டர்களோ, 'எந்த மாயமந்திரமும் கிடையாது. அதுவும் மனசோட ஒரு சக்திதான்'னு சொல்வாங்க. அப்படி ஒரு பெரிய சக்தி, அந்தப் பொண்ணுகிட்ட இருக்கு. அந்தப் பொண்ணு அவர் மனைவியை வருடிக் கொடுத்தாங்க. அதனால கிட்டத்தட்ட மரணத்தோட பிடில இருந்த அவங்க, இப்ப அவரே சொன்ன மாதிரி சின்ன ஜலதோஷச் சிக்கல்கூட இல்லாம பெரிய அளவு ஆரோக்கியமா இருக்காங்க".

- டாக்டர் முடித்தார். ருத்ரா முகத்தில் உடனேயே ஷ்யாமளா பற்றிய எண்ண அலைகள்.

"நீங்க என்ன நினைக்கறீங்கன்னு புரியுது. அந்தப் பொண்ணு வந்து யக்ஞன் உடம்பை ஸ்பரிசிச்சா அதனால எதாவது மாற்றம் நிகழுதான்னு பார்க்க விரும்பறீங்க... சரிதானே?"

"கிட்டத்தட்ட அப்படித்தான் டாக்டர். ஒரு போலீஸ் அதிகாரியான நான், இந்த மாதிரி நம்பிக்கைகளைப் பெருசா எடுத்துக்கக் கூடாதுதான். இருந்தாலும் என் புலனாய்வுல, இதுக்கும் கொஞ்சம் இடம் கொடுக்க விரும்பறேன். அதுக்கு அந்த ஊர்ல எனக்கு ஏற்பட்ட அனுபவமும் ஒருகாரணம்னு சொல்வேன்"

"நீங்க எப்படிச் சொன்னாலும் விடை ஒன்றுதான். யக்ஞனை அந்தப் பொண்ணோடு வந்து பார்க்கப் போறீங்க, சரிதானே?"

"நிச்சயமா... ஏன்னா, இவன் கண் விழிச்சு பேசப் போறதுலதான் பல உண்மைகள் தெரிய வருவதே இருக்கும்"

"அப்ப அப்படியே செய்யுங்க... எனக்கும் 'ஷ்யாமளாங்கற அந்தப் பெண்ணோட தனிப்பெரும் சக்தி எது? அது எப்படி வேலை செய்யுது?'ங்கறதைத் தெரிஞ்சுக்க இது ஒரு சந்தர்ப்பம்!"

- டாக்டரும் வழிமொழிய, ருத்ரா அங்கிருந்து நேராகப் புறப்பட்டதே கண்ணமங்கலம் நோக்கித்தான்!

“சரி டாக்டர்...
இந்த பேஷண்ட்
எப்ப கண் விழிப்பார்,
எப்ப வாய் திறந்து
பேசுவார்னு
சொல்லமுடியுமா?”



அன்றைய ‘காரியங்கள்’ முற்றாக முடிந்த நிலையில் வேத பிராம்மணரும், அவரோடு வந்தவர்களும் திரும்ப நாளை வருவதாகச் சொல்லிவிட்டுப் புறப்பட்டனர். ஷ்யாமளாவின் அந்தப் பணக்கார வீட்டு முகப்பில் ஓதிய மரத்துக்குப் பக்கத்தில் ஒரு கீற்றுக் கொட்டகை போடப்பட்டு, உள்ளே ஒரு அடி உயரத்துக்கு மைல்கல் போல் கல் ஒன்று நடப்பட்டிருந்தது. ஒரு வைஷ்ணவனின் வீட்டில் சாவு நிகழ்ந்தால், இறந்த உயிரானது ஆத்மாவாய் அப்படி நடப்பட்டிருக்கும் கல்லில் உறைவதாக ஐதீகம். பத்து நாட்களுக்கு அந்தக் கல்லுக்குத்தான் கர்ம காரியங்கள் நடைபெறும். ஒவ்வொரு நாளும் அது ஒவ்வொரு அடியாக பூமியை விட்டு வெளியேற்றப்பட்டு, பத்தாம் நாள் தலைக்கு மேல் பத்தடிக்கு மேல் சென்றுவிட்ட நிலையில் அந்த ஆத்மாவின் பாவ-புண்ணியங்களுக்கு ஏற்ப அதற்குப் பாதை உருவாகி அதில் அது சென்றுவிடும் என்பதே உயிர்கள் குறித்து வைஷ்ணவம் கொண்டிருக்கும் நம்பிக்கை. கருடபுராணம் இது பற்றி இன்னமும் விரிவாகவே கூறுகிறது.

மாலை வேளையில் அந்தக் கீற்றுக் கொட்டகையைச் சுற்றி ஒரு அசாத்ய அமைதி நிலவியபடி இருக்க, மாடியில் இருந்து கொண்டு ஜன்னல் வழியாக அங்கேயே பார்த்தபடி இருந்தார் மாஸ்டர் தேவராஜன். மெல்ல அவர் பின்னால் வந்து நின்றான் ராகவ்.

“என்ன மாஸ்டர்... என்னத்த அப்படிப் பார்த்துகிட்டு இருக்கீங்க?”

“அதோ அந்த ஓலைக் குடிசையைத்தான்...”

“என்ன மாஸ்டர், உங்க கண்ணுக்கு அங்க ஷ்யாமளா அப்பாவோட ஆவி-கீவி தெரியுறதா என்ன?”

“இப்ப தெரியல ராகவ்... ஆனா அப்ப அந்தப் பைராகி, புல்லாங்குழலைக் கொடுத்து, பார்க்கச் சொன்னப்போ தெரிஞ்சது...”

“அப்ப இறந்தவர்களோட ஆத்மா வீட்டை சுத்திவருங்கறது உண்மைதானா மாஸ்டர்?”

“கண்ணால பார்த்த பிறகும் எப்படி நான் இல்லேன்னு சொல்வேன்...”

“அப்ப அந்தப் பைராகி கொடுத்தது புல்லாங்குழலா, இல்ல மந்திரக் கோலா?”

“எனக்குள்ளேயும் அதே கேள்விதான்... கையில செல்ஃபோன் இருந்தா டவர் லிங்க் கிடைச்சு அதன் மூலமா பேச்சு காதுல விழுற மாதிரி, அந்தக் கோலுக்கும் பிரபஞ்ச வெளிக்கும் ஒரு தொடர்பு இருக்குன்னு நினைக்கறேன்...”

“மாஸ்டர் எல்லாரும் மாயங்களை விளங்கிக்க, இன்னொரு மாயம்கிட்டதான் போவாங்க. ஆனா நீங்க சைன்ஸ் கிட்ட வந்தது, எனக்குப் பெரிய ஆச்சரியமா இருக்கு...”

“எந்த மாயமும் புரிஞ்சிட்டா சைன்ஸ்தான் ராகவ். 15 வருஷம் முந்தி வரை, செல்ஃபோனே மாயம் தானே..! இப்படி எல்லாம் தெருப்பிச்சைக்காரன் திருவோட்டுல கூட ஒரு செல்ஃபோன் இருக்கும், அவனும் யார் கூடயாவது அதைக் கொண்டு பேசிகிட்டிருப்பான்னு சொல்லியிருந்தா நம்பியிருப்போமா?”

“என்னமோ ஸார்... நான் இங்க வந்ததுல இருந்து, எனக்குள்ள நிறையவே தாக்கங்கள். இன்னும் கொஞ்சநாள் நான் இங்கேயே இருந்தா, என் மியூசிக் கனவே தவிடு பொடியாயிடும்னுதான் தோணுது. விரக்தி, பயம், குழப்பம்னு நிறைய உணர்வுத் தடுமாற்றங்கள் எனக்குள்ள...”

“நீ தப்பாப் பார்க்கறே... எதையும் மாத்தி யோசி. கொடுமையான வெயில் காலத்தையும், வியர்த்து வடியறதையும் எந்த ஒரு மனிதனும் விரும்ப மாட்டான். இந்தக் கோடைபோய் மழைக்காலம் வராதான்னு ஏங்குவான். அதுவே பெருகுற வியர்வையால உடம்புல கரப்பிகள் இயக்கம் சீராகுதுன்னும், உஷ்ணம் காரணமா உடம்போட இயக்கமும் சிறப்பா இருக்கறதையும் நினைச்சா அவனுக்குக் கோடை மேல கோபமோ, வருத்தமோ வராது.

கண்ணமங்கலம் உன்னை பெரிய மியூசிக் டைரக்டராக்கப்போகுதுன்னு நினை. வாழ்க்கையோட ரகசியங்கள் தெரிய வருவதை உனக்குக் கிடைச்சிருக்கிற வாய்ப்பா நினைச்சுக்கோ....”

- அவர் அப்படிச் சொல்லும்போது கீழே ஒரு அம்பாஸடர் காரில் இருந்து இறங்கிக் கொண்டிருந்தார் ருத்ரா!

(தொடரும்)


“பண்டாரி கோபத்தில் தூக்கி எறிந்த அந்தப் புல்லாங்குழல், அவரது வீட்டுக்குப் பக்கத்தில் உள்ள பூந்தோட்டத்தில் போய் விழுந்தது. பண்டாரி அடக்க மாட்டாத கோபத்தோடு வீட்டிற்குள்ளும் சென்றுவிட்டார். தோட்டத்தில் விழுந்த புல்லாங்குழலை ஓடிப் போய் எடுத்தவரும் ஒரு வடநாட்டவர்தான். பெயர் கோகுல்நாத் பாண்டே! கோகுல்நாத் பாண்டே, கும்பகோணம் மகாமகத்துக்காக வந்தவர். வந்த இடத்தில் கண்ணமங்கலம் பற்றியும், மன்னார் பற்றியும் அறிந்து, மன்னாரை தரிசிக்கத்தான் வந்தார். மன்னாரை தரிசனமும் செய்தவர் மன்னாருக்குச் சேவை செய்ய விரும்பி, மன்னார் உறங்கும் போது காலெல்லாம் பிடித்துவிட்டார்.

'ஸ்வாமி... நான் பெரிய பாவி! என் வம்சத்தில் ஆண் வாரிசே இல்லாமல் போய்விட்டது. என் வம்சத்து அவ்வளவு பெண்களும் புருஷனை இழந்து விதவையாகிவிட்டனர். மிகப் பெரிய ஒரு சாபமே இவ்வாறு ஆனதற்கெல்லாம் காரணம் என்று உணர்ந்துகொண்டே, பாபம் தொலைக்க கும்பகோணம் வந்தேன். மகாமகக் குளத்தில் நீராடிய புண்ணியம் உங்களை தரிசிக்கும் வாய்ப்பும் கிட்டியது. உங்கள் மூலமாக அந்தக் கண்ணனிடம் ஒரு வேண்டுகோள் வைக்க விரும்புகிறேன். எங்கள் குடும்பத்தின் சாபம் நீங்கி, நாங்கள் எல்லா செல்வங்களையும் பெற வேண்டும். அதற்கு நீங்கள்தான் வழிகாட்ட வேண்டும்' என்று வேண்டிக் கொள்ள, மன்னாரும் சிரித்தபடி, 'நீ இங்கிருந்து உன் ஊருக்குச் செல்லும் போது அந்தக் கண்ண பரமாத்மா, உன்னோடு ஏதோ ஒரு விதத்தில் வருவதற்குச் சம்மதம் தெரிவித்துள்ளார்' என்று கூறியிருந்தார். அதன்படி புறப்பட்டுச் செல்லும்போதுதான் பண்டாரி தூக்கி எறிந்த புல்லாங்குழல் அவர் கையில் கிடைத்தது. அதைப் பார்க்கவும் அந்தக் கண்ணனே வந்துவிட்டது போல ஒரு மகிழ்ச்சி கோகுல்நாத் பாண்டேவிடம்! ஏற்கெனவே அதை ஒரு போலியாகப் பார்த்த ஊர் ஜனங்களும் பாண்டே அதைக் கையில் எடுத்துக் கொண்ட போது பெரிதாக ஆட்சேபிக்கவில்லை!

# 32

# கிருஷ்ண தந்திரம்!

கோகுல்நாத் பாண்டேயும் குழலை கண்களில் ஒத்திக் கொண்டார். அப்படியே வடக்கில் பத்ரிநாத் வரை செல்ல குதிரைகள் பூட்டிய ரதம் ஒன்று கிடைத்தால் நன்றாக இருக்கும் என்று எண்ணியது தான் தாமதம், தொலைவில் நல்ல வெண்ணிறப் புரவிகள் இரண்டு பூட்டிய ஒரு கோச்சு வண்டி ஒன்றும் வந்து கொண்டிருந்தது.

அதைப் பார்த்த பாண்டேவுக்கு ஒரே சந்தோஷம்."



ருத்ராவை பார்த்த தேவராஜ் மாஸ்டரிடம் ஒரு அர்த்த புஷ்டியுள்ள புன்னகை உருவானது. ராகவ் அதைக் கவனித்தவனாக, "என்ன மாஸ்டர்? இவரைப் பார்த்துட்டு சிரிக்கிறீங்களே... இவரை நாம கோயில்ல பார்த்தோம்தானே?" என்று கேட்டான்.

"ஆமாம் ராகவ்... என் கணிப்பு சரியா இருந்தா, இவர் ஒரு போலீஸ் ஆஃபீஸராகத்தான் இருக்கணும். ஷ்யாமளாவைப் பாக்கத்தான் இவரும் வந்திருக்கணும்கறது என் யூகம்..."

"மாஸ்டர்... இந்த ஊர் விஷயம் போலீஸ் விசாரணை பண்ற அளவுக்குப் போயாச்சா?"



"பின்ன... ஒரு பிணம் கிடைச்சிருக்கு. ஊருக்குள்ளேயும் பல மாயமான செயல்பாடுகள்! ஒருத்தன் பைத்தியமா வேற ஆயிட்டான்! இவ்வளவு நடந்த நிலையில எப்

படி போலீஸ் வராம இருக்கும்?"

- தேவராஜ் மாஸ்டரும்,ராகவும் பேசிக்கொண்டே மாடி அறையில் இருந்து கீழே வந்தபோது ருத்ராவிடம் ஷ்யாமளாவின் சார்பாக கோமளா மாமிதான் பேசியபடி இருந்தாள்.

"நீங்க யார்னு நாங்க தெரிஞ்சுக்கலாமா?"

"நான் ஒரு போலீஸ் ஆஃபீஸர்மா. இதுதானே ஷ்யாமளாங்கற பெண்ணோட வீடு..?"

"ஓ! நீங்க ஷ்யாமளாகிட்ட துக்கம் கேட்க வந்த வரா?"

"இல்லம்மா... உதவி கேட்க வந்துருக்கேன்"

- அவர் சொல்ல, ஷ்யாமளாவும் கீழ் இறங்கி வந்து அவர் எதிரில் நின்றாள். ருத்ராவுக்கே அவன் தோற்றம் சற்று பிரமிப்பை மூட்டியது. அழகானவன், லட்சணமானவன், தெய்வீகப் பொலிவு என்று எல்லா விதமாகவும் அவன் இருப்பது போலவும் தோன்றியது.

"நீங்க?"

"நான் ருத்ராங்கற ருத்ரேஸ்வரன்மா... ஐ ஆம் ஃப்ரம் க்ரைம் பிராஞ்ச் இன்வெஸ்டிகேஷன். உங்ககூட கொஞ்சம் பெர்ஸனலா பேச வந்திருக்கேன்..."

- ஷ்யாமளாவுக்கு அவர் போலீஸ் என்ற உடனேயே சற்று சுருக்கென்று இருந்தது. இருந்தும் சுதாரித்தவளாக, "வாங்க ஸார்.." என்று தன் அறை நோக்கி நடந்தாள். எதிரில் ராகவும், தேவராஜ் மாஸ்டரும் பார்த்தபடியே நின்றனர். ருத்ரா உள் நுழையவும் அறைக்கதவும் மூடிக் கொண்டது! அவ்வளவையும் பார்த்தபடி இருந்த உறவுகளும், கோமளா மாமியும் ஆளுக்கு ஆள் பேந்தப் பேந்த முழித்தனர்.

"என்னென்னவோ நடக்கறது... வீடு தேடி போலீஸ் விசாரிக்க வந்துருக்குன்னா, விஷயம் ரொம்ப மோசமாகத்தான் இருக்கணும்"

"ஒரு காலத்துல கண்ணமங்கலத்துல ஒரு கைப்பிடி மண்ணாவது நமக்குச் சொந்தமா இருக்கணும்னு ஆசைப்படுவா. இப்ப இந்த ஊர் ஒரு மாயா பஜார் மாதிரி ஆயிடுத்து. கோயில்லயும் பூஜை நின்னு போய்.... எல்லாம் எதுல போய் முடியப் போறதோ தெரியல..."

- அங்கங்கே திட்டுத்திட்டாக தேங்கி நின்று கொண்டு ஆளுக்கு ஆள் பேசிக் கொண்டதெல்லாம் இப்படித்தான்.

ராகவ், தேவராஜ் மாஸ்டரை பார்த்தான். "கிராப்பை வெச்சு கண்டுபிடிச்சீங்களா?"

மாஸ்டர் சன்னமாகச் சிரித்தார்.

"மாஸ்டர்... இங்க எல்லாமே விநோதமா இல்ல? ஒரு பக்கம் புரிஞ்சுக்க முடியாத சில விஷயங்கள். மறுபக்கம் எதையும் தோண்டித் துருவிப் பாக்க முடிஞ்ச போலீஸ். என் அனுபவத்துல ஒன்னு கிழக்குன்னா, ஒன்னு மேற்கு. ஒரு கிராமத்துல இரண்டுக்குமே இடம் இருக்கறதுதான் ஆச்சரியம், இல்லையா மாஸ்டர்?"

"ஆமாம் ராகவ்... நான்கூட சும்மா ஒரு பார்வை பார்ப்போமேன்னுதான் வந்தேன். ஆனா இப்ப நான் ரொம்பவே சந்தோஷப்படறேன் ராகவ். இனி ஒவ்வொரு நாளுமே நமக்கு இங்க தீனிதான். அதே சமயம் எல்லா விஷயத்தையும் அறிவுப் பார்வையால் மட்டுமே பார்க்கக்கூடாது. திடமான பொருட்களை தராசுல எடை போட்டும், திரவப் பொருளை லிட்டர் கணக்குல நிறுத்தும் வாங்குற மாதிரி நாம பாக்கற விஷயங்களைப் புரிஞ்சுக்கணும்..."

- தேவராஜ் மாஸ்டர் சொல்லிக் கொண்டிருக்கும் போதே ராகவிடம் ஒரு மெலிதான மாற்றம். தலைவலிக்காரன் போல நெற்றியைத் தேய்த்துக் கொள்ள ஆரம்பித்தான்.

"என்ன ராகவ் தலைய வலிக்குதா?"

"ஆமாம் மாஸ்டர்... திடீர்னு விண் விண்ணுன்னு வலிக்குது."

"ஏதாவது பெய்ன்பாம் இருந்தா எடுத்து போட்டுக்கோ... போ..."

- அவர் சொல்ல அவனும் மாடியில் தனக்கு ஒதுக்கப்பட்ட அறை நோக்கிச் சென்றான். சென்றவன் மளமளவென்று உடையை மாற்றிக் கொண்டு வெளியே புறப்படுகின்ற தோரணையோடு வேகமாக வெளியேறவும் செய்தான். மாஸ்டரும் பார்த்துவிட்டுக் கேட்டார்.

"ராகவ் எங்க கிளம்பிட்டே...?"

அவர் குரல் அவன் காதில் விழுந்தது போலவே தெரியவில்லை. அவன் பாட்டுக்குப் போய்க் கொண்டிருந்தான்!

மாஸ்டர் முகத்தில் பாலிதீன் தாளைக் கசக்கியது போல ஒரு சலனம். கதவைத் திறந்து கொண்டு ருத்ராவும் வெளியில் வந்தார். அவர் முகத்தில், வரும்போது இருந்த குழப்பம் இல்லை. ஒரு புது தெம்பு தெரிந்தது. அவர் விலகவும், ஷ்யாமளாவே மாஸ்டரை நெருங்கி வந்தாள்.

கோமளா மாமி உட்பட மற்றவர்களும் சூழ்ந்து கொண்டனர்.

"ஷ்யாமளா... என்னம்மா சொல்லிட்டுப் போறார்? எனக்குப் படபடன்னு இருக்கு. பயப்படும்படியா ஒன்னுமில்லையே?"- என்று மாமி கேட்டிட, ஷ்யாமளா மறுப்பாகத் தலையை அசைத்தாள்.

"மாஸ்டர்... அவர் ஷ்யாமளாவைப் பார்க்க வரலை; திரௌபதியைப் பார்க்க வந்துருக்கார். திரௌபதியைக்கூட பார்க்க வரலை. திரௌபதி கிட்ட உதவி கேட்டு வந்துருக்கார். ஆஸ்பத்திரில ஒரு பேஷண்ட்டை நான் தொட்டதும், அதனால அவ குணமானதும் இந்த இன்ஸ்பெக்டர் காது வரை வந்துருக்கு.

"நீ ஏன் கிட்டத்தட்ட கோமாவுல இருக்கற யக்ஞனை வந்து பார்த்து அவன் கண் திறந்து பார்க்க உதவி செய்யக் கூடாதுங்கறதுதான் அவர் கேட்ட கேள்வி"

"நீ என்ன சொன்னே ஷ்யாமளா?"

"சரின்னு சொல்றத தவிர வேற வழி..."

"அப்படின்னா எப்ப ஆஸ்பத்திரிக்கு போகப் போறே...?"

"ஒரு அரைமணி நேரத்துல வரேன், ரெடியா இரு; நான் கோயில் வரை போய்ட்டு வரேன்'னு போனார்..."

"கோயிலுக்கா...? கோயில்லதான் பட்டர் நடையையே திறக்கறதில்லையே!"

"அது எனக்குத் தெரியாது... மாஸ்டர் நீங்களும், ராகவும்கூட என்கூட வரணும்... வரேளா?"

"தாராளமாம்மா... எனக்கும் திரௌபதியோட சக்தியைத் தெரிஞ்சுக்க ஆசையா இருக்காதா என்ன?"

"ஆமாம்... எங்க ராகவ்?"

"அதை ஏன் கேட்கற... இப்பதான் எங்கேயோ வெளியே கிளம்பிப் போனான்... எங்கேன்னு தெரியல..."

"தனியாவா போனான்? அவனுக்கு இந்த ஊர்ல யாரையும் தெரியாதே!"

- ஷ்யாமளா வருந்திட, மாஸ்டரும் யோசிக்கத் தொடங்கிட.....



ராகவ் யாதவகிரி மலைப்படிகளில் ஏறிக் கொண்டிருந்தான். நடையில் ஒரு அசாத்ய வேகம். கோயிலில் ஒருவர்கூட இல்லை. அவன் கண்ணிரண்டும் பைராகியைத்தான் தேடிற்று. அவரும் புன்னை மரத்தடியில் குழலிசைத்தபடி அமர்ந்திருந்தார். ராகவ் வரவும், வாசிப்பை நிறுத்தினார். அவனும் வசியத்தால் கட்டி இழுத்து வரப்பட்டவன் போல அவரைப் பார்த்தான்.

"வாப்பா ராகவ்! நீ வரணும்னுதான் வசந்த ராகம் இசைச்சேன். வந்துட்டே சந்தோஷம்..."

"என்னை எதுக்குக் கூப்பிட்டேள் ஸ்வாமி"

"விஷயமிருக்குப்பா... உன்னால எனக்குச் சில காரியங்கள் ஆகணும்"

"என்னாவோ?"



"ஆமாம்... நீ இப்ப இருக்கற செல்லப்பாவோட அகத்துல பலகணி அறைன்னு ஒண்ணு இருக்கு. அந்த அறையில ஒரு மரப்பலகணி இருக்கு. அது மேல ஒரு மரப்பெட்டியில பலவிதமான புத்தகங்கள், டைரிகள்னாம் இருக்கு. குறிப்பா முன்னூறு வருஷத்துக்கு முந்திய ஓலைச்சுவடிக் கட்டுகளும் இருக்கு. அதுல ஒண்ணுதான் கண்ணமங்கலத்து கிருஷ்ண காதை! நீ எனக்கு அதைத் தேடி எடுத்துண்டு வந்து தரணும்..."

"முயற்சி செய்து பாக்கறேன் ஸ்வாமி..."

"பாக்கறேன்னுல்லாம் சொல்லாதே... முடிக்கறேன்னு சொல். உன்னால முடியும். இங்க கிட்ட வா..."

- அவர் அவனை அழைக்க அவனும் அவரை நெருங்கினான். தன் இடுப்பு மடிப்பில் இருந்து ஒரு உள்ளங்கையில் அடங்கிவிடும் செப்புச்சிமிழ் ஒன்றை எடுத்துத் திறந்து, அதனுள் இருந்த மையை லேசாக வழித்து எடுத்து அவன் புருவத்தில் பூசிய பைராகி, 'இதுக்குப் பேர் மாரண மை! இதைப் பூசிண்டா எதிர்ல இருக்கிறவாளால நம்ம மேல கவனம் செலுத்த முடியாது. உதாரணமா நீ இப்ப யார்கிட்டயாவது போனாலும் அவங்க உன்னைப் பாக்காம திரும்பிப்பாங்க. இதை நீ முகம் கழுவிக்கும் போது இழந்துடுவே. எனவே வேர்வையோ, தண்ணியோ படாம பார்த்துக்கோ. அந்தக் காலத்துல திருடர்கள் திருவிழாவுல திருடப் போகும்போது இதைத்தான் பூசிக்கிட்டுப் போவாங்க..."

"சரி ஸ்வாமி, நான் கவனமா இருந்து அந்த ஏட்டுக் கட்டோட உங்களை வந்து பாக்கறேன்"

- ராகவ் மிகப் பணிவாகக் கூறிவிட்டுத் திரும்பினான். எதிரில் ருத்ரா! ஆனால் பைராகி சொன்னதுபோல அவன் மேலே கவனமில்லாமல், எங்கோ எதையோ பார்த்தபடி அவர் வந்து கொண்டிருந்ததுதான் ஆச்சரியம்!

பைராகியும் அவர் வருவதைப் பார்த்துவிட்டு அலட்சியமாக புல்லாங்குழலை வாசிக்கத் தொடங்கினார். ருத்ராவும் நெருங்கினார். 'வணக்கம் சாமி' என்றார். பைராகியும் கழுத்தை வளைத்து அரைப்பார்வை பார்த்தார். அதிலும் ஏராளமான அலட்சியமும், 'எங்க வந்தே..?' என்கிற கேள்வியும்தான் இருந்தது.

"சாமி... உங்களை நான் இப்ப சந்தேகப்பட்டு ஒரு குற்றவாளியால்லாம் பார்க்க வரலை. உங்க மூலமாகவே நிறைய உண்மைகளைத் தெரிஞ்சுக்க வந்துருக்கேன்..."

"நீ சந்தேகம்தான் படேன்- குற்றவாளியாகவும்தான் பாரேன். என்ன இப்போ?"

"இப்படி வெடுக்குன்னுல்லாம் பேசாதீங்க. நான் போலீஸ்காரன். அரசாங்க ஊழியன். அது கொடுக்கற சம்பளத்தால வாழறவன். கொஞ்சமாவது நான் கடமை உணர்ச்சியோட இருந்தாதானே அது எனக்கு மரியாதை...?"

"சரி, சரி... வந்த விஷயத்தச் சொல்.."

"நீங்க போனதடவை சொன்ன மாதிரியே, துப்பா இருந்த விஷயமெல்லாம் மெல்ல சரியா மாற ஆரம்பிச்சிருக்கு. அதே சமயம் இந்த ஊர் விஷயத்துல தலை எது? வால் எதுன்னே தெரியல..."

"அதுக்கு நான் என்ன பண்ண?"

"உங்ககிட்ட அபூர்வமா சில விஷயங்கள் இருக்கறதா நான் நினைக்கறேன். அதைக் கொண்டு நான் கேட்கற கேஸ் சம்பந்தமான கேள்விகளுக்குப் பதில் சொல்லணும்..."

- ருத்ரா எங்கே வருகிறார் என்பது பைராகிக்கும் புரிந்தது!

(தொடரும்)

I

"கோகுல்நாத் பாண்டே, தான் நினைத்த மாத்திரத்தில் எதிரில் வந்தபடி இருக்கும் இரட்டைக் குதிரை பூட்டிய கோச்சு வண்டியைப் பார்த்து பெரிதும் ஆச்சரியப்பட்டார். அந்தக் கோச்சு வண்டியும் அருகில் வந்தது. அதில் இருந்து இறங்கியவர்கூட ஒரு வடஇந்தியர்தான். நேராக கோகுல்நாத் பாண்டேயிடமே வந்து, 'ஐயா! நான் பத்ரிநாத்தைச் சேர்ந்தவன். அது ஒரு புண்ய க்ஷேத்திரம். அங்கே எங்கள் முன்னோர்கள் பெயரால் ஒரு பெரிய சத்திரத்தைக் கட்டி, சேவை செய்து வருகிறோம். நானும்கூட கும்பகோணம் மகாமகத்துக்கு வந்தவன்தான். இங்கே மன்னார் என்னும் பரம கிருஷ்ண பக்தர் பற்றி அறிந்தே அவரைப் பார்க்க வந்தேன். அவர் இந்த ஊரில் எங்கே இருக்கிறார்?' என்று கேட்கவும் கோகுல்நாத் பாண்டேவுக்குள் ஒரே உற்சாகம். 'வாருங்கள் அழைத்துப் போகிறேன். என்ன ஒரு ஆச்சரியம் பாருங்கள்... நானும் பத்ரியை சேர்ந்தவன்தான்' என்றார்.

அதன்பின் இருவருமாக மன்னாரை தேடிச் சென்றபோது மன்னார் சில விருட்சக் கன்றுகளுக்கு தண்ணீர் விட்டபடி இருந்தான். கையில் குழலுடன் வந்து நிற்கும் கோகுல்நாத் பாண்டேயைப் பார்த்து விட்டு, 'கிருஷ்ணா' என்று அவரையே கிருஷ்ணனாகக் கருதி வணங்கினான். கோகுல்நாத் பாண்டே அதிர்ந்து போய், 'ஸ்வாமி... என்ன இது..? என்னைப் போய் கண்ணன் என்கிறீர்களே?' என்று கேட்க மன்னாரிடம் ஒரு சிரிப்புதான் பதிலாக வந்தது. பார்வை, பாண்டேயின் கையில் இருந்த அந்தப் புல்லாங்குழல் மேலேயே இருந்தது. பாண்டேயும் புரிந்துகொண்டு, 'இது நான் தங்களைப் போலவே தன்னையும் கிருஷ்ண தர்சனம் செய்தவர் என்று



கூறிக்கொள்ளும் பண்டாரியை பார்க்கச் சென்ற இடத்தில் கிடைத்தது. இது கிடைத்த

நேரம், இதோ என் ஊர்க்காரரான இவரும் கிடைத்தார். இவரும் என்னைப் போலவே உங்கள் தர்சனத்துக்காகத்தான் வந்திருக் கிறார்' என்றார்.

மன்னார் இப்போது பழைய மாட்டுக்கார மன்னார் இல்லை. கீதையில் உள்ள பல ஸ்லோகங்கள் அவன் வாயில் தானாக வந் தன. தொனி, பாவம், பார்வை எல்லாமே மாறிவிட்டது. முகத்தி லும் ஒரு தனி ஒளி தெரிந்தது.

மன்னார் தன் கரத்தை உயர்த்தி ஆசீர்வதித்தவன், 'நீங்கள் இருவரும் புறப்படுங்கள். இந்தக் குழல் உங்களுக்கு கேட்டதை எல்லாம் தரும்' என்று மட்டும் கூறி அனுப்பி வைக்க, அவர்கள் இருவரும் மன்னாரை வணங்கி விட்டு கோச்சு வண்டியில் ஏறிக்கொள்ள கோச்சும் புறப்பட்டது!

பாண்டே கைக ளில் அந்த மாயப் புல் லாங்குழல்!"

# 34

# கிருஷ்ணா

# தந்திரம்!

ராகவ் புறப்பட்டுச் செல்வதைப் பார்க்காமல், தன் அரு கில் வந்து நின்ற ருத்ராவை நிமிர்ந்து பார்க்காமலே பேசத் தொடங்கினார் பைராகி.

"என்ன போலீஸ்காரரே..! திரும்ப எங்க இந்தப் பக்கம்?"

"உங்கள பாத்துட்டுப் போகத்தான்யா வந்துருக்கேன்.."

"பாத்துட்டுப் போகவா... அல்லது என்னைப் புடிச் சின்டு போகவா...?"

- பைராகியின் கேள்வி ருத்ராவை சற்று கீறியது.

"பெரியவரே..! பாக்கறது, புடிக்கறது எல்லாம் அவங்க வங்க நடந்துக்கறதுல இருக்கு. நான் என் கடமையைச் செய்ய வந்துருக்கறவன். உங்ககிட்ட நுட்பமா சில விஷயங் கள் இருக்கற மாதிரி என் மனசுக்குப்படுது. அதான் உங்க ளைப் பாத்துட்டுப் போக வந்தேன்"

"நுட்பமா சில விஷயங்களா..? என்கிட்டயா? சரி, என்ன அதுன்னு சொல்லேன்..."

"இந்த ஊர் எதை எல்லாம் குற்றம்னு சொன்னதோ அதெல்லாம் ஒவ்வொண்ணா இல்லைன்னு மாறிகிட்டு வருது. அதனால உங்கமேல் குற்றம் சுமத்தவோ, இல்ல உங் கள சந்தேகப்படவோ வழியில்லை. அதே சமயம் அறிச் சாட்டியமா நீங்க இங்க இருந்துகிட்டு மறைமுகமா எது எதையோ தூண்டிவிட்டு, பெருசா எதையோ எதிர்பார்த்து கிட்டு இருக்கற மாதிரிதான் எனக்குத் தோணுது"

"ஆமாம்... உன் கேள்விக்கு நான் பதில் சொல்லியாச்சு, நீ போகலாம்..."

"அட என்ன பெரியவரே... ஒத்துகிட்டா மட்டும் போதுமா? எதை நீங்க எதிர்பார்க்கறீங்க? எதுக்காக இங்க இருந்துகிட்டு எல்லாரையும் பயமுறுத்திகிட்டு இருக்கீங் கன்னு தெரிய வேண்டாமா?"

- ருத்ராவின் கேள்வி முடியும் முன் பெரிதாகச் சிரிக்கத் தொடங்கினார் பைராகி. சிரிப்பென்றால் சாதாரணச் சிரிப் பல்ல... அந்த யாதவகிரி மலைக்குன்றே நடுங்கும்படியான சிரிப்பு!

"போதுங்க... சிரிச்சது போதும். இப்பவாவது பதிலைச் சொல்லுங்க"

"நான் சொல்லிடுவேன்... ஆனா நான் சொன்ன பிறகு, நான் சிரித்தமாதிரி நீ சிரிச்சா?"

"நீங்க முதல்ல சொல்லுங்க... சிரிக்கறதும், சிரிக்காததும் பிறகு.."

"அதுக்கு முந்தி உன்கிட்ட சில கேள்விகளை நான் கேட்கலாமா?"

"தாராளமா?"

"உனக்கு கடவுள் நம்பிக்கை இருக்கா?"

"இருக்கு..."

"சபாஷ்... அப்ப இந்தக் கேள்விக்கு பதில் சொல். இருக்கிற கடவுள், ஏன் எல்லாரும் பார்க்கும்படியா தெரிய மாட்டேங்கறான்..."

"சாமி... நீங்க என்ன, நான் இப்ப அரட்டை அடிக்க வந்துருக்கறதா நினைக்கறீங்களா..?"

"அடப்பாவி... இந்தக் கேள்வி உனக்கு அரட்டையா தெரியுதா?"

"கடவுள் இருக்காங்கறது ஒரு மனிதனோட நம்பிக்கை சார்ந்த விஷயம் சாமி. கடவுள் இருக்குன்னு நம்பறவன், தன் நம்பிக்கையை இந்தப் பிரபஞ்சத்துக்கு வெளியேயும் வெச்சிருக்கான்னு அர்த்தம். இல்லைன்னு சொல்றவன், பிரபஞ்சத்துக்கு உள்ளே தன் காட்சிக்குப் புலனாகறத மட்டும் நம்பறவன்னு அர்த்தம். இது தான் என் கருத்து"

"உன் விளக்கத்தை விடு. எனக்கு பதில் சொல். கடவுள் ஏன் எல்லாரும் பார்க்கும்படியா தெரியறதில்லை..?"

"இதுக்கு எனக்கு பதில் தெரியல சாமி..."

"உனக்குத் தெரியலை... ஆனா எனக்குத் தெரியும்..."

"சரி சாமி... நீங்க இந்த ஊரில இருக்கறதுக்கும், இந்தப் பதிலுக்கும் என்ன சம்பந்தம்?"

"நிறைய இருக்கு... நான் நினைச்சது மட்டும் நடந்துட்டா, நான்தான்டா கடவுள்..! நான்தான் கடவுள்!"

- பைராகியின் பேச்சு ருத்ராவுக்கு எரிச்சலைத் தான் மூட்டியது. அது அவர் கண்களில் தெரிந்தது.

"என்ன பாக்கறே..? இப்பகூட நான் கடவுள் தான். பாக்கறியா?"

"என்ன சாமி சொல்றீங்க?"

"உன் குலதெய்வம் திருப்பதிசாமி தானே?"

"ஆமாம்..."

"அந்தச் சாமியை இங்கேயே நீ பாக்கறியா?"

"இங்கேயா..?"

"என்ன இங்கேயா... அந்த ஏழுமலை மேல இருக்கற அந்தப் பாலாஜியை, இங்க இருந்தே பார்... அப்பத் தெரியும் உனக்கு என் சக்தியும், நான் சொன்னதோட அர்த்தமும்."

- பைராகி சொன்ன கையோடு குழலை எடுத்து வெங்கடேச சுப்ரபாதத்தை அப்படியே வாசிக்கத் தொடங்கினார்.

என்ன ஆச்சரியம். ருத்ராவின் காதுகளில், 'கோவிந்தா... கோவிந்தா' என்று பக்தர்கள் போடும் கோஷமும், அந்த ஏழுமலையானின் திருச்சந்நிதியும், அதில் சர்வ அலங்காரத்துடன் அந்த வேங்கடவனின் திருக்கோலமும், அங்கே தவறாது ஒலிக்கும் ஜரகண்டி சப்தமும் சேர்ந்தே கேட்டு அவரைப் பரவசப்படுத்தியது.

ருத்ரா தன்னையும் மறந்து கன்னத்தில் போட்டுக் கொண்டார்.

அவ்வளவும் அதிக பட்சம் 30 வினாடி வரை தான். பைராகியிடம் வாசிப்பு நின்றது. காட்சிகளும் மின் இணைப்பு இல்லாது போன தொலைக் காட்சி பெட்டி போல காணாமல் போயிற்று.

ருத்ராவுக்கு லேசாக தலையைச் சுழற்றத் தொடங்கிவிட்டது. தான் கண்டது அசலியா...? இல்லை மனப்பிரமையா..? மாய்மாலம், மாய் மாலம் என்று ஒரு வார்த்தை தமிழில் உண்டு. அந்த மாய்மாலக் காட்சியா...? அவரது போலீஸ் புத்திக்குள் பூச்சி பறந்தது.

1987 ஆம் வருஷத்து டைரி. முன் பக்கத்தில் 'செல்லப்பா' என்கிற கையெழுத்து.



"ருத்ராபதி.... நீ கொடுத்து வெச்சவன். இன்னிக்கெல்லாம் திருப்பதில பாலாஜியை தரிசனம் பண்ணனும்னா முதல் மந்திரியா இருந்தாலே அரை மணி நேரமாவது ஆகும். நீ ஒரு சாதாரண வெகுஜனம்னா குறைஞ்சது பத்து மணிநேரம்! ஆனா உனக்கு பத்து நொடில தரிசனம் கொடுத்துருக்கேன் கிளம்பு. ஷ்யாமளாவை கூட்டிகிட்டுப் போய் யக்குன்கற பொணத்தை எழுப்பற வேலைல இருந்து, ஒரு பைத்தியகாரனைக் குணப்படுத்தற வேலை வரை உனக்கு நிறைய வேலைகள் இருக்கு. அதை எல்லாம் செய்து முடி!

முதல்ல திரௌபதி குணமாகட்டும். திரௌபதிக்கு தன்னை தெரிஞ்சாத்தானே அவ கிருஷ்ணனைக் கூப்பிட முடியும்?"

- பைராகியின் முடிவான பேச்சு, ருத்ராவை கட்டிப் போட்டுவிட்டது.

"சாமி நான் எதுக்கு வந்தேனோ அது நிறைவேறிடுச்சு. எனக்கு விடை கிடைச்சிடுச்சு" என்றார் வேகமாக.

அந்தப் பதிலில் பைராகிக்கே ஆச்சரியம்!

"என்ன சொன்னே... உனக்கு விடை கிடைச்

சாச்சா?"

"ஆமாம் சாமி... கிடைச்சிடுச்சு... ரொம்ப சந்தோஷம், சாமி நான் வர்றேன்..."

"இருப்பா... நீ என்ன என்னையே விழுங்கப் பாக்கறே? எனக்கே விடை கிடைக்கல. நான் சும்மா டூப் விட்டுண்டு கிடக்கறேன். நீ பார்த்த திருப்பதி தரிசனம்லாம் சும்மா மேஜிக்! உன்னை அரட்டறதுக்காக! ஆனா நீ அதை வெச்சு ஏதோ முடிவுக்கு வந்துட்ட மாதிரி தெரியுதே?"

"அதை வெச்சு இல்ல சாமி... அந்தப் பாலாஜி தரிசனம் மேஜிக்காகவே இருந்துட்டுப் போகட்டும். என் வரைல அது ஒரிஜினல். நீங்க முதல்ல திரௌபதிக்கு தன்னைத் தெரியட்டும்னு சொன்னீங்க பாருங்க. அங்கதான் எனக்கு விடை கிடைச்சது. நல்லது சாமி! நான் வரேன்."

- ருத்ரா மின் தொடர்பு திரும்ப ஏற்பட்டுவிட்ட ஒரு யந்திரம் போல வேகமாகி, வந்த வழியே திரும்பத் தொடங்கினார்.

பைராகி முகத்திலும் ஒரு வெற்றிப் புன்னகை!

**கா**த்துக் கொண்டிருந்தாள் ஷ்யாமளா. கூடவே மாஸ்டரும்! ராகவ் 'தலைவலி' என்று அவனது அறைக்குப் போய்விட்டான். ஏனோ அவனை தேவராஜ் மாஸ்டரும் சரி, ஷ்யாமளாவும் சரி... துளிகூட வற்புறுத்தவில்லை. வெளியே ருத்ராவின் வாகனச் சப்தம் கேட்கவும் இருவரும் கிளம்பினர். கோமளா மாமி, "பாத்து போய்ட்டு வா. ஒரு நிமிஷம்..." என்று உள்ளே சென்று ஒரு சிறு பிளாஸ்டிக் பொட்டை எடுத்து வந்து அவள் நெற்றியில் வைத்தவளாக, "பாழும் நெத்தியோட ஒரு கன்னிப் பொண்ணு எங்கேயும் போகப்படாது..." என்றாள்.

ஷ்யாமளாவுக்குள் ஒரு தெற்றுச் சிரிப்பு. க்ஷணத்தில் அது மறைந்து, சுவற்றில் தெரிந்த செல்லப்பாவின் படத்தைப் பார்த்தவளாகக் கிளம்பினாள்.

அவள் வெளியே வரவும் ருத்ரா தன் வாகனத்தை விட்டு இறங்கி இருவருக்கும் கதவைத் திறந்துவிட்டார். பின் அந்த வாகனம் கிளம்பியது. அதை மாடி ஜன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டிருந்தான் ராகவ்.

அவன் காதுகளில் கோயிலில் பைராகி இட்ட கட்டளைதான் எதிரொலித்தபடியே இருந்தது. அதைச் செயல்படுத்தத் தயார் ஆனான். முதலில் பலிகணி எங்கிருக்கிறது எனக் கண்டறிய வேண்டும் என்று திரும்பியவனுக்குள் ஒரு ஆச்சரியம்! அவன் இருந்த அறையிலேயே அது இருந்தது! தலைக்கு நேர்மேலே தேக்குப் பலகையால் ஆன ஒரு தளம். அதற்கு மேல் அடைப்புக் குறியிட்ட இடத்தில் ஒரு கதவு. அதில் பூட்டு தொங்கிக் கொண்டிருந்தது. 'அடடா! இப்போது இதைத் திறக்க சாவி வேண்டுமே?' என்கிற கேள்வி எழும்பியது. அதற்காக கோமளா மாமியிடம் போய் சாவியைக் கேட்டால் மாமி, 'எதற்கு?' என்று கேட்பாள். அது வேலியில் கிடக்கும் ஓணானை எடுத்து வேட்டிக்குள் விட்டுக் கொண்டது போலாகிவிடும்!

என்ன செய்யலாம்?

கேள்வியோடு பூட்டை உற்றுப் பார்த்தான்.

அந்தக் காலத்து திண்டுக்கல் பித்தளை பூட்டு!

சுத்தியலால் நாலு வாங்கு வாங்கினால் அது பிளந்து கொண்டுவிடும் என்று உள்மனது ஒரு கணக்குப் போட்டது. அடுத்து சுத்தியலுக்கு எங்கே போவது என்று தேடியபோது அந்த அறையில் ஒரு அலமாரிமேல் அது இருந்து கண்ணில் பட்டது.

கண்கள் விரிய அதைத் தாவி எடுத்தவன் அறைக் கதவை தாழ்போட்டு முடித்தான். டேப்ரிக்கார்டரில் ஒரு நாதஸ்வரக் கச்சேரியை போட்டுவிட்டான். தவில் வாசிப்பு வரும் சமயமாகப் பார்த்து பூட்டோடு மோதினான். ஒரு அடிக்கு அந்தப் பூட்டு தாங்கவில்லை; திறந்து கொண்டது. உற்சாகமாக உள் ஏறினான். இருட்டு கண்ணைக் கரித்தது. புழுதி நெடி மூக்கில் ஏறி, தும்மல் வந்தது. அதில் தடுமாறியதில் கையும் காலும் எது எதன் மேலோ பட்டு, எது எதுவோ உருண்டது. ஒரே சப்தம்! ஐயையோ!' என்று மனதுப் பதைத்திட டார்ச் லைட்டுக்காக கீழே இறங்கியவன், அதோடு திரும்ப மேலே ஏறினான்.

அதன் வெளிச்சத்தை உள்ளே பாய்ச்சிப் பார்த்தான். ஒரு மரக்குதிரை, சட்டம் உடைந்த ஜூழந்தைத் தொட்டில், கால் உடைந்த ஆடு நாற்காலி என்று பரணில் கிடக்கும் வழக்கமான எல்லா ஐட்டங்களும் கண்ணில் பட்டு முடிக்க, அந்த மரப்பெட்டி இறுதியாகத்தான் கண்ணில் பட்டது. உற்சாகமாக அதை நோக்கிப் போய் அதன் கொண்டித் தாழ்ப்பாளை விலக்கி அதைத் திறந்தான். உள்ளே கட்டுக்கட்டாய் ஏடுகள்! திறந்த மாத்திரத்தில் அதனுள்ளிருந்து ஒருவித வாடை. அதிசயமாக அதனுள் ஒரு டைரியும் இருந்தது.

அதை எடுத்துப் பார்த்தான். 1987ஆம் வருஷத்து டைரி. முன் பக்கத்தில் 'செல்லப்பா' என்கிற கையெழுத்து. அவருடையதுதான். அடுத்தடுத்த பக்கங்களைப் புரட்டினான். டைரியின் தினங்களில் எந்தவிதக் குறிப்பும் இல்லை. கச்சேரிக்கு அழைத்தவர்கள் பெயர், அட்வான்ஸ் வாங்கிய விவரம் இருந்தது. ஆனால் ஒரு பக்கத்தில் ஜாதகக்குறிப்பு ஒன்று கட்டம் வரைந்து எழுதப்பட்டிருக்க... மேலே 'யக்ஞ ராமன்' என்கிற பெயர்!

கீழே ஒரு குறிப்பு! 'ஜாதகன் பிறந்த நேரமும் வேளையும் தகப்பனாருக்கு துளியும் உசிதமில்லை. தத்துக் கொடுத்தாலன்றி தகப்பனார் உயிர் வாழ்வதே சாத்தியம் இல்லை!' என்று இருந்தது.

ராகவ் அதைப் படித்துவிட்டு, 'யார் இந்த யக்ஞ ராமன்?' என்னும் கேள்வியில் விழுந்தவன், 'ஒரு வேளை கொலை செய்யப்பட்டுவிட்டதாகக் கருதி இப்போது ஷ்யாமளா பார்க்கப்போயிருக்கும் அந்த யக்ஞனோ?' என்று நினைத்தான்.

ராகவ் முகத்தில் பூச்சி பறக்க ஆரம்பித்தது!

(தொடரும்)

## கிருஷ்ண தந்திரம் 35

***"பண்டாரி வீசி எறிந்த புல்லாங்குழல் கோகுல்நாத் பாண்டே கைகளில் சிக்கி, அது கண்ணமங்கலத்தை விட்டும் போய்விட்டது. பண்டாரியோ கோபமும் எரிச்சலுமாய், தன் வசம் இருந்த கிரந்த புத்தகங்களையும், வேதப் புத்தகங்களையும் போட்டுக் கொளுத்துவதற்கே தயாராகிவிட்டார்.***

***'இதெல்லாமே பொய்... அந்தக் கண்ணனே பொய் என்றான பின்னாலே இதெல்லாம் எதற்கு? கண்ணனை எதிர்த்துக் கொண்டு சிசுபாலன் வாழவில்லையா? கம்சன் வாழவில்லையா? இவர்களைப் போல நானும் இருந்து விட்டுப் போகிறேன்.***

***வேண்டுமானால் இவர்களை எல்லாம் கொன்றது போல அந்தக் கண்ணன் என்னையும் வந்து கொல்லட்டும். ஆனால் என்னை ஏமாற்றிய அந்தக் கண்ணனை நான் இனி பரமாத்மாவாக ஒரு போதும் நினைக்க மாட்டேன். அவன் என் வரையில் துரோகி' என்று அவரிடம் ஒரே பினாத்தல்.***

***பண்டாரியின் பேச்சு, கோயில் பட்டரையும் வெகுவாக யோசிக்க வைத்தது. அவர் எதிரில் கண்ணன் கொடுத்த குழல், வெறும் ஏமாற்று வேலையா? அவருக்குள்ளும் கேள்வி... திருச்சந்நிதியில் அவர் அந்த ஸ்ரீகிருஷ்ணன் விக்ரகத்தை பார்த்தபடியே அதைக் கேட்கவும் செய்தார். அடுத்த நொடியே அசரீரி ஒலித்தது. 'நான் ஏமாற்றவில்லை... பண்டாரிக்குத்தான் அந்தக் குழலை பயன்படுத்தத் தெரியவில்லை!' என்றது அசரீரி! பயன்படுத்தத் தெரியவில்லை என்றால்...?"***

பரண்மேல் அந்த 1987ஆம் வருஷத்து டைரியையும், அதில் தென்பட்ட குறிப்புகளையும் படித்த நிலையில் ராகவ் கிட்டத்தட்ட வியர்த்து விட்டிருந்தான். அவனுக்குள் 'யார் இந்த யக்ஞராமன்?' என்கிற கேள்வி... கைவிரல்கள் அடுத்தடுத்த பக்கங்களைப் புரட்டின. ஒரு பக்கத்துக்கு நடுவில் ஒரு இன்லாண்டு லெட்டர் கடிதம் இருந்தது. அதில் 'கீழ்ப் பெரும்பள்ளம்' என்னும் ஊரில் இருந்து அது வந்ததற்கான முத்திரை!

அனுப்புனர் முகவரியில், 'திரு. ஐயா பிள்ளை, பிருகுநாடி ஜோதிட நிலையம், கோயில் சமீபம்-கீழ்ப்பெரும்பள்ளம்' என்றிருந்தது.



கடிதத்தை எடுத்துப் பிரித்தான். உள்ளே ஐயா பிள்ளை எழுதியிருந்தார்.

உ. சிவமயம்

ஸ்ரீமான் செல்லப்பா ஐயங்கார் திவ்ய சமூகத்துக்கு மாயவரம் தாலுகா கீழ்ப்பெரும்பள்ளம் ஜோசியனாகிய ஐயா பிள்ளை பரம நமஸ்காரங்களுடன் எழுதிக் கொள்வது...

இப்பவும் தாங்கள் கொடுத்த தேதி மற்றும் நட்சத்திரக் குறிப்புகளின்படி என் வசமுள்ள நாடியை எடுத்துப் பார்த்ததில் பிள்ளைக்கு பின்முதுகில் பால் டம்பளர் தரையில் கொட்டிக் காட்சி தரும் விதத்தில் பால் மச்சம் ஒன்று இடது பாகத்தில் இடுப்புக்கு மேல் ஏழரை அங்குலத் தொலைவில் உள்ள பட்சத்தில், இந்தப் பிள்ளையால் உங்களுக்கு அபகீர்த்தியும் குலநாசமும் உறுதி என்றே தெரியவருகிறது.

நாடிப்படி இதற்கான பரிகாரம் இந்தப் பிள்ளையை மூன்று கூடை தவிட்டுக்கு யாருக்காவது விற்றுவிட்டு தைல ஸ்நானம் செய்து கொள்ளும்பட்சத்தில் நீங்கள் இப்போதுள்ள புகழ், கீர்த்தி, இத்யாதிகளுடன் வாழலாம். ஆன போதிலும் இந்தப் பாவம் உங்களை, பின் தொடரவே செய்யும். அது எந்த மாதிரி விளைவுகளை உருவாக்கும் என்பதை அறிய தங்களின் பிரசன்னமும், பெருவிரல் கீறலும் தேவை. மேற்கொண்டு தங்கள் உசிதப்படி செயல்படவும். இது விஷயம் பரம ரகசியமாய் என்னுள்ளே மட்டுமிருக்கும். இது அந்தப் பிருகு முனிவர் திருவடி சத்தியம்.

பிருகு முனி கடாட்சம் தங்களுக்கு சித்திக்கட்டும்.

இப்படிக்கு,
ஐயா பிள்ளை.

- கடிதத்தைப் படித்த ராகவ் ஒரு தீர்மானத்துக்கு வந்ததுபோல அந்த டைரியையும் கடிதத்தையும் பத்திரமாக எடுத்து வைத்துக்கொண்டான்.



## இந்திரா சௌந்தர்ராஜன்



அப்படியே அந்த மரப்பெட்டியில் கிடந்த ஏட்டுக் கட்டுகளை எடுத்துப் பார்த்தான். டைரியையும், கடிதத்தையும் படிக்க முடிந்த மாதிரி அவைகளை அவனால் படிக்க முடியவில்லை.

சட்டென்று அவனுக்குள்ளே ஒரு தீர்மானம்.

இடுப்பு வேஷ்டியை அவிழ்த்து விரித்து அதில் அவ்வளவு ஏட்டுக் கட்டையும் தூக்கிபோட்டு ஒரு மூட்டை போல கட்டிக் கொண்டு பரணைவிட்டு கீழே இறங்கினான். மேலே வெகு நேரம் அமர்ந்து இருந்ததில் வியர்வை பெருகி வழிந்திருந்தது. அதில் புருவத்தில் பூசியிருந்த அந்த மை அவ்வளவும் கரைந்து மூக்கு, கன்னம் என்று கோடு போட்டது போல ஓடியிருக்க... அவன் அதை துடைக்கப் போய் முகம் முழுக்க லேசாக ஒரு கருப்புச் சாயம் பூசிக் கொண்டது போல இருந்தது. கையைப் பார்த்து விட்டு 'அடடே!' என்று வருத்தப்பட்டுக் கொண்டான்.

கீழே இறங்கிய நிலையில் ஒரு துண்டைத் தேடி எடுத்து வந்து நன்றாகத் துடைத்துக் கொண்டான். கட்டிய வேஷ்டி மூட்டையைப் பார்த்தவனுக்கு எப்படி இந்தகாரியத்தை இவ்வளவு வேகமாகவும் திட்டமிட்டும் செய்தோம் என்பதே பெரிய ஆச்சரியமாக இருந்தது. கோயிலில் பைராகியை சந்தித்ததும், அவர் மை பூசி அனுப்பி வைத்ததும் மெல்ல ஞாபகத்துக்கு வந்தது. மிக வித்தியாசமான அனுபவம்! கூடவே ஷ்யாமளா ஞாபகம் வந்தது. அறையை விட்டு வேகமாக வெளியேறி, கோமளா மாமி முன் சென்று நின்றான்.

"மாமி... ஷ்யாமளா இல்லே?"

"அவ அந்தப் போலீஸ்காரரோடன்னா போனா...."

"யாரு... செத்த முந்தி ஒரு கார்ல வந்தாரே அவரோடயா?"

"ஆமாம்... அவகூட மாஸ்டரும் போயிருக்கார் ஆமா நீங்க ஏன் போகலே?"

"எனக்கே இப்பதானே தெரியும்... இதோ இப்பவே கிளம்பறேன்.."

- அவனது வேகமும், பேச்சும் மாமிக்கே புதிராகத்தான் இருந்தது. அடுத்து அவனது வியர்த்து வடிந்த தோற்றம்!

### ஹாஸ்பிடல்!

ருத்ரா, ஷ்யாமளா மற்றும் தேவராஜ் மாஸ்டருடன் உள்நுழையவும், டாக்டர் கவனித்துவிட்டு வரவேற்றார். அவர் பார்வை ஷ்யாமளா மேல்தான் அதிகம் இருந்தது.

"டாக்டர்... மேடத்தைக் கூட்டிகிட்டு வந்துட்டேன். போய் பேஷண்ட்டைப் பாக்கலாமா?"

- ருத்ரா வேகமாக விஷயத்துக்கு வரவும்,

"வாங்க ஸார் போவோம்.."- என்று டாக்டரும் அவர்களுடன் யக்ஞன் கிடக்கும் படுக்கை நோக்கிச் சென்றார்.

யக்ஞனிடம் எந்த முன்னேற்றமும் இருக்கிற மாதிரியே தெரியவில்லை. ஷ்யாமளா அவனை அங்கே பார்த்த மாத்திரத்தில் சட்டென்று கண் கலங்கிவிட்டாள். டாக்டர் அவளை அருகில் அழைத்தார்.

"மேடம்! இப்படிப் பக்கமா வாங்க... இவர் கண் திறந்து பேசறது உங்க கைலதான் இருக்கு. செயற்கை சுவாசம் பாதி, இயற்கை பாதின்னு பேஷண்ட் இப்ப இருக்காரு. இவரை நீங்க உங்க சகோதரனா நினைச்சு பாசத்தோடு பாருங்க. மனசுக்குள்ள இவருக்காக கடவுளை பிரார்த்தனை பண்ணிகிட்டு இவரை வருடிக் கொடுங்க. க்ரானிக் ஹீலிங் மாதிரி உங்ககிட்ட சம்திங் ஒரு பவர் இருக்கு. அது பாடி முழுவதும் பரவட்டும்... கமான்"

- சிறிய அளவில் ஷ்யாமளாவிடமும் ஒரு தூண்டுதல் அளித்தார். ஷ்யாமளா அதைக் கேட்டு சற்று கேலியாக ஒரு சிரிப்பு சிரித்தாள்.

"என்கிட்ட ஒரு பவரும் இல்ல டாக்டர்... நீங்க இப்படியெல்லாம் பேசறது எனக்கு வருத்தம் கலந்த சிரிப்பைத்தான் தருது. இந்த பேஷண்ட் குணமானாலும், குணமாகலைன்னாலும் எனக்கு வெற்றின்னு தான் சொல்வேன். குணமாயிட்டா இவனைக் காப்பாத்திட்ட அந்த சந்தோஷம். குணமாகலைன்னா நானும் உங்களைப்போல ஒரு நார்மல் கேரக்டர்னு ஆயிடும். அதனால சந்தோஷம்..." என்றாள்.

"ஷ்யாமளா இது ஆர்கியூ பண்ணுற நேரமில்லை. கடவுளைப் பிரார்த்தனை பண்ணிகிட்டு பேஷண்ட்டை முதல்ல டச் பண்ணும்மா..." தேவராஜ் மாஸ்டர் துடித்தார்.

ஷ்யாமளாவும் துவண்டு கிடந்த யக்ஞனின் இடது கையை மெல்லப் பற்றினாள். வலது கை முழுக்க காயங்கள் காரணமாக கட்டு போடப்பட்டிருந்தது. அவள் பற்றிய பாகம் சில்லென்று இருந்தது. விரல்களை அப்படியே நீவிவிட்டு உள்ளங்கையையும் அழுத்தமாய் வருடினாள். பார்வை யக்ஞனின் முகத்தின் மேல் இருந்தது. அவளது செய்கையை ருத்ரா கூர்ந்து கவனிக்க ஆரம்பித்தபோது அவரது செல்ஃபோனில் அழைப்பொலி... வேகமாக எடுத்துப் பார்த்தார். அழைப்பு டி.எஸ்.பி.யிடம் இருந்து! "எக்ஸ்யூஸ் மீ..." என்றவராக வார்டைவிட்டு வெளியேறி, "குட் ஆஃப்டர் நூன் ஸார்.." என்றார். "வெரி குட் ஆஃப்டர் நூன் மிஸ்டர் ருத்ரா... கேன் ஐ டேக் எ ஃப்யூ மினிட்ஸ்?"

"யெஸ் ஸார்... ப்ளீஸ் ஸார்..."

"எனக்கு இப்ப ஒரு மடாதிபதிகிட்ட இருந்து ஃபோன் வந்தது. அவர் ஒரு கிருஷ்ண உபாசகராம். அவர் கனவுல கண்ணன் வந்து கண்ணமங்கலத்துல தப்பு நடக்கறதாவும், அதைத் தட்டி கேட்கறதுல துளிகூட தயவு தாட்சண்யம் பார்க்கக் கூடாதுன்னும் சொன்னாராம். கேட்கவே ஹிலேரியஸா இல்லை..."

"யார் ஸார் அந்த மடாதிபதி?"

"ஏதோ ஒரு பேர் சொன்னார். ஆனா ஃபோன் வந்தது ஒரு பப்ளிக் பூத்ல இருந்து... எனக்கு அப்பவே தெரிஞ்சு போச்சு இது ஒரு மாதிரி ஆசாமின்னு..."




"இருக்கலாம் ஸார்... கண்ணமங்கலம் விஷயத்துல நிறைய மாயம் இருக்கு ஸார். எங்க அதுக்கு டிபார்ட்மெண்ட்டும் பயந்துடுமோன்னு நினைச்சுத் தூண்டி விட்டிருக்கலாம்னு நினைக்கிறேன்..."

"தூண்டி விட்டாங்களா- சிக்க விட்டாங்களா, இல்லை நிஜமாலுமே இது ஒரு நல்ல எச்சரிக்கையாங்கறதெல்லாம் உங்க அப்ரோச்சல தான் இருக்கு. என் சர்வீஸ்ல இது மாதிரி ஒரு பெக்குலியர் கேஸை பார்த்ததே இல்லை. மார்ச்சுவரி பொணத்துக்கு உசுர் வந்துருக்குன்னா நம்பவே முடியல..."

"அந்தக் கேஸ் இன்னிக்கே பேசினாலும் பேசுவான் ஸார்..."

"இஸ் இட்?"

"ஆமாம் ஸார்... இப்ப நான் அந்த முயற்சிலதான் இருக்கேன். இதுதான் விஷயமா ஸார்..? வேற தகவல் எதுவும் இல்லையே"

"நோ நோ... நீங்க போய் உங்க ட்யூட்டிய பாருங்க.. அப்புறமா ஃப்ரீயா இருக்கும்போது பேசுங்க... நான் சாமி இருக்குன்னும் சொல்ற ஆள் கிடையாது, இல்லேன்னும் சொல்ற ஆள் கிடையாது. இந்த விஷயத்துல இருக்குங்கற மாதிரி நீங்க உறுதியா ஃபீல் பண்ணினா நான் நிறைய கேள்விகளோட இருக்கேன்.

பல கோவில்களை சாமி விக்ரகங்களைத் திருடிகிட்டுப் போய் வித்து கோடீஸ்வரங்களா மாறி வாழறவங்கள எனக்குத் தெரியும். அவங்களை எல்லாம் எந்தக் கணக்குல விட்டு வெச்சிருக்கேன்னு அந்த தெய்வத்தை நான் கேக்கணும்..."

"ஸாரி ஸார்.. நான் அப்புறமா உங்ககூட பேசட்டுமா?"

"ஓ.. கேரி ஆன்.. கேரி ஆன்.. ஐ ஆம் ஸாரி..."

- டிஎஸ்பி. மறுபக்கமாய் முடித்துக்கொள்ள ருத்ரா செல்போனை பாக்கெட்டில் போட்டவராக திரும்பத் தொடங்கினார்.

செல்போனை உதவிகரமானது என்று யார் சொன்னது? அது ஒரு சரியான சாபம் பிடிச்ச விஷயம் என்றுதான் அப்போது ருத்ராவுக்கும் தோன்றியது!

திரும்பி வந்து பார்த்தபோது யக்ஞனிடம் எந்த மாற்றமும் இல்லை. அருகாமை கம்ப்யூட்டர் மானிட்டரில் அதே பழைய ஓட்டம். ஷ்யாமளா யக்ஞனின் கையை விட்டுவிட்டு அவன் கன்னம்,கழுத்து என்று வருடிக் கொண்டிருக்க டாக்டரும், "அங்க தான்... அப்படித்தான்..." என்று கூறிக் கொண்டிருந்தார். ஆனால் ஒரு சிறு முன்னேற்றமும் இல்லை. ருத்ரா டாக்டரை பார்க்க, அவர் முகத்தில் ஏமாற்றம். தேவராஜ் மாஸ்டரும் ஏமாற்றத்தையே எதிரொலித்தார்.

"என்ன டாக்டர் ஏதாவது இம்ப்ரூவ்மெண்ட்..?"

"அட் ப்ரஸண்ட் ஒன்னுமில்லை ஸார்... அப்படியேதான் இருக்கு. ஒரு வேளை கொஞ்ச நேரம் கழிச்சு இம்ப்ரூவ்மெண்ட் தெரியலாம்."

"அப்ப வெயிட் பண்ணிப் பார்த்துட்டா போச்சு.."

- ருத்ரா சொல்லிக் கொண்டிருக்க ஆஸ்பத்திரிக்கு வெளியே பிரமை பிடித்த நிலையில் இருக்கும் தமிழழகன், ஒரு போலீஸ் ஜீப்பில் இருந்து இறங்கிக் கொண்டிருந்தான். எதிர் சாரியில் தன் காரில் இருந்து ராகவ் இறங்கிக் கொண்டிருந்தான். ராகவ் கையில் அந்த 1987 ஆம் வருஷத்து டைரி!

- (தொடரும்)



"கேரியசில பட்டர் அசரீரீ கேட்டுக் குழம்பிப் போனார். 'பண்டாரிக்கு அதை பயன்படுத்தத் தெரியவில்லை' என்று அசரீரீ ஒலித்ததை வைத்து பட்டருக்கு கிருஷ்ணன் மேலான நம்பிக்கை வலுவடைந்தது; பெருமூச்சு விட்டார். அதன்பின் நேராக பண்டாரியை போய்ப் பார்த்தார்; அசரீரீ விஷயத்தையும் சொன்னார். பண்டாரியிடம் ஒரே குழப்பம். "நான் அதை கிருஷ்ணன் சொன்னபடி, 'கேசவா' என்று கூறி சரியாகத்தான் பயன்படுத்தினேன். இல்லாவிட்டால் புல்லாங்குழலே வாசிக்கத் தெரியாத என்னால் எப்படி அப்படி ஒரு ராகத்தை வாசித்திருக்க முடியும்?" என்று திருப்பிக் கேட்டார். கேட்ட வேகத்தில் சில விநாடிகள் யோசித்தவர், "இல்லை, இல்லை.. தப்பு என் மேல தான்.. நான் பூபாளம் வாசிக்க வேண்டும் என்றுதான் விரும்பினேன். அதற்கு இந்தப் பிரபஞ்சம் மயங்க வேண்டும் என்று கேட்கவில்லை. எனவே நான் கேட்டது மட்டும் கிடைத்தது.. அடடா! அவசரத்திலும், கோபத்திலும் நான் இதை எல்லாம் யோசிக்கத் தவறிவிட்டேனே.. இதனால் அரிய செல்வமான அந்தப் புல்லாங்குழலையும் தூக்கி வீசி எறிந்துவிட்டேனே..." என்று பதைத்துப் போன பண்டாரி, ஓடிப்போய் வீசி எறிந்த இடத்தில் தேடிப் பார்த்தார். பிறகுதான் அது கோகுல்நாத் பாண்டே வசம் சிக்கி அவரும் பத்ரிநாத்துக்குப் புறப்பட்டு விட்டது தெரிய வந்தது. அப்போதே பண்டாரியிடம் ஒரு வேகம். 'விடக்கூடாது அவரை' என்று தீர்மானித்தவர், விரைவாக ஒரு கோச்சு வண்டியைத் தயார் செய்து கொண்டு கோகுல்நாத் பாண்டேயை தேடிக் கொண்டு புறப்பட்டுவிட்டார்.

கண்ணமங்கலத்திலோ மன்னாரிடம் பிரமிக்கும்படியான மாற்றங்கள். தனது வாசிப்புக்கான ராகம் எது என்பதில் இருந்து, அதை ஏடுகளில் எழுதிக் குறித்து வைத்துக் கொள்ளவும் தொடங்கிவிட்டான். புல்லாங்குழல் பூட்டு என்றால், அந்த ஏடுகளே சாவிகளாகும்!"

தமிழ்முகனை கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு ஆஸ்பத்திரிக்குள் நுழைந்த போலீஸாரை ருத்ராவும் கவனித்தார். அவர்தான் தமிழ்முகனை அழைத்து வரச் சொல்லியிருந்தார். 'ஷ்யாமளாவால் யக்ஞன் முழித்துக் கொண்டுவிட்டால் அப்படியே தமிழ்முகனின் சித்தப் பிரமைக்கும் ஒரு தீர்வைக் கண்டுவிடலாம்' என்பது அவர் எண்ணம். ஆனால் யக்ஞனிடம் எந்த முன்னேற்றமும் இல்லாதது அவருக்குச் சோர்வை அளித்திருந்தது.

எனவே அடுத்து என்ன செய்வது என்று யோசிக்கத் தொடங்கிவிட்டார். தமிழ்முகன் ஒரு நாற்காலியில்

அமர்த்தி வைக்கப்பட்டான். பத்து, பதினைந்து நாட்க ளில் அவன் பெருமளவு இளைத்துப் போயிருந்தான். திட உணவே சுத்தமாகக் கிடையாது. எனவே அவ னுக்கு அவ்வப்போது ட்ரிப்ஸ் ஏற்றப்பட்டு, அந்தத் தெம்பில்தான் இருந்தான்.

இந்த உலகத்தில்தான் இருக்கிறான். ஆனால் இந்த உலகம் பற்றி அவனால் துளியும் உணர முடியவில்லை. அவன் மனதில் சுத்தமாக எண்ணங்களே இல்லை. இது கிட்டத்தட்ட சில முனிவர்கள் அடைய விரும்பும் சமாதி நிலைக்குச் சமமான நிலை! இப்படி ஒரு சிக்கல் மருத்துவ உலகத்துக்கும் புதிது. அதைத்தான் அங் குள்ள டாக்டரும் சொல்லியபடி இருந்தார். 'ஒரு மனு ஷனுக்கு எப்படியெல்லாம் உடம்பால் சிக்கல் வரும்ங் றதை எந்த டாக்டராலேயும் திட்டவட்டமாகச் சொல் லவே முடியாது. ஆனா வந்த பிறகு காரணத்தை வேணும்னா கண்டுபிடிக்கலாம்' என்று.

பின்னாலேயே வந்திருந்த ராகவ், மாஸ்டர் அருகில் போய் நின்றுகொண்டான். ஷ்யாமளாவும் கவனித் தாள். அவன் கையில் இருந்த 1987ஆம் வருட டைரி அவளை உறுத்தியது. அவ னிடம் வந்து, 'என்ன ராகவ்? கைல டைரியோட வந்து ருக்கே?' என்று மெல்லிய குர லில் கேட்டாள்.

"ஆமாம் ஷ்யாமளா... இதை நீ அவசியம் பாக்க ணும்" என்றான்.

"அப்படி என்ன விஷயம்?"



## இந்திரா செளந்தர்ராஜன்

"இது உன் அப்பாவோட டைரிதான்... நான் இருந்த ரூம்ல பரண் மேல இருந்தது. இதை நான் ஏன் தேடினேன், எதுக்குத் தேடினேன்னு எதுவும் எனக்கு இப்ப ஞாபகத்துல இல்ல. அநேகமாக நான் வைராக்கியப் பார்த்ததோட விளைவா இருக்க லாம்" என்றான். அதற்கு மேல் பேசமுடியாதபடி ருத்ரா அவளிடம் நெருங்கியவராக, "ஷ்யாமளா! தமிழழகனுக் கும் உங்களோட கரானிக் ஹீலிங் பவர் தேவைப்ப டுது... கொஞ்சம் ட்ரை பண்ணிப் பார்க்கறீங்களா?" என்று கேட்டார். ஷ்யாமளாவிடம் ஒரு தேக்கம்.

"என்னம்மா... யக்ஞன் விஷயத்துலயே எதுவும் ஆகலை- இங்க மட்டும் பெருசா என்ன நடந்துடப் போகுதுன்னு தோணுதா?"

"ஆமாம் ஸார்... நீங்க டாக்டர்கள் சொல்றதக் கேக்க றதுதான் சரி. நான் உங்கள எல்லாம் போல ஒரு சாதா ரண கேரக்டர்தான் ஸார்..."

"இருக்கலாம்மா... இருந்தாலும் எனக்காக ஒரே ஒரு தடவை ட்ரை பண்ணிப் பாருங்களேன்..."

"ப்ளீஸ் ஸார்... எனக்கே இப்படி எல்லாம் நடந்துக்க றது என்னவோ போல இருக்கு..."

"சரிம்மா... இதுக்கு மேல உங்க விருப்பம்..." ருத்ரா விட்டுவிட்டார். ஆனால் மாஸ்டர் ஷ்யாமளாவை தூண்டத் தொடங்கினார்.

"ஷ்யாமளா! எனக்காக நீ அந்தப் பையனுக்கு ஹீலிங் கொடுத்துப் பார் ப்ளீஸ்..." என்றார்.

"என்ன மாஸ்டர் ஹீலிங், அப்படி, இப்படின்னு... என்னை ஒரு மிஸ்டரி வுமனா முடிவே பண்ணிட்டீங் களா?"

"அம்மாடி நம்மைச் சுற்றி சமீப காலமா நடந்துகிட் டிருக்கற எந்த ஒரு விஷயத்துல மிஸ்டரி இல்ல? இப்ப உன்னை நான் அப்படி நினைக்கக் கூடாதுங்கறதுக்கு... நீ நம்பினாலும் சரி, நம்பலேன்னாலும் சரி, உன் அப்பா வோட ஆத்மாவை நான் பார்த்தேன். மரணத்துக்குப் பிறகு ஆத்மாக்கள் தவிக்கும், துடிக்கும்னு கேள்விப்பட் டதெல்லாம் எவ்வளவு பெரிய உண்மைங்கறது இப்ப எனக்குப் புரியுது... அது உண்மைன்னு ஆயிட்ட நிலை யில, உன் விஷயம் மட்டும் ஏன் உண்மையா இருக்கக்கூ டாது... கமான்..."

மாஸ்டரின் தூண்டல் நன்கு வேலை செய்தது.

ஷ்யாமளாவும் தமிழழகன் அருகே சென்று, அவன் கைகளைப் பற்றிக் கொண்டு அவனைப் பார்த்தாள். இரண்டு விழிகளாலும் எங்கு பார்க்கிறான் என்பதே தெரியாதபடி அமர்ந்து கொண்டிருந்த தமிழும், அவள் தொட்ட நொடி அவளைப் பார்த்தான். அது அங்கு இருப்பவர்களுக்கு பெரிய நம்பிக்கையை அளித்தது. குறிப்பாக ருத்ரா வேகமாக முன் வந்து, 'கமான் மேடம்... தொட்ட விநாடியே நல்ல இம்ப்ரூவ்மெண்ட் தெரியுது பாருங்க...' என்றார். தமிழழகனின் இமைக ளும் மூடித் திறக்க ஆரம்பித்தன. கழுத்தை வளைத்து அவன் சுற்றி இருப்பவர்களை எல்லோரும்பார்க்க ஆரம் பித்தான். ஷ்யாமளா அவன் கைகளைப் பிடித்து விரல் களை நீவியபடியே இருந்தாள். ஏனோ அவன் அவளிட மிருந்து கையை விலக்கிக் கொண்டான். பின் தன்னைத் தானே பார்த்துக் கொண்டவன், ருத்ராவை உற்றுப் பார்க்கத் தொடங்கினான். ருத்ராவும் அவனுக்குள் நினைவுகளை உருவாக்கத் தயாரானார்.

"என்னப்பா தமிழழகா... என்ன பார்க்கறே..? நீ யார்னு இப்ப உனக்குத் தெரியுதா? இது ஒரு ஆஸ்பத் திரி. இங்க நீ ட்ரீட்மெண்ட்டுக்காக வந்துருக்கே..." என்று அவர் சொன்னதைத் தொடர்ந்து அவன் எழுந்து நிற்கப் பார்த்தான். பின் வாயைத் திறந்து ஏதோ பேச முயன்றான். ஆனால் என்ன பேசுவது என்று தெரி யாதவன் போலத் திணறினான்.

டாக்டரோ, "வாவ்... எக்ஸலெண்ட் இம்ப்ரூவ்மெண்ட். ஷ்யாமளா... தயவு செய்து அவன் தலை மேல் உன் இரண்டு கைகளையும் வை; அவனால் வேகமாக யோசிக்க முடியும்" என்றார். அவளும் அருகே சென்று அவன் தலை மேல் கைவைக்க முயல, "உட்காருப்பா... நீ முதல்ல உட்கார்.." என்று தமிழழகனை நாற்காலியில உட்கார்த்தி வைத்தார். ஷ்யாமளாவும் சௌகர்யமாக அவன் தலை மேல் கைகளை வைத்தாள். கலந்து சிறுக

கேறிப் போயிருந்த தலைமுடிகள் மேல் கை வைக்க, அருவருப்பாய் இருந்தாலும் அது வேலை செய்தது. தமிழழகன் பேசத் தொடங்கிவிட்டான்!

"டாக்டர்... நான் எப்படி இங்க வந்தேன்? சாமி... சாமி... எங்க யக்ஞன் உடம்பு என்னாச்சு?" -அவனிடம் இருந்து அடுத்தடுத்து வந்த கேள்விகள் ருத்ராவை வெகுவாகக் கூர்மைப்படுத்தின.

"சபாஷ் தமிழழகா... பேசு.. இப்படியே பேசு. ஆமா சாமின்னு நீ யாரைச் சொன்னே... அந்தப் பைராகியை தானே?"

"பைராகி... பைராகி... ஆங்... ஆங்... பைராகியே தான். அந்த நபர் ஒரு மோசமான ஆள். பு... பு... புதையல் என்னாச்சு? ஐயோ அதை நான் எடுத்துக்காமலே வந்துட்டேனே..."

"புதையலா..? என்னப்பா சொல்றே? அப்ப உனக்கு இப்படி ஆனதெல்லாம் புதையலுக்காகதானா?"

"புதையல்... புதையல்..." -தமிழழகன் குரல் ஹீனசுரத்தில் அமுங்க, அவனை மயக்கம் வந்து ஆட்கொள்ளத் தொடங்கியது. அப்படியே கண்கள் செருக, மயங்கி விழுந்தான். டாக்டர் முகத்திலோ பலித்த பிரகாசம்!

"டோன்ட் ஒர்ரி ஸார்.... அவன் உடம்புல தெம்பு இல்ல. அதனாலதான் கொஞ்சம் பேசவுமே மயங்கிட்டான். இனி ஒரு பிரச்சினையும் இல்லை. டைஜஸ்ட் ஃபுட்டுக்கு இப்பவே ஏற்பாடு செய்யறேன். ஒரு மணி நேரத்துல எழுந்து ஓடக் கூடிய அளவுக்கு தெம்பும் வந்துடும். அப்ப தெளிவாகவே எல்லாத்தையும் கேட்டுத் தெரிஞ்சிக்கலாம்" என்றவர் அப்படியே ஷ்யாமளா பக்கம் திரும்பினார்.

"மேடம்... இப்ப என்ன சொல்றீங்க நீங்க..? உங்க கிட்ட உங்களுக்குத் தெரியாம ஒரு பாஸிடிவ் பவர் இருக்குங்கறத ஒத்துக்கிறீங்களா?"

- அவளுக்கு அதற்குச் சட்டென்று ஒரு பதில் தோன்றவில்லை. ருத்ராவோ மாஸ்டருக்கு நன்றி கூறத் தொடங்கினார்.

"ஸார்... நீங்க தூண்டிவிட்டது நல்லதாப் போச்சு. நான் நம்பினதும் வீண் போகலை..." என்றார். இடையில், மயங்கிய தமிழழகனுக்கு என ஒரு ஸ்ட்ரெச்சர் வந்தது. அதில் அவனைக் கிடத்தி வார்டு பக்கம் கொண்டு செல்லத் தொடங்கினார்கள். மாஸ்டர் ருத்ராவோடு ஒதுங்கியவராக, "என்ன ஸார் இது... புதையல், அது, இதுன்னு ஒரு புது விஷயம் வெளிய வந்துருக்கு..?" என்றார்.

"ஆமாம் ஸார்... தமிழ் கண் விழிச்சுக் கோர்வையா பேச ஆரம்பிச்சிட்டா, எல்லாக் குழப்பங்களும் தெளிவாகிவிடும்..."

"எனக்கும் இப்ப ஒரே டென்ஷனா இருக்கு ஸார்... அதே சமயம் தமிழ் விஷயத்துல நடந்த மிராகிள் ஏன் யக்ஞன் விஷயத்துல நடக்கலன்னு தெரியில..." எனும்போதே யக்ஞன் கிடந்த படுக்கைக்கு அருகில் இருந்த நர்ஸ் ஓடி வந்தவளாக "ஸார், மானிட்டரில் பர்சண்ட் சேஞ்ஜஸ் தெரியுது. பீர்த்திங் இப்ப ஹண்ட்ரட் பர்சண்ட் சீராயிடிச்சு" என்றாள். ருத்ரா முகத்தில் பளபளப்பு கூடிக் கொண்டே போனது. ஷ்யாமளாவைப் பார்த்து, 'அம்மாடி நீ ஒரு தெய்வப் பிறவி' என்று கூற விரும்பியவருக்கு அதிர்ச்சியாக இருந்தது.

ஷ்யாமளாவையும், ராகவையும் அங்கே காணவில்லை. சற்று பகீரென்றது. வேகமாகத் தேடிக் கொண்டு வெளியே சென்றார்.

வெளியே வாகை மரத்தின் நிழலில் ராகவ் அந்த 1987ம் வருட டைரியை ஷ்யாமளாவிடம் கொடுத்துப் படிக்கச் சொல்லியிருந்தான். அவளும் பக்கங்களைப் புரட்டிக் கொண்டிருந்தாள். முகத்தில் ஏராளமான அதிர்வலைகள்!

ருத்ரா அவர்கள் இருவரையும் நோக்கி நடந்தார். அவர் வருவதைப் பார்த்து ராகவ் அவரை நோக்கி வந்தான்.

"என்ன ஸார் அது டைரி... எனிதிங் இம்பார்ட்டன்ட்?"

"ஆமாம் ஸார்... அது அவங்க அப்பாவோட டைரி. வீட்ல கிடைச்சது... எடுத்துகிட்டு வந்து கொடுத்தேன். எப்பவும் பழமையான விஷயங்கள்ள மூழ்கும்போது ஒரு த்ரில்லும், சந்தோஷமும் இருக்கும்தானே?"

"பட் அவங்க முகத்துல குழப்பமும், அதிர்ச்சியுமல்லத் தெரியுது?"

"அப்படி எல்லாம் இல்ல.... அவளோட அப்பா இப்ப இல்லாததால அவர் நினைவால வந்த பாதிப்பு தான் அது..." ராகவ் சமாளிக்க முனைந்தான். ஆனால் ருத்ரா அதை ஏற்காமல், அவள் அருகில் சென்றவராக டைரியை எட்டிப் பார்த்தார். ஷ்யாமளா உடனேயே அதை மூடிவிட்டு அவரை சற்று முறைப்பாகப் பார்த்தாள்.

"என்ன மேடம்... டைரில நாம இப்ப சந்திச்சிகிட்டிருக்கற சிக்கல்கள் பத்தி ஏதாவது தகவல் இருக்கா?" என்று ருத்ரா நேராகவே கேட்டார்.

"ஸாரி ஸார்... இது எங்க குடும்ப விஷயம். நீங்க இதைப் பத்தி கேள்வி கேக்கறதையே நான் விரும்பல..."

"இட்ஸ் ஓகே. எனக்கும் அது எவ்வளவு அநாகரீகம்னு தெரியும். அன்ஃபார்ச்சுனேட்லி நான் ஒரு போலீஸ்காரனாவும் போயிட்டதால, கடமை உணர்ச்சியில நாகரீகம் கொஞ்சம் பின்னாடிப் போயிடுது..." என்று சிரித்தார். பின்னர் அந்தச் சிரிப்பு அழியாதபடி, "யக்ஞனும் இப்ப வேகமா குணமாக ஆரம்பிச்சாச்சு. உங்ககிட்ட ஒரு பக்கா பாஸிடிவ் பவர் இருக்கறது ஊர்ஜிதமாயிடிச்சு. என் கணிப்பு எதுவும் வீண் போகல..." என்று முக்கியமான விஷயத்தைத் தொட்டார்.

"ஸார் ஸார்... நான் இப்ப நீங்க பேசற எதையும் கேக்கற ஒரு மனநிலையிலேயே இல்லை... நீங்க கொஞ்சம் என்னைத் தனியா விட முடியுமா?"

"ஷ்யூர்... ஷ்யூர்..." ருத்ரா வெகு வேகமாக விலகத் தொடங்கினார். அவளும் திரும்ப டைரிக்குள் புகுந்தாள். ருத்ரா விலகினாலும் அவளை நோட்டமிடுவதை விடவேயில்லை! ராகவ் அவள் அருகில் நின்று கொண்டு, "ஷ்யாமளா... இந்த டைரி குறிப்புப்படி பார்த்தா, செத்துப் பொழைச்சிருக்கற யக்ஞன் உன் தம்பின்னு ஆகுது. உன் அப்பாவுக்கு இவ்வளவு மோசமான ஒரு பக்கம் இருந்திருக்கும்னு என்னால கற்பனை கூடப் பண்ணிப் பார்க்க முடியல.." என்றான் சற்று ரகசியமான குரலில்.

அவளுக்கு கண்ணிரண்டும் கலங்கிவிட்டது. வாயை




விட்டு அழ வேண்டும் போலக்கூட இருந்தது.

"ராகவ், எனக்கு ஒரு உபகாரம் பண்ணுவியா?"

"இதுஎன்ன கேள்வி... என்ன உதவின்னு சொல்லு.."

"உன்ன பெட்ல கிடக்கற யக்ஞன் உடம்புல பால் மச்சம் இருக்கான்னு கொஞ்சம் பார்த்துட்டு வர்றியா?"

"ஷ்யூர் ஷ்யூர்...

"பை த பை இந்த விஷயம் எதுவும் அந்தப் போலீஸ்காரருக்குத் தெரிய வேண்டாம்"

"இதை நீ சொல்லணுமா ஷ்யாமனா?" -ராகவ் திரும்பிக் கேட்ட விதத்தில் ஒரு கனிவு இருந்தது. அப்படியே திரும்பி வார்டு நோக்கி நடந்தான். காரிடரில் தீவிரமான சிந்தனையில் இருந்தார் மாஸ்டர்.

ராகவ் அவரைக் கடந்தவனாக உள்ளே சென்று, டாக்டர் முன் நின்றான்.

"டாக்டர் ... யக்ஞனுக்கு இப்ப எப்படி இருக்கு?"

"நல்ல இம்ப்ரூவ்மெண்ட் ஸார்... ஐ திங்க் யக்ஞனும் சில மணி நேரத்துல கண் முழிச்சிடுவான். சும்மா சொல்லக்கூடாது... ஷ்யாமனா ஒரு மிராகிள் லேடிதான். அவங்களைப் பத்தின விஷயம் பரவி சீரியஸ் கேஸ் எல்லாம் இப்ப அவங்கள எதிர்பாக்கற ஒரு சூழ்நிலை உருவாகத் தொடங்கிடிச்சு"

"ஐயையோ... அப்புறம் கைல சூலாயுதத்தைக் கொடுத்து ஆதிபராசக்தி, அங்காளப் பரமேஸ்வரின்னு கால்ல விழுந்துடப் போறாங்க..."

"அதனால என்ன ஸார்... அவங்க கால்ல விழறதுல தப்பே இல்லை. எங்க மருந்து, எங்க அனுபவம், கணிப்பு எல்லாத்தையும் விஞ்சற ஒரு சக்தி அவங்க உடம்புல இருக்குங்கறதுதான் ப்ரூவ் ஆயிடிச்சே... இந்த மிராகிளை நான் மினிஸ்டர் வரை கொண்டு போகப்போறேன். இன்ஃபாக்ட் அவரோட உறவினர் ஒருவர் ரொம்ப சீரியஸ் கண்டிஷன்ல இருக்கார். அவங்கள நம்ம ஷ்யாமனா மேடம் காப்பாத்திட்டா அப்புறம் ஷ்யாமனாதான் தமிழ்நாட்டுக்கே சீஃப் டாக்டர்!"

-டாக்டர் தன் பேச்சில் பல எல்லைகளை உடைத்துக் கொண்டு எங்கெங்கோ போய்விட்டார்.

"டாக்டர் டாக்டர்... இதெல்லாம் பிறகு... நான் கொஞ்சம் யக்ஞனைப் பாக்கணுமே... இஸ் இட் பாஸிபிள்..?"

"தாராளமா ஸார்... வாங்க போகலாம்". டாக்டர் அவனை அழைத்துச் சென்றார். ருத்ரா ஒரு மூலையில் மறைந்து கொண்டு பார்த்தபடியே இருந்தார். யக்ஞனை நெருங்கிய ராகவும், 'முதுகுப் பக்கமெல்லாம் கூட பயங்கரக் காயமோ..?' என்று கேட்க டாக்டரிடம் பலமான ஆமோதிப்பு!

"கூட்டமா காட்டுமிருகங்கள் கிட்ட சிக்கின ஒரு மனிதன் உடம்புல எந்த அளவு சதை பிஞ்சு போகுமா அந்த அளவு போயிருக்கு. இவ்வளவுக்கும் நடுவுல, இந்தப் பாடியோட முதுகுல ஒரு பால் மச்சம்! அதுக்கு மட்டும் ஒரு சின்னப் பாதிப்புகூட இல்லேங்கறதுதான் ஆச்சரியம்"

- டாக்டர் சொல்லி முடித்த நொடி, ராகவுக்கு குப்பென்று வியர்க்க ஆரம்பித்தது!

(தொடரும்)

**37**



"பண்டாரி அந்தப் புல்லாங்குழல் நிமித்தம் கண்ணமங்கலத்தை விட்டுப் புறப்பட்டுச் சென்றது ஊருக்குள்ளும் ஒரு பரபரப்புச் செய்தியாகப் பரவத் தொடங்கிவிட்டது. சாதாரணமாய் இப்படிப்பட்ட விஷயங்கள் மட்டும், உள்ளது உள்ளபடி பரவாது. அதனுடன் கை, கால், மூக்கு என்று பலவிதக் கற்பனை விஷயங்களும் ஒட்ட வைக்கப்பட்டு அந்த விஷயம் ஒரு பூத வடிவம் எடுத்து விடும். பண்டாரி வரையிலும் அப்படித்தான் ஆகி விட்டது! 'அது புல்லாங்குழல் மட்டுமில்லையாம்- அது ஒரு மந்திரக்கோலுமாம். அதைக் கொண்டு விசுவாமித்திரர் திரிசங்கு சொர்க்கத்தைப் படைத்தது மாதிரி, புதிய உலகத்தையே படைக்க முடியுமாம். அது மட்டுமல்ல... அந்தப் புல்லாங்குழல் இசைக்கு கண்ணனே மயங்கிப் போய் நேரில் தோன்றுவானாம்!' -இப்படிப் பற்பல செய்திகள்.

தெய்வீக விஷயங்கள் மாயா உலகில் எப்படிப் பார்க்கப்படும் என்பதற்கு ஒரு சான்று போல ஆகிவிட்டது அந்த விஷயம். பண்டாரியைத் தொடர்ந்து, வேறு சிலரும் அந்தக் குழலை தேடிக் கொண்டு புறப்பட்டனர். அவர்களில் வழிப்பறி செய்யும் முத்துமாரி என்பவன் முதல், ஊர்த் தலையாரி ராஜமாணிக்கத் தாண்டவராயர்

# கிருஷ்ண தந்திரம் 37



வரை பலர் அடக்கம்!

மொத்தத்தில் புதையலைத் தேடுபவர்கள் போல அந்தப் புல்லாங்குழலை தேடிச் செல்லத் தொடங்கிவிட்டனர். விபரீதமான இந்தப் போக்கு, மன்னார் பக்கமும் திரும்பத் தொடங்கியதுதான் கொடுமை. 'மன்னாரின் சிறப்புக்கெல்லாம்கூட கண்ணன் அவனுக்குக் கொடுத்த புல்லாங்குழலே காரணம். அதைப் பிடுங்கிவிட்டால் அவனும் ஒரு சாமான்யப்பட்ட மனிதனாகிவிடுவான்' என்று சிலர் நினைத்தது பெரிய கொடுமை!"

டாக்டர் சொன்ன பதில் ராகவை அப்படியே கட்டிப் போட்டிட, மௌனமாகத் திரும்பி ஷ்யாமனாவிடம் சென்று நின்றான்.

"என்ன ராகவ்... பார்த்தியா?"- ஷ்யாமனாவும் துடித்தாள்.

"அவசியமேயில்ல ஷ்யாமனா... இந்த யக்ஞான்தான் உன் தம்பி. பாடில பால் மச்சம் இருக்கறத டாக்டரே கன்ஃபார்ம் பண்ணிட்டார்!"

- அந்தப் பதில் ஷ்யாமனாவை ஒரு உலுக்கு உலுக்கிவிட்டது.

"உன்னால இதை நம்ப முடியல இல்ல?"

"நம்பறது மட்டுமா... ஜீரணிக்கவும் முடியல ராகவ்"

- ஷ்யாமனாவின் கண்ணிரண்டும் சரசரவென்று கண்ணீரைப் பெருக்கத் தொடங்கின.

"ரைட்... இப்ப அடுத்து என்ன பண்ணப் போறே?"

"இப்படிக் கேட்டா நான் என்ன பதில் சொல்ல...?"

"இந்த ரகசியம் இப்போதைக்கு உனக்கும், எனக்கும்தான் தெரியும். மாஸ்டருக்குகூட தெரியாது. தெரியவும் வேண்டாம். ஏன்னா இது இப்ப உயிரோட இல்லாத உன் அப்பாவைப் பத்தி தப்பு தப்பா எல்லாரையும் யோசிக்க வைக்கும்"

"அடுத்தவா யோசிக்கிறது இருக்கட்டும். இப்ப நானே அப்படித்தானே யோசிக்க வேண்டியிருக்கு! ஏற்கெனவே என் பொறப்புலயே ஒரு மர்மம். இப்ப இது அடுத்த மர்மம். இந்த மாதிரி மர்மங்களில் மாட்டிக்கறதுக்கா நான் இத்தனை வருஷம் கழிச்சு இந்த ஊருக்கு வரணும்..?"

"நான் என்னன்னு சொல்றது...? 'அழகான கிராமம், பிரமாதமா மியூசிக் பத்தி சிந்திக்கப் போறோம், புதுசு புதுசா நோட்ஸ் போட்டு தீம் பிடிச்சு இண்டியாவை மட்டுமில்ல... ஃபாரின்காரார்களையும் பிடிச்சு உலுக்கப் போறோம்'னுதான் நானும் நினைச்சேன். ஆனா இங்க வந்து மந்திரம், மாயம், கடுகாடு, பொணம்னு திரிஞ்சிண்டிருக்கேன். நடுவுல பரண்மேல ஏறி இப்படி டைரியை எல்லாம் வேற எடுத்து, புதைஞ்சு போன ரகசியங்களை



யெல்லாம் தோண்டி எடுத்துண்டுருக்கேன்..."

- இருவரும் பரஸ்பரம் தங்களுக்குள் ஆயாசப்பட்டுக் கொள்ள, உள்ளே தமிழழகன் கண் திறந்து தெளிவாகப் பார்ப்பதாக ஒருவன் ஓடி வந்து கூறினான். உடனேயே ஷ்யாமளா அவனைப் பார்க்க அங்கிருந்து புறப்பட்டாள். ராகவும்தான்... ஆனால் அவன் திரும்பிய நொடி யாரோ அவன் தோளைப் பற்றி இழுப்பது போல இருக்கவே திரும்பினான்.

எதிரில் பைராகி!

தீட்சண்யமான பார்வையுடன் அவனையே வெறித்தவராக...

"என்ன பரண்ல இருந்து எல்லாத்தையும் எடுத்த நீ, என்னைப் பார்க்க வராம இங்க என்ன பண்றே?"

"அது... அது..."

"பேசாம இப்ப என்கூட வா. புருவ மைக்கு வேர்வை ஒரு எமன்கறது தெரிஞ்சும் நான் உன் புருவத்துல மைய பூசி அனுப்பினது என் தப்பு..."

"பைராகி... நானும் ஷ்யாமளாவுமேகூட உங்களைப் பார்க்க வரதாதான் இருந்தோம். அதுக்குள்ள இங்க புதுசு புதுசா பல திருப்பங்கள். குறிப்பாக ஷ்யாமளாவோட நிலையே இப்ப ரொம்பப் பரிதாபமா இருக்கறதால..."

"அவ நிலை என்ன பரிதாபம்..? பெரிய பரிதாபமே இங்க நான்தான்... நீ எதுவுமே பேசாம இப்ப என் கூட வர்றே..."

"பைராகி...."

"உம்..." -பைராகி ஒரு அதட்டுப் போட்டு அப்படியே வேறுபக்கமாக அவனுடன் விலகத் தொடங்கினார்.

அது என்ன மாயமோ அங்கே பல பேர் நடமாடிக் கொண்டிருந்த போதிலும் அவர்கள் இருவரை மட்டும் ஒருவர் கூட பார்க்கவில்லை!

**ஆ**ஸ்பத்திரி படுக்கையில் ஒருபுறம் ட்ரிப்ஸ் ஏறியபடி இருக்க, தமிழழகன் கண் திறந்துவிட்டிருந்தான். சற்றுமுன் கண் திறந்த நிலையில் பதற்றமாக சில வார்த்தைகள் பேசியவன், எதனாலோ எதுவுமே பேசாமல் வெறித்தான். அருகே ருத்ரா நின்றபடி அவனைத் தூண்டிவிட்டார்.

"தமிழ் இப்ப நீ நல்லாயிட்டே.... கமான் நீ என்ன சொல்ல நினைக்கறியோ சொல்லு..." என்றார்.

அவன் பதிலுக்கு ஒரு சிறு சலனத்தைக்கூட முகத்தில் காட்டவில்லை. அவனிடம் திரும்பவும் அதே பழைய பார்வையும், வெறிப்பும்.

டாக்டரும் அவனைத் தூண்டிவிடத் தொடங்கினார். "தமிழழகன்! உங்களுக்கு இப்ப எதுவும் இல்லே. நீங்க தைரியமாப் பேசுங்க... இல்ல உங்க

> **இப்ப உனக்கு நான் விஷயத்தச் சொல்றேன், கேட்டுக்கோ. உனக்கும், அந்தப் பொண்ணு ஷ்யாமளாவுக்கும் கண்ணமங்கலம் போகணும்கற எண்ணத்தை உருவாக்கினதே நான்தான்!**

ளுக்கு என்ன வேணுமோ கேளுங்க.."

- அவனிடம் துளிகூட பதில் பிரக்ஞை இல்லை. ருத்ரா கைகளைப் பிசைந்து கொண்டார். ஷ்யாமளாவைப் பார்த்து, "ஷ்யாமளா மேடம்... நீங்க திரும்ப ட்ரை பண்ணிப் பாக்கறீங்களா?"

"ஷ்யூர் ஸார்..." -அவள் அவன் கைகளைப் பிடித்தவளாக, "தமிழ் என்னைத் தெரியுதா?" என்று கேட்டாள். அவள் தொடவும் அவள் பக்கம் திரும்பினான். அவன் நிமிர்ந்தும் ஏதோ பேச முயன்றான். ருத்ராவுக்கும் ஒரு நம்பிக்கை வர ஆரம்பித்தது.

"கமான்... கமான் பேசுங்க..." -என்று கத்திப் பார்த்தார். அவனோ நாக்கை மடக்கிப் பேச முடியவில்லை என்று சமிக்ஞை காட்டினான்.

"பேச முடியலையா...? என்னப்பா நீ இப்பகூட பேசினியே..." என்றார் ருத்ரா. அவனோ இயலாமையை முனகலோடு வெளிப்படுத்தினான்.

"என்ன டாக்டர், என்ன நடக்குது இங்க? நீங்க ட்ரிப்ஸ் கொடுத்ததால எதாவது கோளாறா?"

"நோ ஸார்... அதனாலதான் பேஷண்ட் இவ்வளவு தூரமாவது செயல்பட முடியுது."

"சரி, கொஞ்ச நேரம் கழிச்சு வந்து பார்ப்போம்."

- தாற்காலிகமாக ஒரு இடைவெளி ஏற்படுத்திக் கொண்டு ருத்ரா வெளியில் வந்தார். ஷ்யாமளாவும் மாஸ்டருடன் ஒதுங்கியிருந்தாள்.

"எங்கம்மா ராகவ்?" -மாஸ்டர் கேட்ட பிறகே அவன் எண்ணம் வந்து, நாலாபக்கமும் பார்த்தாள் ஷ்யாமளா.

"இப்ப இங்க என்கூடத்தானே இருந்தான்..."

"வெளியே நின்னு நிக்கறானோ?"

- பேசிக் கொண்டே வெளியே வந்தனர். எங்கும் அவன் இல்லை. எப்படி அவன் அங்கே இருக்க முடியும்?

**யா**தவகிரி மலைக்குன்று-புன்னை மரத்து நிழல் பகுதி... மல்லாந்த கோலத்தில் பைராகி. அருகில் பணிவாக ஒரு சிஷ்யனைப் போல ராகவ்.

"நீ இப்ப நேரா செல்லப்பாவோட அகத்துக்குப் போய் அந்தப் பரண் மேல் இருக்கும் அத்தனைச் சமாச்சாரங்களையும் இங்க எடுத்துண்டு வரே... தைரியமாப் போ. உன் சிரசு, புருவம், பாதம்னு எல்லா இடத்திலேயும் இப்ப நான் அஞ்சனம் தடவியிருக்கேன். உன்னை முதல்ல யாரும் பார்க்க மாட்டா... நான் தவறாம ஆயிரத்தெட்டு காயத்ரியும், எப்பவும் நாமபாராயணமும் பண்ற ஒருத்தனால மட்டும்தான் உன்னைப் பார்க்க முடியும். அப்படியே பார்த்தாலும் அவன் உன்னைப் பத்தி பெருசா நினைக்க மாட்டான். நீ சுதந்தரமா எங்

கேயும் போகலாம், வரலாம். ஆனா பதி மூன்று நாழிகைக்குதான் இந்த அஞ்ச னக் கட்டு வேலை செய்யும். அதுக்குள்ளார உன்னைக் கொண்டு நான் பல காரியங் கள முடிச்சுக்கணும். உனக்கு பூணூல் போட்டு பிரம்மோப தேசம் ஆயாச்சு தானே?"

"ஆயாச்சு ஸ்வாமி"

"உன் குருநாதர் கிட்ட உனக்கு சமஸ் காரம் ஆயிடுத்தா?"

"ஆயிடுத்து..."

"எங்க உன் தோளைக் காட்டு..."- ராகவ் காட்டிட அவனது இரு தோள்க ளிலும் சங்கு சக்கர முத்திரை கள்!

"சபாஷ்... உன் கைல கருட ரேகை யும் இருக்கு. இப்ப உனக்கு நான் விஷயத்தச் சொல்றேன், கேட்டுக்கோ. உனக்கும், அந்தப் பொண்ணு ஷ்யாமளாவுக்கும் கண்ணமங்கலம் போகணும்கற எண்ணத்தை உருவாக்கினதே நான் தான்!

மியூசிக்குக்காக நீங்க இங்க வர நினைச்சிருக்க லாம். ஆனா அது உங்க அறிவுக் காரணம். அசல் காரணம் நானும், நான் ஜெபிச்ச ஜெபமும்தான். நீங்க வரவும் நான் அடுத்தடுத்து சில காரியங்கள் செய்தேன். எதுவும் துளிகூடப் பிசகலை. ஒரே ஒரு விஷயம் மட்டும் கைகூடாம தப்பா முடியப் பாத்துது. அதை நான் இந்த நிமிஷம் வரை கட்டிப் போட்டுருக்கேன்.

இப்பகூட உன்னைத் தேடி ஆஸ்பத்திரிக்கு வந்தப்போ, அந்தத் தமிழழகனுக்கு அஞ்சனம் பூசி கட்டுப் போட்டுட்டுதான் வந்தேன். நீயும், மத்தவாளும் அங்க பேசினது நடந்துண்டது எல்லாத்தையும் கூடவே இருந்து பார்த்துண்டுதான் இருந்தேன்.

என்னையும் அஞ்சனம்தான் காப்பாத்திண்டிருக்கு. போகட்டும்.. போய் வேகமா அதை எடுத்துண்டு வா... உம் சீக்கிரம்..." -பைராகி அவனை ரேஸ் குதிரையை விரட்டுவது போல் விரட்டிட அவனும் வேகமானான்.

ராகவை தேடித் தேடிப் பார்த்துவிட்டு அவன் செல் நம்பருக்கு முயற்சி செய்து பார்த்தாள் ஷ்யாமளா. அதுவோ 'ஸ்விச்டு ஆஃப்' என்று வந்தது.

"ரொம்பவே ஆச்சரியமா இருக்கு... இவ்வளவு நேரமா இங்க என்கூட இருந்தவன் எங்க போயிருப்பான்..?"

"அனேகமா உன் வீட்டுக்குப் போயிருப்பானோ?"

"தெரியலியே... செல்ஃபோனையும் ஆஃப் பண்ணி வெச்சுருக்கான்..."

"உன் வீட்டு லேண்ட் லைனுக்கு போட்டுப் பார்.."

- மாஸ்டர் எடுத்துக் கொடுக்க ஷ்யாமளா லேண்ட் லைனுக்கு முயற்சித்தாள். வீட்டில் தொலைபேசி ஒலித்த போது மூன்றாம் நாள் காரிய நிமித்தம் வேத பிராம்மணர் ஒருவர் வந்து அமர்ந்திருந்தார். அவர் அருகில்தான் இருந்தது தொலைபேசி. பைராகி சொன்னது போல தினமும் ஆயிரத்தெட்டு காயத்ரி ஜெபித்து சதா சர்வகாலமும் 'ராமா... கிருஷ்ணா' என்று நாம ஜெபம் ஜெபிப்பவர். அப்போதும் ஜெபித்தபடி இருந்தவர், இடையூறாக இருக்கும் தொலைபேசியை எடுத்து அவராக, 'யார் வேணும்?' என்று ஆரம்பித்தார்.

"நான் ஷ்யாமளா பேசறேன். பேசறது யாரு?"

"அடியேன் பத்மநாபாச்சாரி பேசறேன்... செல்லப்பா பொண்ணு ஷ்யாமளாவா பேசறது?"

"ஆமாம் மாமா... அங்க கோமளா மாமி இருந்தா சித்த கூப்பிடுங்களேன்..."

"ஹால்ல நான்தான் உக்காந்துண்டுருக்கேன்... கோமளா சமையல் கட்டுல இருக்கணும். எதானும் முக்கியமான விஷயமாம்மா..?"

"ஆமாம் மாமா... அங்க ராகவ்னு என்கூட சென்னையில இருந்து வந்த ஃப்ரெண்டு இருக்கானா மாமா?"

- ஷ்யாமளா கேட்ட நேரம் ராகவ் அந்த ஓலைக் கட்டு மூட்டையுடன் மாடிப்படி இறங்கிக் கொண்டிருந்தான். அவரும் பார்த்துவிட்டு, "ஆமாம்மா... அந்தத் தம்பி பெருசா ஒரு மூட்டையை தோள்ள சுமந்துண்டு மாடியில இருந்து இறங்கி வெளிய போயிண்டு இருக்கான்..."

"மூட்டையா.... என்ன மூட்டை?"

"அது யாருக்குத் தெரியும்... பழைய பேப்பர்காரன் தோள்ள சுமந்துண்டு வர்ற மாதிரியே இருக்கு..."

- அவர் பதில் ஷ்யாமளாவை சற்று திடுக்கிடவே வைத்தது. 'மூட்டையுடன் எங்கே போகிறான்? மூட்டைக்குள் என்ன இருக்க முடியும்?' கேள்விக் குடைச்சலுடன் ஃபோனை கட் செய்தவள்,

"மாஸ்டர், ராகவ் வீட்லதான் இருக்கான். தோள்ள ஒரு மூட்டையோட எங்கேயோ போய்கிட்டு இருக்கானாம்..."

"மூட்டையோடயா..? ஆச்சரியமா இருக்கே!"

- மாஸ்டர் வாயைப் பிளந்தார்.

(தொடரும்)

38

"மன்னார் இப்பொழுது பழைய மன்னார் இல்லை. உடம்பில் கோபி திலகம் இட்டுக் கொண்டு ஒரு தேஜஸ் மிகுந்த யோகியைப் போல அவன் மாறிவிட்டான். அவனது குடும்பத்தார்க்கேகூட அவன் மூன்றாவது மனிதனாகிவிட்டான்! யாதவகிரி கோவிலுக்கு மூன்று காலமும் வருவது, அந்தக் கிருஷ்ணனை குழலிசையாலேயே அர்ச்சிப்பது, கறந்த பாலைக் கொண்டு, வந்து அபிஷேகம் செய்வது, தர்சிப்பது இவையெல்லாம்தான் அவனது அன்றாட வேலை. இதுபோக கண்ணமங்கலம் தெருக்களில் தேசாந்திரி போல நடப்பதும், தஞ்சை மன்னர் அவனுக்கு அளித்த காணி நிலத்தில் போய் அமர்ந்து கொள்வதும், அவனைத் தேடி வருபவர்களின் குறைகளைக் கேட்டு அதற்கேற்ப குழலால் இசைப்பதும் அவனது அன்றாடத் தொண்டாகிவிட்டது. வருகின்றவர்களில் ஒருவர்கூட ஏமாறவில்லை என்பதுதான் ஆச்சர்யம்.

இப்படி ஒரு நிலையில்தான் ஒரு நாள் இரவில் மன்னாரின் அந்தக் குழல் திருடுபோயிற்று. 'அது இருக்கப் போய் தானே அவனுக்கு மகத்துவம் எல்லாம்' என்று கருதி உள்ளூரில் இருக்கும் பண்டாரியைப் போன்றே அவன் பால் பொறாமை கொண்ட ஒருவர், அவன் கூடவே தங்கி அவன் தூங்கிய சமயமாகப் பார்த்து அவன் கைகளில் அகலாமல் எப்போதும் இருந்த அந்தக் குழலை களவாடிவிட்டார்.

களவாடிச் சென்றவர் பேராசையோடு அதை வாசிக்க முயன்றபோது அவரால் முடியவில்லை. சில நிமிடங்களிலேயே ஒரு கையும், காலும் இழுத்துக்கொண்டு விட்டது. அப்படியே கெந்தி நடந்து வந்து மன்னார் முன் குழலோடு விழுந்து, தன் திருட்டுக்கு மன்னிக்க வேண்டினார். மன்னாரும் குழலிசைத்தே அவரைக் குணப்படுத்தினான்.

இந்தச் சம்பவத்தால் 'மன்னாரின் குழலைத் திருடினால் அது பெரிய விபரீதத்தில் முடியும்' என்பது அனைவருக்குமான செய்தி ஆயிற்று. மன்னாருக்கே அது ஆச்சரியம் அளித்தது. கிருஷ்ணனுக்குத்தான் தன் மேல் எவ்வளவு கருணை என்பதை எண்ணி ஆனந்தக் கண்ணீர் விட்டான். இருந்தும் 'மன்னார் மேல் மட்டும் கண்ணனுக்கு அப்படி என்ன கரிசனம்?' என்கிற கேள்வி, மேல்குடியில் உள்ள பலரை உறுத்திக் கொண்டே



# இந்திரா செளந்தர்ராஜன்

இருந்தது. அப்போதுதான் பண்டரிபுரத்தில் இருந்து விட்டலாச்சாரி என்கிற பெயரில் ஜாதகம் கணிப்பவர், மன்னாரைப் பார்க்க வந்திருந்தார். மன்னாரின் பிறந்த நேரம், காலத்தை வைத்து ஜாதகத்தைக் கணித்தவர் அப்படியே அசந்துபோய்விட்டார். திகைப்புக்கு அதில் இருந்தது காரணம்.

அது—"



ஆஸ்பத்திரியில் ஃபோன் மூலம் அறிந்த செய்தியால் ஷ்யாமளா அயர்ந்து போனாள். மாஸ்டருக்கும் ராகவின் செயல் ஆச்சரியமாகத்தான் இருந்தது.

"மாமா... சித்த ராகவைக் கூப்பிட்டு என்கூட பேசச் சொல்றேளா?" என்று பத்மநாபாச்சாரியாரிடம் சொல்லிப் பார்த்தாள்.

ஆனால் அவன் மூட்டையை காரின் டிக்கியில் போட்டுக் கொண்டு காரைக் கிளப்பிக்கொண்டு போவதாகத்தான் அவரிடம் இருந்து பதில் வந்தது.

ஷ்யாமளா முகத்தில் ஏமாற்றம்!

முதல் முறையாக மாஸ்டர் முன்னாலே அந்த டைரி விஷயத்தைப் பேசத் தொடங்கினாள்.

"மாஸ்டர்... ராகவ் என் வீட்ல ஒண்ணும் சும்மா இல்லை. அவன் தங்கியிருந்த அறைல ஒரு பரண் இருக்கு. அதுல ஏறி குடைஞ்சிருக்கான். அப்ப டைரி மாதிரி பல விஷயங்கள் கிடைச்சிருக்கு. நிறைய ஏட்டுச் சுவடிகள்னாம் இருந்ததாம். அநேகமா அதை எல்லாம்தான் அவன் கொண்டு போறான்..."

"எங்க கொண்டு போறான்னு தெரியலியேம்மா..."

"நிச்சயமா அதை எல்லாம் எடுத்துண்டு அவன் அந்தப் பைராகியை பார்க்கத்தான் போய்கிட்டிருக்கணும்..."

"ஷ்யாமளா! அந்தச் சுவடிகள்ள ஏதோ பெரிய ரகசியம் இருக்க

ணும். நீ இங்க இருக்கற இந்தத் தருணத்தைப் பயன்படுத்தி அவர் நடந்துக்கறத பார்த்தா, எல்லாத்துக்கும் பின்னால் ஒரு அசாத்ய திட்டமிடல் இருக்குன்னு தான் எனக்குப் படுது.."

"இந்த மாதிரி ஒரு திருட்டுத் தனத்தை ராகவ் பண்ற துதான் மாஸ்டர், எனக்கு புரியாத புதிரா இருக்கு..."

"அவசரப்படாதே... ராகவ் அவனோட கான்ஷியஸ்ல இதைச் செய்துகிட்டிருக்க மாட்டான். நீ இங்க இரு... இங்க இருக்கற ரெண்டு பேரும் கண் திறந்து தெளிவாப் பேசத் தொடங்கிட்டா, பாதிச் சிக்கல் தீர்ந்த மாதிரிதான். நான் இப்ப யாதவகிரி மலைக் கோயிலுக்குப் போறேன். அந்தப் பைராகி அங்க இருக்கிறதால ராகவ் அங்கதான் போகணும். அங்க போய் பாக்கறேன். உன் செல்போனை நீ எப்பவும் ஆன்லயே வை; நானும் ஆன்லயே வெச்சுக்கறேன். அங்க போய் பார்த்துட்டு ஃபோன் பண்றேன்"

- என்றவராக மாஸ்டர் அங்கிருந்து நழுவ ஆரம்பித் தார். அப்போது அவர் கண்களுக்கு ருத்ரா படவே யில்லை. ஆனாலும் அவர்களுக்கே தெரியாமல் இருவரையும் ருத்ரா பார்த்துக் கொண்டேதான் இருந் தார்.

மாஸ்டர் நழுவிய அடுத்த நிமிடம் ஒரு மஃப்டி போலீஸ்காரரும், மாஸ்டரை பின் தொடர்வது தெரியாமல் பின் தொடரத் தொடங்கியிருந் தார்!

அன்புமணியின் வீட்டில் கோமதிக்கு வயிற்றைப் புரட்டிக் கொண்டிருந்தது. அன்புமணி கவனித்துவிட்டு அருகில் வந்தவனாக, "ரொம்ப ஒரு மாதிரி இருந்தா, கற்பூரவல்லி தழையைப் பறிச்சு மெல்லு. அதுக்கும் அடங் காட்டி, நார்த்தங்கா துண்டை எடுத்து வாய்ல வெச்சுக்க... அடங்கிடும்" என்றான்.

அவன் கண்களில் கண்ணீர் துளிர்க்கத் தொடங்கிவிட்டது. "அண்ணே... அவரைப் பத்தி ஏதாவது தெரிஞ்சிச்சா?"

"இல்ல கோமதி... ஆஸ்பத்திரிலதான் இருக் கான். போய்ப் பார்த்தாதான் தெரியும்..."

"அவருக்குக் குணமாயிடுமாண்ணே? என்னை ஏத் துக்குவாரா?"

"சாமிகிட்ட கேட்க வேண்டியத என்கிட்ட கேட்க றியே கோமதி..."

"நீயும் இப்ப எனக்கு சாமிதாண்ணே... நீதானே என் னைக் காப்பாத்தி என் உயிரை தடுத்து நிறுத்தியி ருக்கே. நீ இல்லாட்டி நான் எப்பவோ செத்துருப் பேனே அண்ணே..."

"போதும்... புலம்பாம போய் நான் சொன்னதைச் செய். நான் போய் சியாமளாவை பார்த்துட்டு வரேன்..."

"அது கை பட்டா பட்டமரமும் துளிர்க்குதுன்னு ஒரு பேச்சு இருக்கே. அது ஏன் என் தமிழை குணப்ப டுத்தக் கூடாது?"

"முடியும்னா சியாமளா எதுவும் செய்யும். அதைப் பத்தி எனக்குத் தெரியும். நீ தைரியமா இரு. செய்யக் கூடாத தப்ப செஞ்சாலே இப்படித்தான்..."

- அன்புமணி அவளுக்கு ஆறுதலளித்துவிட்டு வெளியில் வந்தான். அவளுக்கோ மனது அடங்கவே இல்லை. நாளுக்கு நாள் வயிற்றுக்குள்ளே சிசுவானது பெரிதாகிக் கொண்டே போவதால் வயிறு வெளியில் தெரிந்து ஊர் சந்தேகப்படத் தொடங்கிவிட்டால் என்ன செய்வது என்கிற பயம் வேறு!

பொதுவில் செய்வதறியாது நிற்கும் தருணங்களில் ஒரு சிறு துரும்பைக்கூட பெரிதாகப் பற்றிக் கொள் ளும் மனது. கோமதிக்கு அப்போது ஆறுதலாகக் கண்ணில்பட்டது அந்த வீட்டில் உள்ள மன்னாரின் ஜீவ சமாதிப் படம்தான்!

அதைப் பார்த்தவள் சமாதிக்கே போய்வந்தால் என்ன என்றும் தனக்குள் கேட்டுக் கொண்டாள். அவர்கள் குடும்பத்துக்கே கண் கண்ட தெய்வம் மன் னார்தான். பூஜை அறைக்குச் சென்று கொஞ்சம் நெய், ஒரு தீப்பெட்டி, சில பஞ்சுத் திரிகளை எடுத்துக் கொண்டு விளக்குப் போட்டு வேண்டிக் கொள்வதற் காக புறப்பட்டுவிட்டாள்!

நல்ல வேளையாக தடுத்து நிறுத்துவதற்கு அன்புமணியும் இல்லை. அவன் ஷ்யாமளாவை பார்ப்பதற்காக அவன் வீட்டுப் பக்கம் சென்றிருந் தான்.

யாதவகிரி மலைக் குன்று! மூச்சிரைக்க ஓடி வந்து பார்த்த மாஸ்டருக்கு ஏமாற்றம்தான் ஏற் பட்டது. சந்நிதி முகப்பில் திரை போடப்பட்டிருக்க, முன்னாலே அமர்ந்து சஹஸ்ர நாமம் சொல்லிக் கொண்டிருந்தார் கோயில் பட்டர் ஆராவமுத ஐயங்கார். மாஸ்டரைப் பார்த்துவிட்டு "கோயிலுக்கு வந்தேளா..? பூஜை எல்லாம் இப்ப இங்க கிடையாது. திரௌபதி அம்மன் கோவில் குளத் துலதான்" என்றார்.

மாஸ்டருக்கு பட்டரின் பதிலால் ஒரு அதிர்வு. "விசேஷமான சந்நிதி இது... இப்படிப் பூஜை இல் லாம இருக்கலாமா?"- என்று அவரிடமே கேட்டார்.

"இது ஒண்ணும் இந்தச் சந்நிதிக்கு புதுசு இல்லை. ஊருக்குள்ள தப்பும் தவறும் அதிகமா நடக்கும்போது நான் என்ன பண்ணமுடியும்? எனக்கு வேற வழி தெரிய லியே..."

"எங்கேங்க தப்பு நடக்கல? எனக்கென்னவோ நீங்க அவசரப்பட்டுட்டீங்களோன்னு தோணுது"

"நான் அவசரமெல்லாம் படலை... இங்க வந்து பேரா போட்டிருக்கற வைராகிய சமாளிக்க எனக்கு வழியே தெரியில. அந்த ஆளை விரட்ட எங்க யாராலையும் முடியில. பெருசா போலீஸ் வந்தது, என்ன ஆச்சு? இப்பன்னு இல்ல... இந்தக் கோயிலுக்கு மட்டும் பல தடவை இப்படிச் சிக்கல்கள் வந்துருக்கு. அப்பல்லாம் வந்த அந்தக் கிருஷ்ணன் இப்பவும் வரட்டுமே..."

"சாமி நானும் கண்ணமங்கலம் பத்தி நிறையவே கேள்விப்பட்டிருக்கேன். ரொம்பவே புதிரான ஊர். அதுக்காக அந்தக் கிருஷ்ணனே வந்துருக்கார்னும், வருவார்னும் சொல்றத எல்லாம் என்னால ஒத்துக்க முடியாது..."

"இப்ப நமக்குள்ள எதுக்கு தர்க்கம்? நீங்க ஏத்துண்டா எனக்கென்ன? ஏத்துக்காட்டி எனக்கென்ன? எனக்கு என் முன்னோர்கள் சொல்லிட்டுப் போயிருக்கறதுதான் கணக்கு. நான் அதை நம்பறேன்..."

"இல்ல... நீங்க என்ன தப்பா எடுத்துண்டாலும் சரி, கிருஷ்ணன் வருவான்- இல்ல வரப்போறான்னு நீங்க நம்பறதை வெச்சு ஒரே ஒரு கேள்வி மட்டும் கேட்டுக்கறேன். அந்த பரமாத்மா இதுக்கு முந்தி வந்திருந்தா அவன் காலடி பட்ட இந்த ஊர் இப்படியா இருக்கும்? இல்ல வரப்போறான்னா தான் இப்படி இருக்குமா?"

"நீங்க என்ன சொல்றேள்...? எனக்குப் புரியலியே"

"இல்ல இவன் பார்வையில் உள்ள ஒரு ஊர் எவ்வளவு சுபிட்சமா, எத்தனை உசர்வா இருக்கணும்?"

"அப்படி எல்லாம் ஒண்ணும் கட்டாயம் இல்ல. இந்த ஊரும், உலகமும் கிரகங்களால வழிநடத்தப்படறது. மனுஷன்கறவன் கர்மாவால வழி நடத்தப்படறான். தெய்வம்கறது இதுக்கு நடுவுல. அதுகிட்ட சரணாகதி அடையறவனை எல்லாம் தன்னோட சேர்த்துண்டு ரட்சிக்கறது. சரணாகதி அடையத் தெரியாதவாதான் இந்த லோக மாயைல மாட்டிண்டு இன்பம் துன்பம், துன்பம் இன்பம்னு அல்லாட்றா"

"இல்ல என் கேள்விக்கு இது பதில் இல்லை. நான் 'கடவுள் இல்லை, இல்லவே இல்லை'ன்னு சொல்ற நாத்திகன் இல்லை. பரிபூரண கடவுள் நம்பிக்கை உடைய ஒருத்தன். அதே சமயம் கடவுள்ங்கறவர்- அன்பு, நீங்க சொல்ற சரணாகதி, எல்லாத்துக்கும் மேல சத்யமான தவம் இதுக்குதான் அகப்படுவார். இப்படி சாளக்ராமத்தை தூக்கி குளத்துல போட்டு பூஜை செய்யாம விட்டாலெல்லாம் அதனால பாதிப்படைஞ்சு வர மாட்டார்ங்கறது என் அபிப்ராயம். ஆனா இப்படிச் செய்யறதால இதுக்கெல்லாம் ஒரு பின்விளைவா அன்றாடப் பூஜைகள் தடைப்பட்டு அதன் அலைகள் ஊர்ல பரவாம போய், கெட்ட சக்திகள் ஊட்டமா வளர இடம் உண்டு"

**"நீயும் இப்ப எனக்கு சாமிதாண்ணே... நீதானே என்னைக் காப்பாத்தி என் உயிரை தடுத்து நிறுத்தியிருக்கே. நீ இல்லாட்டி நான் எப்பவோ செத்துருப்பேனே அண்ணே..."**

"ரொம்பவே சரி... அப்படி கெட்ட சக்திகள் பெருகும் போது அதுல சத்யமான ஒருத்தர், ஒரே ஒருத்தர் இருந்து அவரையும் அது பாதிக்கும்தானே?"

- பட்டர் ஒரு சரியான இடத்துக்கு வருகிறார் போல இருந்தது. மாஸ்டரும் கூர்ந்து கவனித்தார்.

"பதில் சொல்லுங்கோ... பாதிக்கும்தானே?"

"நிச்சயமா..."

"அப்படிப் பாதிக்கப்பட்ற ஆத்மாவைக் காப்பாத்த நான் வருவேன்னு அந்த கிருஷ்ணன் சொல்லியிருக்கான். சந்நிதிக்குள்ள கிருஷ்ணன் எப்படி நின்னுண்டுருக்கான்னு பார்க்கறேளா?"

- பட்டர் கேட்டுவிட்டு திரைச்சீலையை விலக்கிக் கொண்டு உள்ளே சென்றார்.

கற்பூரத் தட்டை எடுத்து கொளுத்தியவராக, காய்ந்த மாலையும் கழுத்துமாய் நிற்கும் கிருஷ்ண விக்ரகத்தின் கால் பாகத்தைக் காட்டினார். அதில் வலது கால் முன்னாலும், இடதுகால் பின்னாலும் இருந்தது. கையிலும் சங்கு சக்கரத்தில் சக்கரமானது நேராகப் பார்க்க முடிந்த வாக்கில் இல்லாமல், பிரயோக சக்கரமாக பக்கவாட்டில் பார்க்க முடிந்ததாக இருந்தது.

"என்ன பாக்கறேள்..? கிருஷ்ணனோட லீலைகளைச் சொல்லி மாளாது. அதுல சிலது அறிவுக்குப் புலப்படும்; பலது புலப்படாது. அந்தப் பரம்பொருளோட அவதாரங்கள்ள கிருஷ்ணாவதாரம்கறது மட்டும்தான் நம்மள மாதிரி அற்பமான காமத்துல சிக்கிண்டவாளுக்கு ரொம்ப சிநேகமானது. கிருஷ்ணன் இங்க கூப்பிட்றவா கூப்பட்ற விதமா கூப்பிட்டா, அந்த நொடியே ஓடி வரச் சித்தமா இருக்கான்... இந்தக் கோலத்த வெச்சு மட்டும் நான் இதைச் சொல்லலை.. அவன் எழுதிக் கொடுத்துருக்கான்; கையெழுத்துப் போட்டுக் கொடுத்துருக்கான் ஸ்வாமி! அது தெரியுமா உங்களுக்கு...?"

- பட்டரின் குரலில் ஒருவித அழுத்தமும், நம்பிக்கையும் ஒரு அலாதி சப்தமாய் வெளிப்பட்டது.

துல்லியமாய் அதே நொடிகளில் ஊருக்கு வெளியில் மன்னார் ஜீவசமாதிக்குப் போகும் காட்டு வழியில் ஒரு ஓரத்தில் ராகவின் கார் நின்றபடி இருக்க, அவன் கொடுத்த அந்த ஏட்டுக் கட்டுகளை ஒருவித ஆவேசப் பரபரப்புடன் பார்த்தபடி இருந்தார் வைராகி!

அவரது கண்களில் அப்படி ஒரு தேடல்...

(தொடரும்)




"மன்னாரின் ஜாதகம் விட்டலாச்சாரியாரை வியக்க வைத்துவிட்டது. அதிலும் மன்னாரின் ஜாதகத்தில் பூர்வபுண்ய ஸ்தானம் அத்தனைச் சிறப்பாய் இருந்தது. அதன்படி பார்த்தால் மன்னார் முந்தைய ஜென்மத்தில், அதற்கும் முந்தைய ஜென்மத்தில் என்று தொடர்ந்து ஆறு ஜென்மங்களிலும் அவனொரு பரம கிருஷ்ண பக்தனாக இருந்து வந்திருக்கிறான். அவனது பூதவாசத்தில் (அதாவது ஜென்மமெடுத்த உடம்புடனான காலங்களில்) அவன் ஒருநாள்கூட கிருஷ்ணனை நினைக்கத் தவறியதில்லை. இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால் அவன் பெயரும் கிருஷ்ணனின் பெயர்களில் ஒன்றாகவே இருந்து வந்ததால், அவனுக்கு பேச்சு வந்திராத மழலைப் பிராயத்தில் அவன் பெயரை சொல்லிச் சொல்லி அழைத்ததில் அதுவே அவன் நினைத்ததற்குச் சமமாகிவிட்டது. இப்படியே ஆறு ஜென்மங்கள்! அதில் அவன் ஜெபித்த நாமத்தின் அளவு 60 கோடிகளைக் கடந்துவிட்டது. அதுதான் கண்ணனைக் கட்டி இழுத்து வந்தது.

இந்த ஆறு ஜென்மங்களிலும் அவனது முன்னோர்களின் பித்ரு கர்மங்கள் காரணமாக கிருஷ்ணனின் நேர் தரிசனத்துக்கு இடமில்லாமல் இருந்தது. ஏழாம் ஜென்மத்தில் ஒரு

குறிப்பிட்ட நாளில் மிச்ச சொச்ச கர்மங்களும் அனுபவித்தே தீர்க்கப்பட்டதில் கிருஷ்ண தரிசனத்துக்கான தடை நீங்கியது. எனவேதான் அவன் எதிரில் கிருஷ்ணனும் பிரஸன்னமானான். விலை மதிப்பில்லாத குழலையும் பரிசாகத் தந்தான். அந்தப் பரிசே அவனை மகான்களின் பட்டியலில் கொண்டும் சேர்த்துவிட்டது! இந்த ஜென்மத்தை மட்டும் பார்க்க முடிந்த நபர்களுக்கு இந்தக் கணக்கெல்லாம் தெரியாததால், தெரிந்துகொள்ளும் ஆற்றலும் அவர்களுக்கு இல்லாததால் மன்னார் இவர்கள் வரையில் பொறாமைக்குரியவனாகிவிட்டான்.

பண்டரிபுரத்து விட்டலாச்சாரியார், மன்னாரின் பக்தித் திறத்தை அறிந்த மாத்திரத்தில் மன்னாரின் ஜாதகத்தை ஒரு முறைக்கு நூறுமுறை கண்களில் ஒற்றிக்கொண்டார்.

மன்னார் பிறந்த காலப்புள்ளி- அப்போது இருந்த கிரக சஞ்சாரங்கள்-அன்றைய நட்சத்திரம்-அதனுள் உயிராய் விளங்கிய லக்னம் இவை அவ்வளவும் எப்படிப்பட்ட சிறப்பைக் கொண்டது என்பதையும் அதன் மூலம் அறிந்தவர், அதை வைத்துக்கொண்டே மற்ற லக்னங்கள், நட்சத்திரங்கள் இவைகளின் சக்தியை எல்லாம் கணக்குப் போட்டுவிட்டார். அந்தக் கணக்கு அவருக்கு பல நிஜங்களைப் புரிய வைத்தது! அவரைச் சுற்றி இருப்பவர்களை எல்லாம் புரிந்து கொள்ளவும் அதுவே அடிப்படையாகிப் போனது. 'அவர் ஏன் ஒரு ஜோதிடராக இருக்கிறார்? எதனால் அவரால் கணக்குபோட முடிகிறது? இந்த காலக் கணக்கை அவரால் மட்டும் எப்படிப் பிழையின்றிப் போடமுடிகிறது?' என்கிற தன்னைப் பற்றிய நிதர்சனங்களையும் அவரால் அறிய முடிந்தது. கூடவே பல கோடிப் பேர்களில் வெகு சிலருக்கே இறை தரிசனம் கிடைக்கிறது. மற்றவர்களுக்கு கிட்டாததன் காரணத்தையும் அவரால் புரிந்து கொள்ள முடிந்தது.

ர்ராஜன்

குறிப்பாக, 'கடவுள் இல்லை.. எங்கே இருந்தால் நேரில் வரச் சொல் பார்க்கலாம்' என்பவனது பூர்வ புண்ணிய ஸ்தானம் எத்தனை கெட்டிருந்தால் அவன் அப்படி ஒரு கேள்வியைக் கேட்பான் என்பதையும் புரிந்துகொண்டார்.

அப்போது அவருக்கு பண்டாரிக்கும், கோயில் பட்டருக்கும் அந்தக் கண்ணன் காட்சி தந்த விவரமும் தெரிய வரவே, தன் கணக்கு சரியா என்பதை அறிந்திட அவர் அவர்கள் இருவரது ஜாதகங்களையும் கணித்துப் பார்த்துவிட முடிவு செய்தார்"



வைராகியின் தேடலில் பல ஏடுகள் கண்ணில்பட்டன. அதில் முதலானது 'கண்ணமங்கல கிருஷ்ண காதை'தான். மொத்தமாய் நூற்றி எட்டு ஏடுகள் 32 சர்க்கங்கள். ஒவ்வொரு சர்கத்துக்கும் நாலு பக்கம்... அது மன்னார் இருந்த காலத்தில் அவனைச் சுற்றி நடந்த சம்பவங்களின் தொகுப்பாகவே இருந்தது. குறிப்பாக 28வது சர்கம், பாண்டே புல்லாங்குழலுடன் கண்ணமங்கலத்தை விட்டுப், புறப்பட்டுவிட்டதையும், அவரைத் தேடிக் கொண்டு முதலில் பண்டாரியும், பின் ஊர் தலையாரி ராஜமாணிக்க தாண்டவராயர், கள்ளன் முத்துமாரி ஆகியோர் பின் தொடர்ந்து சென்ற தகவல்களும் இருந்தன.

23வது சர்கத்தில் கண்ணன் பண்டாரி வசம் புல்லாங்குழலைத் தருவதும், 'இது நீ கேட்டதை எல்லாம் தரும் என்னைத் தவிர...' என்கிற விவரத்தையும் பார்த்தவர் அப்படியே யோசிக்கத் தொடங்கினார்.

பக்கமாய் மற்ற ஏட்டுக் கட்டுகள்! ராகவ் பார்த்துக் கொண்டே இருந்தான்.

வைராகி ஏடுகளைப் படிப்பதை வைத்து அவனும், படிக்கும் ஆவலுடன் எட்டிப் பார்த்தான். ஆனால் அவனால் அதைப் படிக்க முடியவில்லை. அந்தத் தமிழே அவன் அறிந்திராத தமிழ் போல இருந்தது. எறும்பு ஊர்வது போல எழுத்துக்கள்!

"இதை எப்படி ஸ்வாமி படிக்கறேள்...? எனக்கு ஒண்ணுமே புரியல..." என்றும் சொன்னான். அவர் அவன் பேச்சை காதிலேயே வாங்கவில்லை. அந்தக் கட்டை புரிதலோடு திருப்பக் கட்டியவர், அடுத்த கட்டை எடுத்தார். 'ராக மஞ்சரி' என்று இருந்தது அது. அதற்கும் அடுத்தது 'கண்ணமங்கல ஸ்வயமாச்சார்யாள் சரிதம்' என்றிருந்தது.

ஷ்யாமளாவின் குடும்பம் ஸ்வயமாச்சார்யாள் குடும்பம்தான். ஒவ்வொரு குடும்பத்துக்கும் ஒரு மடாதிபதி குருவாக இருந்து அவர்களை வழிநடத்துவார். வைணவத்தில் குருவினை 'ஆச்சார்யன்' என்பார்கள். ஸ்வயமாச்சார்யார்கள் என்றால் அவர்களுக்கு அவர்களே குரு-அவர்களுக்கு வழிகாட்டிடவோ அல்லது அவர்கள் பின்பற்றவோ ஒரு குரு அவர்கள் குடும்பத்துக்கு இல்லை என்பது அதன் பொருள். எனவே அது ஷ்யாமளாவின் முன்னோர்களைப் பற்றிச் சொல்வதாக இருக்க வேண்டும் என்றும் தோன்றியது.



அடுத்தது 'மன்னார் ஜீவசரிதம்' என்று மன்னாரைப் பற்றி மட்டுமே கூறுவதாக இருந்தது. இன்னொரு ஏட்டுக்கட்டு 'மன்னார் பிருந்தாவன முராரி' என்றிருந்தது.

அதில் 'மன்னார் ஜீவசரிதம்' என்கிற கட்டை மட்டும் எடுத்துக்கொண்ட வைராகி, மற்ற ஏட்டுக்கட்டுகளை திரும்பவும் சாக்குப் பைக்குள் போட்டுக் கட்டி, அதை ராகவை தூக்கிக் கொள்ளவும் செய்தார். பின் ராகவிடம், "இதைக் கொண்டு போய் அங்க இருக்கற பரண் மேலேயே போட்டுடு... இது விஷயமா யார் கிட்டேயும் ஒரு வார்த்தை நீ பேசக்கூடாது. உன்னை நான் வசியத்துல கட்டியிருந்தாலும் அதோட காலம் பதிமூன்று நாழிகைதான்... அதுக்குப் பிறகு நீ பேசினாலும் பேசிடுவே. ஆகையால என் கைல அடிச்சு சத்யம் செய். இந்த சத்யம் உனக்கு மறக்காம இருக்க, இப்பவே நான் அதை உன் உடம்புல தைக்கறேன் பார்" என்றவர் கைகளை ஆகாசத்தில் உயர்த்தி சொடக்கு போட்ட நொடி, உள்ளங்கையில் ஒரு தீப்பெட்டி வந்து தேங்கியது. அதில் ஒரு குச்சியை உரசவும் தீச்சுடர் பிறந்தது. அந்தச் சுடரை அப்படியே கண்டங் கழுத்துக் குழியில் வைத்தார். அவன் சூடு தாங்காமல் எகிறிக் குதித்து, அந்தத் தீக்குச்சியை உதிர்த்தான். ஆனாலும் அந்தப் பாகத்தில் ஆழமான ஒரு தீப்புண். 'இதோட வலி உனக்கு சத்தியத்தை ஞாபகப்படுத்திண்டே இருக்கும்' என்று தன் வலது கையை நீட்டினார். வலியோடு அரை மனதாக அவருக்கு சத்தியம் செய்தான்.

"நீ இப்ப போகலாம்..." என்று அவர் கூறவும் புறப்பட்டான்.

எதிரில் கோமதி வந்து கொண்டிருந்ததைப் பார்த்து சற்று அதிர்ந்தான். வைராகியும் பார்த்தார். அவளும் அவர்களைப் பார்த்து தேங்கி நின்றாள். தனது துயரங்களைச் சொல்லி அழ மன்னார் சமாதி நோக்கிப் போய்க் கொண்டிருந்தவளுக்கு வைராகியைப் பார்க்கவும் பகீரென்றது. வைராகியோ ராகவை போகச் சொல்லிவிட்டு அவளையே பார்க்க, அவள் பயந்து போய் திரும்பி நடக்கப் பார்த்தாள். "நில்லு... வா இப்படி..." என்று அவர் அழைத்தும் அவள் வர மறுத்து, வந்த வழியே வேகமாக நடக்கக் காலெடுத்தாள். ஆனாலும் வைராகியின் மனோவசிய சக்தியும், அதன் பொருட்டு மனதுக்குள் அவர் முணுமுணுத்த மந்திர உச்சாடனமும் அவளை திரும்பச் செய்தது. சட்டென்று தன்னைப் பற்றிய சகல எண்ணங்களும் மறந்து போன நிலையில் அவள் அவரை நோக்கி நடந்து அவர் முன்னாலும் நின்றாள்.

வைராகியின் பார்வை அவளைத் துளையிட்டது. சில நொடிகளிலேயே, "ஓ! நீ ஒரு கர்ப்பிணியோ...?" - என்றவர் முகத்தில் ஒரு குபீர் சந்தோஷம். "என் நோக்கம் ஈடேற காலமா பாத்துதான் உன்னை அனுப்பியிருக்கு..." என்று அந்த சந்தோஷம் குறையாமல் பேசியவர், 'வா என்னோட' என்று அவளை அழைத்துக் கொண்டு ஜீவசமாதி நோக்கி நடக்கத் தொடங்கினார்.

**யா**தவகிரி மலைக்குன்றில் பட்டாச்சாரியான ஆராவமுத ஐயங்காரின் நம்பிக்கையையும், அதில் இருந்த அழுத்தத்தையும் யோசித்தபடியே கோயிலை சுற்றி வந்த தேவராஜ் மாஸ்டருக்கு மிகவும் ஏமாற்றமாக இருந்தது. வைராகியை அங்கே பார்க்க முடியாத ஏமாற்றத்தோடு படிகளில் இறங்கியபோது ஷ்யாமளாவிடம் இருந்து அழைப்பு.

"மாஸ்டர்! ராகவைப் பாத்துட்டீங்களா?"

"இல்ல ஷ்யாமளா... இங்க மலைக்கோயில்ல அவன் இல்ல..."

"வேற எங்க போயிருப்பான்..?"

"தெரியலயே.... ஆஸ்பத்திரில அவங்க இரண்டு பேர் நிலையும் எப்படி இருக்கு?"

"அப்படியேதான் இருக்கு..."

"சரிம்மா, நீ அங்கேயே இரு... நான் வந்துட்றேன்..."- என்றபடி செல்ஃபோனை ஆஃப் செய்தார்.

ஆஸ்பத்திரியில் ஷ்யாமளாவும் தன் செல்ஃபோனை முடக்கி உள்ளங்கையிலேயே வைத்துக் கொண்டபோது, தூர இருந்து ஒன்றுமே தெரியாதது போல கவனித்துக் கொண்டிருந்த ருத்ராவுக்கும் அவரது ஃபோனில் அழைப்பு.

அவரது சகாக்களில் ஒருவர் தான் பேசினார்.

"ஸார்... அந்த மந்திரவாதி ஒரு பெண்ணோட ஒரு முள்ளுக்காட்டுக்குள்ள போய்கிட்டிருக்கான். அது ஏதோ ஒரு ஜீவ சமாதிக்குப் போற பாதையாம். நானும் ஃபாலோ பண்ணிகிட்டு இருக்கேன். நீங்க சொன்ன மாதிரியே நூத்தி இருபது அடி பின்னால்தான் இருக்கேன்..."

"நல்லது... அவங்க ஜீவ சமாதிக்குதான் போவாங்க... தூர இருந்தபடியே டெலஸ்கோப்பால நடக்கறதக் கவனிச்சு, எனக்கு ஃபோன் பண்ணுங்க.."

"எஸ் ஸார்..."

- பதிலோடு ஃபோனை முடக்கிய நொடி அடுத்த தொலைபேசி அழைப்பு. இது இன்னொரு விஜிலன்ஸ் போலீஸின் அழைப்பு.

"ஸார்... அந்த மந்திரவாதியைப் பார்த்துட்டு ஒரு மூட்டையோட வந்த ராகவ்ங்கறவரை மடக்கிட்டேன். இப்ப அவர் என் கஸ்டடிலதான் இருக்காரு. எவ்வளவு கேட்டாலும் ஒரு வார்த்தைகூட பேச மாட்டேங்கறாரு..."

"அவரை மூட்டையோட நம்ம ஆஃபீஸ்-க்குக் கொண்டு போயிருங்க... நான் வந்து விசாரிச்சுக்கறேன். அவரை எக்காரணம் கொண்டும் அடிச்சுடாதீங்க. ஒரு வி.ஐ.பி. மாதிரியே ட்ரீட் பண்ணுங்க..."

"சரி ஸார்..."

- இரண்டாவது தொலைபேசி அழைப்புக்கும் பதில் சொல்லிவிட்டு ஷ்யாமளாவிடம் வந்தார்.

"எங்கம்மா உங்க நண்பர் ராகவ்?" என்று தெரியாதது போலவே கேட்டார்.

"நானும் அவனைத்தான் ஸார் தேடிகிட்டிருக்கேன்..."

"இந்த டைரியோட உங்ககூட பேசிட்டுப் போனவர்தான்... இல்ல?"

"ஆமாம் ஸார்..."

"டைரி தப் டைட... இந்த யக்ஞன்பத்தி உங்ககிட்ட நான் கொஞ்சம் பேசணும்..."

- ருத்ரா யக்ஞனைத் தொட்டவுடன் ஷ்யாமளாவுக்கு கொஞ்சம் ஷாக் அடித்தது.

"ஏ... என்ன ஸார்?"

"இவனோட அப்பா, அம்மா யார்..? இந்த ஊர்ல அவங்க எங்க இருக்காங்க?"

"என்ன ஸார் இது கேள்வி... அவன் ஒரு அனாதை ஸார்... அப்பா, அம்மா இருந்திருந்தா அவன் உடம்பு மார்ச்சுவரியில இருக்கும்போது சும்மா இருந்துருப்பாங்களா?"

"சரி, இப்படி அவன் கொடுமையா பாதிக்கப்பட்டு ஒரு பிணம் போல புதைக்கப்படக் காரணம்?"

"எனக்கு என்ன ஸார் தெரியும்...? நானே பல வருஷம் கழிச்சு இந்த ஊருக்கு வந்துருக்கேன்"

"அப்ப உங்களுக்கு யக்ஞன் பத்தி எதுவுமே தெரியாது..."

- ருத்ரா எதற்காக அவ்வளவு அழுத்தமாகக் கேட்கிறார் என்பது விளங்காத நிலையில் தான் அறிந்த அந்த ரகசியத்தையும் கூறமுடியாத தவிப்போடு ஷ்யாமளா அவரைப் பார்க்கவும் தேவராஜ் மாஸ்டரும் சகிதமாக வந்து சேர்ந்தார்.

(தொடரும்)

## 'நேர்மையாகச் செயல்படுகிறோம்'!

கடந்த ஜூலை 9ஆம் தேதியிட்ட 'தமிழன் எக்ஸ்பிரஸ்' இதழில் 'கவுன்சிலர்களுக்கு முதல்வர் எச்சரிக்கை' என்ற தலைப்பில் வெளியான செய்தியைப் படித்தோம். மிகவும் நன்றாக இருந்தது. பொது நலத்தில் ஏற்படும் குறைகளைச் சுட்டிக்காட்டுதலில் தங்களுக்கு நிகரில்லை என்பதை நிரூபித்துவிட்டீர்கள். ஆனால் அந்தக் கட்டுரையில் சென்னை குடிநீர் வாரிய அடிமட்ட என்ஜினீயர்களை சாடியுள்ளீர்கள். அதற்கு எங்களின் மறுப்பைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஏனென்றால் பொதுமக்கள் குடிநீர், கழிவுநீர் இணைப்புப் பெற, முறையாக வாரியம் வகுத்த சட்டத் திட்டத்தின்படி பதிவு செய்தால் நாங்கள் தடையின்றி இணைப்பை வழங்கிவிடுவோம். சாலை வெட்ட மாநகராட்சிக்கு விண்ணப்பித்த உடன், 'எங்களுக்குத் தடையில்லை' என்ற சான்றிதழை மாநகராட்சி அளித்தால் உடனே இணைப்பை வழங்கிவிடுவோம். ஆனால் இந்தத் தடையில்லா சான்றிதழ் வழங்க 90 சதவிகிதம் தடைகள் உள்ளன. அதனால் வீண் பழி எங்கள் மீது சுமத்தப்படுகிறது.

மெட்ரோ வாட்டரில் விண்ணப்பித்த விண்ணப்பத்தை மேலதிகாரிகள் ஒப்புதலுக்கு அனுப்பும்போது ஏற்படும் இடையூறுகளுக்கு, நாங்களே பொறுப்பாளியாக ஆக்கப்படுகிறோம்.

'பொதுமக்கள் மூன்றாம் தளத்தை அனுமதியின்றிக் கட்ட வேண்டாம்' என்ற விதி உள்ளது. அதை மீறி மூன்றாம் தளம் கட்டி விட்டு விண்ணப்பம் செய்யும்போது, குடிநீர் இணைப்பு மறுக்கப்படுகிறது. மூன்றாம் தளம் கட்டுவதை சென்னை மாநகராட்சியும், சென்னை பெருநகர வளர்ச்சிக் குழுமமும் கண்டு கொள்வதில்லை. அதனாலும் எங்கள் வாரியத்திற்கு கெட்ட பெயர் வருகிறது. இதுதான் உண்மை. மற்றபடி குடிநீர் வாரியப் பணியாளர்கள் நேர்மையாகவே பணியாற்றுகிறோம்.

**அகத்தீஸ்வரன்,**
**பொதுச் செயலாளர், பணியாளர்கள் மனித உரிமை சங்கம், சென்னை குடிநீர் வாரியம்.**



**40**

ஜோதிடர் விட்டலாச்சார்யாரின் தேடலில் பண்டாரி மற்றும் கோயில் பட்டரின் ஜாதகங்கள் இரண்டும் கிடைத்தன. அவைகளில் பண்டாரி ஜாதகம் கச்சிதமாகப் பேசியது. மன்னாரைப் போல நாமஜெப பலம் ஏதும் அவர் ஜாதகத்தில் தெரியவில்லை. மாறாக பெற்ற தாய், தந்தையரை ஒவ்வொரு பிறப்பிலும் அவர் துளிகூட மனம் கோணாமல் பேணி வந்திருப்பதை பண்டாரியின் பூர்வ ஜென்மக் கட்டங்கள் பளிச்சென்று காட்டின. அவர்கள் காலத்துக்குப் பிறகு அவர்களுக்குச் செய்ய வேண்டிய பித்ரு கர்மாக்களையும் அவர் துளிகூடக் குறைவின்றி செய்து வந்திருக்கிறார். கூடவே ஏகாதசி விரதங்களை அனுப்பி சகாமல் மேற்கொண்டிருக்கிறார். அவரது இந்தச் செயல்பாடுகளுக்கு பின்னால் எல்லா ஜென்மங்களிலும் சூரியனும் கேதுவும் சரியான முறையில் நின்று இவரை வழி நடத்தியிருப்பதையும் கணக்கில் எடுத்துக் கொண்டார்.




பட்டருக்கு கோயில் சந்நிதியின் கைங்கர்ய பலம் கை கொடுத்து கிருஷ்ண தரிசனத்துக்குக் காரணமாகியுள்ளது. பட்டருக்கு இது ஏழாம் பிறப்பு... முந்தைய ஆறு பிறப்பிலும்கூட அவர் கோயில் ஊழியர்தான். ஒவ்வொரு பிறப்பிலும் ஒவ்வொரு வித கைங்கர்யம்! பூக்கட்டுதல், மணியடித்தல், துப்புரவுப் பணி செய்தல், அபிஷேக நீர் கொண்டு வருதல், கோயிலை விட்டு விலகாமல் கோயிலிலேயே ஒரு ஓரமாக படுத்துக் கிடத்தல் என்று வாழ்ந்திருந்தால்தான் சில கணக்குகள் சாத்தியம். கூடவே கோயில் களவு ஒன்றின்போது அந்தக் களவைத் தடுக்கப் போராடி சந்நிதியின் வாசலிலேயே கத்தியால் குத்தப்பட்டு உயிரை விட்டிருந்த கணக்கு ஒன்றும் பட்டரின் ஜாதகத்தில் பளிச்சென்று தெரிந்தது... அந்தக் கணமே, 'இறைவன் இருக்கிறானா? இருந்தால் அவன் ஏன் தோன்ற மறுக்கிறான்?' போன்ற கால காலமாய்க் கேட்கப்படும் கேள்விகளுக்கெல்லாம் அவருக்கு ஒரு துல்லியமான விடையும் கிடைத்துவிட்டது.



ஒரு இறை தரிசனத்துக்குப் பின்னாலே இத்தனை நெடிய கணக்கு இருக்கும் போது, ஒரு சாதாரண உணர்ச்சி வேகத்தில் கேட்கப்படும் கேள்விகளுக்கோ, இல்லை தேடல்களுக்கோ எப்படிப் பதில் கிடைத்து விட முடியும்?



மாஸ்டரை பார்க்கவும் ஷ்யாமளாவிடம் ஒரு புத்துணர்ச்சி. ருத்ராவை சமாளிக்க அவர் உதவக் கூடும் என்பதுபோல அவரைப் பார்த்தாள். ருத்ராவும் சற்று விட்டுப் பிடிக்க விரும்பியவர் போல, "என்ன ஸார்... அடிக்கடி மாயமா மறைஞ்சு போயிட்றீங்களே?" என்று அவர் பக்கம் திரும்பினார்.



"மாயமா மறைய நான் என்ன மாயாவியா ஸார்...? கொஞ்சம் அப்படியே வெளியே போய்ட்டு வந்தேன்" என்றார் மாஸ்டர்.

"வெளியேன்னா...?"

"வெளியேன்னா வெளியே தான்... எதுக்கு இப்படி ஒரு சந்தேகத்தோட கேட்கறீங்க?"

"கேட்கணும்... கேட்டாதானே நான் போலீஸ் ஆபீஸர்..."

"ஸாரி ஸார்... அர்த்தமில்லாமலும், பயமுறுத்தற மாதிரியும் நீங்க கேட்டா அது போலீஸ் ஆபீஸருக்குரிய லட்சணம் இல்லை..."



மாஸ்டர் தயக்கமே இல்லாமல் சொன்ன அந்தப் பளிச்சென்ற பதில் ருத்ராவுக்கு சற்று நெருடலைத் தந்தாலும், அதைக் காட்டிக் கொள்ளாதவர் போல "மாஸ்டர் தெவராஜ் நீங்க என்னை சரியா புரிஞ்சுக்கல. அதான் இப்படிச் சொல்லிட்டீங்க... பரவாயில்ல... நீங்க ஒரு பெரிய இசை மேதை. அதனால நான் உங்கப் பதிலை பெருசா எடுத்துக்காம விட்டுட்றேன். பை த பை, ஒரு பரபரப்பான இசையமைப்பாளரான நீங்க இன்னும் எவ்வளவு நாளைக்கு இங்க இருப்பீங்கன்னு தெரிஞ்சுக்கலாமா?"



ருத்ராவின் பாந்தமான பதிலும் இறுதியாகக் கேட்ட கேள்வியும் மாஸ்டரை கொஞ்சம் தடுமாறச் செய்தா





ஜும்,

"நான் இன்னும் ஒரு பத்து பதினஞ்சு நாள் இங்க இருப்பேன் ஸார்..." என்றார்.

"ஒரு சாவு வீட்ல பத்து பதினஞ்சு நாள் இருக்கப் போறீங்களா?"

"ஏன் ஸார் இருக்கக் கூடாதா...? ஷ்யாமளா என் மகள் மாதிரி...! அவ தகப்பனைப் பறி கொடுத்துருக்கற இந்தத் தருணத்துல நான் கூட இருக்க வேண்டியது என் கடமை..."

"அப்ப நீங்க இங்க தங்கி இருக்கப் போறது ஷ்யாமளாவுக்கான ஆறுதலுக்கு மட்டும்தான்..."

"வேற என்ன காரணம் இருக்க முடியும்னு நீங்க நினைக்கறீங்க?"

"வேற காரணம் எதுவும் இல்லேன்னா சந்தோஷம் தான் எனக்கு..."

"வேற காரணம்னு நீங்க எதைச் சொல்றீங்க ஸார்..." ஷ்யாமளா குறுக்கிட்டாள்.

"எவ்வளவோ காரணங்கள் இருக்கலாம்.... ஆனா அதையெல்லாம் என்னால சொல்ல முடியாது மேடம்"

"ஸாரி ஸார்... நீங்க என்னை உதவி செய்யச் சொல்லி கூட்டிண்டு வந்துருக்கீங்க. ஆனா ஒரு அக்யூஸ்ட் கிட்ட பேசற மாதிரி பேசறீங்க. நான் இனி

இங்க இருக்க விருப்பமில்ல. நான் கிளம்பறேன்.. மாஸ்டர் வாங்க போகலாம்..."

-ஷ்யாமளாவிடம் முணுக்கென்று கோபம் வெளிப்பட்டு அது வெடிக்கவும் செய்தது. அவளும் பேசிய வேகத்தைச் செயலிலும் காட்டினாள்.

ருத்ரா அதைப் பார்த்து அசரவில்லை.... ஒரு நமுட்டுச் சிரிப்புச் சிரித்தார். சிறிது தூரம் வரை சென்றுவிட்ட அவர்கள் காதில் விழும்படியாக, "அனேகமாக இன்னும் 24 மணி நேரத்துல எல்லாக் குழப்பங்களும் நீங்கிடும் போடம்... யக்ஞன் யாரு...? அவனுக்கு என்ன நடந்தது? எதனால் நடந்ததுங்கற எல்ல மர்மங்களும் விலகிடலாம்" என்றார்.

அந்தப் பதில் இருவரையுமே நின்று சற்று யோசிக்க வைத்தது. அதற்குள் ருத்ராவுக்கும் உள்ளே இருந்து அழைப்பு..

அவரும் திரும்பிச் செல்லத் தொடங்கினார்.

ஆஸ்பத்திரியின் உள்ளே பைராகி போட்டிருந்த அந்த நாழிகைக் கணக்குக்குள் தன்னை மறந்திருந்தான் தமிழ்முகன். ருத்ரா அவனை சமீபித்த போது அருகில் தமிழ்முகனின் அப்பாவானவர் சோகமாய் நின்று கொண்டிருந்தார்.

"நீங்க எப்ப வந்தீங்க?"

"நான் அப்பவே வந்துட்டேன் ஸார்... என் மகன் தேறிட்டானா ஸார்...?"

"அதான் பாக்கறீங்கல்ல.. தேறிகிட்டே வரார்..."

"சீக்கிரம் நல்லது நடக்கணும் ஸார். அந்தப் பக்கமா ஒரு பொண்ணு வேற தவிச்சுக்கிட்டு இருக்கு..."

"எந்தப் பொண்ணை சொல்றீங்க நீங்க?"

"இவன் காதலிச்ச அந்தப் பொண்ணு கோமதியைத்தான் சொல்றேன்..."

"ஆரம்பத்துல அந்தப் பொண்ணை நீங்க ஏத்துக்க ரொம்ப தயங்கின மாதிரி தெரிஞ்சதே..."

"ஆமாம் ஸார்.. ஆனா அப்புறமா நானும், என் வீட்ல என் மனைவியும் யோசிச்சுப் பார்த்தப்போ பெண் பாவம் நமக்கு எதுக்குங்கற முடிவுக்கு வந்துட்டோம். என் பையன் செஞ்ச தப்பே வெளிய தெரியாதபடி இவன் எவ்வளவு சீக்கிரம் குணமாகறானோ அவ்வளவு சீக்கிரம் கல்யாணத்தப் பண்ணிடலாம்னு..."

- ருத்ரா அதைக் கேட்டு இடக்காகச் சிரித்தார்.

**தாண்டவராய சாமி சொன்னது கோமதியை மிரட்டியது. அவள் மலங்க மலங்கப் பார்த்தபடி நின்றபோது பின்னாலே பைராகியும் மெல்ல வந்து நின்றார். அவரைப் பார்த்த நொடி தாண்டவராய சாமியிடம் ஒரு அதிர்வு.**

"என்ன ஸார் சிரிக்கிறீங்க?"

"இல்ல... அந்தப் பொண்ணுக்காகவாவது என் மகனை சீக்கிரமா குணப்படுத்தி அனுப்புங்கன்னு நீங்க சொல்லாம சொல்றது எனக்கு நல்லாப் புரியுது.. அதை நினைச்சேன், சிரிச்சேன்..."

"நான் அப்படி நினைச்சா அது ஒண்ணும் தப்பு இல்லீங்களே..."

"ஒரு அப்பாவா நீங்க அப்படி நினைக்கறதுல எந்த ஒரு தப்பும் இல்லைதான்... ஒரு வேளை உங்க மகன் குற்றவாளியா இருந்துட்டா...?"

- ருத்ரா அப்படி ஒரு கேள்வி கேட்பார் என்று அவர் எதிர்பார்க்கவில்லை.

"என்ன ஸார் சொல்றீங்க...? என் மகன் குற்றவாளியா?"

"ஒரு வேளை இருந்துட்டான்னுதான் சொன்னேன்..."

"அதான் அந்த யக்ஞன் உயிரோட இருக்கானுங்களே..."

"உயிரோட இருக்கான்... ஆனா காயப்படுத்தப்பட்டு இருக்கானே...? செத்துப் பொழைச்சில்ல வந்துருக்கான்?"

"ஐயோ.. அப்ப அவனை அடிச்சுப் போட்டது என் மகன்னு சொல்றீங்களா?"

"பதற்றப்படாதீங்க... அது யக்ஞன் கண்ணு முழிச்சா தெரிஞ்சிடும். அனேகமா இன்னும் 24 மணி நேரத்துல எல்லாக் குழப்பத்துக்கும் விடை தெரிஞ்சிடும்னுதான் நான் நினைக்கறேன்..."

"உங்க வாய் முகூர்த்தம் அப்படியே நடக்கட்டும் ஸார். ஆனா என் மகனை எதுவும் செய்துடாதீங்க... அந்தப் பொண்ணு கோமதியை மனசுல வெச்சுகிட்டு அவன் எதாவது தப்பே பண்ணியிருந்தாலும் மன்னிச்சிடுங்க ஸார்..."

- தமிழ்முகன் அப்பாவான மருதாசலத்தின் நைந்த குரலைக் கேட்டு திரும்பவும் சிரித்தார் ருத்ரா.

"இது ஒரு பெக்கூலியர் கேசுங்க... யாரும் கம்ப்ளைண்ட் தரல. ஒரு எஃப்.ஐ.ஆரும் போடப்படல. ஆனா சி.பி.ஐ. போலீஸ் நான் களத்துல இருக்கேன். இதுல யார் குற்றவாளி -எது தப்புங்கற கேள்வியை விட வேற ஒரு பெரிய கேள்வி ஒண்ணு இருக்கு.. அது என்னன்னு தெரியுமா?"

- ருத்ரா கேட்டது மருதாசலத்துக்கு புரியவில்லை.

"நீங்க என்ன சொல்றீங்கன்னே புரியலீங்களே..."

"எனக்கும் அதுதான் புரியல... அதுமட்டும் புரிஞ்சிட்டா இப்பவே இங்கயே இந்தக் கேஸோட தலை எழுத்தைப் புட்டுப் புட்டு வெச்சிடுவேன்..."

-ருத்ராவின் பேச்சு புதிராக இருந்தது மருதாசலத்துக்கு. அவரும் யோசிக்க ஆரம்பித்தார்.

'யார் குற்றவாளி- எது தப்புங்கற கேள்வியைவிட

வேற ஒரு பெரிய கேள்வி ஒண்ணு இருக்குன்னா அது என்ன கேள்வி?"

மன்னார் ஜீவ சமாதி! அடர்த்தியான மரக்கூட்டத்துக்கு நடுவில் ஜில்லென்ற சூழலில் காட்சி தந்த சமாதியில், பகல் பொழுதில் சிலர் வந்திருந்து ஏற்றியிருந்த விளக்குகள் எரிந்துக் கொண்டிருந்தன. ஊதுபத்தி வாசம் கமகமவென்று கமழ்ந்து கொண்டிருந்தது. சமாதிக்குப் பொறுப்பாக இருப்பவர் தாண்டவராயன் என்கிற ஒரு சாமியார்!

இடுப்பில் ஒரு காவி வேட்டி, மார்பில் துண்டு, முகத்தில் தாடி... இதுதான் அவர் லட்சணம். இருட்டும் வரை அங்கேயே இருப்பார். இருட்ட ஆரம்பித்த உடன் புறப்பட்டுவிடுவார். சமாதியைக் கூட்டி சுத்தம் செய்து, பூக்களைப் பறித்து வந்து மாலை கட்டிப் போட்டு அருகில் அமர்ந்து கொண்டு, வருபவர்களுக்கு கோபிசந்தனம் கொடுப்பதுதான் அவரது அன்றாடம்.

அன்று அவர் எதிரில் போய் நின்ற கோமதியை பார்த்தவர், "அடடே... சாமி வீட்டுப் பொண்ணா..? வா! வா... ஆமா அண்ணன் வரலியா?" என்று கேட்டார்.

"இல்ல சாமி... அப்புறம் சாமி உங்கள ஊருக்குள்ள ரெண்டு பேர் தேடிக்கிட்டு இருக்காங்க..." என்றாள்.

"என்னை எதுக்குத் தேடணும்? தேடறவங்க இங்க வர வேண்டியதுதானே?"

"அது தெரியாது... உங்களைப் பாத்துட்டுதான் போவாங்களாம்."

"இதைச் சொல்லத்தான் நீ வந்தியாக்கும்?"

"அப்படியே சாமியைக் கும்பிடவும்தான்..."

"கும்பிட்டுக்க... அப்படியே நானும் வரேன். சேர்ந்தே போவோம்..."

"இல்ல... நீங்க போங்க. நான் கொஞ்ச நேரம் உக்காந்து தியானம் பண்ணிட்டு வரேன்..."

"தியானமா...? என்ன புள்ள சொல்றே? அப்படின்னா என்னன்னாவது உனக்குத் தெரியுமா?"

"தெ... தெரியுமே... ஏன் தெரியாது?"

"அதையெல்லாம் வீட்ல உக்காந்து பண்ணு... இருட்ட ஆரம்பிச்சிட்டா இங்க யாரும் இருக்கக் கூடாது. அப்புறம் சாமி நடமாட ஆரம்பிச்சிடும்..."

தாண்டவராய சாமி சொன்னது கோமதியை மிரட்டியது. அவள் மலங்கமலங்கப் பார்த்தபடி நின்றபோது பின்னாலே வைராகியும் மெல்ல வந்து நின்றார். அவரைப் பார்த்த நொடி தாண்டவராய சாமியிடம் ஒரு அதிர்வு.

"அ... ஊருக்குள்ற திரியற சாமியா?"

"ஆமாம்... திரியற சாமியேதான். ஆமா நீதான் இந்த பிருந்தாவனக் காவல்காரனா?"

"ஆமாம்... நீங்க எங்க இந்தப் பக்கம்?"

"ஏன் நான் வரக்கூடாதா?"

"அப்படி நான் சொல்லலியே... இந்தப் பக்கம்தான் நீங்க வராம இருந்தீங்க. இங்கேயும் வர ஆரம்பிச்சிட்டீங்களா?"



"நான் எங்கேயும் வருவேன்... எப்படி வேணா வருவேன்..." -வைராகியின் குரலுக்குள் ஒரு அதட்டல் இருந்தது; அவர் கையில் ஏட்டுக் கட்டு.

"அது என்ன சாமி ஏட்டுக் கட்டு..."

"நீ படிக்கறதுக்குன்னே நான் கொண்டு வந்துருக்கேன். இந்தா படி..."

- அவர் நீட்டிட, வாங்கிய தாண்டவராய சாமி ஏட்டின் முகப்பில், 'மன்னார் சாமி ஜீவ சரிதம்' என்பதைப் பார்த்துவிட்டு அப்படியே திகைத்து முகமாடிவிட்டு, "சாமி இது... இது இந்த சமாதிலதான் இருந்தது. ஒரு நாள் இதை யாரோ களவாடிக்கிட்டு போய்ட்டதா சொன்னாங்க. அதுவும் இப்ப இல்ல... நூறு நூத்தியம்பது வருஷத்துக்கு முந்தியே... ஆனா இது இப்ப உங்க கைல இருக்குதே...! எப்படி சாமி?"

"அதுக்குப் பதிலை நான் அப்புறம் சொல்றேன். இதை நீ எனக்கு முன்னால உக்காந்து படிக்கறே... படிக்கறியா?" -வைராகி படிக்கறியா என்று கேட்ட விதமே படித்தே தீர வேண்டும் என்பதுபோல் இருந்தது.

(தொடரும்)

41

# 41 கிருஷ்ணை



"ஜோதிடர் விட்டலாச்சார்யா, தன் ஜோதிட ஞானத்தால் பல அரிய உண்மைகளையும் தெரிந்துகொண்டார். அந்த உண்மைகளில் ஒன்று, இந்தப் பிரபஞ்சம் பற்றியதாகும். விண்ணில் கோள்கள், நட்சத்திரங்கள் என்று எண்ணற்ற விஷயங்கள். அவைகளில் நமது பூமிப் பந்தும் ஒன்று. இந்த பூமிப் பந்தில் மட்டும்தான் நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்கிற ஐந்து விஷயங்களும் சம பலத்துடன் உள்ளன. அதன் காரணமாக இந்த பூமிப் பந்தில் மட்டும்தான் உயிரினங்கள்! அந்த உயிரினங்களிலேயே மனிதன் மட்டுமே ஆறாவது அறிவு கொண்டு, 'நேற்று, இன்று, நாளை' என்கிற முக்காலப் பரிமாணத்தை உடையவனாக இருக்கிறான்; அதைப் பற்றி புரிந்தவனாகவும் இருக்கிறான்.

ஏனைய உயிரினங்கள் உணர்வால் மட்டுமே வாழ்ந்து, மடிந்து விடுகின்றன. ஒரு எறும்புக்கு தான் ஒரு எறும்பு என்பதே தெரியாது. ஒரு கிணற்றில் வாழும் தவளைக்கோ அந்த கிணற்று நீர் மட்டும்தான் உலகம்.

முக்காலப் பரிமாணமுடைய மனிதன் மண்ணில் கிடந்தாலும், எண்ணத்தால் விண்ணை அளக்க முடிந்தவனாகவும் இருக்கிறான். அவனது அந்த ஆற்றலும் கூட பூமிப் பந்தில் இடத்துக்கு இடம் மாறுபடுகிறது. இந்த மாறுபாட்டுக்குக் காரணம் என்ன என்பதையும் தன் ஆறாம் அறிவால்-அதன் ஆராய்ச்சிகளால்-அல்லது அவனுக்கு ஏற்பட்ட அனுபவங்களால் அவன் உணர்ந்துகொண்டான்.

இங்கே விட்டலாச்சார்யாருக்கு ஏற்பட்டது கூட அனுபவம்தானே? பரந்த பூமிப்பந்தில் குறிப்பிட்ட இடத்துக்கு ஒரு சிறப்பு! ஒரு இடத்தில் கட்டப்படும் வீட்டிற்கு அதன் உட்பரிமாணத்திற்கு ஏற்பச் சிறப்பு. இதெல்லாம் எதனால்?

விட்டலாச்சார்யார் கண்ணமங்கலம் வந்த இடத்தில் இப்படிப்பட்ட கேள்விகளுக்கு மட்டுமல்லாமல், 'இறை தர்சனம் யாருக்கு வாய்க்கும்? ஏன் இறைவன் எல்லோருக்கும் எளிதில் அகப்படும்படியாக இல்லை? எவ்வளவோ ஊர்கள் இருக்க கண்ணமங்கலத்தில் மட்டும் இறை அதிசயங்கள் அதிகம் நடந்திடக் காரணம் என்ன? இப்படி நடப்பதன் நோக்கம் என்ன? இதனால் பூமிக்கு என்ன பயன்? இந்தப் பூமியில் வாழும் உயிர்களுக்கு என்ன பயன்? மனிதர்களுக்கு என்ன பயன்? இப்படி என்ன பயன் என்று கேட்

# தந்திரம்!



**பதே சரியா? இல்லை இப்படிச் சிந்திப்பது கூட தவறா...?"**

**- அவருக்குள் மேற்படி ஏராளமான கேள்விகள்! அந்தக் கேள்விகள் அவ்வளவிற்கும் அவருக்குத் தெளிவான விடை கிட்டியது! அது அவரையும் கிருஷ்ண தரிசனத்துக்கு தூண்டியதுதான் விந்தை! பின்னே...?"**



பைராகியின் அதட்டல், தாண்டவராய சாமியை ஒரு உலுக்கு உலுக்கியது.

"சாமி இதைப் படிக்கக் கொடுத்து வெச்சருக்கணும். விட்டலாச்சார்யார்ங்கற ஒரு ஜோசியர், இந்த கண்ணங்கலம் வந்து மன்னார்சாமிகூடவே இருந்து, சாமி ஜீவ சமாதி ஆன பிறகு சாமியோட வரலாறும்-ஊரோட பெருமையும் இந்த உலகத்துக்கும், வருங்கால சந்ததிகளுக்கும் தெரியணும்னு இதை எழுதினதா சொல்வாங்க. சாமி தனக்கு கிருஷ்ணசாமி கொடுத்த புல்லாங்குழலைக்கூட இந்த ஜோசியர்கிட்ட கொடுத்து, 'கணக்கு போடத் தெரிஞ்ச உனக்கு இதை என்ன பண்ணணும்னு அந்த கண்ணனே வந்து சொல்வான்னு சொல்லிட்டு சமாதி ஆயிட்டதாவும் சொல்வாங்க...'

- என்று அந்த ஜீவ சரிதத்தைப் படிக்கும் முன் தானறிந்த விஷயங்களைக் கோடு காட்டினார்.

அது என்னவோ தெரியவில்லை. பைராகியை முதல் முதலாகப் பார்த்தபோது உருவான எதிர்மறை உணர்ச்சிகளே இப்போது அவரிடம் இல்லை. தாண்டவராயசாமி சொன்ன தகவல்கள் பைராகிக்கும் ஒரு உற்சாகத்தைத் தந்திருந்தது.

"சரி... நீ இந்த ஜீவசரிதத்தைப் படி... நான் இதன் மூலமா அநேக விஷயங்கள் தெரிஞ்சுக்க விரும்பறேன். இந்தப் பிருந்தாவனமும் இனி இப்படி இருக்கக்கூடாது. இதுவும் ஒரு க்ஷேத்திரம் ஆகணும்.."

"எங்க சாமி... இங்க வர்றவங்கல்லாம் பிச்சைக்காரங்களாகவே இருக்காங்க... 'சாமி எனக்கு அது வேணும் இது வேணும்னு! பொன், பொருள், வீடு வாசல்னு ஆசைப்பட்டாங்களேயொழிய ஞானம் வேணும், திரும்பப் பொறக்கக்கூடாது மோட்ச சக்தி வேணும்'னு ஒருத்தர்கூட கேட்க மாட்டேங்கறாங்களே.."

"நான் அப்படி ஒரு ஆசையோடல்லாம் வரலப்பா. நான் கேள்விப்பட்ட ஒரு விஷயத்தை நான் நூறு சதம் நம்பி, இப்ப அதுல்தான் போய்கிட்டிருக்கேன். எனக்குத் தேவை பொன்னும் இல்ல, பொருளும் இல்ல... சரிசரி நீ படி..."

- அவர் வாசிக்கச் சொல்ல கோமதியும் அதற்குக் காது கொடுத்துக் கொண்டு உட்கார்ந்துவிட்டாள். 'இருட்டும் முன் வீட்டுக்குச் செல்ல வேண்டும், அப்பனும் அண்ணனும் காத்துக் கொண்டிருப்பார்கள்' என்றெல்லாம் அவளுக்குத் தோன்றவேயில்லை!

மன்னாரின் ஜீவசரிதம் கலைமகள் துதியோடு தொடங்கப்பட்டிருந்தது. வாசிக்க வாசிக்க தாண்டவராயசாமிக்கும் ஆனந்தமாக இருந்தது.

மன்னாரின் பிறப்பு... மாடுகள் மேல் காட்டிய



பரிவு, விளையாட்டாக மாடு மேய்க்கையில் குழலூதியது, தன்னலம் இல்லாமல் வாழ்ந்தது, ஊரே காலரா வைசூரியில் விழுந்து அவதிப்பட்டது, அப்போது கிருஷ்ணன் இடையன் வடிவில் வந்து குழலைத் தந்து மன்னாரை அங்கீகரித்தது என்று அந்த விஷயங்கள் (இத்தொடரின் முகப்பில் இடம் பெறும் விஷயங்கள்) வரிசையாகத் தொடர்ந்து கொண்டே போனது.

அதில் கிருஷ்ணன் கொடுத்த இரண்டாவது புல்லாங்குழலை பண்டாரி தூக்கி வீசியதும் அதை எடுத்துக்கொண்டு பாண்டே ஊரைவிட்டுப் போனதும் படிக்கப்பட்டபோது தன் வசம் உள்ள குழலை பைராகி ஒரு பார்வை பார்த்துக் கொண்டதில் ஆயிரம் உணர்த்தங்கள் இருந்தன.

மணியும் எட்டைக் கடந்துவிட்டது. திகுதிகுவென்று தீப்பந்தம் எரிய, அதன் ஒளியில் தாண்டவராயசாமி வாசித்துக் கொண்டே போனார்!

ஜீவசமாதிக்கு வெளியே குறிப்பிட்ட தூரத்தில் நின்று கொண்டு நோட்டமிட முடியாதபடி நோட்டமிட்ட ருத்ராவின் ஒற்றனுக்கு தொடர்ந்து முன்னே சென்று கவனிக்கத் தயக்கமாக இருந்தது.

ருத்ராவும் புறத்தில் இருந்தபடியே நடப்பதை சொல்லச் சொல்லிக்கொண்டே இருந்தார்.

அசம்பாவிதமாக பைராகி நடந்துகொள்ள முனைந்தால் காலிலோ கையிலோ சுட்டுவிடக் கூட உத்தரவிட்டிருந்தார். பைராகி சட்டத்திற்குப் புறம்பான தவறுகளையும் செய்துவிடக்கூடாது; அதே சமயம் கண்மறைவாகவும் போய்விடக் கூடாது!

இதுதான் ருத்ராவின் உத்தரவு.

கோமதியின் அப்பாவுக்கும், அன்புமணிக்கும் இருப்பே கொள்ளவில்லை. கோமதி தன்னுடைய தவறுக்குத் தண்டனையாக மனம் உடைந்துபோய் தற்கொலை செய்து கொண்டுவிட்டாளோ என்றுகூட அன்புமணிக்குள் ஒரு ஐயம் ஏற்பட்டது. ஒரு டார்ச்லைட்டை கையில் எடுத்துக்கொண்டு கோமதியை தேடப் புறப்பட்டு விட்டான் அவன். நாலுபேரிடம் சொல்லித் தேடவும் நெருடலாக இருந்தது. எனவே சாதாரணமாக வெகு இயல்பாக, "அண்ணாச்சி! கோமதி இந்தப் பக்கம் வந்துச்சா..? நாடார் கடையில மளிகை வாங்கிட்டு வரேன்னு போனா... எந்த சிநேகிதி வீட்ல இருக்காளோ?"- என்று கேட்பவர் களிடமே ஒரு மாதிரி சலிப்பான பதிலையும் சொல்லிக்கொண்டு நடந்தபடி இருந்தான் அன்புமணி.

'பைராகியை பார்க்கப் போயிருப்பாளோ? தமிழுக்கு பிரமை பிடித்திருப்பதற்கு பைராகிதான் காரணம் என்று கருதி சண்டை போடப் போயிருப்பாளோ?'- அன்புமணிக்குள் இப்படி எல்லாம் ஓட்டங்கள். எனவே யாதவகிரி மலைப்பக்கமாகவும் போய்ப் பார்த்துவிடுவது என்று அந்த பக்கமாக நடக்கத் தொடங்கினான்.

ஒரு வேளை வழியில் ஷ்யாமளாவைகூட பார்க்கப் போயிருக்கலாம் என்று தோன்றவே ஷ்யாமளாவின் வீட்டுப் பக்கமும் சென்றான். வாசலிலேயே தென்பட்ட மாஸ்டர், 'கோமதி அங்கு இல்லை' என்றதோடு அவனிடம் 'ராகவை பார்த்தாயா?' என்று கேட்டார்.

"என்ன ஸார்... என் வீட்ல கோமதின்னா இங்க ராகவை காணோமா?" என்று கேட்டான்.

"ஆமாம் அன்புமணி... ஒரு மூட்டையோட இந்த வீட்டை விட்டுப் போனவன்தான்... எங்க போனான்னே தெரியில.." மாஸ்டர் கூறும்போது ஷ்யாமளாவும் வந்தாள்.

"வா அன்புமணி! என்ன இந்த நேரத்துல?"

"கோமதியை காணோம் சியாமளா.."

"மை காட்.. காணோமா? என்ன சொல்றே நீ?"

"சத்தம் போடாதே.. நானே காதும் காதும் வெச்ச மாதிரிதான் தேடிகிட்டு வரேன். காலைல இருந்தே ஒருமாதிரிதான் இருந்தா.."

"நீ என்ன பயமுறுத்தாத அன்பு. அவ ஊருக்குள்ள தான் எங்கயாவது இருப்பா.."

"தேடாத இடம் இல்லை. இனி நான் பாக்க வேண்டியது யாதவகிரி மலை- விட்டா திரௌபதிகோயில் குளம்.."

"குளமா?"

"ஆமா.. அந்தக் குளத்துல உயிர் போனா நேரா மோட்சம்னு ஒரு நம்பிக்கை ஊருக்குள்ள உண்டு. தெரியும்தானே?"

- அன்புமணி ஷ்யாமளாவின் அடிவயிற்றை கலக்கி விட்டான். "அன்பு.. இங்க ராகவையும் காணோம். எங்க வீட்டுப் பரண்ல இருந்த ஒரு மூட்டையோட எங்க போனான்னு தெரியல.. செல்லுல காண்டாக்ட் பண்ணலாம்னா ஸ்விட்ச் ஆஃப்னு வருது..."

- அந்த இரவு நேரம் மூவர் வரையிலும் பரபரப்புக் குப் பஞ்சமில்லாதபடி மாறிப் போனது.

"சரி சியாமளா! நான் கிளம்பறேன். மலைக்குள் ளுக்கு போய் பார்க்கறேன்.."

"அங்க பைராகி இல்ல... நான் அப்பவே போய் பாத்துட்டேன்.." என்றார் மாஸ்டர்.

"அப்படின்னா குளத்தங்கரை தான்..." -அன்புமணி கால் எடுக்க, "இரு நாங்களும் வரோம்." என்று ஷ்யா மளாவும் புறப்பட்டாள்.

"இந்த இருட்டு வேளையிலயா?"

"பகல்பொழுதே என் மனசுக்கு இங்க இருட்டா தான் இருக்கு அன்பு. நம்மை சுத்தி ஏதோ மர்மமா நடந்துகிட்டே இருக்கு. ஆனா அது என்னன்னு தான் எனக்குப் புரியவே மாட்டேங்குது..."

பதிலோடு பதிலாக ஷ்யாமளாவும், மாஸ்டரும் அவனோடு தெருவில் இறங்கினார்கள்! திரௌபதி யம்மன் கோயில் நோக்கி நடக்கத் தொடங்கினார் கள்.

**தி**ரௌபதி கோயில்!

அர்த்தஜாமப் பூஜையை முடித்துக்கொண்டு மூங் கில் பெட்டிக்கு கற்பூர ஆரத்தி காட்டி முடித்தார் பூசாரி! மூங்கில் பெட்டிக்கு நேர் மேல உத்தரம்! அதில் ஒண்டிக் கொண்டிருந்த கவுளி ஒன்று டப் டப் என்று தன்னை சப்தம் போட்டுக் காட்டிக் கொண் டது. நிமித்தகத்தில் கவுளி சொல்லுக்கு ஒரு தனித்த பொருள் உண்டு.

மனைப் பல்லி(கவுளி)களுக்கு அந்த மனைக்குள் நிலவும் காற்றின் அழுத்தத்தோடு தொடர்பு உண்டு. அந்தக் காற்றுக்குள் ஊடுருவிக் கிடக்கும் ஈரம், வெப் பம், நட்சத்திரக் கதிர்கள் ஆகிய காலத்துக்கும்கூட சம்பந்தம் உண்டு. அவைகளில் மாறுபாடு ஏற்படும் போது அந்த மாற்றம் காரணமாக அழுத்தத்திலும் மாற்றம் ஏற்பட்டு அது பல்லியிடம் முடியும்; அது வும் சப்தமிடும்.

அந்தச் சப்தத்துக்கு பொருளே, 'உள்ளே நிலவிய படி இருக்கும் உட்சூழல் மாறிவிட்டது' என்பது தான். இதைத்தான் தவசிகள் நுட்பமாகப் புரிந்து கொண்டு அதை ஒரு செய்தியாக மொழி பெயர்த்துக் கொண்டார்கள். நாம் நினைப்பது எதுவோ அதற் கேற்ப அந்தச் சூழலில் பல்லியின் சப்தத்துக்கு பொருள் கொள்ள வேண்டும். இதற்கு அனுபவ அறிவு வேண்டும்.

தொடக்கத்திலேயே இதெல்லாம் மூடத்தனம் என்று நினைத்துவிட்டால் நுட்பமான இந்த விஷ யத்தின் ஓரம் சாரத்தைகூட ஒருவரால் விளங்கிக் கொள்ள முடியாது. ஒருவிதத்தில் அந்தச் சூழலில் அழுத்தம்தான் அப்படி அவரை நினைக்க வைக்கி றது என்றும் சொல்லலாம்.

பூசாரி இதையெல்லாம் அனுபவ பூர்வமாக அறிந்து வைத்திருப்பவர். அவருக்கு கவுளியின் சொல் அங்கே ஒரு மாற்றம் ஏற்படப் போவதைச் சொல்லாமல் சொல்லிற்று. சந்நிதிக் கதவை அடைத் துவிட்டு வெளியே வந்தவர், குளத்தங்கரைப் பக்கம் பார்த்துத் தேங்கி நின்றார். குளத்து நீர்மேல் டார்ச் லைட்டின் வெளிச்சம் உருண்டு கொண்டிருந்தது.

"யாரது?"- குரல் கொடுத்தார்.

பூசாரியின் பரிச்சயக் குரல் கேட்டு ஷ்யாமளாவும், "பூசாரி! நான்தான் ஷ்யாமளா..." என்றாள்.

"இந்த நேரத்துல குளத்துல என்னத்த தேடறீங்க?"

"இருங்க பூசாரி வரேன்.. ஆமா இந்தப் பக்கமா அன்புமணி தங்கை கோமதி வந்தாளா?"

"ஓ... அதைத்தான் தேட்றீகளோ..? ஏம்ப்பா.. வீட்ல ஏதாவது ரசாபாசமா... கோவிச்சுகிட்டு உசுரை விட்டுட்ற அளவுக்கு அது போவறதுக்கு?"

- பூசாரி கச்சிதமாக பாய்ண்ட்டைப் பிடித்தார்.

"அது.. அது..."- அன்புமணி தேங்கினான்.

அப்போது ஷ்யாமளா யாரும் நினைத்திராத ஒரு விஷயத்தைச் சட்டென்று தொட்டாள்.

"பூசாரி... இங்க நம்மை எல்லாம் சுத்தி ஒரு மர்ம மான விஷயம் நடந்துகிட்டே இருக்கு. ஆனா அது எதனால, எதுக்குன்னு என்னால புரிஞ்சுக்க முடியல. ஒரு நாள் உங்ககூட பேசும்போது நீங்க ஒரு விஷயம் சொன்னீங்க... இந்த கோயில்ல ஒரு பலகை இருக்கு. அது மேல உக்காந்து பித்ருக்களோடயே பேச லாம்னு... நான் இப்ப எங்க அப்பாவோட பேச விரும்பறேன். அந்தப் பலகை இங்க எங்க இருக்கு?"

- பூசாரி அதைக்கேட்ட நொடி பெரிய அளவில் அதிர்வை முகத்தில் காட்டினார்!

—தொடரும்

"விட்டலாச்சாரியருக்குள்ளேயும் அந்தக் கிருஷ்ண தரிசன ஆசை ஒரு உயிரின் பசி போலவே தோன்றிவிட்டது. பசி நீங்க ஒரே வழி உணவு உண்பதுதான். விட்டலாச்சாரியாரும் பிறவிப் பெருங்கடலைக் கடந்து கண்ணனுக்குள் ஐக்கியமாகி விட உறுதி பூண்டார்.

பண்டரிபுரத்து விட்டலனாகிய அந்தப் பாண்டுரங்கன் மீதும் மட்டற்ற பக்தி கொண்டவர்தான் விட்டலாச்சாரியார். அங்கே அவன் நிகழ்த்திய திருவிளையாடல்களுக்கும் ஓர் அளவில்லை. ஆயினும் அங்கே 'உனக்கு நான் முக்தி தருவேன்' என்று அவன் அளிக்காத ஒரு நம்பிக்கையை, கண்ணமங்கலத்து கண்ணன் அவருக்கு வேகமாக அளித்துவிட்டான்.

அங்கே நம்பி ஏற்க வேண்டிய ரகமாய் உள்ளவை எல்லாம், கண்ணமங்கலத்தில் நிரூபிக்கப்பட்டு நிரூபணங்களாய் நிற்பது போலத் தோன்றியது. இந்த நிலையில் மன்னரிடம் போய், 'நான் இந்த நொடி முதல் உங்கள் சிஷ்யன்' என்று காலில் விழுந்துவிட்டார். மன்னர் அவரைப் பார்த்து, 'நீங்கள் என் குருவைப் போன்றவர், உங்களுக்கு நான் குருவா?' என்று திருப்பிக் கேட்டான்.

'இருளை நீக்கி அங்கே நிரந்தரமாய் ஓர் ஒளியை எவரொருவர் அமைக்கிறாரோ அவரே குரு... அம்மட்டில் நீங்கள் பேசாமலே என் மனதுக்குள் ஆங்காங்கே அப்பிக்கிடந்த பலவிதமான இருட்டையும் நீக்கி விட்டதோடு, எது ஒளி என்பதையும் நான் உங்களை வைத்தே அறிந்தேன். எனவே நீங்களே என் குரு' என்று மன்னரைச் சரண் புகுந்தார்.

'நீங்களே எனக்கு கிருஷ்ண தரிசனம் ஏற்படவும் வழி செய்ய வேண்டும். உங்களால் நான் அந்தப் பரந்தாமன் தரிசனத்துக்கு ஆளாகி அப்படியே அவனோடு கலந்துவிட வேண்டும். போதும் இந்த மாயா வாழ்க்கை! தலையில் வெப்பம், வாயில் எச்சில், வயிற்றில் மலம், சிறுநீர், காலடியில் எப்போதும் அழுக்கு, உடம்பு முழுக்க வியர்வை... எவ்வளவு குளித்தாலும் அதிகபட்சம் ஆறு மணிநேரம் தான் சுத்தமாய் இருக்க முடிகிறது. எவ்வளவு சாப்



k

# இந்திரா சௌந்தர்ராஜன்



பிட்டாலும் அடுத்த வேளைக்குப் பசிக்கிறது. முழித்துக் கொண்டிருக்கவும் முடியவில்லை; தூங்கிக் கொண்டே இருக்கவும் முடியவில்லை.

இதெல்லாம் என்ன உடம்பு?

இதுக்குள்ளே என் மனம் என்பது எது? அதனால்கூட இந்த உடம்பை ஒரு அளவுக்கு மேல் புரிந்து கொள்ள முடியவில்லை.. எவ்வளவு ஜாக்கிரதையாக இருந்தாலும் காயங்கள் சில சமயங் களில் படத்தான் செய்கிறது. அப்போது வலி ஏற்படுகிறது. அதைத் தடுக்கவோ, இல்லை உணராதிருக்கவோ முடியவில்லையே..?

உடம்புக்கு அடிமையாக அல்லவா எப்பொழுதும் மனமானது இருக்கிறது? இந்த மனதுக்கு எவ்வளவுதான் தெளிவும், பிரித்துப் பார்க்கும் சக்தியும் இருந்தா லும்- தனக்கென நடப்பதையும், தன்னைச் சுற்றி நடப்பதையும் ஏதும் செய்ய இயலவில்லையே? இதை எல்லாம் வைத்துப் பார்க்கும் போது ஒரு வகையில் ஆறாம் அறிவில்லாத ஆடுமா டுகளாய் பிறப்பதே மேல் என்றல்லவா தோன்றுகி றது? அவைகளுக்கு தங்களையே தெரியாது. பசித்தால் இரை தேடும்; களைத்தால் கண் துஞ் சும். எதை வைத்து மானிடப் பிறப்பை மேலா னது என்று சொன்னார்களோ தெரியவில் லையே?

- இப்படிச் சிந்தித்தவர் யாரோ இல்லை, விட்டலாச்சார்யார்தான்! அதை மன்னாரிடம் பகிர்ந்துகொண்டு, 'ஸ்வாமி தேக விடு தலை வேண்டும். கண்ணனால் மட் டும்தான் அதை தர முடியும். அவன் ஒரு வெண்ணெய் விரும்பி. பசு வின் உடம்புதான் இந்த உலகம். அதனுள் ஓடும் பால்தான் நாமெல்லாம். அந்தப் பாலுக்குள் இருக்கும் வெண்ணெய்தான் நம் ஆத்மா. அவனே பர மாத்மா.. பரமாத் மாவுக்கு ஆத் மாவை உண் ணக் கசக் குமா?

அ வ

னால் நேராக உண்ணப்படாத ஆத்மாக்கள் உருகி நெய்யாகி, எரிந்து நெருப்பாகித்தான் விடுபட்டாக வேண்டும். இதை நான் உணர்ந்து கொண்டேன் ஸ்வாமி. என்னை தயவு செய்து கிருஷ்ண பிரசாதம் ஆக்கிவிடுங்கள் என்று விட்டலாச்சார்யார் மன்னரிடம் மன்றாடினார். மன்னாரும், 'என்னையே அந்தக் கண்ணன்தான் கைப்பிடித்து அழைத்துப் போகிறான். என்னைப் பற்றிக் கொண்ட உங்களைத்தானா விட்டுவிடப் போகிறான்? என்று கேட்டான்.

'இல்லை ஸ்வாமி- எனக்குக் கணக்கு தெரியும். என் கணக்கில் எனக்கு கிருஷ்ண தரிசனம் இந்த ஜென்மாவில் கிடையாது என்பதே விடை. குருவாகிய நீங்கள் உங்கள் கணக்கால் எனக்குத் தரிசனம் கிட்ட வழி செய்ய முடியும். ஆனால் அதற்கும் வழி இருப்பதாகத் தெரியவில்லை. ஏனென்றால் குருவருளுக்கும் குறை உள்ளது. என் ஜாதகத்தில் என் கணக்கு அப்படி! இதையெல்லாம் கடந்து அந்தக் கண்ணனே என்னைத் தேடி வர, ஒரே ஒரு வழி தான் உள்ளது. அது..'

ஷ்யாமளா 'எங்கே பலகை?' என்று கேட்டது பூசாரியை உலுக்கிவிட்டது. மௌனமாக வெறித்தார்.

"என்ன பூசாரி சும்மா இருக்கீங்க? நான் எதாவது தப்பா கேட்டுட்டேனா?"

"தப்பால்லாம் கேட்கலம்மா... உன் குடும்பத்துப் பித்ருக்களோட நீ பேச ஆசைப்படுவேன்னு நான் கொஞ்சம்கூட எதிர்பார்க்கல. அதான்..."

"இப்பகூட நான் இதை விரும்பி எல்லாம் செய்ய வரலை. எனக்கு இப்ப ஒரே குழப்பமா இருக்கு. பாருங்க... அன்புமணி தங்கை கோமதியை ஒரு பக்கம் காணோம். என்கூட வந்த ராகவையும் காணோம். அப்பாவும் இவ்வளவு சீக்கிரம் செத்துப் போவார்னு நான் நினைக்கவே இல்லை..."

"அப்ப இதுக்கெல்லாம் ஒரு பதிலைத்தான் நீ எதிர்பார்க்கிறியா?"

"ஆமாம்... அப்பா ஆஸ்பத்திரியில இருந்தப்போ என்கிட்ட நிறையப் பேச நினைச்சிருக்கார்... ஆனா பேசாமலே இறந்து போய்ட்டார்... இறந்துட்டவங்க ஆத்மாவோட பேசறது பத்தி, நான் நிறையவே கேள்விப்பட்டிருக்கேன். ஆனா நான் அதை நம்பினதில்லை. இப்பகூட ஒரு முயற்சியாதான் நான் இதைச் செய்ய விரும்பறேன்.."

"நான் பயந்த மாதிரியே பேசறியேம்மா... இந்த விஷயத்துல கொஞ்சம்கூட சந்தேகம் கூடாது. நூறு சதம் நம்பிக்கையோட இறங்க வேண்டிய ஒரு விஷயம் இது..."

"மன்னிக்கணும் பூசாரி... அனுபவப்படாத ஒரு விஷத்துல நூறு சத நம்பிக்கை வைக்கறதெல்லாம் ரொம்பக் கஷ்டம். அமானுஷ்யமான விஷயங்களை அதை ஐம்பது பர்சண்ட் நம்பறதே முட்டாள் தனம்கறது என் கருத்து. இருந்தாலும் நான் இப்ப அதை எல்லாம் நினைக்காம இந்தச் சூழ்நிலையில ஆத்மாக்களோட பேச வந்திருக்கேன்.... ஆத்மாக்கள் இருக்கறது நிஜம்னு நான் உணர்ந்துட்டா, அதை நான் நூறு சதம் நம்பிட்டுப் போறேன். அதனால என்ன?"

"அப்படி இல்லம்மா... கொஞ்சம்கூட சந்தேகப்படாம நம்பிக்கை வைக்கும்போது உடம்புல ஏற்பட்ற ரச மாற்றத்துக்கும், சந்தேகப்படும்போது உடம்புல ஏற்பட்ற ரசமாற்றத்துக்கும் நிறைய வேறுபாடு இருக்கும்மா... ஒரு நூறு வாட்ஸ் பல்ப் அதுக்குண்டான கரண்ட் வரும்போதுதான் பளிச்சின்னு எரியும். அரை கரண்ட் வந்தா அது எப்படி மங்கலா எரியுமோ அப்படித்தான் இந்த விஷயமும்..."

- பூசாரி ஷ்யாமளாவுக்குப் புரியவைக்க முயன்ற விதம் நன்றாக இருந்தும் ஷ்யாமளா விடாமல் வாதிட்டாள்.

"பூசாரி... இப்ப நீங்க என்ன சொல்ல வர்றீங்க?"

"கொஞ்சம் சந்தேகம் இருந்தாலும் வேண்டாம்மா..."

"அதனால என்ன ஆகும்?"

"உங்க முன்னோர்கள் வரமாட்டாங்க... அவ்வளவுதான்..."

- பூசாரியின் பதில் மாஸ்டரைக் கிள்ளியது.

"பூசாரி... நான் ஷ்யாமளா அப்பாவோட ஆத்ம ரூபத்தையே பார்த்தவன். எனக்கு நூறு என்ன, இருநூறு பர்சண்ட் நம்பிக்கை இருக்கு. ஷ்யாமளா தன் அனுபவத்துல எது உண்மையோ அதைப் பேசறா. அவளுக்கு ஓரளவு பக்குவம் இருக்கறதால பாதியாவது நம்பறா. சிலரைப் போல இந்த விஷயத்தை ஒரு கடைஞ்செடுத்த முட்டாள்தனம்னும், பைத்தியக்காரத்தனம்னும் அவ பேசலை. அந்த மட்டுல அவ உண்மையா இருக்கா. அவளை விட்ருங்க. முழுக்க நம்பற நான் அந்தப் பலகைல உட்காரலாம்தானே?"

- பூசாரி மாஸ்டரை மேலும் கீழுமாகப் பார்த்தார்.

"என்ன பாக்கறீங்க?"

"இல்ல... இவங்க முன்னோர்களோட நீங்க எப்படித் தொடர்பு கொள்ள முடியும்? ரத்த சம்பந்தம், இல்ல அக்னி சம்பந்தம் இருக்கணுமே?"

"ரத்த சம்பந்தம் இனி சாத்யமில்லை.. அக்னி சம்பந்தம்னா?"

"அக்னி சாட்சியா ஒருத்தியைக் கைப்பிடிக்கிறோம் பாருங்க.. அதுதான் அக்னி சம்பந்தம். அக்னி சாட்சியா தத்து எடுத்துக்கிட்டாலும் உரிமை வந்துடுது"

"அப்ப இப்பவே ஷ்யாமளாவை நான் என் மகளா தத்து எடுத்துக்கறேன்... எனக்கு ஆட்சேபமே இல்லை"

"அதுக்கு இந்த அர்த்த ராத்திரி நேரம் ஏற்றது இல்லைங்க. ஒருநாள் காலையில வாங்க. சூரியன் உதிக்கும்போது குளத்துல குளிச்சிட்டு, எங்க ஊர் திரௌபதியை உங்க பொண்ணா தீ வளர்த்து ஏத்துக்குங்க. அப்புறம் நீங்க விரும்பினா மாதிரி பலகைல உட்கார்ந்து பேசுங்க.."

"அந்த ஒரு நாள் நாளைக்கே இருக்கக்கூடாதா?"

"கூடாது... ஷ்யாமளா வரையில அவங்க அப்பா

இறந்த தீட்டு இன்னும் கழியல... அது கழியட்டும்"

- அவர்களின் பேச்சை கேட்டுக் கொண்டிருந்த அன்புமணிக்குள், இருப்பதை விட்டுவிட்டு பறப்பதைப் பிடிக்க நினைப்பது போல் ஒரு எண்ணம்.

"ஷ்யாமளா... நான் என் தங்கையைத்தான் தேடி வந்தேன். அது திசைமாறி -பல்கை, ஆவிங்களோட பேசறதுன்னு எங்கெங்கேயோ போயிடிச்சு. நீ உன் வீட்டுக்குப் போ. நான் இன்னும் எங்கெல்லாம் போய்த் தேட முடியுமோ தேடறேன்..."

- என்றவனாக அவர்களிடம் இருந்து விலகத் தொடங்கினான். ஷ்யாமளாவுக்கும் அவனைத் தடுக்கத் தோன்றவில்லை!

க்ரைம் பிராஞ்ச் ரெஸண்ட் டேபிள் ரூம் டேபிள் மேல் ராகவ் கொண்டு வந்து கொட்டியிருந்த ஏட்டுக் கட்டுகள்... ராகவும் டேபிள் முன் போடப்பட்டிருந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டிருந்தான்.

வைராகியிடம் செய்துக் கொடுத்திருந்த சத்தியம் காரணமாக மௌனமாக இருந்தான்.

ஏடுகள் மட்டும் ஷ்யாமளா வீட்டு பரண்மேல் இருந்ததை ஒப்புக் கொண்டிருந்தான்.

ருத்ராவும் அந்த ஒன்பது மணி கால வேளையில் அந்த அறைக்குள் நுழைந்து அவன் அருகில் அமர்ந்தார். அவனைப் பார்த்து கண்களைச் சிமிட்டி சிரித்தார். பின்னர்...

"மிஸ்டர் ராகவ்! அந்தப் வைராகியோட நீங்க எங்க போனீங்க, எதுக்கு போனீங்கன்னு சொல்ல மாட்டீங்களா?"- என்று தன் பேச்சையும் தொடங்கினார்.

"ஸாரி ஸார்... நான் வைராகிகிட்ட சத்யம் செய்திருக்கேன். என்னால இது சம்பந்தமா எதையும் பேசமுடியாது."

"அப்ப அந்தப் வைராகிகிட்ட ஏதோ ரகசியம் இருக்குன்னு எல்லோரும் சந்தேகப்பட்டது சரிதான் போல் இருக்கு..."

- ருத்ராவின் கருத்துக்குப் பதிலாக எந்த ஒரு கருத்தையும் ராகவ் கூறவில்லை. மாறாக மௌனமாக இருந்தான்.

"என்ன மிஸ்டர் ராகவ்? எதுவும் பேசமாட்டேங்க நீங்களே..?"

"ஸார், நான் இப்ப ரொம்பவே கன்ஃப்யூஸ்டா இருக்கேன். என்னை எதுவும் கேட்கவேண்டாம்..."

"சரி, இதெல்லாம் என்ன?"

- ருத்ரா அந்த ஏடுகளைக் காட்டிக் கேட்டார்.

"எல்லாம் ஏடுகள்..."

"அது எனக்குத் தெரியாது பாருங்க... இதெல்லாம் எங்க இருந்தது? உங்க கைக்கு எப்படி வந்தது?"

"இதெல்லாம் ஷ்யாமளா வீட்டு மாடில, பரண்ல இருந்தது"

"அதை நீங்க எதுக்கு எடுத்தீங்க? இதுல ஏதாவது ரகசியம் ஒளிஞ்சிருக்கா?"

- திரும்பவும் ராகவிடம் மௌனம்!

ருத்ராவுக்கு சிரிப்பு வந்தது. ஒரு சில கட்டுக்களை எடுத்து, படிக்க முயற்சி செய்தார். அவர் வாயிலேயே அவை எதுவும் நுழையவில்லை. அப்படி ஒரு கடினமான தமிழ்!

ராகவிடம் கடுமையாக நடந்து கொள்ளவும் தயக்கமாக இருந்தது.

"மிஸ்டர் ராகவ்... உண்மையிலேயே இசை ஆராய்ச்சி பண்ணத்தான் கண்ணமங்கலம் வந்தீங்களா..? இல்லை உங்களுக்கு வேறு ஏதாவது நோக்கம் இருக்கா?"

- ஏட்டுக்கட்டை திரும்பக் கட்டியபடியே அவர் கேட்டது ராகவை சலிப்படுத்தியது.

"ஸார்... சத்யமா எனக்கு இதில் வேறு எந்தவிதமான நோக்கமும் கிடையாது . என் நோக்கமே வேற... ஆனா இங்க நடக்கறதெல்லாம் ஒரே புதிரா



இருக்கு. இப்பவே இங்க இருந்து சென்னைக்கு ஓடிப் போயிடணும் போல இருக்கு. ஷ்யாமளாவை நினைச்சா பாவமாவும் இருக்கு"

- அவன் குரலில் உண்மை இருப்பது ருத்ராவுக்கும் புரிந்தது. அப்போது அவர் செல்ஃபோனுக்கு அழைப்பு. மன்னாரின் ஜீவசமாதிக்கு அருகில் வேவு பார்த்தபடி இருந்த போலீஸ்காரர்தான் பேசினார்.

"ஸார்! கொஞ்சநேரமா சமாதி பக்கத்துல எந்த விதமான சப்தமும் இல்லை. ரொம்பவே நிசப்தமா இருந்தது. நானும் உள் பக்கம் போய் பார்த்தேன். அங்க யாரும் இல்லை. அந்தப் வைராகியும், அவர்கூட வந்த பொண்ணும், சமாதியைப் பாத்துக்கற தாண்டவராய சாமியையும் காணலை ஸார்... எங்க, எப்படிப் போனாங்கன்னே தெரியல. சமாதியும் பிளந்திருக்கு!"

- போலீஸ்காரரின் பதில், ருத்ராவை புருவத்தைச் சுளிக்க வைத்தது.

(தொடரும்)

43

# தந்திரம்!




"விட்டலாச்சார்யார் ஓரே ஒரு வழிதான் உள்ளது என்று சொன்னதைக் கேட்டு மன்னாரும் அதை அறிந்துகொள்ள ஆவலானான். 'நான் இந்த நொடி முதல் உபவாசம் இருக்கப்போகிறேன். பச்சைத் தண்ணீர்கூட இனி என்னுள் செல்லாது. ஏற்கெனவே உள்ளே சென்றுவிட்ட சக்தி அவ்வளவும் உள்ளவரை நான் தெம்புடன் தெரிவேன். அதன்பின் சுருண்டு விடுவேன். கோள்கள் ஒரு மனிதனைப் பலமாக ஆட்டிப் படைப்பதே உண்ணும் உணவுகளின் மூலமாகத்தான். தவத்தின்போது ஒரு தவசியைக் கோள்களால் ஏதும் செய்ய முடியாமல் போகக் காரணமே அந்தத் தவசி உண்ணாது இருப்பதனால்தான்.

மனிதர்களுக்குத் தவம் என்பது பெரும் செயல். ஆனால் கோள்களுடைய கோணத்தில் அது ஒரு மனிதனை முடக்கிச் செயலற்றவனாக்குதல். தவத்தின்போது செயல்பாடுகளுக்கு எங்கே இடம் இருக்கிறது?

பூ உலகில் கோள்களே 'மாயை'யைக் கையில் எடுத்துக் கொண்டு மனிதக் கூட்டத்தை ஆட்டிப் படைக்கின்றன. இந்தக் கோள்களைக் கட்டிப்போடாமல் ஒருவன் இறைவனை நெருங்கவே முடியாது. கோள்கள் என்னிடம் வாலாட்டாமல் இருக்க ஓரே வழி, நான் உபவாசம் இருப்பதுதான்.

அதன் முடிவு அநேகமாய் மரணம்தான்! அந்த மரணம் கண்ணனை உத்தேசித்த மரணம். 'யாராக இருப்பினும் இறுதியில் என்னையே வந்து சேருவர்' என்பது அவனுடைய கீதை மொழி. அந்த இறுதி, இந்தக் கலியின் முடிவுக்காலம் ஆகும். அதுவரை கர்மத்தின் வசம் அகப்பட்டு, மாறி மாறி ஜென்மங்களைக் கண்டு கொண்டு பிறப்போட்டத்திலேயே கிடப்பதற்கு இப்போதே அவனை அடைய உள்ள குறுக்கு வழியே இந்த உபவாசம். அவன் பேரால் அவனை எண்ணி அவனுக்காக நான் புரியும் இந்த உபவாசம் என்னை மரணத்துக்கு இட்டுச் சென்றால், அதன்பின் என் ஆத்மா நிச்சயம் அந்த கிருஷ்ணனையே சென்று சேரும். என்னை மரணிக்க விடாமல் இருக்க அவன் விரும்பினால் தடுத்து ஆட்கொண்டுவிடுவான்.

அதி நுட்பக் கணித மதியை எனக்குத் தந்தவனும் அவனே. அதனாலேயே இந்த உண்மைகளைக்



இந்திரா சௌந்தர்ராஜன்



கணக்குப் போட்டுப் பேசிட என்னால் முடிகிறது. எனக்கு ஒரே ஒரு ஆசைதான். என் கணக்கில் பிழை ஏற்பட வேண்டும். கணக்கு பிழையானால், நான் சொன்ன கருத்தும் பிழையாகும். எது சரி என்பதற்கான விடை, உபவாசத்தால் உலகத்துக்குத் தெரிந்துவிடும்' என்று விஸ்தாரமாய் ஒரு வியாக்யானம் செய்துவிட்டு விட்டலாச்சார்யார் உபவாசத்தில் போய் உட்கார்ந்துவிட்டார்.

'ராஜரிஷியாகியே தீருவேன்' என்று மன்னன் கௌசிகன் துறவுக்கோலம் பூண்டு விஸ்வாமித்திரன் ஆனதுபோல, கிருஷ்ண தரிசனத்தைக் குறிவைத்து மாயைக்கும் கோள்களுக்கும் ஒரு தடையை உருவாக்கிவிட்டு, 'கிருஷ்ணா, கிருஷ்ணா' என்று நாம ஜெபம் புரிந்தபடி உபவாசத்தில் ஆழ்ந்துவிட்டார். மன்னருக்கே அவரின் அந்தச் செயல் அதிர்ச்சியைத்தான் அளித்தது."

**கா**தில் விழுந்த செய்தி, ருத்ராவை நெற்றியைத் தேய்க்கவிட்டது. ராகவும் அதைக் கவனித்தான்;

h

கூர்ந்து பார்த்தான்.

"என்ன ஸார்... ஷ்யாமளாகிட்ட இருந்து ஃபோனா? நான் காணாம போயிட்டதா நினைச்சு கம்ப்ளைண்ட் கொடுத்தானாக்கும்?" என்றும் கேட்டான். ருத்ரா அந்த அதிர்வுக்கு நடுவிலும் சிரித்தார். "இல்லை மிஸ்டர் ராகவ்... காணாம போனது நீங்க இல்லை. அந்தப் பைராகி... கூடவே அன்புமணியோட தங்கையான கோமதியும், ஊர்க்காரரும் ஜீவ சமாதியோட பாதுகாவலருமான தாண்டவராயசாமியும்தான்!

"ஓ... பைராகி இப்ப ஊர்ல இல்லையா?"

"முதல்ல எனக்குத் தண்ணி காட்டினார். இப்ப என் டிபார்ட்மெண்ட்டுக்கு காட்ட ஆரம்பிச்சிருக்கார். ரைட்... இதை நான் எப்படிச் சந்திக்கணுமோ அப்படிச் சந்திக்கறேன். இப்ப நான் உங்களைக் கொண்டு போய் அங்க விட்டுட்றேன். இந்த ஏடுகள்லாம் இங்கேயே இருக்கட்டும். எப்ப இதை பைராகி தவிர்த்துட்டாரோ அப்பவே இதுல பெருசா எந்த ரகசியமும் இல்லைன்னுதான் நினைக்கறேன். இருந்தாலும் இது இங்கேயே இருக்கட்டும். நீங்க கிளம்புங்க..."

- ராகவை அழைத்துக் கொண்டு தன் ஜீப்பிலேயே கிளம்பினார். அப்போது கை கடிகாரத்தில் மணி பதினொன்று -இரவு நேரம்!

நள்ளிரவு பன்னிரெண்டு மணி!

ஷ்யாமளாவின் வீட்டு வாசலில் வந்து நின்ற போலீஸ் ஜீப்பின் சப்தம் கேட்டு, மாடியில் தூக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்த ஷ்யாமளா எட்டிப் பார்த்தாள். பின், இறங்கி ஓடி வந்தாள். ராகவ் அவளைப் பார்த்துவிட்டு ஒரு பெருமூச்சு விட்டான். "எங்க போய்ட்டே...? இதுதான் வர்ற நேரமா?" இப்படி எவ்வளவோ கேள்விகள் அவனிடம்! அதற்கு அவசியமே இல்லாதபடி ருத்ராவே அவனிடம், "இவ்வளவு நேரம் என் கஸ்டடியில்தான் இருந்தார் மிஸ்டர் ராகவ். இப்ப நான் மீண்டும் தாற்காலிகமா இவரை விட்டுட்டுப் போறேன். நான் எப்ப வேணா வரலாம்.

பை த பை... அந்தப் பைராகியோடு அன்புமணி தங்கை கோமதியும், தாண்டவராய சாமிங்கறவரும் எங்கயோ போயிருக்காங்க. எதுக்கு... ஏன்கற கேள்விக்கெல்லாம் விடை, ஆஸ்பத்திரில இருக்கற யக்ஞூம், தமிழ்மழகனும் ஒரு வேளை சொல்லலாம். அவங்களும் இப்ப மயக்கம் தெளிஞ்சிட்டாங்கன்னு எனக்குத் தகவல் வந்தது. மற்ற விஷயங்களை நாளைக்குப் பேசுவோம்..." என்று ஷ்யாமளாவிற்குள் உள்ள பல கேள்விகளுக்கு விடையைக் கூறிவிட்டு, எந்த வேகத்தில் வந்தாரோ அந்த வேகத்திலேயே திரும்பவும் செய்தார் ருத்ரா.

ஷ்யாமளா எதிரில் ராகவ் திருதிருவென்று விழித்தான். கோமளா மாமியும் சப்தம் கேட்டு எழுந்து

## 'இன்னோவா கிளப்'பில் அசத்திய மாணவர்கள்!

தாம்பரத்திற்கு அருகிலுள்ள பம்மலில் ஸ்ரீசங்கரா மெட்ரிகுலேஷன் பள்ளி செயல்படுகிறது. இங்கே 'இன்னோவா கிளப்' என்று ஒன்றைத் துவக்கி 5 ஆண்டுகள் முடிந்துவிட்டன. அந்த கிளப்பின் 6-வது ஆண்டின் தொடக்க விழா சமீபத்தில் கோலாகலமாக நடந்தது. விழாவில் மாணவர்களும், பெற்றோர்களும் திரளாகக் கலந்து கொண்டனர். பள்ளியின் முதல்வர் மாலதி பாலகிருஷ்ணன் குத்துவிளக்கு ஏற்றி விழாவைத் துவக்கிவைத்தார்.





மாலதி பாலகிருஷ்ணன்

திய அந்த நாடகம் விழாவின் ஹைலைட்டாக அமைந்தது. இந்த வரிசையில் கணிதப் பிரிவு மாணவர்கள் 'ட்யூப் டு ஊட்டி' என்னும் நாடகத்தில் நடித்தனர். கம்ப்யூட்டரைவிட மனித மூளையே சிறந்தது என்னும் கருத்தை அழகாக விளக்கியது அந்த நாடகம்.

விழாவில், தாஜ்மஹால் சுற்றுச் சூழல் மாசுபடுவதால் மஞ்சளாகிக் கொண்டிருக்கிறது. எனவே சுற்றுச் சூழலை எப்படி பாதிப்பில்லாமல் வைத்துக் கொள்வது என்பது குறித்து 'இன்னோவா

h



வந்து, வாசற்கதவுக்குப் பின்னால் நின்று பார்த்துக் கொண்டிருந்தாள். "இப்படியா ஒரு ஃபோன் கூட பண்ணாம என்னைத் தவிக்க விடுவே? நீ பண்ண வேண்டாம்- நான் பண்றதுக்கு வழி இல்லாம செல்லை ஸ்விட்ச் ஆஃப் பண்ணி வெச்சா என்ன அர்த்தம் ராகவ்?"

"இல்ல ஷ்யாமளா... மிஸ்டர் ருத்ரா செல்லை ஆஃப் பண்ணி வைக்கச் சொல்லிட்டார்... அதான்..."

"அவர் எதுக்கு உன்னை தன் கஸ்டடிக்கு எடுத்துண்டு போகணும்?"

"உள்ள போய் பேசுவோமே?"

- அவனிடம் ஒரு கெஞ்சல்.

அவனும் 'சரி' என்று திரும்பினாள். மாமி வெறித்தபடியே இருந்தாள். மாமியைக் கடந்துதான் செல்ல வேண்டியிருந்தது.

"சாப்ட்டாச்சா?" -மாமி ஒரு வார்த்தையில் கேட்டாள். ராகவ் அரை மனதாய்த் தலையை ஆட்டினான்.

"வெறும் வயித்தோட படுக்க வேண்டாம். அரிசி உப்புமா பண்ணினேன். ஒரு வாய் சாப்பிட்டுப் போப்பா..."

ஷ்யாமளாவும் 'சாப்பிட்டு வா' என்று ஜாடை காட்டினாள். அவனும் மாமி பின்னால் நடந்தான். கூடத்தில் சோஃபாவில் காரியம் பண்ண வந்த பிராமணரும், ஷ்யாமளாவின் ஒன்றுவிட்ட தம்பியாகிய சித்தப்பாவும் படுத்திருந்தனர். அவர்களின் தூக்கம் கலையாதபடி நடந்து, சமையல் கட்டுக்குள் நுழைந்தனர். மாமி கதவைச் சாத்தித் தாழிட்டாள். ராகவுக்கு அதுவே ஆச்சரியமளித்தது. தையல் இலையைத் தண்ணீர் தெளித்துப் போட்டு, வாணலியில் இருந்து உப்புமாவையும் வைத்தாள். கடுகும், மிளகாயும் அங்கங்கே கிடக்க அவற்றைப் பொறுக்கி ஓரமாய் வைத்துவிட்டு நாலே விழுங்கில் உப்புமாவைத் தின்று தீர்த்தான் ராகவ்.

"அவ்வளவு பசி போல இருக்கு..."

"ஆமாம் மாமி"

"நல்லது... நான் இப்ப உன்னண்ட சில விஷயங்களைப் பேச விரும்பறேன். பேசலாமா?"

- மாமி கதவைத் தாழிட்டது ஏன் என்பது அப்போதுதான் புரிந்தது.

"தாராளமாப் பேசுங்கோ மாமி.."

"நான் இப்ப பேசப்போறதக் கேட்டு அதிர்ச்சியடையக் கூடாது. இது சம்பந்தமா ஷ்யாமளாகிட்டயும் பேசக்கூடாது..."

"நீங்க விஷயத்துக்கு வாங்கோ..."

"அதுக்கு முந்தி ஒரு கேள்வி..."

"கேளுங்கோ..."

"நீயும், அந்த மாஸ்டரும் நிஜமா இந்த ஊருக்கு சும்மாதான் வந்துருக்கேளா?"

"அதுல ஏன் மாமி உங்களுக்கு திடீர்னு சந்தேகம்?"

"இல்ல... எங்க ஊர்ல கிருஷ்ண பரமாத்மாவோட புல்லாங்குழல் இருக்கு; அதுவும் எங்க ஆத்துலயே இருக்குன்னு ஷ்யாமளா எதாவது சொல்லி அதனால உந்தப்பட்டு கிளம்பி வந்தேளா?"

"அவ இப்படி எல்லாம் பேசினதே கிடையாது. நாங்க ரெண்டு பேரும் புதுசா ஆல்பம் தயாரிக்கற ஒரு மூட்லதான் வந்தோம். ஆனா இப்ப நீங்க சொல்றதப் பார்த்தா, அப்படி ஒண்ணு இங்க இருக்கற மாதிரி தெரியறதே?"

"ஆமாம்ப்பா... இந்த ஆத்துலதான் அது இருக்கு. நாலு தலைமுறையா அதை ஷ்யாமளா குடும்பம் காப்பாத்திண்டும் வரா. அந்தப் புல்லாங்குழல் மட்டுமில்ல, அதோட சேர்ந்து நிறைய ஏடுகளும் இருக்கு..."

- மாமி மெயினான ஒரு விஷயத்தை அந்த வேளையில் சொல்வாள் என்பதை ராகவ் துளிகூட எதிர்பார்க்கவில்லை.

"இந்த நிஜத்தை நான் இப்ப உன்கிட்ட சொல்லக் காரணம் இருக்கு. செல்லப்பா இருந்தவரை அவர் பார்த்துண்டார். அவர் இடத்துக்கு இந்த ஆத்து மாப்பிள்ளையா நீ வந்து, நீயும் அதைப் பத்திரமா பாத்துக்கணும். அதைப் பாதுகாக்கற அவஸ்தைலதான் அவர் உயிரே பிரிஞ்சது. அவர் மட்டும் உயிரோட இருந்திருந்தா, வேற மாதிரி எல்லாம் பிரச்சினைகள் வந்துருக்கும்..."

"வேற மாதிரின்னா...?"

"பல சிக்கல்கள் அதுக்குப் பின்னால இருக்கு. செல்லப்பா சாகறதுக்கு சில நாள் முந்திதான் என்கிட்டயே பல ரகசியங்களைச் சொன்னார். நான் அவைகளை மனசுல சுமந்துண்டு, ஒரு மலையை மார் மேல தாங்கற மாதிரி தாங்கிண்டு இருக்கேன்.."

"இன்னும் என்னவெல்லாம் ரகசியங்கள் இருக்கு? அதையும் சொல்லுங்கோ..."

- ராகவ் அலாதியான விருப்பத்தோடு மாமியிடம் கேட்க, கச்சிதமாகக் கதவு தட்டப்படும் சப்தம்!

"ஷ்யாமளாதான் வந்துருக்கா.. மிச்சத்த நான் அப்புறமா சொல்றேன். என் மேல சத்யம் இங்க நான் பேசினத யார்கிட்டேயும் பகிர்ந்துக்கக்கூடாது..." -என்றபடியே போய் கதவைத் திறந்தாள் மாமி. அவன் எதிர்பார்த்த மாதிரியே ஷ்யாமளாதான்! அவள் முகத்திலோ கோபக்கனல்...

(தொடரும்)

44

"விட்டலாச்சார்யா சொன்னது போலவே பச்சைத் தண்ணீர்கூட அருந்தாதபடி உபவாசத்தைத் தொடங்கிவிட்டார். உபவாச வேளையில் அந்த எண்ணமே வரக் கூடாது என்பதற்காகவே பாகவதத்தை எடுத்துக்கொண்டு படிக்கத் தொடங்கிவிட்டார். 'விட்டலாச்சார்யார் இப்படி கிருஷ்ண தரிசனத்துக்காக உபவாசம் இருக்கும் செய்தி ஊர் முழுக்க பரவி, மன்னரோடு சேர்ந்து அவரையும் தரிசிக்க ஒரு கூட்டம் வர ஆரம்பித்துவிட்டது. அவரது உபவாசத்தையும் பலர் பல மாதிரி விமர்சனம் செய்ய ஆரம்பித்தனர். 'கிருஷ்ணனை இவர் நிர்பந்திக்கிறார். இது ஒருவித அடம்' என்றார் ஒருவர். 'கிருஷ்ணன் இதை எல்லாம் ஊக்கப்படுத்த மாட்டான். நிச்சயம் இவர் உயிரைத்தான் விடப்போகிறார். இவருக்கு தரிசனம் கிடைக்கப் போவதேயில்லை' என்றார் இன்னொருவர்.

'நீங்கள் வேண்டுமானால் பாருங்கள். பசி தாங்காமல் இவர் பாதியிலேயே உண்ணாவிரதத்தை முடித்துக் கொள்ளப் போகிறார்' என்றார் வேறொருவர்.

## இந்திரா சௌந்தர்ராஜன்



'அடப்பாவி மனுஷா... கிருஷ்ணனே பொய். அந்த பொய்க்காக இப்படி ஒரு முடிவா? நீங்களெல்லாம் திருந்தவே மாட்டீர்களா?' என்றார் ஒரு மீமாம்சகர்.

ஆனால் மன்னர் மட்டும் விட்டலாச்சார்யாருக்காக கண்ணனிடம் பிரார்த்தனை புரிந்துகொண்டான்.

'கண்ணா... தெரிந்தோ, தெரியாமலோ உன்னை மையமாக வைத்து இங்கே ஒரு நோன்பு தொடங்கிவிட்டது. உன் பேரால் நிகழ்வதற்கு மட்டுமல்ல, நிகழாதவைகளுக்கும் நீதானே காரணம்? நீதானே கூறினாய்... மன்னனும் நானே. மரம் செடி கொடி மட்டையும் நானே என்று...? எல்லாமுமாய் நீதான் இருக்கிறாய் என்றால், விட்டலாச்சார்யாருக்குள் 'நீ இப்படி ஒரு மார்க்கத்தில் வா' என்று அவரை உபவாசத்தில் ஆழ்த்தியதற்கும் நீதானே காரணம்? எனவே நீயே வந்து அவரது விருப்பத்தை நிறைவேற்று. பாவம் அவர்..! அவர் நம்பிக்கையோ, உபவாசமோ வீண் போய்விடக் கூடாது' என்றான்.

அன்று இரவே கண்ணன் மன்னரின் கனவில் தோன்றினான். 'பக்தனே... நாளையே நூற்றி எட்டு பரம பாகவதர்களை அழைத்து அவர்களுக்கு விட்டலன் கையாலேயே அன்னம் பரிமாறச் சொல். அவ்வேளையில் நான் அவனுக்குத் தரிசனம் தருவேன். பாகவதர்களுக்கு பாத பூஜை மிக முக்கியம்' என்று கூறிவிட்டு மறைந்துவிட்டான். மன்னரும் உறக்கம் கலைந்து எழுந்து கனவில் கண்ணன் கூறியதைக் கூறவும் விட்டலாச்சார்யாருக்கு உச்சி குளிர்ந்து போனது. உபவாசத்தின் சக்தியும் புரிந்தது. கோள்கள் செயலிழக்கும் போது தெய்வ அருள் பரிபூரணமாகச் செயல்படத் தொடங்கிவிடுகிறது என்பதும் புரிந்தது.

மறுநாளே தஞ்சையைச் சுற்றி உள்ள 108 பாகவதர்களை சந்தித்து பாத பூஜைக்கும், விருந்துபசாரத்துக்கும் அழைத்தும் வந்துவிட்டனர்.

வரிசையாக 108 பேர்! விட்டலாச்சார்யா தனது பாத பூஜையைத் தொடங்கி ஒவ்வொருவராகச்



செய்து கொண்டே போனார். அதில் ஒருவர் மட்டும் கஞ் ஜங் கரியவராக கரிக்கட்டையால் ஆனவர் போல அவர் களில் அமர்ந்துகொண்டிருந்தார். அவரைப் பார்த்தவர் கள் பார்த்த நொடி முகத்தைத் திருப்பிக்கொண்டனர். விட்டலாச்சார்யாரும் அந்தப் பாதத்தைக் கழுவி மலர் தூவி அர்ச்சித்தவர் நிமிர்ந்து பார்க்கவேயில்லை!"

ஷ்யாமளாவை வெறித்த விழிகளோடு பார்த்த கோமளா மாமிக்கு, அவளை ஒரு புது மனுஷியாக பார்ப்பது போலக் கூடத் தோன்றியது. உடம்பும் பதைத்துப் போனது.

"என்ன மாமி இது... எதுக்காக கதவைச் சாத் திண்டு சாதம் போட்றேள். அதுல என்ன ரகசியம்?"

"அதுவா? ஹால்ல தூங்கறவா முழிச்சுக்கக் கூடாது பார்... அதுக்காகத்தான்..." -மாமி சமாளித் தாள்.

ஷ்யாமளா அடுத்து, "ராகவ் லெட் அஸ் கோ.." - என்று அவனைப் பார்த்துச் சொன்னாள். அவனும்



j

அரை மனதாக அவனைப் பின் தொடரத் தொடங்கினான்.

மாடிப் படிகளில் இருவரும் ஏறினர். ஷ்யாமனா அவனுடைய அறைக்குச் செல்லாமல் அங்கிருந்த மொட்டை மாடிக்கான படிகளில் ஏறினான். ராகவ் அவனை வேறு வழியின்றிப் பின் தொடர்ந்தான். அவனுக்கு பெரிய அளவில் களைப்பாகவும் இருந்தது. கீழே மாமி பேசியதில் அந்தக் களைப்பு கொஞ்சம் கரைந்த மாதிரியும் இருந்தது. கண்ணனின் கைப் புல்லாங்குழல் அந்த வீட்டுக்குள்தான் இருக்கிறது என்பதை அவனுக்கு நினைத்துப் பார்க்கவே பரவசமாக இருந்தது. கூடவே இதை எல்லாம் எந்த அளவுக்கு நம்புவது என்கிற கேள்வியும் எழும்பி, எழும்பிய வேகத்தில் அமிழ்ந்தும் போனது.

அமெரிக்க மண்ணில் சர்வம் விஞ்ஞான மயமாகி விட்ட நிலையில் அதிலே தோய்ந்து அதிலேயே பரவிவிட்டவனுக்கு, கண்ணமங்கல அனுபவங்கள் பிரட்சியை அளித்திருந்தன. குறிப்பாகத் தொடக்கத்திலேயே ஐந்து தலை நாகம், கிருஷ்ணப் பருந்து என்று பல சங்கதிகளை காட்சியாகக் காட்டி அசத்தியதெல்லாம் அவனது விஞ்ஞான சார்பை அடக்கி ஒடுக்கிவிட்டது. எனவே ஏதோ சம்திங் இருக்கிறது என்கிற எண்ணத்துடனேயே மாமி சொன்னதை அசைபோட்டுக் கொண்டு மொட்டை மாடிக்கு ஷ்யாமனாவுடன் போய் நின்றான்.

புறத்தில் ஊர்!

வானில் நட்சத்திர மினுக்கல்கள்..

இரவாக இருந்தும் பெரிதாகக் குளிர் இல்லை.

ஷ்யாமனாவிடம் ஒரு அடர்வான கோபமும், அதை எப்படிக் காட்டுவது என்பது தெரியாத ஒரு தவிப்பும் வெளிப்பட்டபடியே இருந்தது.

"பேசு ஷ்யாமனா.. இப்படி ஊர் தூங்கற ஒரு ராத்திரியில் நாம மொட்டை மாடில இருக்கறது என்னவோ போல இருக்கு எனக்கு..." என்று ராகவ் ஆரம்பித்தான். ஷ்யாமனா வெடுக்கென்று பேச்சை ஆரம்பித்தான்.

"மாமி ரகசியமா உன்கிட்ட என்ன சொல்லிண்டிருந்தா?"

"ரகசியமாவா...? சேச்சே! என்ன இப்படி? 'சொல்லாம கொள்ளாம இப்படியா ஒரு இடத்துக்குப் போய் மாட்டிப்பே...'ன்னு வருத்தப்பட்டா.."

- ராகவ் பொய் சொல்லத் தொடங்கிவிட்டான்.

ஷ்யாமனாவுக்கும் அது அப்பட்டமாகப் புரிந்தது. அதை அப்படியே முகத்தில் எதிரொலித்தான்.

"நெஜமா ஷ்யாமனா... இதைத்தாண்டி மாமி பேசறதுக்கு என்ன இருக்கு? அவ ஒரு சமையக்காரிதானே இந்த ஆத்துல?"

ராகவ் சொன்ன மறுநொடி... "ஸ்டாப் இட்...!"- என்று உணர்ச்சி மிகுதியோடு கைகளை உயர்த்தி விட்டான் ஷ்யாமனா! ராகவுக்கு ஒரு நொடி, ரத்தம் கட்டிக் கொண்டாற் போல் இருந்தது.

"எதுக்கு ஷ்யாமனா இப்படிக் கோபப்பட்றே?"

"கோபப்படாம... மாமி ஒண்ணும் சமையக்காரி இல்ல; அவ எனக்கு அத்தை மாதிரி! 45 வருஷமா ஆத்துல அவ இருக்கா... அவனோட சொந்தங்கள்



கிட்ட இந்த 45 வருஷத்துல அவ செலவழிச்சது ஒரு சில மாசங்கள்தான் இருக்கும். அவ எங்கள்ள ஒருத்தி... எனக்குத் தெரியாத பல சங்கதிகள் அவளுக்குத் தெரியும்..."

"ஸாரி ஷ்யாமனா... நான் வேணும்னோ, தப்பாவோ எதையும் பேசிடலை.."

"போகட்டும்... இந்த ஆத்துல இருந்து நீ ஒரு மூட்டையோட வெளியே போனேன்னு தெரிஞ்சுண்டேன். எங்க இருந்து எதை எடுத்துண்டு போனே...? அது இப்ப எங்க?"

"அதுவா... அது வந்து..." -அவனுக்கு வார்த்தைகள் வர மறுத்தன.

"எது வந்து?"

"ஸாரி ஷ்யாமனா... அந்தப் பைராகி என்னை ஏதோ வசியப்படுத்திட்டார்னுதான் தோணறது. இங்க நான் இருக்கற ரூம்ல பரண் மேலே பழைய கவ

டிகள், ஏட்டு கட்டுகள்னு நிறைய ஐட்டங்கள் இருந்தது. அதைத்தான் எடுத்துண்டு போனேன். இப்ப அதெல்லாம் அந்த க்ரைம் ப்ராஞ்ச் இன்ஸ்பெக்டர் ருத்ராகிட்ட இருக்கு..."

"அங்க இருக்கறது உனக்கு எப்படித் தெரியும்? அது எதுக்கு போலீஸ்கிட்ட இப்ப இருக்கணும்?"

"எனக்கு எதுவுமே தெரியாது. அதான் சொன்னேனே... நான் என் கான்ஷியஸ்லயே எதையும் பண்ணல. எல்லாம் பைராகியோட வேலை. அவரும் சில ஏட்டு கட்டுகளை எடுத்துண்டார். எடுத்துண்டு வெளிய தெரியக் கூடாதுன்னு சத்யமும் வாங்கிண்டார்"

"இதைச் சொல்லத் தெரியற உனக்கு, நீ பண்ணது ஒரு திருட்டுக்குச் சமமான காரியம்கறது தெரியலியா?"

"தெரியறது... நான்தான் சொன்னேனே...? ஐ ஆம் நாட் இன் மை கண்ட்ரோல்..."

"இது உனக்கே உறுலா தெரியலியா ராகவ்...? நாட் இன் மை கண்ட்ரோல்னா உனக்கென்ன நார்கோ டெஸ்ட்டுக்கு போடற இஞ்ஜெக்ஷனா போட்டிருந்தார் அந்தப் பைராகி?"

"வெரி ஸாரி ஷ்யாமனா. நான் சொல்றதுதான் உண்மை. தலைவலியும், திருகுவலியும் அவாளவாளுக்கு வந்தாதான் தெரியும்னு சொல்லி கேள்விப்பட்டிருக்கேன். அந்த மாதிரிதான் எனக்கும். நான் அனுபவிச்சவன். நீ அனுபவிக்கும் போது உனக்கும் நான் சொன்னது புரிய வரலாம்..."

"ஒரு பகுத்தறிவுள்ளவன் பேசற மாதிரியே இல்ல உன் பேச்சு..."

"பகுத்தறிவா...?" -ராகவ் கேட்ட விதமோ புன்னகையோடு கூடிய ஒரு வித ஏளனமாகத்தான் இருந்தது.

"எதுக்கு இப்ப இப்படிச் சிரிக்கற?"

"ஆக்சுவலா பகுத்தறிவுக்கு நம்ம ஊர்ல அர்த்தமே வேற! சாமி இல்ல, பூதம் இல்லன்னு சொல்றதுதான் இங்க பகுத்தறிவு. நீ அந்தப் பகுத்தறிவைச் சொல்றியா? இல்லை, எப்படி யோசிச்சாலும் புரிஞ்சுக்க முடியாத நம்மளைச் சுத்தி நடக்கற விஷயங்களை நமக்கு இருக்கற அறிவை பகுத்தறிவுன்னு சொல்றியா?"

"பேச்சை மாத்தவோ, என்னைக் குழப்பவோ முயலாதே... நான் இப்ப தவிச்சுண்டுருக்கேன். சந்தோஷமா மியூசிகல் மூழ்கப் போறோம்னு வந்தா, மர்மங்கள்ல மூழ்கிண்டு இருக்கோம். அந்தப் பைராகியை நாளைக்கு நான் பாத்து, ரெண்டுல ஒண்ணு பண்ணப் போறேன்..."

"தாராளமா பண்ணு... ரெண்டுல ஒண்ணு என்ன, ரெண்டுல நாலுகூட பண்ணு! அதே சமயம் அந்த ஆளை நாம முதல் முதலா சந்திச்சப்போ அந்த ஆள் செய்த அந்த மாயா ஜாலத்தை மறந்துட்டுப் பேசாதே. அதெல்லாம் உன் பகுத்தறிவுக்கு எப்படின்னு புரிஞ்சிருந்தா எனக்கும் சொல்..."

"போகட்டும். ருத்ராகிட்ட யக்ஞன் என் சகோதரன்கற ரகசியத்தைச் சொல்லிடலையே..?"

"சத்யமா சொல்லலை... அவரும் யக்ஞன் பத்தி எல்லாம் பேசலை. டைம் த டைம், எனக்கு தூக்கம் வரது.. காலைல பேசுவோமே...?"

- ஷ்யாமனாவும் அதற்கு மேல் அவனிடம் வாதம் பண்ணாமல், மொட்டை மாடியில் இருந்து விலகத் தொடங்கினான்.

மறக்காமல் 'குட் நைட்' சொன்னான்.

ராகவும் போய் தன் படுக்கையில் விழுந்தான். மீண்டும் மாமி சொன்னதில் மனம் செல்ல ஆரம்பித்தது. அந்தக் கண்ணன் கொடுத்த புல்லாங்குழல் இந்த ஆத்துலதான் இருக்கு. அடுத்து மாமி, 'நீ இந்த ஆத்துக்கு மாப்ளையா வந்து அதைப் பத்திரமா பாத்துக்கணும்' என்று சொன்னதும் ஞாபகத்துக்கு வந்தது. அவனுக்கு அவன் உடம்பே லேஸாகி, வானில் மிதக்கிற மாதிரிகூட இருந்தது.

'கிருஷ்ணன் கைப்புல்லாங்குழலை நான் இனி பாதுகாக்கப் போகிறோம். அடுத்து ஷ்யாமனாதான் இனி தன் மனைவி...'

அந்த நினைப்பே தித்தித்தது. பொழுது விடிந்த பிறகு மாமியின் மூலமாகவே அந்தப் புல்லாங்குழலை இந்த வீட்டிலிருந்து எடுத்துப் பார்த்துவிட வேண்டும். முடிந்தால் வாசித்தும் பார்த்துவிட வேண்டும்... இப்படிப் பல மாதிரி அவன் நினைத்துக் கொண்டே புரண்டுப் புரண்டு படுத்தான்.

**ம**றுநாள்!

சனிக்கிழமை... மன்னார் ஜீவ சமாதிக்கு வழக்கமாய் விளக்கு போட்டு தரிசனம் புரிய வரும் சிலர், ஜீவசமாதியின் மேலுள்ள அந்த நாளைய பட்டியக் கல் பெயர்ந்து கிடப்பதைப் பார்த்தனர். உள்ளே பார்த்தபோது கீழே ஒரு அறை போன்ற அமைப்பும், ஒரு மனிதனின் ஒட்டுமொத்த எலும்பையும் சற்று இடித்துப் பொடி பண்ணி அம்பாரமாகக் குவித்தது போல எலும்புக்குவியல் ஒன்றும் கண்ணில் பட்டது. அந்தக் குவியல் மேல், ஒரு செத்த நாகத்தின் உடல்!

பார்த்தவர்களுக்கு 'பகீர்' என்றது!

திரௌபதியம்மன் கோயிலுக்கு வந்த பூசாரிக்கும் அதிர்ச்சி காத்திருந்தது. கோயில் சுவரில் ஆங்காங்கே விரிசல்கள்!

குளத்துப் பக்கமாய் போனபோது, குளத்து மீன்கள் செத்துப் போய் மிதந்து கொண்டிருந்தன! நடக்கக் கூடாத ஒன்று நடந்துவிட்டதை பூசாரியால் உணர முடிந்தது. ஓடி வந்து சந்நிதிக்குள் உள்ள அந்த மரப்பெட்டியைப் பார்த்தார். நல்லவேளை... அது மட்டும் எந்தப் பாதிப்பும் இன்றி, அதன் மேல் போடப்பட்ட காய்ந்த மாலைகள்-சந்தனம் சகிதம் அப்படியே இருந்தது.

அவரிடம் ஒருவித நிம்மதிப் பெருமூச்சு!

அதே சமயம், ஜீவசமாதி இருந்த இடத்துக்கு சற்று முன் ருத்ராவின் ஜீப் வந்து தேங்கி நிற்க, அவரும் அவரது சகாக்களும் இறங்கி சமாதியைப் பார்ப்பதற்காக நடக்கத் தொடங்கினர்!

(தொடரும்)

45

"அந்தப் பாத பூஜை வைபவமும், அதைத் தொடர்ந்து விருந்து உபசாரமும்கூட நடந்து முடிந்தது. 108 பாகவ தோத்தமர்களுக்கும் வேஷ்டியும், மேல் வஸ்திரமும், கூடவே பதினோரு பகோடா நாணயங்களும் வைத்து வழங்கப்பட... அவர்கள் அவ்வளவு பேரும் கோஷ்டியாக நிறைந்த மனதோடு விட்டலாச்சார்யாரையும், மன்னாரையும் வாழ்த்திவிட்டு விடை பெற்றுக்கொண்டனர்.

அவர்கள் சென்ற சில நிமிடங்களில் ஒருவர் மூச்சிரைக்க வந்து நின்றார். வந்தவர், 'அடடே, நான் இங்கு வந்து சேர்வதற்குள் பாத பூஜையும், விருந்தும் முடிந்து போய்விட்டதா? பரவாயில்லை... வழியில் பயணக் களைப்பில் கண்ணயர்ந்துவிட்டேன். அது சரி... எனக்குப் பதிலாக இடம் பெற்ற அந்தப் பாகவதோத்தமர் யார்...?' என்று கேட்கவும் விட்டலாச்சார்யாருக்கு 'பகீர்' என்றது.

தன்னோடு சேர்ந்து அந்த சத்காரியத்துக்கு உதவியவர்களிடம், 'வந்தது 108 பேரா, இல்லை 107 பேரா?' என்று கேட்டார். அவர்களும், '108 பேர்



இந்திரா சௌந்தர்ராஜன்

# கிருஷ்ண

45



தான். மிகச் சரியாக 108 வேஷ்டிகளும், மேல் வஸ்திரமும்தான் வாங்கப்பட்டன. அப்படி ஒருவேளை 107 பேர்தான் வந்திருந்தால் ஒரு தட்டு மிஞ்சியிருக்க வேண்டுமே...?' என்றனர். வந்தவரோ, 'அது எப்படி? நான்தானே நூற்றி எட்டாவது நபர்...?' என்றார்.

விடை அன்று இரவு கனவில் கிடைத்தது. மன்னாரின் கனவில் தோன்றிய கண்ணன், 'தாமதமாக ஒருவர் வந்ததற்குக் காரணம் நானே! நான் வைகுண்டத்தில் மேற்கொள்ளும் தாமஸியாகிய நித்திரையில் ஒரு துளி பங்கை அவருக்கு வழங்கினேன். அவரும் கண்ணயர்ந்துவிட்டார். அதுதான் சாக்கு என்று நானும் ஒரு பாகவதோத்தமனாக வந்து கலந்து கொண்டேன். கன்னங்கரேலென்று கிருஷ்ண வர்ணத்தில் வந்தது நான்தான்! அவரது உபவாசக் கணக்குக்கு நான் அளிக்க வேண்டிய தரிசனத்தை அளித்துவிட்டேன். ஆனால் அவருக்குத்தான் என்னைக் காணப் பிடிக்கவில்லை. பாவம் அவர் என்ன செய்வார்? அவர் ஜாதகக் கணக்கு அப்படி!

# தந்திரம் !

உபதேசம் செய்கிறவன் அதன்படி நடக்கின்றவனாக இருக்க வேண்டும்! அதுவே அழகு! விதிகளைப் படைத்த நானே அதை மீறுவதும் அழகில்லையே...?'

- கண்ணன் கனவில் கேட்டுவிட்டு மறைந்தும் போனான். அப்போதே கண்விழித்து எழுந்த மன்னார், அதை விட்டலாச்சார்யாரிடமும் சொன்னபோது அவருக்குக் கண்ணீர்தான் பெருகியது. 'கிருஷ்ணா! உன் தந்திரத்தால் நீ ஒரு கல்லில் இரு மாங்காய் அடிப்பதுபோல எனக்குத் தரிசனமும் தந்து, என் விதிக்கணக்கையும் காப்பாற்றிவிட்டாய். நான் உன்னைப் பார்ப்பது பெரிதுதான்... அதைவிடப் பெரிதல்லவா நீ என்னைப் பார்ப்பது? என்வரையில் அது நிகழ்ந்ததே... அதற்காக நான் உனக்கு நன்றி கூறுகிறேன்...' -என்று கைகளைக் கூப்பத் தொடங்கிவிட்டார் விட்டலாச்சாரியார்.



இந்தச் செய்தியும் ஊருக்குள் வேகமாகப் பரவிவிட்டது. 'அடடே... கிருஷ்ணன் இருப்பதும், முனைந்தால் அவன் வருவதும் சாத்யம்தான்போல் இருக்கிறதே?' என்று பலரும் நினைக்கத் தொடங்க, ஒருத்தி மட்டும் கிருஷ்ணனை அந்த யசோதை போல நிரந்தரமாகத் தன்னோடு தங்க வைத்துக் கொள்ளவே தீர்மானித்தாள்.

'கண்ணா! நான் இந்த நொடி முதல் உன் தாய்! என் கையால் நீ உண்ணாத வரை நானும் உண்ண மாட்டேன். தேவகிக்கும், யசோதைக்கும் மட்டும்தானா உன் கருணை? எனக்கில்லையா?' என்று உபவாசம் இருக்கத் தொடங்கிவிட்டாள்.

அவள் பேர் பாஞ்சாலி!"

எப்பொழுதும் சாம்பிராணி வாசமுடன், ஒருவிதச் சிலுசிலுப்புடன் திகழும் அந்த ஜீவ சமாதியில் செடி கொடிகள் எல்லாம்கூட வேருடன் பிடுங்கிப் போடப்பட்டதைப் போல வாட்டத்தில் இருந்தன.

மாதக்கணக்கில் தண்ணீர் இல்லாத போதிலும் ஒரு செடியோ கொடியோ, அந்த அளவுக்கு வாடிட வாய்ப்பே இல்லை.

ருத்ரா கூர்ந்து பார்த்தபடியே நடந்தார். நடக்கையில் கால் ஷூக்களின் 'திம்திம்' சப்தம் நன்றாக எதிரொலித்தது. சமாதி உள்ள இடத்திற்கு அருகில் வரவும் சற்று தேங்கி நின்று, கால் ஷூவை கழற்றத் தொடங்கினார். அவரைப் பார்த்துவிட்டு மற்றவர்களும் கழற்றினர்.

மனதில் ஒரு மதிப்பான உணர்ச்சியோடு சமாதியை நெருங்கியவர், எட்டிப் பார்த்தார். அவருக்கும் எலும்புத் தூளும், பாம்பு உடம்பும்தான் கண்ணில்பட்டது. தன் செல்போன் கேமராவில் அந்தக் காட்சியைப் படம் பிடித்துக் கொண்டார்.

சுற்றிலும் சக போலீஸ்காரர்கள்!

அவர்களில் ஒருவரிடம் நெருடல். அவர் பெயர் பால்ராஜ். கவனித்தார் ருத்ரா. "என்ன பால்ராஜ்...? கஜானாவை உடைக்கிற மாதிரி சமாதியை உடைச்சிருக்காங்களே... இதுல என்ன இருந்திருக்க முடியும்னு தோணுதா?"

"ஆமாம் ஸார்... ஒருவேளை அந்தப் பைராகி, மகான்களோட மண்டை ஓடுமற்றும் எலும்பு இதுங்களை வெச்சுகிட்டு ஏதாவது பூஜை, கிஜை செய்யறவனா இருப்பானோ?"

"அந்தக் கோணத்துலதான் யோசிக்கணும். அதே சமயம் இந்த இடமே களை இழந்து போய் இருக்கறதையும் பாருங்க. செடி, கொடிகள்னாம் பேசாதே தவிர, அவைகளுக்கும் நம்மளப் போலவே உணர்ச்சி உண்டுன்னு நிரூபிச்சவர் நம்ம ஜெகதீஷ் சந்திர போஸ். அந்த அடிப்படைல பார்த்தா, இங்க இப்படி நடக்கக் கூடாத ஒரு சம்பவம் நடந்ததுக்காக இந்தத் தோட்டத்துல இருக்கற அவ்வளவு செடிகளும் வருத்தப்பட்டு வாடிக்கிடக்கற மாதிரி தெரியல..."



"அது நாம பாக்கற கோணத்த பொருத்த விஷயம் ஸார். பாம்பு ஒண்ணு செத்துக் கிடக்கறத கவனிச்சீங்களா?"

"அனேகமாக அது இங்க திரிஞ்சுகிட்டிருக்கற பாம்பா இருக்கலாம். சமாதியை உடைக்கறப்போ வந்துருக்கலாம். அடிச்சு, கொன்னு போட்டுட்டதாதான் எனக்குத் தோணுது"

"நம்ம விஜிலன்ஸ் பார்வைக்கு தண்ணி காட்டிட்டு எப்படி ஸார் அந்த ஆள் தப்பியிருக்க முடியும்?"

"எப்பவுமே காப்பான் பெருசா, கள்ளன் பெருசான்னா கள்ளன்தானே பெரியவன்? இது என்ன நமக்குத் தெரியாத ஒரு விஷயமா என்ன?"

"இருந்தாலும் மாயம்-மந்திரம்னு பண்ணிகிட்டுத் திரியற கிரிமினல்கள் எப்பவும் நம்ம டிபார்ட்மென்ட்டுக்கு ஒரு நெருடலாத்தானே இருக்காங்க?"

-பேசிக்கொண்டே அந்த ஜீவசமாதியைச் சுற்றியும் வந்தனர். அதற்குள் ஊருக்குள் இருந்து பலர் திரண்டு வந்துவிட்டனர். அவர்களில் அன்புமணியும் இருந்தான். அவன் முகத்தில் அதீதப் பரபரப்பும், ஒரு பதற்றமும் ருத்ராவுக்குப் பளிச்சென்று தெரிந்தது.

"ஐயா... எங்க ஊர் இப்ப பழைய ஊரே இல்லீங்க... எப்பேர்ப்பட்ட ஊர் தெரியுங்களாயா எங்க ஊர்? அந்தக் கிருஷ்ணன் காலடி பட்ட ஊரய்யா... இப்ப என்னென்னவோ நடக்க ஆரம்பிச்சிடுச்சு. எங்க ஊருக்குள்ளதான் குழப்பம்னா, அது இப்ப இங்க சமாதி வரை வந்துடுச்சே ஐயா..." என்று ஒருவர் பொத்தாம் பொதுவாக ருத்ராவிடம் புலம்பினார். அப்படியே, "இதோ இந்தப் பிள்ளையோட தங்கச்சியையும் காணோம் ஸார்... நேத்து சாயந்தரம் வீட்டை விட்டுப் போன பொண்ணு எங்க இருக்குன்னே தெரியல..." என்று அன்புமணியை காட்டினார். அவனும் அவரருகில் கலங்கலான விழிகளுடன் வந்தவனாக, அவருக்கு வணக்கம் சொன்னான். அவரும் அவனுடன் சற்று ஒதுங்கினார்.

"என்ன அன்புமணி... உன் தங்கை கோமதியைக் காணோமா?"

"ஆமாம் ஸார்... நான் தேடாத இடம் இல்லை."

"இதை ஏன் என் கவனத்துக்குக் கொண்டு வரலை?"

"பொழுது விடியட்டும், உங்களப் பார்ப்போம்னு நினைச்சேன். ஆனா விடிஞ்ச உடனே, இங்க சமாதி பொளந்துக் கிடக்குதுன்னாங்க. இந்தச் சமாதியும், இடமும் எங்க குடும்பத்தோட பராமரிப்பில்தாங்க இருக்கு. இதைப் பாத்துக்கற தாண்டவராய சாமி, எனக்குப் பெரியப்பா முறையாகுது. இந்த மன்னார்சாமிதான் எங்க குலதெய்வமே..."

"ஆமா... உன் சந்தேகமும் அந்தப் பைராகி மேலதானா?"

"வேற யாரை ஸார் சந்தேகப்பட முடியும்? அவர்தானே புரியாத ஒரு புதிரா இருந்துகிட்டே இருக்காரு. அதோட என் தங்கை நேத்து இங்க வந்திருக்க நிறைய வாய்ப்பு இருக்கு. மன்னார்சாமி எங்க குல சாமி மட்டும் இல்ல, நாங்க அவரோட வம்சம் தான். எங்களுக்கு எந்தப் பிரச்சனைன்னாலும் நாங்க இங்கதான் வருவோம். இங்க வந்து கும்பிட்டுக் கிட்டா எதுவா இருந்தாலும் சரியாயிடும்கறது எங்க நம்பிக்கை"

"சரி, நீ தைரியமா இரு. உனக்கொரு சந்தோஷமான விஷயம். தமிழழகன் இப்பப் பூரணமா குணமாயிட்டான். அது மட்டுமில்ல, உன் தங்கையைக்

காதலிச்சதையும் ஒத்துகிட்டான். ஆனா பைராகி பத்தி கேட்டா மட்டும் அவன்கிட்ட தெளிவான பதில் இல்லை. அதேபோல யக்ஞன் பிழைச்சுகிட்டதையும் அவனால நம்ப முடியல. யக்ஞனும் நல்லா பேசினான். அவனுக்கும் தனக்கு எப்படி இப்படி ஆச்சுன்னு மட்டும் சொல்லத் தெரியல!"

"தமிழழகன் நல்லாயிட்டான்கறத கேட்க, ரொம்ப சந்தோஷமா இருக்கு ஸார். இப்பப் பார்த்து என் தங்கச்சி இப்படிக் காணாம போய்ட்டாளேன்னும் வருத்தமா இருக்கு..."

"சரி, நீ இப்ப ஒரு காரியம் பண்ணு. உன் தங்கச்சியைக் கடத்தினது அந்த பைராகிதான்னு ஒரு கம்ப்ளைண்ட் எழுதிக் கொடு. இந்த நொடி வரை இந்த ஊர்ல இருந்து அந்த ஆள்மேல கம்ப்ளைண்ட்டே கிடையாது. கம்ப்ளைண்ட் இல்லாம அந்த ஆளைத் தேடவோ, இல்ல தண்டிக்கவோ எங்களுக்கு எந்த முகாந்திரமும் கிடையாது; அதிகாரமும் கிடையாது.'

"சரி ஸார்... நான் இப்பவே வீட்டுக்குப் போய், எழுதி எடுத்துகிட்டு வந்துட்றேன்.."

"அவசியமில்ல.. இங்க ஜீப்ல டிரைவர்கிட்ட பேப்பர், பேனா கேள்... தருவார். ஜீப் பானட் மேல வெச்சு எழுது..."

"அப்படியே செய்யறேன் ஸார். ஏன் ஸார்... அந்தப் பைராகி இருக்கற இடம் உங்களுக்குத் தெரியுமா ஸார்?"

"தெரியாது அன்புமணி... ஆனா என் கணக்கு சரியா இருந்தா, அந்த நபர் நிச்சயமா திரௌபதி கோயிலுக்கு வந்தே தீருவார்.."

"எதை வெச்சு ஸார் அப்படிச் சொல்றீங்க?"

"அது உனக்கெதுக்கு...? நீ நான் சொன்னதைச் செய்!"

- அன்புமணியும் அங்கிருந்து விலகத் தொடங்கினான். சற்று தூரம் சென்றவனை திரும்பக் கூப்பிட்டாருத்ரா,

"இந்தச் சமாதி பத்தியோ, இல்லை இது ஜீவசமாதி ஆனதைப் பத்தியோ உன் குடும்பத்துக்கு ஏதாவது தெரியுமா?"

"நீங்க என்ன ஸார் கேக்கறீங்க?"

"இல்ல... இந்த மன்னார் உன் வம்சம்னே... அப்படின்னா இவர் யார்? இங்க எப்படி ஜீவசமாதியானாரு? அது எந்த வருஷம்கற தகவல்லாம் இருக்கும் தானே?"

"எப்படியும் 300 வருஷத்துக்கு மேலன்னு மட்டும் தெரியும் ஸார். மன்னார்சாமி பத்தி ஒரு ஜோசியக்காரர் எழுதின ஒரு ஏட்டுச் சுவடி இருந்ததாகவும், அது காணாம போயிட்டதாவும் எங்க அப்பா சொல்லியிருக்காரு.. வேறெதுவும் எனக்குத் தெரியாது.."

"சரி, இந்தச் சமாதிக்குள்ள மன்னாரோட உடம்பு மட்டும்தான் அடக்கம் செய்யப்பட்டதா..? வேற எதுவும் அதோட இருந்ததா?"

"தெரியாது ஸார்.. ஆனா எங்க மன்னார்சாமி கடைசியா அடக்கமானது வரை அந்தச் சுவடிக்கூட்டுல இருந்ததா எங்கப்பா சொல்வாரு..."

"சரி, நீ போய் கம்ப்ளைண்ட் எழுதிக் கொடு..."

- அன்புமணி விலகினான். பால்ராஜ் என்கிற அதிகாரி நெருங்கி வந்தவராக, "என்ன ஸார், ஏதாவது க்ளூ கிடைச்சதா?"

"க்ளூவெல்லாம் எதுவும் கிடைக்கல பால்ராஜ். ஆனா இந்தச் சமாதி பத்தி ஒரு ஏட்டுக்கட்டு இருக்கு. அது அந்தப் பைராகி கிட்ட இருக்கு. அதைப் படிச்சு சில விஷயங்களை தெரிஞ்சுகிட்டு சமாதியை ஒரு மனுஷர் உடைச்சிருக்காரு.

சமாதிக்குள்ள பெட்டியை கடந்து என்னவெல்லாம் இருக்கும்னு யோசிச்சா, ஒருவேளை இது எதுக்கு நடந்ததுன்னு தெரிய வரலாம். அதை வெச்சே அடுத்து என்ன நடக்கும்னும் நாம கண்டுபிடிச்சிடலாம்"

"என்ன ஸார் நீங்க... எகிப்துல பிரமிடுகள்னதான் பெட்டிகளோட அவங்க ஆசைப்பட்ட விஷயங்களை எல்லாம் சேர்த்து வைச்சு மூடுவாங்கன்னு படிச்சிருக்கேன். இது ஒரு சாமியார் சமாதி. இங்க சமாதிக்குள்ள என்ன வைக்க முடியும்? ஒரு வேளை அவர் கும்பிட்ட சாமியையும் தன்கூட சேர்த்துப் புதைச்சுடுங்கன்னு சொல்லி இருக்கலாம். இல்ல ஏதாச்சும் யந்திரத் தகடு, அப்படி, இப்படின்னு ஏதாவது இருக்கலாம்"

"யந்திரத் தகடு... சாமி.. இந்த மாதிரி இன்னும் ஏதாவது?"

"உக்காந்துதான் யோசிக்கணும்"

"யோசியுங்க... பைராகிக்கு அதனால பயன் இருக்கணும்? அதுவும் அந்தப் பைராகி அசாதாரணமான ஒரு பேர் வழி. முடிஞ்சா என்னைக் கைது செய்யுங்கன்னு சொன்ன ஒரு ஆள். இதை எல்லாம் மனசுல வெச்சு யோசிங்க..."

"யோசிக்கறேன். இப்ப என்ன ஸார் பண்ண?"

"கிளம்புவோம். வழக்கம்போல இங்க இரண்டு பேரை காவலுக்குப் போடுவோம். குதிரை போயிட்ட பிறகு லாயத்த பூட்ற மாதிரிதான் இதுவும். ஆனாலும் நமக்குன்னு சில வழிமுறைகள் இருக்கே... அதை மீற முடியாதே?"

- கேள்வியோடு தான் வந்த போலீஸ் ஜீப்பை நெருங்கினார். அன்புமணி கம்ப்ளைண்ட் எழுதிக் கொண்டிருந்தான். அவனைப் பார்த்தபடியே ஒரு போலீஸ்காரரை அழைத்த ருத்ரா, "அந்த திரௌபதி அம்மன் கோயில் பூசாரியை கொஞ்சம் நான் கூப்பிட்டதா கூட்டிகிட்டு வாங்க.

அவர் திரும்பி அங்க போற வரை அந்தக் கோயில்ல ஒருத்தருக்கு நாலு பேர் காவல் இருக்கணும்" என்றார்.

அவரும் வேகமாகப் புறப்பட்டுச் சென்றார். போலீஸ் ஜீப்பில் ஒரு அட்டைப் பெட்டியில் ஆட்டோமேடிக் வீடியோ கேமரா ஒன்று கைக்கு அடக்கமாகவும், எங்கேயும் பொருத்துவதற்குத் தோதாக எலாஸ்டிக் பெல்ட்டுகளுடனும் இருந்தது!

(தொடரும்)

கோயில் பட்டர் சொன்ன செய்திகள் பாஞ்சாலிக்குள் புது நம்பிக்கையைப் பாய்ச்சியதன் எதிரொலி, இந்தப் பாஞ்சாலியும் கிருஷ்ண தரிசனத்துக்குத் தயாரானாள். அதற்கு முன் கிருஷ்ணன் கொடுத்ததாகப் பட்டர் கூறிய அந்தப் பட்டயத்தைத் தரிசிக்க விரும்பினாள். அது இப்போது எங்கே உள்ளது என்று பட்டரிடம் கேட்டாள். 'நிச்சயமாக இந்தக் கோயிலில் அது இல்லை. அனேகமாக அது திரௌபதி அம்மன் கோயிலில் தான் இருக்க வேண்டும்' என்றார்.

பாஞ்சாலியும் கோயில் பூசாரியைச் சந்தித்து, தான் அந்தப் பட்டயத்தைப் பார்க்க விரும்புவதாகக் கூறினாள். அவரோ அது எங்கிருக்கிறது என்று தனக்கும் தெரியாது என்று கூறிவிட்டார்.

பாஞ்சாலி இப்படிப் பட்டயத்தைத் தேடுவது பண்டாரி முதல், கள்ளன், தலையாரி வரை அனைவருக்கும்




k

தெரிய வந்தது. அவர்கள் பாஞ்சாலியைத் தூண்டிவிடத் தொடங்கினர். புல்லாங்குழலைத்தான் அடைய முடியவில்லை; குறைந்தபட்சம் இந்தப் பட்டயத்தையாவது கண்ணால் பார்த்துவிடுவோம் என்பது அவர்கள் எண்ணம். அது மட்டுமல்ல... கண்ணன் கைப்பட எழுதிய அதனை அவர்கள் புல்லாங்குழலைப் போலவே ஒரு சக்திமிக்க அம்சமாகக் கருதினர்.

அது சக்தி மிக்கதுதான்!

அதில் சந்தேகம் இல்லை...

ஆனால் அவர்கள் எண்ணிக்கொண்ட சக்தி வேறு விதமானது! மனித ஜென்மம் கண்டுவிட்ட தாங்கள் எந்த நாளும் குறைந்திடாத செல்வமுடனும், ஆள் அம்பு அதிகாரத்துடனும், ஊர் உலகமே தம்மைப் பார்த்தால் கை தொழுது பணிந்து நிற்கும் விதமாகவும் வாழவேண்டும் என்பதே அவர்கள் விருப்பம்.

இன்று யாருக்குத்தான் இப்படி ஒரு விருப்பம் இல்லை? ஆனால் இப்படிப்பட்ட எதிர்பார்ப்புகள் ஈடேறுவதற்குப் பின்னாலே தானம், தவம் இரண்டும் இருக்கின்றன என்பது எத்தனைப் பேருக்குத் தெரியும்?

பாஞ்சாலி பட்டயத்தை எல்லா இடங்களிலும் தேடிவிட்டு, இறுதியாக திரௌபதியாகப் பூஜிக்கப்படும் அந்த மரப் பெட்டியிடம் வந்தாள். அவள் தேடாத ஒரே மறைவிடம் அது மட்டும்தான்!

# கிருஷ்ண தந்திரம்!

## இந்திரா சௌந்தர்ராஜன்



பூசாரி வருவதைப் பார்த்த அன்புமணி, தான் கேட்க நினைத்த கேள்வியை அவர் வந்து நிற்பதற்குள் கேட்டுவிட வேண்டும் என்று கருதியவனாய்க் கேட்கத் தொடங்கினான். "ஸார்... எல்லாம் சரிதான்... ஆனா ஊர்ல தொடர்ச்சியா தப்பு நடக்கறதும், புல்லாங்குழல் அதனால வெளியே வரும்னு எதிர்பார்க்கறதும் எந்த விதத்துல ஸார் சரி...?"

- ருத்ரா சிரித்தார்... பின் தொடர்ந்தார்.

"அந்தப் புல்லாங்குழலுக்கு இதை எல்லாம் தடுக்கற ஆற்றல் இருக்குங்கறது வைராகியோட எண்ணம். தொடர்ந்து கெடுதல் நடக்கும்போது அதை வெச்சிருக்கறவர், இதை எல்லாம் செய்யற நபர் மனசு மாறித் திருந்தணும்னு வேண்டிக்கிட்டு குழலை வாசிக்கலாமே...?"



"அப்படி ஒண்ணு இருந்தா தானே வாசிக்க முடியும்...?"

"இருக்கு... நூறு பர்சன்ட் அது இந்த ஊர்ல இருக்கு. இதுதான் வைராகியோட நம்பிக்கை..."

"அப்படி இருந்தா அதைக் கொண்டு எவ்வளவோ அற்புதங்களை எல்லாம் வெச்சிருக்கறவங்க பண்ணியிருப்பாங்களே?"

"அப்படிப் பண்ணி தங்களைக் காட்டிக் கொடுத்துக்க அவங்க என்ன முட்டாளா அன்புமணி?"

"வேண்டாம்... குறைந்தபட்சம் தங்களோட நன்மைக்கு அவங்க பயன்படுத்திக்கிட்டிருக்கலாம்தானே?"

"இதுவரை நீ கேட்ட கேள்வியில இதுல மட்டும்தான் கொஞ்சம் அர்த்தம் இருக்கு..."

- ருத்ரா சொல்லவும், பூசாரி நெருங்கிக் கும்பிடு போடவும் சரியாக இருந்தது.

"வணக்கம் போலீஸ்கார ஐயா... கூப்பிட்டு விட்டீங்களாமே?"

"ஆமாம் பூசாரி... சரி அன்புமணி, நீ போய் உன் வேலையைப் பார்... உன்கிட்ட செல்ஃபோன் இருக்குதானே?"

"இருக்கு ஸார்..."

"நம்பர் சொல்லு..."

அவன் சொன்னான்.

"நான் இப்ப ஃபோன் பண்றேன். என் நம்பரை சேவ் பண்ணிகிட்டு அவசியப்படும்போது அவசியம் கூப்பிடு" என்றார். அடுத்த அரை நிமிடங்களில் அவனது செல்ஃபோன் சிணுங்கியது.

"நான் இப்ப உனக்கு அனுப்பின என்னோட எண் இந்த 30 செகண்டுல, ஆகாசத்துல எங்கயோ இருக்கற சாட்டிலைட்ட போய் டச் பண்ணி, அப்புறமா அங்க இருந்து உனக்கு வந்திருக்கு. அதாவது ஆயிரக்கணக்கான மைல்களை இந்தச் சப்தம் நொடிகளில் கடந்துருக்கு. இந்த செல்ஃபோன் இருக்கே, இது ஒரு உள்ளங்கை அதிசயம். விஞ்ஞானம் மனுஷனுக்குக் கொடுத்திருக்கற பெரிய கொடை. இதை நினைச்சு, நினைச்சுப் பிரமிச்சுகிட்டே இருக்கலாம். ஆனா இந்த மனுஷங்க இதை ரொம்ப அற்பமா நினைச்சு, கேவலமாப் பயன்படுத்தறாங்க. நான் இப்ப வர்ற வழில கூடப் பார்த்தேன். ஏரிக்கரையோரமா ஒருத்தர் மலம் கழிச்சுகிட்டே யார் கூடவோ பேசிகிட்டிருந்தார்! எவ்வளவு பெரிய அதிசயமும் இந்த மனிதச் சமுதாயத்துல சில நாள், சில மணி நேரங்கள்தான் அதிசயமா பார்க்கப்படுது. அப்புறம் அதை ஒவ்வொரு மனுஷனும் தன்னோட கை, காலைப் பாக்கற மாதிரி சாதாரணமாதான் பாக்கறான்.

ஆனா இப்படிப்பட்ட மனுஷன்தான் துளிக்கூட நம்ப முடியாத இந்தப் புல்லாங்குழல் மாதிரி கற்பனையான விஷயங்களை எல்லாம் பெருசாவும் நினைக்கறான். வேடிக்கையா இல்லையா?"

- அவர் கேள்வியின் நியாயம் அவனையும் சற்று சிரிக்க வைத்தது. ஆனால் பூசாரி சிரிக்கவில்லை. இறுக்கமாகவே இருந்தார். ருத்ரானின் கருத்து துளிக்கூட அவரைப் பாதிக்காதது போல இருந்தார். அன்புமணி விலகவும் ருத்ரா அவரிடம் தன் கேள்விகளை ஆரம்பித்தார்.

"என்ன பூசாரி... நான் சொன்னது சரிதானே?"

"இல்லீங்க..."

"இல்லீங்களா...? (அதிர்வு... பின்) எப்படி?"

"இந்த செல்ஃபோன்ல பேசணும்னா நீங்க சொன்ன மாதிரி சாட்டிலைட், இரும்புக் கோபுரம், அப்புறம் இங்க ஒரு கருவி, அங்க ஒரு கருவின்னு நிறைய விஷயங்கள் வேணும். அப்புறம் இந்த செல்ஃபோன் கதிர்களால எதிர்காலத்துல காது செவிடாகும், புற்றுநோய் வரும்னுல்லாம் பேசிக்கிறாங்க. செல்ஃபோன் ஒண்ணும் பெரிய விஷயம் இல்லை. சொல்லப்போனா இது ஒரு மகா மோசமான விஷயம். நீங்க சொன்ன மாதிரி, மலம் கழிக்கறப்போ கூட மனுஷனை நிம்மதியாக் கழிக்கவிடாத ஒரு வஸ்து. இது வந்ததால வேகமா தகவல் பரிமாற்றம் நடக்குதுங்கறது வாஸ்தவம்தான். ஆனா தகவல் மட்டும் பரிமாறிக்கிட்டா மட்டும்தான் அது சரி... ஆனா ஊர் அரட்டை, உலக அரட்டையே அடிக்கறாங்க. வம்பு வளர்க்கறாங்க. நல்லது மட்டும் தெரிய வந்தா பரவால்ல... கெட்டதும் அதே வேகத்தில தெரிய வருது. கணக்குப் போடற சக்தியே இதால போயிட்டுது. கூட்டிக் கழிச்சா... நல்லது இதால நாலுன்னா, கெட்டது இதால நாப்பது நடக்குது. இதுன்னு இல்ல... சினிமா, டி.வி., ரேடியோன்னு எல்லாக் கருத்தையும் மனுஷ சமுதாயம் நல்லபடியா பயன்படுத்தறதவிட தப்பாப் பயன்படுத்தறதுதான் அதிகம்.

விஞ்ஞானம் பெரும்பாலும் தப்புக்குத்தான் அதிகம் பயன்படுது. ஆனா மெய்ஞ்ஞானம் அப்படி இல்ல. அந்தக் காலத்துல இரண்டு ஞானிங்க இந்த மாதிரி கருவிங்க இல்லாமலேயே தங்களுக்குள்ள தூர தூர இருந்து பேசிகிட்டாங்க. மன அலைகளை ஒழுங்குபடுத்தி, சரியான மூச்சுக் காத்த அளவோட வெளிய விட்டா, அது யார் மூச்சை எட்டணுமோ அதை எட்டி அவங்களத் திரும்பிப் பார்க்க வெச்சது.

> அந்தக் காலத்துல பிள்ளைங்க அரிசிக் குதிர்லதாங்க குதிச்சே விளையாடும். வாசக் கோலத்துக்கு அரிசியை வீசி எறிவோம். அப்படி ஒரு வளம்!
>
> **இப்போ...?**

இப்பகூட நமக்குத் தும்மல் வந்தா, 'யாரோ நினைக்கறாங்க'ன்னு பெரியவங்க சொல்வாங்க. அதே மாதிரிதான் ஒருத்தரை நாம தீவிரமாக நினைக்கும்போது அவரே எதிரில வந்துட்டா, 'இப்பதான் நினைச்சேன்... வந்துட்டீங்க'ன்னு நாம சொல்றதும்..."

"சரி பூசாரி, ஒரு வாதத்துக்கு நீங்க சொல்றதுல உண்மை இருக்குன்னே வெச்சுப்போம்... ஏன் அப்ப எல்லோரும் செல்ஃபோனை வெச்சுகிட்டும், தபால் இலாகாவை வெச்சுகிட்டும் செலவு பண்ணிக் கஷ்டப்படணும். பேசாம நீங்க சொல்ற மாதிரியே மூச்சுக் காத்து வழியாவே எண்ணங்களை அனுப்பிப் பரிமாறிக்கலாம்தானே?"

"அதுக்கு யோக வாழ்க்கை வாழணுங்க. தன்னைப் பத்தின தெளிவு இருக்கணுங்க. இயற்கையை நம்ம உயிருக்கும் மேலா நினைக்கற புத்தி இருக்கணும்க..."

"அப்ப நீங்க விஞ்ஞானத்தைப் பெருசா நினைக்காதவர்னு சொல்றீங்க..."

"நிச்சயமா..! இப்பதானே மின்சாரம், கார், பஸ், செல்ஃபோன் லொட்டு லொசுக்கெல்லாம்... நூறு, நூத்தம்பது வருஷத்துக்கு முன்னால சிம்னி விளக்கும், மாட்டு வண்டியும்தானே? அப்பல்லாம் மனு

ஷங்க வாழாமலா போய்ட்டாங்க?"

"அப்ப அந்த நாள் மாதிரியே எந்த முன்னேற்றமும் இல்லாம, கோமணத்தோட ஆதிவாசி மாதிரியே வாழறதுதான் உங்க வரைல சரி. அப்படித்தானே?"

"நான் அப்படிச் சொல்லல... சேர, சோழ, பாண்டிய ராஜாக்கள் காலம்னும் ஒரு காலம் இருந்தது. அப்ப, மனுஷங்ககிட்ட நல்ல நாகரீகம், கல்வி, வீரம், பக்தின்னு எல்லாமே இருந்தது. அப்ப இப்பபோல கோயில் முன்னால பிச்சைக்கார கூட்டம் இருந்தது கிடையாது. குடிக்கற தண்ணிக்கு சண்டை போட்டுகிட்டது கிடையாது. சாமி கும்புடற கோயிலுக்குப் போறப்ப கூட, 'உன்கிட்ட குண்டு இருக்கா?'ன்னு தடவிப் பார்த்து உள்ள அனுப்பற கொடுமை கிடையாது. ஒரு சின்ன அணுகுண்டு ஒரு நாட்டையே சர்வநாசமாக்கிடுங்கற பயம் கிடையாது.



இந்த ஏரோப்ளேனும், ராக்கெட்டும் இல்லாமலே வானத்து நட்சத்திரங்களை, நின்ன இடத்துல இருந்து அளக்கற சக்தி அப்ப இருந்தது. அந்த நட்சத்திரங்களும், ஒன்பது கிரகங்களும் பூமியோடு எப்படிப்பட்ட சம்பந்தத்துல இருக்குன்னு சொன்னாங்க. எது எப்ப, எப்படிப் பாதிக்கும்னு பாட்டாவே பாடியும் வெச்சாங்க.

ஆனா அந்தக் காலத்துலயும் மண்ணாசை, பெண்ணாசை இருந்தது. அதைத்தான் ராமாயணமும், மகாபாரதமும் சொல்லிச்சு. யுத்தங்களும் இருந்தது; துரோகிகளும் இருந்தாங்க; வழிப்பறியும் இருந்தது. இருந்தாலும் அவ்வளவுக்கும் நடுவுல மாமன், அத்தை, மச்சான், மச்சினி, பெரியப்பன், சித்தப்பன், மாமனார், மாமியார், நாத்தனார்னு உறவுகளுக்கு நடுவுல ஒத்துமையா வாழ்ந்தாங்க; சந்தோஷமா வாழ்ந்தாங்க!

இப்ப மாதிரி, ஒரு உறவு இருந்தா ஒரு உறவு கிடையாதுங்கற கொடுமை கிடையாது. எல்லாமே மெஷினா போய்ட்ட சோம்பேறி வாழ்க்கை முறை கிடையாது.

அந்த நாள்ள ஒரு ஆண் மகன், பத்து பொம்பளைய கட்டிக்கிட்ட குடும்பம் நடத்த முடிஞ்ச வல்லாளனா இருந்தான். இப்ப என்ன அப்படியா இருக்கு? இன்னிக்குக் கூட பேப்பர்ல பார்த்தேன். நூறு ஆம்பளைல முப்பது பேருக்கு இப்ப ஆண்மையே இல்லையாம். சரி பாதி பேருக்கு சர்க்கரை வியாதியாம். முப்பது வயசுலயே இப்ப மாரடைப்பும் வருது. மின்விசிறி இல்லாம ஒருத்தரால கூட இப்ப வீட்டுக்குள்ள இருக்க முடியல. காத்துல மார்கழி மாசத்துல கூட ஈரத்தைக் காணோம். மழையும் பெஞ்சா கிழிச்சுகிட்டு பெய்யுது; காய்ஞ்சா கருக்கிகிட்டு காயுது. நல்ல அரிசி கிலோ நாப்பது ரூபா!

அந்தக் காலத்துல பிள்ளைங்க அரிசிக் குதிர்ல தாங்க குதிச்சே விளையாடும். வாசக் கோலத்துக்கு அரிசியை வீசி எறிவோம். அப்படி ஒரு வளம்!

இப்போ...? என்ன பெரிய விஞ்ஞானம்? மனுசனை மழுங்கடிச்சதே தவிர, அது என்னத்தக் கிழிச்சிச்சு? பெருசா பேச வந்துட்டீங்க..."

- பூசாரியின் ஆவேசம் ருத்ராவை மூட்டையே கட்டிவிட்டது. விஞ்ஞானத்தின் சிறப்பை அவர் உணர்ந்து பேசவில்லை என்ற போதிலும், அதன் பாதிப்பை அவர் வரிசைப்படுத்தி கேள்விகளாக அடுக்கியதில் ஒரு அசாத்திய நியாயம். அதுவே அவர் ஒரு அசைக்க முடியாத பழமைவாதி என்பதை ருத்ராவுக்குப் புரிய வைத்துவிட்டது.

"அப்ப உங்க வரைல இந்த ஊர்ல நடந்த தப்பான விஷயமெல்லாம் நிஜமாலுமே மாயமந்திரம்தான்னு சொல்ல வர்றீங்களா?"

- ருத்ரா பாய்ண்டுக்கு வந்தார். சிரித்த பூசாரி, "அந்த விதத்துல இங்க நடந்த எல்லாமே இந்தக் காலப் பித்தலாட்டம்தாங்க. எங்க ஊரையும், எங்க சாமியையும் அரை குறையாப் புரிஞ்சுகிட்டு, பேராசையோட நடத்துக்கற ஒரு மனுஷனோட செயல் அது. அதே சமயம் அந்த மனுஷன்ல இருந்து, உங்களப்போல யோசிக்கற எல்லாரையும் கட்டிப் போட்டு கை எடுத்துக் கும்பிட வைக்கற அசைக்க முடியாத ஒரு சக்தி இந்த ஊர்ல இருக்கறத மறந்துடாதீங்க.."

- பூசாரியின் பதிலுக்குள் ஒரு புது ஒளி! ருத்ராவுக்கு 'சரி' என்றது!

"அப்ப இந்த சமாதி உடைக்கப்பட்டது, ஊர்ல நடந்த தப்புக்கெல்லாம் ஒரு தண்டனையை எங்க போலீஸ் டிபார்ட்மெண்ட் தர வேண்டாம். இங்க இருக்கற அந்த அசைக்க முடியாத சக்தியே தந்துடுமா?"

- ருத்ராவின் கேள்வி, பூசாரியை ஆமோதிப்பாகத் தலையை அசைக்க வைத்தது!

(தொடரும்)

கிருஷ்ண

# தந்திரம்!

மரப் பெட்டியிடம் வந்த பாஞ்சாலி, அதைத் திறந்து பார்க்க விரும்பினாள். அந்த விருப்பத்தை பூசாரியிடமும் தெரிவித்தாள். அதைக் கேட்ட பூசாரி சற்று அதிர்ச்சியடைந்தார். அந்த மரப் பெட்டியின் பின்னால் உள்ள ஐதீகத்தை எண்ணிப் பார்த்தார். கண்களை கறுப்புத் துணியால் கட்டிக்கொண்டுதான் பெட்டியைத் திறக்க வேண்டும். அதுவும் 12 ஆண்டுகளுக்கு ஒருமுறைதான்...! உள்ளிருக்கும் வஸ்திரத்தை எடுத்துப் போட்டுவிட்டு வேறு வஸ்திரத்தை பெட்டியில் வைத்து விட வேண்டும். அந்த வஸ்திரம் திரௌபதியாகப் பிறந்த பெண் அணிந்திருந்த வஸ்திரம்...! அதையும் கிருஷ்ணன் கோயிலில் பட்டர்தான் தருவார். அன்று கௌரவர் சபையில் துகிலுரிந்தபோது கிருஷ்ணன் தந்த சேலை... இன்றும் அண்ணன் தந்து தங்கைக்கு அது கிட்டுவது போன்ற ஒரு ஐதீகம்! அந்தச் சேலையை பெட்டியில் வைத்துப் பெட்டியை வணங்குவதால் என்ன நன்மை? இது எந்த வகை தாத்பரியம்? இப்படிப் பல கேள்விகள் எழலாம்.



இந்திரா சௌந்தர்ராஜன்

ஆனால், அந்தப் பெட்டி திரௌபதியையும், கண்ணனையும் சதா சர்வ காலமும் ஞாபகப்படுத்தியபடியே இருக்கிறது. அது மட்டுமல்ல, ஒரு பக்கம் வேதம் கற்ற பிராம்மணர்; இன்னொரு பக்கம் பக்தியை மட்டுமே கற்ற பூசாரி இருவரையும் அதுதான் இணைத்துள்ளது. இன்றளவும் கோயில் மண்டபத்தில் ஒரு திரௌபதிக்குப் பிறகு இன்னொரு திரௌபதி பிறப்பதும், அப்படிப் பிறக்கின்றவர்கள் வெள்ளிக்கிழமைகளில் மட்டுமே பிறந்திருப்பதும், அவர்களை ஊர் வணங்கி வரவேற்பதும், அவர்கள் இருக்கிற காரணத்தாலேயே ஊருக்குள் எந்த விதமான தீய சக்திகளும் அண்ட முடியாது போவதும் ஆச்சரியம் தரும் விஷயங்கள் மாத்திரமல்ல... அவைகளுக்கு பின்னாலே சூட்சமமாய் ஏதோ ஒன்று மறைந்துள்ளது. இந்தப் பழக்கத்தை, அல்லது தாத்பரியத்தை யார் எப்பொழுது தொடங்கினார்களோ தெரியாது. ஆனால், தொடர்ந்தபடி இருக்கிறது.

பூசாரி சகலத்தையும் எண்ணிப் பார்த்தவராக, 'அம்மா உங்களுக்குத் தடைபோட எனக்கு அதிகாரம் இல்லை. ஆனால் நீங்க செய்ய நினைக்கறது ஒரு சாதாரண விஷயம் இல்லை. அற்பக் காரணத்துக்காக பெட்டியைத் திறந்துட்டா அதோட பவித்ரமும் அதுக்குப் பின்னால இருக்கற விஷயத்துக்கு ஒரு பங்கமும் ஏற்பட வாய்ப்பு இருக்கு. நல்லா யோசிச்சுக்கோங்க...' என்றார். அவர் அப்படிச் சொல்லும்போதே பண்டாரி, தலையாரி இருவரும் வந்துவிட்டனர். பூசாரியைப் பார்த்து முறைத்த தலையாரி, "தாயி... நீ போய் உன் விருப்பப்படி பாரும்மா. அப்படியே அந்த அதிசயமான பட்டயத்தை எங்களுக்கும் காட்டு. அந்த கிருஷ்ணனை பார்க்கத்தான் எங்களுக்குக் கொடுப்பினை இல்லை. குறைஞ்ச பட்சம் அந்த சாமியோட கையெழுத்தையாவது பாத்துக்கறோம்" என்றார்.

திரௌபதி அம்சமான அந்தப் பாஞ்சாலியும் பூஜை அறைக்குள் காலை வைத்தாள். கைகளைக் கூப்பி கிருஷ்ணனை எண்ணித் தியானிக்கவும் செய்தாள். "கண்ணா... எனக்கு உன் தரிசனம் வேண்டும். உனது வைகுண்டத்தில் நான் ஒரு தூசாகவோ, இல்லை துரும்பாகவோ கிடந்தால்கூட போதும். அதற்கு இந்தப் பட்டய தரிசனம் வழி காட்டினால் மிக மகிழ்வேன்" என்று வேண்டிக் கொண்டாள்.

அடுத்த நொடியே அங்கே இனிய குழலின் ஓசை ஒலிக்க ஆரம்பித்தது. அற்புதமான இசை! அந்த இசை பண்டாரி, தலையாரி இருவரையும் அப்படியே கட்டிப் போட்டு கண்களை மூடச் செய்துவிட்டது. பூசாரிக்கும் இதே நிலை... பாஞ்சாலி மட்டும் சப்தம் எங்கே இருந்து வருகிறது என்று தேடிக் கொண்டு அந்த சந்நிதியை விட்டு வெளியில் வந்தாள். குளத்தங்கரை பக்கம் வந்தவளுக்கு ஆச்சரியம் காத்திருந்தது!

பூசாரியின் பேச்சில் இருந்த தெளிவும், அவரது குரலில் தொனித்த உறுதியும் ருத்ராவை வெகுவாகவே கவர்ந்துவிட்டது.

"அப்படின்னா அந்த வைராகியை நீங்க நம்பற அந்த கிருஷ்ணனோட சக்தி வந்து ஒரு வழி பண்ணும்னு சொல்றீங்களா?" என்று கேட்டாள்.

"நிச்சயமாங்க..."

"ஆனா பூசாரி உங்க நம்பிக்கையை நானும் ஏத்துக்கிட்டு எனக்கென்னன்னுல்லாம் இருக்க முடியாது; இருக்கவும் கூடாது. சரி, நான் எதுக்குக் கூப்



பிட்டேன்னு நீங்க என்னைக் கேக்கவே இல்லையே..."

"இப்பக் கேக்கறேன் சொல்லுங்க..."

"உங்க திரௌபதி அம்மன் கோயில்ல எங்க டிபார்ட்மெண்ட் சார்பா வீடியோ கேமராவை ஃபிக்ஸ் பண்ணப் போறேன். கோயிலுக்குள்ள யார் வந்துட்டுப் போனாலும் கேமராவுல பதிவாயிடும்."

"இந்தப் பணம் தர்ற மிஷினுக்கு மேல இருக்குங்களே அந்த மாதிரிங்களா?"

"ஓ... உங்களுக்கு ஏ.டி.எம். மெஷின் பத்திக்கூட தெரிஞ்சிருக்கே. சபாஷ்! கிட்டத்தட்ட அந்த மாதிரி தான்."

"இதை எங்க கோயில்ல ஏன் வைக்கறீங்க?"

"அந்தப் பைராகி நிச்சயமா அங்க வருவார்ங்கறது என் யூகம். அப்ப கேமராவுல பதிவாயிடும்..."

"சித்து வேலை தெரிஞ்ச அந்த ஆளுக்கு உங்க கேமரா எல்லாம் ரொம்ப சாதாரணங்க..."

"ஆமா எது சித்து வேலை?"

"ஏங்க... நீங்க அதை எல்லாம் நம்பாதவர் மாதிரியே கேள்வி கேட்கறீங்களே...?"

"கரெக்ட்... இந்த மாதிரி சப்ஜெக்டை யார்கிட்ட பேசினாலும் ஒண்ணு சித்து வேலை, இல்லன்னா என்ன மாய மந்திரமோன்னுதான் சொல்றாங்க. அவங்ககிட்ட விளக்கம் கேட்டா சொல்லத் தெரியலை..."

"சொல்ல முடியாததைத்தானே சித்துன்னும், மாயம்னும் சொல்வோம்..."

"சொல்ல முடியாததை எதை வெச்சுக் கத்துக்கமட்டும் முடியுது...?"

"ஐயா சொல்றேன்னு தப்பா எடுத்துக்காதீங்க. உலகத்துல ஆயிரக்கணக்கான ஜீவ ராசிங்க இருக்குது. அதுல மனுஷன் மட்டும்தான் பேச, சிரிக்க, அழ முடிஞ்சவன்; ஆனாலும் பறக்க முடியற ஒரு பறவை முன்னால இவன் பறக்க முடியாதவன், மண்ணுக்குள்ள நெளியற மண்புழு முன்னால அது மாதிரி அடைஞ்சு கிடக்க முடியாதவன். இதை எதுக்கு சொல்றேன்னு முதல்ல புரிஞ்சுக்குங்க. நமக்கெல்லாம் அளவுன்னு ஒண்ணு இருக்குங்க. தலைகீழா நின்னு தண்ணி குடிச்சாலும் அந்த அளவுக்கு மேல நம்மால போக முடியாது"

"பூசாரி உங்க விளக்கம் எனக்குப் புரியலை..."

"நம்மால ஒரு அளவுக்கு மேல யோசிக்கவோ, செயல்படவோ முடியாது. ஆகாசத்துல பறக்கணும்னா அது நம்மால முடியாதுன்னு உணர்ந்து எப்படி ஆகாய விமானத்தைக் கண்டுபிடிச்சு அதுல உட்கார்ந்து பறக்கறோமோ அந்த மாதிரியே சித்து வேலை பண்ணவும் ஒரு வழி முறை இருக்கு. அந்த வழி முறையில போனா அதெல்லாமும் சாத்தியம் தாங்க..."

"ஏது அந்த வழிமுறை?"

"இதை நீங்க மலையாள தேசத்துக்குப் போய் அங்க உள்ள நம்பூதிரிங்ககிட்டேயும், போத்திங்ககிட்டேயும்தான் கேட்கணும்"

"இவ்வளவு பேசற உங்களுக்கு தெரியாதா?"

"எனக்கு எதுக்குங்க அந்தக் கருமமெல்லாம்? இப்ப நீங்க ஒரு போலீஸ்காரரு. நீங்க ஏன் விஞ்ஞானியா இல்லைன்னு கேட்டா என்ன பதில் சொல்வீங்க?"

- பூசாரி பாக்கத்தான் பட்டிக்காட்டான். ஆனால்



அவருக்குள் ஒரு பழுத்த ஞானி இருப்பதை அவர் வந்ததில் இருந்தே சொல்லாமல் சொல்வது போல் இருந்தது ருத்ராவுக்கு... மேற்கொண்டு பேசவோ, கேட்கவோ தோன்றவில்லை. இருந்தும் தான் நினைத்ததைச் செயல்படுத்தாமல் விடக்கூடாது என்கிற அவரது கடமை உணர்ச்சி, கேமராவுடன் அவரையும் அழைத்துக் கொண்டு கிளம்பியது!

திரௌபதி கோயில் குளத்தங்கரை! கோயில் முன்னாலே இரண்டு செண்ட்ரி போலீஸ்காரர்கள் நின்று கொண்டிருந்தனர். வழிபாட்டிற்கு வந்திருந்த சிலர் பூசாரி இல்லாத நிலையில் ஏமாற்றத்தோடு திரும்பிட, கறுப்பு போர்வையை போர்த்திக் கொண்டு வந்த ஒரு உருவம் குளத்தங்கரைப் படிகளில் இறங்கி இடுப்பளவு நீரிலும் நின்று கொண்டது!

ஆங்காங்கே மீன்கள் செத்து மிதந்து கொண்டிருக்க, அதைப் பார்த்த அந்த உருவம் சரேலென்று நீருக்குள் முழ்கியது. நீரின் மேல் வட்டமாய் நிவலைகள்! ஒரு போலீஸ்காரர் ஓடி வந்து அந்தக் காட்சியைப் பார்த்தார். நீருக்குள் மூழ்கிய அந்த உருவம் நெடுநேரம் வரை மேலே வரவில்லை. போலீஸ்காரர் முகத்தில் பீதி பரவத் தொடங்கியது. திரும்பி வந்து அவரோடு நின்றபடி இருந்த இன்னொரு போலீஸ்காரரையும் அழைத்துக்கொண்டு வந்து பார்த்த போது படித்துறை அருகே நீர்ப்பரப்பின் மேல் அந்த உருவம் வெளிப்பட்டது.

தாடியும் மீசையுமாக தெரிந்த அந்த உருவத்தின் கைகளில் கோயில் பட்டர் தூக்கி எறிந்த சாளக்ராமக் கற்கள்! கற்களோடு மேலேறிய உருவத்தை போலீஸ்காரர்களும் நெருங்கி வந்து 'ஏய் யாருய்யா நீ?' என்று கேட்டனர். அந்த உருவம் நிமிர்ந்து உடம்பைச் சுற்றியிருந்த கறுப்புப் போர்வையை விலக்கவும்தான் தெரிந்தது அது பைராகி என்று...

"நீ... நீ..."

"என்ன நீ.. நான்தான் பைராகி! உங்களுக்கு என்ன வேணும்?"

"நீ நீதான் வேணும். எலேய் பெரியசாமி முதல்ல ருத்ரா சாருக்கு ஃபோனைப் போடு..."

"வேண்டாம்... அநாவசியமா என்கிட்ட மோதி அவஸ்தைப் படாதீங்க..."

- பைராகி சொன்னதை அந்த போலீஸ்காரர்களில் ஒருவர் காதிலேயே வாங்கவில்லை. ருத்ராவோடு அவர் தொடர்பு கொள்ளத் தொடங்கினார்.

"வணக்கம் ஸார்... ஸார் அந்த பைராகி இப்ப குளத்தங்கரைலதான் ஸார் இருக்கான். பிடிச்சு வெச்சுருக்கோம் ஸார். வேகமாக வாங்க ஸார்..."

"நான் அங்கதான் வந்துகிட்டிருக்கேன். அந்த ஆள் ஏதாவது மாய்மாலம் பண்ணுவான். பயந்துடாதீங்க."

ருத்ரா சொல்லிக் கொண்டிருக்கும் போதே பைராகி பார்க்க ஆரம்பித்த விதத்தில் ஃபோன் போட்டு பேசிய போலீஸ்காரரிடம் பதில் பேச்சு இல்லை.

"பெரியசாமி பெரியசாமி.." -ருத்ராவின் மறுபக்க



அழைப்பு அவர் கையில் இருந்து நழுவி விழுந்த செல்ஃபோனில் கொரகொரவென்று கேட்டது. கூட வந்த போலீஸ்காரரும் அதேபோல மௌனியாகி விட்டிருந்தார். பைராகி அவர்களை அப்படியே ஒரு ஓரமாக உட்காரத்தி வைத்துவிட்டு திரௌபதியம்மன் சந்நிதிக்குள் கால் வைத்தார். அவர் எதிரில் அந்த மரப் பெட்டி! அதை அகண்ட விழிகளோடு பார்த்தவர், அப்படியே அந்தப் பெட்டியைத் திறந்து தன்வசம் உள்ள சாளக்ராம கற்களை அதனுள் போட்டவராக அதைமூடினார். பின் பெட்டியைத் தூக்கி தலையில் வைத்துக் கொண்டு வெளியில் வந்தார். அங்கே ஓரிடத்தில் இந்த இன்டர் நெட் யுகத்திலும் தவிர்க்கப்படாதபடி ஒரு குதிரை வண்டி. பைராகி பெட்டியோடு அதில் ஏறிக் கொள்ள, குதிரை வண்டியின் பின்புறம் சாக்குப் படுதா விழுந்து மறைத்துக் கொண்டது.

"உம் போ..." என்றதும் வண்டிக்காரன் ராஜாவின் கட்டளைக்கு கட்டுப்படும் சேவகன் கணக்காய் வண்டியைச் செலுத்தத் தொடங்கினான்.

சில நிமிட நேரத்தில் எதிரில் ருத்ராவின் போலீஸ் ஜீப். அதனுள் பூசாரியோடு ருத்ரா. குதிரை வண்டியை சாலையைவிட்டு இறக்கி ஓட்டினான் வண்டிக்காரன். ருத்ராவும் ஆச்சரியமாகப் பார்த்துக் கொண்டே கடந்தார்! குதிரை வண்டி பிரதான சாலையில் இருந்து பிரிந்து ஒரு மண்சாலைக்குள் நுழைய ஆரம்பித்தது!

ருத்ராவின் போலீஸ் ஜீப், திரௌபதி அம்மன் கோயிலை அடைந்து நின்றது. அந்த போலீஸ்காரர்கள் இருவரும் விழுந்து கிடந்த கோலமே ருத்ராவுக்கு எல்லாவற்றையும் புரிய வைத்துவிட்டது.

பூசாரி அந்த நிலையிலும் பெரிதாகப் பதறாமல் கைகளைக் கூப்பிக்கொண்டு, கண்களை மூடியபடி பிரார்த்திக்கத் தொடங்கிவிட்டார்.

ஷ்யாமளாவின் வீட்டில் பத்தாம் நாள் காரியங்கள் நடந்தபடி இருந்தன. அதனால் எல்லோரும் வீட்டுக்கு வெளியே போடப்பட்ட பந்தலில் இருந்தனர். ஷ்யாமளாவும் அங்கேதான் இருந்தாள். எப்போதும் போல சமையல் கட்டில் மாமி! ராகவ் அவளிடம் மெல்லிய குரலில் பேசத் தொடங்கியிருந்தான்.

"மாமி... இப்ப வீட்டுக்குள்ள யாரும் இல்லை. எல்லோரும் வெளியில பந்தல்ல இருக்கா. அந்தப் புல்லாங்குழல் எங்க இருக்குன்னு சொல்றேளா? நான் அதை ஒரு நிமிஷம் பார்த்துக்கறேன்..."

"என்னது... இப்பப் போய் அதைக் கேட்டுண்டு! அது பெருமாளோடது... வீடே சாவுத் தீட்டுல இருக்கு... அது கிட்டயே யாரும் போகக் கூடாது. பதிமூணாம் நாள் சவுண்டி முடிஞ்சு சுபஸ்வீகாரம் ஆகட்டும். அப்ப கூட என்னால அதை எடுத்துத் தர முடியாது. நீங்க ஷ்யாமளா கழுத்துல தாலிய கட்டி, இந்தாத்து மாப்பிள்ளையா ஆனாதான் உங்ககிட்ட அந்தப் புல்லாங்குழலை எடுத்துத் தரணும்கறது ஷ்யாமளா அப்பாவோட ஆசை. அது ஆசைங்கறதுகூட சாதாரண வார்த்தை. கட்டளைன்னே சொல்லலாம். என்கிட்ட சத்தியம் வாங்கிண்டு இருக்கார்..."

"அப்ப இப்ப நான் கண்ணால கூட பார்க்க முடியாதா?"

"இது என்ன கேள்வி..? இப்பதானே சொன்னேன். வீடே சாவுத் தீட்டுல இருக்கறச்சே அதை நினைக்கறது கூட தப்பாச்சே..."

- மாமி உறுதியாகக் கூறின நிலையில், ஏமாற்றமுடன் அங்கிருந்து அகன்றான் ராகவ். அப்படியே வெளியே பந்தல் பக்கமாய் சென்றவன் முகம் வாடியிருந்தது. அதை தேவராஜ் மாஸ்டர் கவனித்தார்; ஷ்யாமளாவும் கவனித்தாள். மாஸ்டர் எழுந்திருந்து அவனை நோக்கிச் சென்றார்.

"என்ன ராகவ். ஏன் ஒரு மாதிரி இருக்கே?"

"ஒண்ணுமில்ல மாஸ்டர்..."

"இது ஒரு பதில்னு சொல்றியேப்பா..! நேத்து ராத்திரியும் ரொம்ப லேட்டா வந்தே. உன்னைக் காணாம ஷ்யாமளா எவ்வளவு தவிச்சிருப்பா தெரியுமா?"

"எனக்கு இப்பக் கிட்டத்தட்ட எல்லாமே தெரிஞ்சு போச்சு மாஸ்டர். ஒரு ஆல்பத்துக்காக இங்க வந்த எனக்கு, அதெல்லாம் அல்பம்... அதுல ஒண்ணுமேயில்லன்னு புரிஞ்சு போச்சு. நிஜமா நான் இந்த கண்ணமங்கலம் வந்ததை நினைச்சு ரொம்பவே சந்தோஷப்படறேன்..."

- ராகவிடம் வெளிப்பட்ட மாறுதலான பேச்சு, மாஸ்டரை நிமிர்த்தியது.

"சந்தோஷப்படறேன்னு சொல்லிட்டு உம்முன்னு இருக்கியே ராகவ்..."

"இது ஒருவிதமான டென்ஷன் மாஸ்டர். எது எப்படியோ... எல்லாமே நல்லபடியா முடியப் போகுது"

"நீ என்னப்பா சொல்றே..? ஆமாம் எல்லாம் தெரிஞ்சு போச்சுன்னியே... என்ன தெரிஞ்சுகிட்டே அப்படி?"

- மாஸ்டர் கேட்டுவிட்டார். ஆனால் ராகவ் அவரிடம் கோமளா மாமி சொன்னதை எப்படிச் சொல்வது என்கிற தயக்கத்தில் சற்றுப் பேந்தப் பேந்த விழித்தான்.

"கமான் ராகவ்... என்ன தெரிஞ்சுக்கிட்டே நீ?"

"சொல்றேன் மாஸ்டர். நீங்க எனக்கு குரு. குரு கிட்ட ஒரு சிஷ்யன் எதையும் மறைக்கக் கூடாது. அதனால உங்ககிட்ட பகிர்ந்துக்கறேன். ஆனா நீங்க யார்கிட்டேயும் இதை எல்லாம் பகிர்ந்துக்கக் கூடாது..."

"நீ முதல்ல விஷயத்தைச் சொல்லு..."

"சில அதிசயங்கள் இந்த உலகத்துல இருக்கு மாஸ்டர். நமக்குத்தான் அதை எல்லாம் புரிஞ்சுக்கற சக்தியோ, அறிவோ இல்லை..."

"பரீட்சை போடாம நீ விஷயத்துக்கு வா..!"

- மாஸ்டர் தூண்டியபோது ருத்ராவின் ஜீப் அந்த வீட்டு முன்னால் வந்து நின்றிட, அவரும் இறங்கிக் கொண்டிருந்தார்!

(தொடரும்)

**49**




குளத்தின் மைய மண்டபத்தில் அந்த கிருஷ்ணனே கால் மேல் கால் போட்டு அமர்ந்து கொண்டிருந்த நிலையில் குழலினை இசைத்துக் கொண்டிருந்தான்!

கண்ணிரண்டிற்கும் காட்சி! காதுகளுக்கும் இசை!

பாஞ்சாலி சொக்கிப் போனாள். கண்ணனின் பட்டயம் பொய் அல்ல என்பது போல அங்கே கிருஷ்ண தர்சனம்! பாஞ்சாலி கேட்டது கிடைத்துவிட்டது. பாஞ்சாலிக்கு மட்டுமல்ல— அருகிலிருந்த மரத்தின் பட்சிகளெல்லாம்கூட அந்த மைய மண்டபத்தையே வேடந்தாங்கல் போலக் கருதி அங்கே வந்து குவிந்துவிட்டன!

என்ன ஆச்சரியம்? இந்த மீன்களுக்கு கண்ணன் வந்து குழல் வாசிப்பது எப்படித் தெரியும்? அவைகள் எல்லாம்கூட நீர்ப்பரப்புக்கு மேலே தங்கள் வாயைப் பிளந்துகொண்டு முட்டி மோதிக் கொண்டிருந்தன. நேரம் செல்லச் செல்ல ஆடு மாடுகள் எல்லாம் வந்து அடைய ஆரம்பித்துவிட்டன! இடையில் பாஞ்சாலி எதையுமே உணரவில்லை. கண்களில் தாரைதாரையாக நீர் வடிந்த நிலையில், கைகளால் தாளம் போட்டுக் கொண்டு அந்தக் கண்ணனையே தன் காதலனாக வரித்துக்கொண்டு உருகிய மீராவை போல அவளும் மெய் மறந்துபோனாள். அப்படியே ஒரு ஆழ்ந்த உறக்கத்திற்கும் ஆட்பட்டுவிட்டாள். கண்களைத் திறந்து பார்த்த போது எதிரில் மண்டபத்தில் கண்ணன் இல்லை. ஆடு மாடுகள் இல்லை! பட்சிகள் இல்லை— கோயில் சந்நிதி வளாகத்தில் பண்டாரியும் தலையாரியும் கூட மயக்கம் நீங்கி அப்பொழுதுதான் எழுந்தபடி இருந்தனர். கண்களைக் கசக்கியபடி எதிரில் காட்சி தந்த பாஞ்சாலியிடம் வந்து, "என்ன நடந்தது— நாங்கள் எப்படி மயங்கினோம்? நீ கூட மயங்கி விட்டது போலத் தெரிகிறதே?" என்று அவர்கள் கேள்விகளை அடுக்கினர். பூசாரியும் அப்போது எழுந்து வந்தவராக அலறினார். "தாயி— இங்க வந்து பாருங்க இந்த அதிசயத்தை—" என்று— மூவரும் வேகமாக சந்நிதி வாசலுக்குச் சென்றனர். அந்த மரப்பெட்டியின் மேல் ஆயிரக்கணக்கான தேனீக்கள்.

"இதை யாரும் தீண்டவோ திறக்கவோ கூடாதுங்கறதுதான் இதுக்கு அர்த்தம்—" என்றார் பூசாரி.

பண்டாரிக்கும், தலையாரிக்கும் அதற்கு மேலும் அங்கே நின்றுகொண்டு தங்கள் அதிகாரத்தைக் காட்டும் துணிவு வரவில்லை. பாஞ்சாலியோ பூசாரியிடம் சென்று, 'பூசாரி இந்தத் தங்கையின் கோரிக்கையை என் அண்ணன் நிறைவேற்றிவிட்டான்—' என்றாள்.

பூசாரியின் கண்களில் ஆனந்தக் கண்ணீர். அப்படியே அவர் பாஞ்சாலியின் கால்களில் விழுந்தார். பாஞ்சாலி அவர் வயதை உத்தேசித்து பதறிப் போய் விலகினாள். அவரோ, "அம்மா கண்ணனைப் பார்த்த உன்னைப் பார்க்கும் பாக்கியமாவது எனக்குக் கிடைத்ததே— அந்தப் புல்லாங்குழல் இசைக்கு மனம் மயங்கியது போலவே உடம்பும் மயங்கிவிட்டது. யோக உடம்பாக இருந்திருந்தால் தாக்குப் பிடித்திருக்கும். நானும் கண்ணனைப் பார்த்திருப்பேன். அந்தக் கண்ணனுக்கு எனக்கு தர்சனம் தரக்கூடாது என்பதெல்லாம் கிடையாது. எனக்குத்தான் யோக்யதை இல்லை. எனக்கே இல்லாதபோது பண்டாரிக்கும், தலையாரிக்கும் எப்படி இருக்க முடியும்?

அவன் தர்சனம் பெற்ற உனக்கும் சரி, இனி வரப்போகும் அவ்வளவு திரௌபதிகளுக்கும் நிச்சயம் யோக உடம்புதான் வாய்க்க முடியும். உடம்பில் எல்லா சக்கரங்களும் சீராக சுழன்று, நாடி ஆதாரமும் சரியாக இருந்து, பிராணசக்தியும் சமமாக இருப்பதுவே யோக உடம்பாகும். நான் இனி அந்த உடம்பை அடையப் பாடுபடுவேன். உப்பும், புளியும் இனி எனக்கு விலக்கு. உன்னாலே எனக்குள் இன்று இந்தத் தாக்கம் ஏற்பட்டிருக்கிறது" என்று அவர் கூறியபோது,



இந்திரா செளந்தர்ராஜன்



மன்னார் ஸ்வாமிகளோட நவரத்ன மாலையும், ஸ்படிக மாலையும் தபோசக்தியோட கூடியது. அது இருக்கற இடத்துல ஒன்பது கிரகங்களும் வேலை செய்யாது.

**இறை தொடர்புகளுக்குப் பின்னாலே உடம்புக்குள்ள சம்பந்தம் எப்படி இருக்க வேண்டும் என்பதும், எப்படி இருந்தால் அந்தச் சம்பந்தம் சித்திக்கும் என்பதும் பாஞ்சாலிக்கு புரிந்து போனது!**

ருத்ராவை பார்க்கவும் ராகவ் தன் பேச்சை அப்படியே பூட்டுபோட்டது போல நிறுத்திக் கொண்டான். மாஸ்டரும் புரிந்துகொண்டார். ருத்ரா அருகில் வரவும், "வாங்க ஸார்..." என்றார். அதற்கு மேல் அவரிடம் கலகலப்பாகவோ, இல்லை விஷயபூர்வமாகவோ பேச எதுவும் இல்லை என்கிற மாதிரி பார்த்தார். ருத்ராவை பார்த்துவிட்டு ஷ்யாமளாவும் அவர்கள் அருகில் வந்தாள். பத்தாம் நாள் காரியங்கள் பக்கவாட்டில் நடந்தபடி இருந்தன. ஷ்யாமளாவின் அண்ணன் முறையில் இருந்தவர் வழி நடத்திக் கொண்டிருந்தார். ருத்ரா அதையும் கவனித்தவராக, "சாரி...

தொந்தரவுக்கு மன்னிக்கணும். நான் இப்ப உங்ககூட கொஞ்சம் பேசணுமே" என்றார்.

ஷ்யாமளா மௌனமாக அவரை அழைத்துக் கொண்டு பின் வழியாக மாடி அறை நோக்கி நடக்கத் தொடங்கினாள்.

மாடியில் நிறைய பிரம்பு நாற்காலிகள்!

அதில் ஒன்றில் அமர்ந்துகொண்ட ருத்ரா, மற்றவர்களையும் அமரச் சொன்னார். மாஸ்டர் மட்டும் உட்கார்ந்துகொண்டார். ராகவும், ஷ்யாமளாவும் நின்று கொண்டே இருந்தனர்.

"நீங்களும் உட்காருங்க"

"ப்ளீஸ் ஸார்... நீங்க வந்த விஷயத்துக்கு வாங்க..."

"நீங்க உட்கார்ந்தா எனக்கும் உங்க முகம் பார்த்து அழுத்தமாப் பேச வசதியா இருக்கும்..."

"எங்ககிட்ட பேச இன்னும் என்ன ஸார் இருக்கு?"

"உங்க கிட்ட தாம்மா எல்லாமே இருக்கு..."

- ருத்ராவின் பதிலில் ராகவ் ஒரு மாதிரி ஆடிப் போனான். அப்போது அவரைப் பார்ப்பதற்காக கீழே கோயில் பட்டர் வந்திருந்தார். வந்தவர், கோமளா மாமியை போட்ட போடில் மாமி மாடிக்கு வந்து பட்டர் பார்க்கத் துடிப்பதைக் கூறி நின்றாள்.

"அவரை இங்க வரச் சொல்லுங்க..." என்று ருத்ரா கூறியதைத் தொடர்ந்து அவரும் மேலே அந்த அறைக்கு வந்து சேர்ந்தார். ருத்ராவைப் பார்த்தமாத்திரத்தில், "என்ன ஸார் இது அநியாயம்... நான் குளத்துல போட்ட எங்க கோயில் சாளக்ராமங்களை அந்த பைராகி குளத்துல இறங்கி எடுத்துண்டு போய்ட்டாராமே...? உங்க போலீஸ்காரவங்களால கூட அவரைத் தடுக்க முடியலையாமே...? என்ன ஸார் இது அநியாயம்?"

- அவர் பேசும்போது உடம்பெல்லாம் பதறுவது நன்றாகத் தெரிந்தது.

"ஓ... அதுக்குள்ள உங்க வரையில விஷயம் வந்துடிச்சா?"

"ஏன் வராம..? இது என்ன மெட்ராஸ் மாதிரி பெரிய சிட்டியா..? நாலும் நாலும் எட்டு தெரு, இரண்டு கோயில், ஒரு குளம்னு இருக்கற சின்ன கிராமம்தானே ஸார்...!"

"கவலைப்படாதீங்க... நாங்க அவரை நெருங்கிட்டோம். கட்டாயம் எங்க கிட்ட பிடிபடுவார்..."

"என்னத்த கிட்ட நெருங்கிட்டேன்... உங்க போலீஸ்காரா இருக்கும்போதே குளத்துல இறங்கி சாளக்ராமத்தை எடுத்துண்டு போறார் அவர். உங்களால அவரைப் பிடிக்க முடியல... இதுல எதை வெச்சுண்டு, 'நெருங்கிட்டோம்... பிடிச்சிடுவோம்'னுல்லாம் சொல்றேள்..?"

"சரி... அவரை எங்களால எதுவும் பண்ண முடியாது... நாங்கெல்லாம் வெத்துவேட்டுகள்னு சொன்னா உங்களுக்குத் திருப்தியா இருக்குமா?"



- ருத்ராவின் அதிரடியான மடக்கல், பட்டரை கொஞ்சம் தடுமாறிப் போகச் செய்தது. அவர் பேசியதை வைத்தே அவர்களும் நடந்ததைத் தெரிந்து கொண்டிருந்தனர்.

"என்ன ஸார் இது? ஏற்கெனவே அன்புமணி தங்கையான கோமதியைக் காணோம். அவளோட சேர்ந்து மன்னார் ஜீவசமாதியை பராமரிச்சுண்டு வந்த தாண்டவராய சாமியையும் காணோம். இப்போ குளத்துல இருந்த சாளக்ராமமும் போயாச்சா?" -மாஸ்டர் வரிசைப்படுத்தினார்.

"மாஸ்டர் தேவராஜ்... இவைகளோட திரௌபதி அம்மன் கோயில் மரப்பெட்டியையும் சேர்த்துக்குங்க.. அதுவும் காணோம்..." -ருத்ராவே எடுத்துக் கொடுத்தார்.

"மை காட்... அப்ப பூசாரி என்ன ஆனார்?"

"பாவம் பூசாரி... அவர் என்ன பண்ணுவாரு?"

"அப்ப அதுவும் பைராகியோட வேலையா?"

"வேற யார்...? தொடக்கம் முதலே ஆதியந்தம் எல்லா குழப்பங்களுக்கும் காரணம் அவர் ஒருத்தர் மட்டும்தானே"

"தெரிஞ்சும் அவரை பிடிக்காம இங்க வந்து எங்க கூட பேச உங்களுக்கு என்ன இருக்கு ஸார்?"

"இங்கதானே ஷ்யாமளா இருக்கா?"

"ஷ்யா... ஷ்யாமளாவுக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம்?"

"என் யூகம் சரியா இருந்தா பைராகியோட அடுத்த குறி ஷ்யாமளா மேடமாத்தான் இருக்கணும்..."

- ருத்ராவின் யூகம் ராகவையும், மாஸ்டரையும் மின்சாரத்தைத் தீண்டியதுபோல ஆக்கியது.

"இப்படி வரிசையா எல்லாரையும் கடத்திண்டு போய் அந்த பைராகி என்ன பண்ணப் போறார்?"- பட்டர்தான் கேட்டார்.

"பொதுவா மனிதர்களைக் கடத்தினாலே அது பிளாக் மெயிலுக்காகத்தான்கறது எங்க டிபார்ட்மென்ட் சொல்ற அனுபவம்.."

"இவர் பிளாக்மெயிலை யார்கிட்ட பண்ணுவார்? லட்சத்தைக் கொண்டா, கோடியைக் கொண்டான்னு யார்கிட்ட போய் கேட்பார்...?"- பட்டருக்கு தலையைச் சுற்றியது.

"என் போலீஸ் வாழ்க்கைல நான் பலவிதமான குற்றவாளிகளைப் பார்த்துருக்கேன். இதுல பைராகி தனி ரகம். அவரை அவசரப்பட்டு குற்றவாளின்னும் சொல்ல முடியாது. குற்றவாளி இல்லைன்னும் சொல்ல முடியாது. இப்பகூட அவரோட செயல்பாடுகளுக்குப் பின்னால் நாமெல்லாம் கொஞ்சம்கூட யூகிக்க முடியாத ஏதாவது ஒரு விஷயம் இருக்கலாம்..."

- ருத்ரா சொல்லிக் கொண்டிருக்கும்போதே ஷ்யாமனாவின் செல்ஃபோன் அலறியது.

"அனேகமா அவராகத்தான் இருக்கணும்" என்றார் ருத்ரா. ஷ்யாமனாவும் குரல் கொடுத்தாள்.

"ஹலோ..."

"ஷ்யாமனா நான் பைராகி பேசறேன்..."

"பைராகி.."- அதிர்வோடு சரியாக யூகித்த ருத்ராவைதான் உடனே திரும்பிப் பார்த்தாள் ஷ்யாமனா. அவரோ சைகையால் 'பேசு பேசு' என்று தூண்டினார். தன் செல்ஃபோனை எடுத்து ஸ்பீக்கர் ஃபோனை ஆன் செய்து அதேபோலவும் செய்யச் சொல்ல ஷ்யாமனாவும் அப்படியே செய்தாள்.

"என்னம்மா ஸ்பீக்கர் ஃபோனை போட்டுட்டியா..? சபாஷ்! அந்த போலீஸ்காரருக்கு இப்படி எல்லாம் சொல்லித்தரதுன்னா ரொம்பவே கொண்டாட்டம்! போதாததுக்கு உன்கூட கோயில் பட்டாச்சாரி வேற... ஒரு பக்கம் பத்தாம் நாள் காரியம்- இன்னொரு பக்கம் என்னைப் பத்தின தீவிர ஆலோசனை... அப்படியே நான் பேசற இந்த ஃபோன் நான் எங்க இருந்து பேசறேன்னும் காட்டிக் கொடுக்கும்கறதால போலீஸுக்கும் இன்ஸ்ட்ரக்ஷன், சரிதானே?"

- பைராகி பலூனை பட்டன் தோட்டாக்களால் சுட்டுத் தாளிப்பது போலக் கேட்ட கேள்விகள் எல்லோரையும் ஒரு மிரட்டு மிரட்டியது.

"சபாஷ் பைராகி... நீங்க ஒரு மாய மந்திர ஆசாமின்னு தான் நினைச்சிருந்தேன். உங்களுக்கு பிரமாதமான ஐ.க்யூவும் இருக்கு. உக்காந்த இடத்துல இருந்துகிட்டு இங்க நாங்க என்ன செய்துகிட்டிருக்கோம்னு பளிச்சின்னு சொல்லிட்டீங்களே... சபாஷ்!"

- ருத்ரா பாராட்டினார்.

"போதும் போலீஸ்காரரே... போதும். ஒரு நாய் செஞ்ச சில சின்ன தப்பாலதான் நீங்க உள்ள நுழையும்படி வந்துடிச்சு. உண்மைல அந்த யக்ஞன் செத்துப் போயிட்ட ஒருத்தன்! அவனைப் போட்டு புதைச்சது தமிழழகன். நாய்கள் மட்டும் பிணத்தை இழுத்துப் போடலைன்னா உங்க டிபார்ட்மென்ட்டுக்கே இந்த கண்ணமங்கலத்துல வேலை கிடையாது. ஆனாலும் அதுலயும் ஒரு நல்லதுதான் நடந்தது. எப்ப செத்துட்ட யக்ஞனுக்கு திரும்ப உயிர் வந்ததோ அப்பவே அந்த கிருஷ்ணன் கண்ணமங்கலத்துல தன் பிரவேசத்தைத் தொடங்கிட்டான். எனக்கும் நான் எதுக்கு வந்தேனோ அது கட்டாயமா நடந்தே தீரும்கற நம்பிக்கையும் வந்தாச்சு.

அதனாலதான் ரொம்பப் புனிதமான இடமா கருதப்பட்ட மன்னார் ஜீவசமாதில அவரோட திருமேனியில இருந்த நவரத்ன மாலையையும், ஸ்படிக மாலையையும் குறி வெச்சு அதை உடைச்சேன்.

ரத்னங்களுக்கு காலக் கட்டுப்பாடு கிடையாது. லட்சம் வருஷம்கூட அப்படியே தன்னிலையும் தன் சக்தியும் மாறாம இருக்கும். அதுலயும் மன்னார் ஸ்வாமிகளோட நவரத்ன மாலையும், ஸ்படிக மாலையும் தபோசக்தியோட கூடியது. அது இருக்கற இடத்துல ஒன்பது கிரகங்களும் வேலை செய்



யாது. கோள் விடுதலையைக் கொடுக்கற அந்த மாலைகள் இப்ப என் கழுத்துல...!

அது மட்டுமல்ல... கோயிலோட சாளக்ராமங்கள், கிருஷ்ணன் கையெழுத்து போட்டுக் கொடுத்த பட்டயம் உள்ள மரப்பெட்டி இப்படி கண்ணமங்கலத்தோட அவ்வளவு பொக்கிஷங்களும் என்கிட்ட! இதெல்லாம் போக ஒரு சன்யாசிக்கு சமமான தாண்டவராயசாமி, ஒரு கர்ப்பிணின்னும் ரெண்டு பேர். இந்த இரண்டு பேரையும் நான் பலி கொடுத்தா அதைவிட ஒரு பெரிய தோஷம் இந்தக் கண்ணமங்கலத்துல இருக்க முடியாது. என்கிட்ட இருக்கற பவித்ரமான விஷயங்களும் அற்பமானவைகளா மாறிடும்.

அப்படி எல்லாம் நடக்கக்கூடாதுன்னா அது ஷ்யாமனா கைகள்ளதான் இருக்கு"

- பைராகி கொஞ்சம்கூட அசராதபடி சொல்லி நிறுத்த, சற்று முன் ருத்ராவும் ஷ்யாமனாவைப் பார்த்து, 'எல்லாம் உன் கைலதும்மா இருக்கு' என்று சொன்னது மாஸ்டருக்கும், ராகவுக்கும் நினைவுக்கு வந்தது.

"அவங்க இப்ப என்ன பண்ணணும் பைராகி..?"

"ஸ்பீக்கர் ஃபோனை கட் பண்ணிட்டு ஷ்யாமனா மட்டும் என்கூட பேசணும்..."

- ஷ்யாமனா தாமதிக்காமல் அவ்வாறே செய்தாள். பைராகியும் அவளோடு பேசி முடித்தார். ஷ்யாமனா முகத்தில் ஒரு மாபெரும் அதிர்ச்சியின் ரேகை ஓட்டங்கள்!

(தொடரும்)

## இந்திரா சௌந்தர்ராஜன்



# கிருஷ்ண தந்திரம்!

பாஞ்சாலிக்கு கிருஷ்ண தரிசனம் கிடைத்த செய்தி மன்னாரின் காதுகளுக்கும் சென்று சேர்ந்தது. மன்னார் அடுத்த நொடியே திரௌபதி ஆலயத்துக்கு வந்து அந்த மரப்பெட்டியையும் அதை தேனீக்கள் சூழ்ந்து கொண்டிருப்பதையும் பார்த்து ஆனந்தக் கண்ணீர் சிந்தினார். அருகிலேயே அவரை விடாமல் தொடர்ந்த ஜோதிடர் விட்டலாச்சார்யாரும், கோயில் பூசாரியும் மன்னாரிடமே, "ஸ்வாமி..! கிருஷ்ணனின் இந்த லீலை உங்களுக்கு எதை உணர்த்துகிறது?" என்று கேட்டனர். மன்னாரின் ஞானச்சென்னி அதற்கு எந்தவிதத் தயக்கமும், தடங்கலும் இன்றி பதிலளித்தது.

"கிருஷ்ணனே பரம்பொருள். அவன் பரமாத்மா என்றால் நாம் ஜீவாத்மாக்கள். அவனே வேதம்; அவனே நாதம். இரண்டுமே மனதை அமைதிப்படுத்தும். அமைதிதானே உயிர்களின் மூலத் தேவை. வேதமும், நாதமும் இங்கே எழுத்து வடிவிலும் சேவை சாதிக்கிறது. அதுவும் ஒரு சத்யப்ரமாணமாய்..! இதைக் கர்ப்ப சிசு போலப் பாதுகாக்கவேண்டும் என்பதே இந்தத் தேனீக்கள் நமக்கு உணர்த்தும் செய்தியாகும். அந்த சத்ய ப்ரமாணம் காட்சிக்கு உரிய ஒன்றாக மாறினால் எந்த மொழிக்குள் அது உள்ளதோ அது ஒன்றே உலகின் மொழி. மற்ற மொழிகள் மிருகங்கள் போடும் சப்தம் போல வெற்றுச் சப்தம் என்றாகி பேதம் தோன்றிவிடும். அந்தப் பரம்பொருளும் கலியின் மாயையில் சிக்கி, 'ஒரு பாஷை மட்டுமே தெரிந்த கடவுள் இவன்' என்றோ அல்லது 'இது கண்ணன் எழுதியதே அல்ல. எவனோ ஒரு சின்னன் எழுதியது' என்றும் பிறரால் மட்டுப்படுத்தப்படும். பூஜிக்க வேண்டிய ஒன்று, வாதிக்க வேண்டிய ஒன்றாகிவிடும். உள்ளடங்கிக் கிடந்தாலோ நம்பிக்கையுடையோர் எவராக இருப்பினும் அவரவர் பாஷைக்கு ஏற்ப இந்தப் பட்டயம் மனப்பார்வைக்கு உள்ளாகி பரவசத்தை மட்டுமே ஏற்படுத்தும். இதை மனிதர்களாகிய நம்மைவிட இந்தத் தேனீக்கள் உணர்ந்து வைத்திருப்பதுதான் விந்தை!" -என்று மன்னார் கூறிய போது அதில் மிக ஆழ்ந்த பொருள்!

தொடர்ந்து விட்டலாச்சார்யாரிடம் கேள்விகள் தோன்றின.

"ஸ்வாமி..! இப்படி ஒரு சத்ய ப்ரமாணத்தை திரௌபதிக்கு மட்டும் கண்ணன் ஏன் தர வேண்டும்? இந்த உலகில் தூய்மையாகப் பக்தி செலுத்தும் பாகவதர்கள் அவ்வளவு பேருக்கும் அவர்கள் விரும்பும்போது நான் காட்சி தருவேன், ரட்சிப்பேன் என்று ஏன் கண்ணன் கூறவில்லை?" - என்று ஒரு கேள்வியையும் கேட்டார்.

மன்னாரின் உதட்டில் ஒரு புன்முறுவல்!

*ஷ்யாமளா ஒருவித ஸ்தம்பிப்போடு செல்போனை முடக்குவதை ருத்ராவும் கவனித்தபடியே இருந்தார். அவனிடம் ஒரு கனத்த மௌனத்தின் தொடர்ச்சி.*

*"என்ன ஷ்யாமளா... அந்த நபர்*

என்ன சொன்னார்?"

-மாஸ்டர் அவளை அசைக்கப் பார்த்தார். ஷ்யாமளாவிடம் மௌனம் நீண்டது. ஒரு பெருமூச்சும் வெளிப்பட்டது. அந்த நொடியே ருத்ரா, வைராகி வசமாக அவளைக் கட்டிப் போட்டு விட்டதைப் புரிந்துகொண்டார்.

"என்னம்மா இப்படி மௌனமாவே இருந்தா எப்படி...? அந்த ஆள் அப்படி என்னத்த சொன்னான்?" -பட்டரிடமும் கோபம் வெளிப்பட்டது.

"அவர் ஒரு மனோவியாதிக்காரர்னு தெரியறது... ஏதோ மாயம் மந்திரம்னு கூத்தடிக்கற ஒருத்தரா மட்டும்தான் நான் இவ்வளவு நாள் நினைச்சுண்டுருந்தேன்... அப்ஸல்யூட்லி ஹி ஈஸ் எ சைகிக் பேஷண்ட்..."

"எதை வெச்சும்மா இந்த முடிவுக்கு வந்தே?"

"என்னத்த சொல்றது... நான் கிருஷ்ண பரமாத்மாவை தரிசனம் பண்ணணும். ஆசையால எனக்கு தரிசனம் பண்ணி வைக்கறார். அந்த கிருஷ்ண பரமாத்மா என்னமோ என் கஸ்டடில இருக்கற மாதிரி பேசறார்.. இதெல்லாம் என்ன பேத்தல்?"

"அப்புறம்?"

"அப்புறம் என்ன... நான் கூப்பிட்டா கிருஷ்ண பரமாத்மா அப்படியே ஓடி வந்துடுவாராம். அதனால நான் கிருஷ்ண பரமாத்மாவைக் கூட்டிண்டு அவர்கிட்ட போனா அவர் அப்புறமா அந்த மூங்கில் பெட்டியில இருந்து அந்த சாளக்ராமம்



வரை எல்லாத்தையும் திருப்பிக் கொடுத்துடுவாராம். பிடிச்சு வெச்சுண்டு இருக்கற அந்த கோமதி, தாண்டவராய சுவாமியையும் விட்றுவாராம். இல்லன்னா அவ்வளவு பேரும் அக்னிப் பிரவேசம் பண்ணிடுவானாம்..!"

- ஷ்யாமளாவின் பதிலைக் கேட்டு எல்லோரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர். ராகவ் ஒருபடி மேலே போய், "ஷ்யா... நீ சொன்னதுதான் சரி. அந்தக் கெழடு ஒரு டிசாடர் கேஸ்தான். ஐ ஹேவ் நோ டவுட். நான் கூட இங்க உங்காத்துல இருக்கற அந்தப் புல்லாங்குழலை, தான் கொண்டு வந்து கொடுத்துட்டு, எல்லாத்தையும் எடுத்துண்டும் அவங்களக் கூட்டிண்டும் போங்கோன்னு சொல்வார்னு நினைச்சேன். நல்ல வேளை..." என்ற போது ருத்ராவுக்கு கருக்கென்றது.

"மிஸ்டர் ராகவ், நீங்க எந்தப் புல்லாங்குழலைச் சொல்றீங்க?"- என்று டக்கென்று கேட்டார். அவனுக்கும் அதன்பிறகே தான் தன்னை மறந்து அவசர கதியில் அந்தப் புல்லாங்குழல் ரகசியத்தைத் தொட்டுவிட்டதும் புரிந்தது. சற்று தடுமாறியவன்,

"அது வந்து... அது வந்து... இங்க ஷ்யாமளா அப்பா ஒரு புல்லாங்குழல் வெச்சிருந்தார்... அதைக் கொண்டு அவர் செய்த அவ்வளவு கச்சேரியும் கிளாசிகலா அமைஞ்சிருக்கு... அதைத்தான் கேக்கறாரோன்னு நினைச்சு சொன்னேன்..."- என்றான். அவனது தடுமாற்றம், வார்த்தைகளைத் தேடிய விதம், அவனது பாடி லாங்வேஜ் எல்லாமே அவன் புளுகுகிறான் என்று ருத்ராவுக்குள் ரீங்காரமிட்டன. கிட்டத்தட்ட மாஸ்டரும் அப்படியே தான் நினைத்தார். பட்டர் மட்டும், "நான்கூட அந்த கிருஷ்ணர் வாசிச்சுட்டு மன்னார் சாமிகிட்ட கொடுத்த அந்த வைகுண்ட மூங்கிலைத்தான் கேக்கறாரோன்னு நினைச்சுட்டேன்" என்றார்.

"வைகுண்ட மூங்கிலா?" -ருத்ரா வாயைப் பிளந்தார்.

"ஆமாம்ஸார்... புல்லாங்குழல்ங்கறது கத்த நேர் தமிழ் பதம். மூங்கில் வந்து புல்லோட சேர்ந்த ஒரு தாவரப் பயிர்தானே? அப்படிப்பட்ட புல்லானது முத்தி மூங்கிலாகி, மனசை மயக்கற ஒரு குழலா இருக்கற காரணத்தால புல்லாங்குழல்னு பேர் வந்ததா சொல்வா? ஆனா கிருஷ்ணன் கை புல்லாங்குழல், வைகுண்டமான பாற்கடல்ல விளைஞ்சதுங்கற அர்த்தத்துல அதை வைகுண்ட மூங்கில்னு சொல்வோம்"

"நீங்க சொல்றது உண்மையோ பொய்யோ தெரியாது. ஆனா ரொம்ப இன்ட்ரஸ்டிங்கா ரசிக்கற மாதிரி இருக்கு. ஆமா அப்படி ஒண்ணு இந்த ஊர்ல இருந்ததா என்ன?"

"இருந்ததாவா...? சரிதான்... இப்பவும் இருக்குங்கறதுதான் எங்களைப் போல அந்தப் பெருமாளையே தியானிச்சிண்டு இருக்கறவாளோட கருத்து... இந்த ஊர்ல ஒரு 300, 350 வருஷத்துக்கு முன்னால் அப்படி ஒரு குழல் இருந்து எப்படி எல்லாம் இங்க அற்புதங்கள் நடந்தது தெரியுமா?"

- பட்டர் பரவசமாக பேசப் பேச ராகவுக்குள் பயம் உருவாகத் தொடங்கியது. எங்கே, அங்கே தொட்டு இங்கே தொட்டு அவர் அருகே வந்து விடுவாரோ என்று பயந்தவன், "பட்டாச்சாரி.. போதும்! அடுத்து என்ன செய்யறதுன்னு பேசுவோம். ஷ்யாமளா நீ என்ன பண்ணப் போறே?"

"நான் என்ன பண்ணமுடியும்...? அந்த மனுஷர் தான் உளறித் தள்ளாறுனா நீயும் கேள்வி கேட்கறே...?"

"சீ... நான் என்ன சொல்றேங்கறதக் கேட்டுக்கோ. இந்த விஷயத்துல நம்ம கைல எதுவுமில்ல. இனி எல்லாம் ருத்ரா ஸார் கைலதான் இருக்கு. ஸார் நீங்கதான் அந்த டிசாடர் பைராகியை பிடிச்சு பனிஷ் பண்ணனும். ஒரு நபர், பிரச்சினை பண்றதுக்கும் ஒரு அளவு இருக்கு. நீங்க அவரைத் தேடாம இங்க வந்தது கொஞ்சமும் சரி இல்லை..."

- ராகவ் ஒரு தீர்மானத்தோடு பேசினான்.

"அப்படியா?"- ருத்ரா திருப்பிக் கேட்ட விதமே வேடிக்கையாக இருந்தது.

"என்ன அப்படியா? கிருஷ்ணனை கூட்டிகிட்டு வான்னா எந்த கிருஷ்ணன்? அடுத்து அந்தாள் எங்க இருக்கான்னும் தெரியாது... ஏ ஷ்யாமளா... அந்தாள் தான் எங்க இருக்கேன்னு ஏதாவது சொன்னானா?"

"நோ பிராப்ளம் ராகவ்... இந்த நொடி அவர் இருக்கற இடத்தை என் டிபார்ட்மெண்ட் நோட் பண்ணியிருக்கும். இந்த ஊர்ல இருந்து அவ்வளவு செல்ஃபோனையும் கண்காணிக்க நான் எப்பவோ உத்தரவு போட்டாச்சு.. இன்ஃபாக்ட் இந்த உண்மை பைராகிக்கும் தெரியும். நாமெல்லாம்

> "அம்மாடி... எனக்கென்னமோ உன்னாலதான் எல்லா சிக்கலும் தீரும்னு தோணறது. எல்லாத்தையும் விஞ்ஞானமாவே யோசிக்காம கொஞ்சம் நம்பிக்கை அடிப்படைல யோசி.

அவரை நெருங்கினாலும் அந்த நபர் அதுக்கெல்லாம் அசர மாட்டார். அங்கேயும் எங்களை ஏமாத்த ஏதாவது மேஜிக் பண்ற தைரியம் அவருக்கு உண்டு. ஆக, அவரை வளைக்கறது ஒரு விஷயம் இல்லை. அவர்கிட்ட இருக்கற விஷயங்களை ஒரு பிராப்ளமும் இல்லாம மீட்கறதுதான் விஷயம்."

"இவ்வளவு தூரம் சொல்ற நீங்களே முதல்ல அதைச் செய்யுங்க ஸார்... என்ன ஸார் பெரிய மேஜிக்...?"

- ராகவ் ருத்ராவை தூரத்துவதிலேயே குறியாக இருந்தான்.

"என்ன ராகவ்... நான் இப்பப் போகணுமா? நான் போய் அவரை எந்தப் பிரச்சினையும் இல்லாம பிடிச்சுட முடியும்னு நீங்க நம்பறீங்களா?"- ருத்ரா தீர்க்கமாகக் கேட்டார்.

"ருத்ரா ஸார்... நான் கேட்கறதுக்கு பதில் சொல்லுங்க. ஷ்யாமளா இப்ப என்ன செய்யணும்?"- மாண்டர் கேட்டார்.

"அப்படிக் கேளுங்க... அந்த நபர் திரும்ப நிச்சயமா ஷ்யாமளாவை தொடர்பு கொள்ளும்போது ஷ்யாமளாவே அவர்கிட்ட கேட்கட்டும். 'என்னால எப்படி கிருஷ்ண தரிசனம் பண்ணி வைக்க முடியும்?'னு... அதுக்கு அவர் சொல்லப் போற பதில் நிச்சயம் சாதாரண பதிலா இருக்காது... இன்ஃபாக்ட் நாம இங்க இருக்கறது தெரிஞ்சு பேசின வைராகி, இப்ப இப்படி எல்லாம் விவாதம் செய்வோம்னும் தெரிஞ்சே வெச்சிருப்பார்.

எப்ப குறிப்பிட்ட சில ஏடுகள் இல்லாம போச்சோ அப்ப அதுல பல அதிசயத் தகவல்கள் இருக்கணும். அதுதான் வைராகியையும் இப்ப இப்படியெல்லாம் செய்ய வெச்சிருக்கணும். மேம்போக்கா பார்த்தா இது ஒரு வைத்தியக்காரன் பேச்சு மாதிரிதான் இருக்கும். ஆனா ஆழமா யோசிச்சா இதுல நிச்சயம் ஆழமான பொருள் இருக்கு..."

"எந்த வகைல...?"

"அதை என்னால விளக்கமா சொல்ல முடியல.. என் இன்ட்யூஷன் அப்படிச் சொல்லுது..."

"சரி ஸார், அந்த ஆள் ஃபோன் பண்ணட்டும். அப்ப நானே அவர்கிட்ட கேட்கறேன்.. 'கடவுளோட வா!'ன்னு சொல்றது ஒரு மில்லியன் டாலர் கேள்விக்கான பதில். இதுவரை சரித்திரத்துலகூட கடவுள் தோன்றி அவரை யாரும் பார்த்ததில்லைன்னு சொல்லிப் பேசிப் பாக்கறேன்."

"அம்பி! இப்படி அவசரப்பட்டெல்லாம் உளறாதே... சமீபத்துல தியாகய்யர் அந்த ராமபிரானை தரிசனம் பண்ணியிருக்கார். அருணாகிரி நாதர் முருகப் பெருமானை தரிசனம் பண்ணியிருக்கார். அபிராமி பட்டர் அம்பாளை தரிசனம் பண்ணியிருக்கார். அவ்வளவு ஏன், இந்தக் கண்ணமங்கலத்துல மன்னார்சாமிக்கு கிருஷ்ண தரிசனம் கிடைச்சு, அதுக்குப் பிறகுதான் அவர் ஒரு மகானா ஆனார். அதுபோக பல தடவை அந்த கிருஷ்ண பரமாத்மா தரிசனம் கொடுத்துருக்கார். அது பத்தி எல்லாம் மன்னார் ஜீவ சரித்தத்துல குறிப்புகள் இருக்கு..."



- பட்டர் பொளேர் பொளேர் என்று பிளந்து கட்டுவது போல பதில் தந்தார்.

"இது எல்லாமே எப்பவோ நடந்தது, நம்பிக்கை அடிப்படையில சொல்லப்பட்ட விஷயங்கள். கிட்டத்தட்ட புராணம் மாதிரிதான் இதுவும்... இதை எல்லாம் ஜீவ சரிதம் சொன்னாலும் சரி, இல்ல ஏதோ ஒன்னு சொன்னாலும் சரி... நடக்கற வரை இது எதுவும் உறுதி கிடையாது.."

"சரி மிஸ்டர் ராகவ்.. நீங்க உங்க பாதைல போங்க. நான் என் பாதைல போறேன். உதவி தேவைப்பட்டா அவசியம் கூப்பிடுங்க... நான் புறப்படறேன்..."

- ருத்ரா சட்டென்று பேச்சை முறித்துக் கொண்டு கிளம்பினார். பட்டரும் ஷ்யாமளாவை ஏற இறங்கப் பார்த்தபடி, "அம்மாடி... எனக்கென்னமோ உன்னாலதான் எல்லா சிக்கலும் தீரும்னு தோன்றது. எல்லாத்தையும் விஞ்ஞானமாவே யோசிக்காம கொஞ்சம் நம்பிக்கை அடிப்படைல யோசி. 'கிருஷ்ணா! என்னைப் போய் உன்னைக் கூட்டிண்டு வரச் சொல்லி அந்த வைராகி சொல்றாரே...! நான் கூப்பிட்டா வரதுக்கு நீ என்ன வேலைக்காரனா?'ன்னு சும்மா நம்பிக்கை வெச்சு சண்டைபோடு. சீக்கிரம் நல்ல தகவல் வரட்டும்..." என்றபடி அவரும் விலகினார்.

ராகவ் ஷ்யாமளாவைப் பார்த்து, "ஷ்யாமளா நீ போய் முதல்ல வெளிய நடக்கற காரியங்களைக் கவனி... ஸார் கூட்டிண்டு போங்க. நான் இப்ப வந்துட்றேன்..." என்றவனாக கோமளா மாமியை நோக்கி நடக்கத் தொடங்கினான். மனதுக்குள் முதல் காரியமாக அந்தப் புல்லாங்குழலை எடுத்தே தீருவது என்னும் வைராக்யம்!

(தொடரும்)

h



விட்டலாச்சார்யாரின் கேள்விக்கு மன்னாரும் பதில் தரத் தொடங்கினார். அவர் இப்போது பழைய மன்னாரே இல்லை! அவரது பார்வை, பேச்சு சகலத்திலும் ஒரு ஞான ஒளி மின்னியது. 'கிருஷ்ணானுக்ரஹம்' என்பது ஒரு மாட்டிடையனைக்கூட மகத்தானவனாக ஆக்கும் என்பதற்குப் பெரும் சான்றாக இருந்தது மன்னாரின் பதிலும்.

'ஆச்சார்யரே..! கண்ணன் தானாகத் திரௌபதிக்கு தரிசனம் தரவில்லை. திரௌபதிதான் புத்திசாலித்தனமாகக் கேட்டு வாங்கிக்கொண்டாள். திரௌபதி வரையில் கண்ணனுக்கு ஒரே நோக்கம்தான். கொடுத்த சத்யத்தைக் காப்பாற்ற வேண்டும். இதற்கு வேறு விதமாகவும் பொருளுண்டு. சத்யம் என்பது கடவுளுக்கும் பொதுவானது. கடவுளேகூட அதைக் காப்பாற்றத் தவறிடக் கூடாது. எனவே, 'அது கடவுளைவிட மேலானது' என்பதும் இதன் மூலம் கண்ணனால் வழிமொழியப்படுகிறது.

அடுத்து, 'தூய்மையாகப் பக்தி செலுத்தும் பாகவதர்களுக்கு அவர்கள் விரும்பும் போது நான் காட்சி தருவேன் என்று ஏன் கண்ணன் கூறவில்லை?' என்று கேட்டீர்கள்.

உங்கள் கருத்து தவறானது. கண்ணன் பாகவதோத்தமர்கள் அருகிலேயே எப்போதும் உள்ளான். உங்கள் வரையில்கூட அவன் நேரிலேயே வந்து உங்கள் பாத பூஜையையும் ஏற்றுச் சென்றான். ஆனால் உங்களால் தான் அதை உணர முடியவில்லை.

'விரும்பும்போது தரிசிக்க வேண்டும்' என்னும் பதமே பிழையானது. 'அவனை விரும்பாத பொழுது' என்று ஒன்று இருக்கிறதா என்ன? அப்படியென்றால் எப்பொழுதும் அவனை தரிசித்தபடியே இருக்க வேண்டும் என்று அர்த்தமாகிறது. மனதில் அவன் பரிபூரணமாக இருந்து விட்டால் புறத்தில் அவனை எதற்குத் தேட வேண்டும்? புறத்தில் தேடும் போது 'அகத்தில் அவன் இல்லை'

# தந்திரம்!

51



எனும் பொருள் உருவாகிறதே? அவன் எங்கு இல்லை-எதில் இல்லை? அவனை தனியாக ஒரு குறிப்பிட்ட வடிவில் பார்க்க விரும்புவது என்பது ஞானமுள்ள பக்தி ஆகாது! 'அப்படியென்றால் அவன் வடிவமற்றவனா?' என்று கேட்கக் கூடாது.

தண்ணீரானது அது கொள்ளும் பாத்திர வடிவை அப்படியே எடுத்துக் கொள்கிறது. விழும் நிலத்தின் நிறத்தை அப்படியே ஏற்கிறது. காற்று, பேதமின்றி எல்லா நாசிகளுக்குள்ளும் நுழைந்து, இதயங்களை இயக்குகிறது. நெருப்பு அரசனுக்கொரு அளவு-ஆண்டிக்கொரு அளவு என்று வித்தியாசப்பட்டுச் சுடுவதில்லை. நிலம் குப்பை கூளங்களையும் தாங்குகிறது; அதே பாவனையோடு பூக்காடுகளையும் தாங்குகிறது.

பஞ்சபூதங்களே இப்படி நிறம்-மணம்-குணம் என்றில்லாமல் பொதுவில் இருப்பதால் மட்டுமே, மண்ணில் ஒரு வாழ்க்கையை நம்மால் வாழவும் முடிகிறது.

இவைகளே நிர்குணமாக இருக்கும்போது இவைகளைப் படைத்த இறைவன் ஒரு குணத்தோடு திகழ்ந்தால் நம்மால் தாங்க இயலுமா?'

- மன்னாரின் கருத்து அப்படியே சகலரையும் கட்டிப் போட்டுவிட்டது. இருந்தும் விட்டலாச்சார்யாருக்குள் ஒரு சிறு நெருடல்! 'மன்னார் சொல்வதெல்லாம் சரிதான்-அவன் நிர்குணன்தான். ஆனாலும் மன்னாருக்கு சூழல் தந்து தரிசனம் தந்ததன் பின்னே, மன்னாரிடம் ஒரு தகுதிப்பாடு இருக்கிறது. ஜாதகமும் அதை உறுதி செய்கிறது. இதன் மூலம் இறை தரிசனம்-முக்தி-மோட்ச கதி என்று சகலத்துக்கும் ஒரு முயற்சியும், அதற்கென்ற ஒரு உழைப்பும் தேவைப்படுவதும் தெரிய வருகிறது. இது கிட்டத்தட்ட பாடுபட்டால் பலனுண்டு என்றாகிறது. பாடுபடாத நிலையிலும் ஆட்கொண்டு அருளினால் அல்லவா அது இறைவனுக்கு அழகு என்பதே அவருக்குள் உருவான கேள்வி. ஏனென்றால் ஒன்றான அவனே இரண்டாகவும் உள்ளான். அதாவது குணமாய்- நிர்குணமாய்! இரண்டையும் அவன் சமமாகதானே ஆட்கொள்ள வேண்டும்?

## இந்திரா சௌந்தர்ராஜன்

மாயையில் உள்ள மனிதர்களுக்கு வேண்டுமானால் பெரியது-சிறியது, நல்லது-கெட்டது, வலியது-எளியது என்று பேதங்கள் இருக்கலாம். இறைவனுக்கு இருக்கக் கூடாதல்லவா?'

- தனது நெருடலை ஒரு கேள்வியாகக் கேட்டுவிட விட்டலாச்சார்யார் தயங்கவில்லை. இதற்கும் மன்னாரிடம் புன்னகைதான் முதலில் பதிலாக விளைந்தது!

*ராகவ் ஷ்யாமளாவையும், மாஸ்டரையும் காரியம் நடக்கும் இடம் நோக்கி அனுப்பிவிட்டு, மெல்ல சமையல் கட்டு நோக்கி நடந்தான். அங்கே கோமளா மாமி ஒரு பெரிய கூட்டத்துக்கே சமைக்க வேண்டிய பொறுப்பில் ஒருவித அவ்வாட்டுடன் இருந்தாள்.*

*அவளருகே சென்றான்!*

*மாமியும் அவனை ஏறிட்டாள்.*

*"மாமி! ஒரு முக்கியமான விஷயம்?"*

*'தெரியும்... என்ன சொல்லப் போறேன்னு தெரி*

k

யும். அந்தப் பைராகி இந்த ஆத்துல இருக்கற அந்தப் புல்லாங்குழலைக் கொண்டு வந்து தந்தா, தான் பிடிச்சு வெச்சிண்டிருக்கற அவ்வளவு பேரையும் விட்டுட்றேன்.. இல்லைன்னா அவாளைக் கொன்னுடுவேன்னு மிரட்டினாராக்கும்?"

- மாமி வாணலியில் சேப்பங்கிழங்கை வதக்கியபடியே தன் யூகத்துக்குக் கேட்டாள். ராகவ் அதை சற்றும் எதிர்பார்க்கவில்லை. ஒரு சில வினாடிகள் தடுமாறியவன்,

"ஐயோ மாமி... உங்களுக்கு ஆனாலும் பயங்கர கற்பூர புத்தி" என்றான்.

"என் புத்திய விடுங்கோ... உங்க சத்சங்கத்துல என்ன முடிவு எடுத்தேள்...?"

"அது... அது... ருத்ரா ஸார் தன் பாணியில, இந்த செல்ஃபோன்ல பேசினத வெச்சே அந்த ஆளைப் பிடிச்சுட்றேன்கற மாதிரிப் பேசிட்டுப் போயிருக்கார். ஷ்யாமளாவும் வாசப்பக்கம் பந்தல்ல இருக்கா. எனக்குள்ள இப்ப வேற மாதிரி ஒரு எண்ணம்"

"என்ன?"

"நம்மகிட்ட இருக்குற புல்லாங்குழல் மாதிரியே ஒரு ட்யூப்ளிகேட்டை எடுத்துண்டு போய் பைராகி கிட்ட கொடுத்து, அந்த ஆளுக்கு கொஞ்சம் போக்குக் காட்டலாம்னு பாக்கறேன்.."

"அந்த ஆள் ஏமாறுவாரா?"

"இது என்ன கேள்வி... எங்ககிட்ட இதுதான்பா இருக்குன்னு சாதிக்க வேண்டியதுதான்..."

"சரி செய்யுங்கோ..."

"செய்யுங்கோன்னு சொல்லிட்டு இப்படிக் காய்கறியை வதக்கினா எப்படி?"

"நான் என்ன பண்ணணும்?"

"சரிதான்... அந்தப் புல்லாங்குழலைக் கண்ணிலயாவது காட்டுங்கோ. அப்பதானே என்னால ட்யூப்ளிகேட் பண்ண முடியும்?"

"இப்ப அது கிட்டயே போக முடியாது. பூஜை அறையை தாழ்ப்பாள் போட்டு, பத்து நாள் ஆகறது. கடஸ்வீகாரம் பண்ணுறப்ப கதவைத் திறக்கும்போது மந்த்ர ஜலத்தால தீட்டுக் கழிச்சதுக்கு அப்புறம்தான் அதைக் கண்ணாலயே பார்க்க முடியும்"

- மாமி சொன்னதில் அது அந்த மாளிகை போன்ற வீட்டில் இருக்கும் பாகம் தெரிந்துபோயிற்று.

"அப்ப இன்னும் மூன்று நாள் காத்திருக்கணுமா?"

"நிச்சயமா... அதுக்குள்ள விஷயத்தை நீங்க ஷ்யாமளா கிட்ட சொல்லிட்றேளா.. இல்ல நான் சொல்லிடவா?"

"வேண்டாம்... நானே சொல்லிக்கிறேன். அதைக் காப்பாத்த வேண்டியது இனிமே என் கடமை ஆச்சே..."

"பாத்து... பக்குவமா நடந்துக்கோங்கோ. உங்க கிட்ட சொல்லிட்டு, நான் எனக்குள்ள தவிச்சுப் போனேன். எங்க அந்த ரகசியம் உங்க மூலமா வெளிய போயிடுமோன்னு ஒரே பயம் எனக்கு"

"அது சரி... என்னை என்னக் கேணப்பயல்னு நினைச்சேளாக்கும். இந்த நிமிஷம் நான் மாஸ்டர் கிட்டகூட சொல்லல... நல்லவேளை சொல்லத் தெரிஞ்சேன்.."

- ராகவ் ஒரு திணுஸாகக் கைகளை உதறிக் கொண்டான்.

"சரி, சரி... போய் அடுத்து ஆக வேண்டியதைப் பாருங்கோ... இங்க நீங்க பேசிண்டிருக்கறதை ஷ்யாமளா பார்த்தா சந்தேகப்படுவா?"

"அதுவும் சரிதான்... பைபை மாமி... ஷ்யாமளாவுக்குக் கூட இந்த கிருஷ்ண புல்லாங்குழல் விஷயம் இப்போதைக்குத் தெரிய வேண்டாம். எனக்கு எப்பச் சொல்லணும்னு தெரியும், அப்பச் சொல்லிக்கிறேன். உங்ககிட்ட இன்னொரு முக்கியமான விஷயம் கேக்கணும்..."

"சட்டுன்னு கேளுங்கோ"

"இல்ல... யக்ஞன் வந்து ஷ்யாமளாவோட தம்பிங்கற அந்த ரகசியம் உங்களுக்கு தெரியும்தானே?"

- மாமி அவன் கேட்டதை வைத்து முகம் மாறிப் போனாள். பின் மெல்லத் தலையை அசைத்தாள்.

"தான் பெத்த பிள்ளையை ஏன் செல்லப்பா ஸார் இப்படித் தெருவுல ஊர் சுத்தவிட்டார்...? அதுக்குப் பின்னாலகூட பெருசா ஏதோ ஒரு மர்மம் இருக்கறதா எனக்குத் தோணறது..."

"எனக்கு அதுபத்தி எதுவும் தெரியாது. ஆமா... யக்ஞன் இப்ப நன்னா பேசறானாமா?"

"உம்... உசுருக்கு ஆபத்தில்ல. எந்த அளவுக்கு முழு மனுஷனா நடமாட முடியும்கறது போகப் போகத்தான் தெரியும்..."

"சரி, போய் ஆகவேண்டியதப் பாருங்கோ... ஷ்யாமளா வந்துடப் போறா..." -மாமி வலிந்து விலகத் தொடங்கினாள். ஒரு அரைச் சிரிப்போடு அங்கிருந்து புறப்பட்ட ராகவின் பார்வை, அடுத்துப் பூஜை அறையைத்தான் பார்த்தது. வெளியே தாழ்ப்பாள் போட்டு ஒரு பூட்டும் தொங்கியது. 'சாவி மாமியிடம்தான் இருக்கவேண்டும்' என்றும் யூகித்துக்கொண்டான்!

ஆஸ்பத்திரிக்கு தமிழ்முகனின் குடும்பமே வந்திருந்தது. அவனிடமும் நல்ல தெளிவு! சகஜமாகத் தன் குடும்பத்தாருடன் பேசிக் கொண்டிருந்தான். ஆனால், 'எவ்வளவு யோசித்தாலும் தனக்கு சித்தப்பிரமை ஏற்படக் காரணமாக இருந்த சம்பவங்கள் நினைவுக்கு வர மறுக்கின்றன' என்றான். ஒரு மஃப்டி போலீஸ்காரர் சற்றுத் தள்ளி 'தமிழன் எக்ஸ்பிரஸ்' பத்திரிகையைப் படிப்பதுபோல அவனை நோட்டமிட்டுக் கொண்டுதான் இருந்தார்.

அவனுக்குள் கோமதியைப் பற்றிய கேள்விகள் இருந்தன. அதை எப்படிக் கேட்பது என்கிற குழப்பமும் இருந்தபோது அன்புமணியே அங்கு வந்துவிட்டான்.

தமிழ்முகனை உற்சாகமாக உட்கார்ந்த கோலத்தில் பார்த்தவனுக்குச் சற்று நிம்மதியாக இருந்தது. தமிழ்முகனுக்கும் அவனைப் பார்க்க சந்தோஷமாக இருந்தது. கூடவே நெருடலாகவும் இருந்தது.

"வாப்பா... எங்க கோமதி?"- என்று தமிழழகன் அப்பா பளிச்சென்று கேட்கவும், தமிழழகனுக்கு தனது காதல் அவர்கள் வரையில் உடைந்து அதை அவர்கள் அங்கீகரித்துவிட்டதும் விளங்கிவிட்டது!

சற்று கண்கள் கலங்கிட, கொஞ்சம் குற்ற உணர்ச்சியோடு அன்புமணியை வெறித்தான். அன்புமணி அவர் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லத் தெரியாதவனாக திகட்டலோடு நிற்க, தமிழழகனே வாய் திறந்தான்.

"அன்பு...என்னைமன்னிச்சிடு! ஆமா கோமதி வரலையா?"

"அவ இப்ப எங்க கூடவே இல்ல தமிழ்..."

- அன்புமணியிடம் குரல் உடைந்து போனது.

"என்னப்பா சொல்றே?" பாய்ச்சலோடு வந்தார் தமிழழகனின் அப்பா மருதாசலம். அவனும் நடந்தவைகளை அவர்களிடம் சொல்லி முடித்தான். மருதாசலம் வாயைப் பிளந்துவிட்டார்.



"அடக் கிரகமே... என் மையனுக்குச் சரியான உடனே, இப்ப என் மருமகனுக்கு சிக்கலா? எனக்கு எப்பவும் ஏதாவது ஒரு சிக்கல் இருந்துகிட்டே இருக்கணுமா? இதுக்கெல்லாம் முடிவே இல்லையா?"

- அவர் புலம்பத் தொடங்கிவிட்டார். தமிழழகனுக்கும் தவிக்கத் தொடங்கியது. உட்கார்ந்த நிலையில் இருந்தவன் எழுந்து நிற்க முயன்றான்.

"ஐயோ எதுக்கு எழுந்திருக்கிறே?"

"இப்பகூட இங்க உக்காந்துக் கிடக்க, நான் என்ன பொண்டுகளா...? அந்தக் கிழட்டு மந்திரவாதிப் பயல, பிச்சு பீடா போட்டாதான் என் மனசு அடங்கும்..." என்றும் கொந்தளித்தான்.

"எலேய்... அந்த ஆள் உன்னை மயக்கி வெச்சிருந்து, நீயும் அவன் சொன்னதுக்கெல்லாம் ஆடினவன்தான். இப்ப எந்தத் தைரியத்துல எழுந்திரிச்சிகிளம்பிட்டே?"

"சும்மா இருங்கப்பா... அந்த ஆளை யாராலயும் நெருங்க முடியாமப் போகலாம். ஆனா நான் அப்படி இல்லை. பாத்துட்றேன் ஒரு கை..."

"அவசியமில்லை தமிழ்! போலீஸ் ஆஃபீஸர் ருத்ரா, பெரிய அளவுல தேடிகிட்டு இருக்காரு. நானும் கம்ப்ளெயிண்ட் கொடுத்துருக்கேன். சீக்கிரம் நல்ல சேதி வரும்னு நம்பிகிட்டு இருக்கேன்..." எனும் போதே அன்புமணியின் செல்ஃபோன் அலறியது. எடுத்துப் பார்த்தான். அழைத்தது ருத்ராதான்!

"ஸார்தான் கூப்பிட்றாரு" என்று உற்சாகமானான்.

"ஸார், சொல்லுங்க ஸார்.."

"எங்க இருக்கே அன்புமணி?"

"ஆஸ்பத்திரில தமிழழகன்கூட ஸார்..."

"தமிழ், நல்லா பேசறானா..? ஒண்ணும் பிரச்சினை இல்லையே?"

"ஒரு பிரச்சினையும் இல்ல ஸார்... தங்கச்சி காணாமப் போனது தெரிஞ்சு அந்தப் பைராகி மேல கோபத்துல இருக்கான்..."

"நானும் அது சம்பந்தமாதான் கூப்பிட்டேன்... அந்தப் பைராகி இருக்கற இடம் தெரிஞ்சுபோச்சு அன்புமணி. உங்க ஊர்ல இருந்து புதுக்கோட்டை போற வழியில, சரியா ஏழாவது கிலோமீட்டர்ல ஒரு பம்ப்செட் கிணறோடு சோள வயல் ஒண்ணு இருக்கு. அங்க இருக்கற ஒரு குடிசைக்குள்ளதான் இருக்காரு. உன் தங்கைக்கும், தாண்டவராயசாமிக்கும் எந்த ஆபத்தும் இது வரை இல்லை. ஆனா அந்த ஆள் ஒரு வேடிக்கையான டிமாண்டை வெச்சருக்கான். அதுவும் ஷ்யாமனாகிட்ட..."

"என்ன ஸார் அது?"

"நான் ஃபோன்ல சொல்றத விட, நீயே போய் ஷ்யாமனாவைப் பார். அவ சொல்வா... அப்பத் தெரியும்"

"ஸார்... அந்தப் பைராகி இருக்கற இடம்தான் தெரிஞ்சு போச்சே... போய்ப் பிடிக்காம பேசிகிட்டிருக்கீங்களே ஸார்..."

"ஷ்யாமனா தவிர யார் கிட்டப் போனாலும், அவங்களும் பணயக் கைதி ஆயிடுவாங்க... இது முதல் விஷயம். அடுத்து அந்த நபர், அவங்க ரெண்டு பேரையும் என்ன வேணா செய்யலாம். ஆகையால ஜாக்கிரதையாதான் அணுகணும்..."

"சரி, அந்த டிமாண்ட் ஸார்..."

"அதான் ஷ்யாமனாவைப் பாருன்னு சொன்னேன்ல...?"

- ருத்ரா தன் போலீஸ் புத்தியை அழகாகக் காட்டத் தொடங்கினார். இனி அன்புமணி ஷ்யாமனாவைப் பார்த்து, இருக்கும் இடத்தைச் சொல்லிவிட்டு அவனோடு நிச்சயம் அந்தச் சோள வயல் பம்ப்செட் நோக்கிச் செல்வான் என்பது அவர் யூகம். அப்படி அவர்கள் இருவரும் செல்லும்போது நிச்சயம் விஷயம் ஒரு நல்ல ஷேப்புக்கு வரும். அப்போதுதான் போலீஸ் தன் வேலையைக் காட்ட வேண்டும் என்று கணக்குப் போட்டவர், "உடனே புறப்படு..." என்றார். அவனும் புறப்பட்டான்!

(தொடரும்)



விட்டலாச்சார்யார் விடாமல் கேட்ட அவ்வளவு கேள்விகளுக்கும் மன்னாரிடம் மிகத் தெளிவான பதில்கள் இருந்தன. அவர் இறுதியாகக் கேட்ட கேள்வியின் சுருக்கம் இதுதான்.

"பக்தனை இறைவன் ஆட்கொள்வதில் ஆச்சரியப்பட ஏதுமில்லை. அது ஒரு தாய், தான் பெற்றெடுத்த பிள்ளைமேல் பாசம் காட்டுவது போன்றது. ரத்தச் சம்பந்தமே இங்கே சகலத்தையும் பார்த்துக் கொண்டுவிடும். ஆனால் அவ்வாறு இல்லாத ஒரு நாத்திகனை அவன் ஆட்கொள்கிறானா?" என்பதைத்தான் அவர் தனக்குத் தெரிந்த பாணியில் கேட்டார்.

அதற்கு மன்னாரும் தானறிந்த விதத்தில் பதிலளித்தார். "ஜோதிடரே! நீரை அப்படியே பருகுவது கஷ்டம். கொதிக்க வைத்துவிட்டால் ஆறும் வரை காத்திருக்கத்தான் வேண்டும். குற்றம் நீரிடம் இல்லை. கொதிக்க வைத்தது நம் செயல். அடுத்து சூடு தாங்காததும் நம் தேகமே.. எனவே இங்கே தடை நாம் தானேயன்றி அவனில்லை" என்றார்.

விட்டலாச்சார்யார் அதை ஏதோ விளங்கிக் கொண்டார். அப்படியே அதை எல்லாமும் மன்னார் ஜீவ சரிதத்தில் குறிப்பிடவும் செய்தார். அவ்வளவையும் இந்த உலகம் அறிய வேண்டுமே..!

அதில் இந்த வாத-பிரதிவாதங்கள் விரவிக் கிடந்தன. அப்படியே மன்னாருடன் இருந்தபடியே குழலிசையால் உண்டான அற்புதங்களையும், அந்த அற்பு



## 52

# கிருஷ்ண தந்திரம்!

தங்களுக்குப் பின்னால் இருந்த ராகங்களையும்கூடக் குறித்து வைத்தார். அதற்கு 'சப்த முகுந் தம்' என்கிற தலைப்பு ஒரு அதி காலை வேளையிலே தூக்கம் கலைந்தபோது உதித்தது.

காலம் இப்படியே சென்றுவி டுமா என்ன?

மன்னாருக்கு தன் காலம் முடியப் போவது தெரிய வந்தது. ஞானிகள் முடிவு நாளை அறிந்து கொண்டுவிடுவது என்பது, ஐந்தையும் மூன்றை யும் கூட்டினால் எட்டு வருமே அதுபோல ஒரு சாதாரணக் கணக்குதான்!

அதே கணக்கைக் கொண்டு, தனக்குப் பின் கண்ணமங்கலம் எப்படி எல்லாம் தொடரும் என்று கணக்குப் போடுவதும் சுலபம்தானே? அப்படி ஒரு கணக்கை மன்னார் போட்டபோது கொஞ்சம் அதிர்வு, கொஞ்சம் சிரிப்பு, கொஞ்சம் மகிழ்வு என்று எல்லா உணர்வுகளும் கலந்தே வெளிப்பட்டன!

அன்புமணி, ருத்ராவின் தொலைபேசி செய் தியை அடுத்து உடனேயே புறப்படத் தயார் ஆனான். வாசலில் கட்டிலில் படுத்திருந்த அவன் தந்தை, அவனது வேகம் பார்த்து, "எங்க புறப்பட் டுட்டே..?" என்று கேட்கவும் தேங்கி நின்றான்.

"புறப்படும்போது கேட்டது தப்புதான் அன்பு... மன்னார்சாமி படத்தைப் பார்த்துக் கும்பிட்டுட்டுப் போ. வேற ஒண்ணும் வேண்டாம்... போற காரியம் ஜெயமா முடியும்" என்றார்.

- அந்தப் பதில் அவனுக்கும் சற்று தெம்பைத் தந் தது.

"ஜெயமாத்தாம்ப்பா முடியணும்- முடிச்சாகணும். அதே சமயம் ஒரு விஷயத்தைத் தெரிஞ்சுக்க... நம்ம மன்னார் சமாதி இப்ப முன்ன மாதிரி இல்ல. அது இரண்டா பொளந்துகிட்டு கிடக்குது. உள்ள இருக் கற எலும்பெல்லாத்தையும் போலீஸ் எடுத்திருக்கு... காவல் பாம்பையும் அந்தப் பைராகி சன்யாசி கொன்னு போட்டுட்டாரு..."

"அடக் கொடுமையே... நீ சொல்றதெல்லாம் நெஜமா அன்பு?"

"இதுல எதுக்குப்பா நான் பொய் சொல்லப் போறேன்..."

"கொடுமையே... கொடுமையே... ஊருக்கே காவலா இருந்த சமாதியைக் கூடவா அந்த ஆள் விட்டு வைக்கல...? அதுல என்ன இருக்குன்னு அந்த ஆள் அதுல கை வெச்சான்..?"

"அவன் கை வெச்சதை விடு... நம்ம மன்னார் சாமிக்கு சக்தி எங்கே போச்சு? ஊரையே காப்பாத் தற அவரால, அவர் சமாதியைக் காப்பாத்திக்க முடி யாம போச்சே...?"

"ஏலே! நீ என்ன இந்தப் பகுத்தறிவு பேசறப் பசங்க மாதிரி பேசறே..? அவர் எதுக்குடா காப்பாத்திக்க ணும்? ஆறு, குளம் மாதிரிடா பெரியவங்க ஜீவச மாதி. நாம நம்ம தேவைக்கு அதைப் பராமரிச்சு வெச் சுக்கறோம். இது நம்ம தப்பு..."

"என்ன தப்போ? உலகத்துலயே நம்ம ஊர்லதான் அந்தக் கிருஷ்ணசாமி நேர்லயே வந்துருக்காருன்னு கித்தாய்ப்பா பேசிக்கிறோம். அந்தச் சாமி கோயிலே மூடிக்கிடக்கு. பூஜை வேற நின்னு போச்சு... போதாக்குறைக்கு திரௌபதி கோயில் மூங்கில் பெட்டியும் களவு போய், அந்தக் கோயில் குளத்து மீன்களெல்லாமும் செத்துப் போச்சு.

நடந்திருக்கற எதுவும் நல்ல விஷயமே இல்லை. போலீஸ் ஆஃபீஸர் ஒருத்தரே மண்டையப் பிச்சு கிட்டு அலையறாரு. அவர் என்னைப் பார்த்து கேட்ட கேள்விக்கெல்லாம் என்னால பதிலே சொல்ல முடியல. அப்படி ஒரு கேள்வி!"

"அன்பு... நீ இப்ப என்னடா சொல்ல வாரே?"

"உருப்பட்ற வழிய பாப்போம்கறேன். இந்தக் கோயில், சமாதி, லொட்டு லொசுக்குன்னு அந்தக் காலத்துலயே நின்னுடாம, வேகமா முன்னே போவோம்கறேன்..."

"இதோ பார்... நேரத்துக்குத் தகுந்த மாதிரி பேசறதுதாம்ப்பா நமக்கெல்லாம் வழக்கம். பிள்ளை பெக்கையில ஒவ்வொரு பொம்பளையும் புருஷனைக் கிட்டயே சேக்கக் கூடாதுன்னுதான் நினைப்பா... சுடுகாட்டுக்கு உறவுக்காரங்க காரியத்துக்குப் போய்ட்டு வர்றப்ப நமக்கும், 'என்ன பெரிய வாழ்க்கை?'ன்னுதான் தோணும். அதெல்லாம் இரண்டு நாள்கூட நிக்காது. ஊதுபத்தி புகை பாத்துகிட்டே இருக்கும் போதே கரைஞ்சிட்ற மாதிரி கரைஞ்சு நாம வாழதான் இந்த உலகமே இருக்குன்னு புத்தி நினைக்கும். நீ இப்பப் பேசறதும் அப்படிதான். இது இந்த நேரத்துப் பேச்சு. அவ்வளவு தான்!

இந்த மாதிரி பேசின ஆள்தான் உன் பெரிய மாமா முறைல உன்ன தாண்டவராயசாமி. இப்ப அந்த ஆள் காசிக்குப் போயிருக்கான். அவன் மட்டும் இருந்துருந்தா, சமாதில இப்படியொரு தப்பு நடந்திருக்கவே நடந்திருக்காது. தெரிஞ்சுக்கோ..."

- அன்புமணி அதைக் கேட்டு அந்த நிலையிலும் சிரித்துவிட்டான்.

"என்ன சிரிக்கறே?"

"சிரிக்காம...? தாண்டவராயசாமி காசிக்குப் போய்ட்டு எப்பவோ வந்தாச்சு. அந்தப் பைராகிக் கெழவன் கடத்திகிட்டுப் போயிருக்கறது நம்ம கோமதியை மட்டுமில்ல, மாமாவையும்தான்!"

"நெசமாவா?"

"சரி, உன்கிட்ட நான் பேசிகிட்டுக் கிடந்தா பொழுதுதான் வெட்டியாப் போகும். நான் கிளம்பறேன்..."

- என்றவன் சிறிது தூரம் வெளியே சென்றுவிட்டு திரும்பி வந்து அவன் அப்பா விருப்பத்துக்காக மன்னார் ஜீவசமாதி புகைப்படத்தை ஒரு பார்வை பார்த்தபோது, 'சொத்'தென்று பின்பக்கத்தில் இருந்து அங்கே அவன் போட்டு வைத்திருந்த புல்லாங்குழலும் விழுந்தது. 'என்னை எடுத்துக்கொள்' என்று அது கூறுவது போல இருந்தது.

குனிந்து கையில் எடுத்துக் கொண்டவன் திரும்ப, அந்தப் படத்துக்கு பின்னாலேயே அதை வைக்க முயன்றபோது, வெளியே அவன் அப்பாவிடம் இருந்து பலமான இருமல்! இதயம் தன்னைக் கிழித்துக் கொண்டதைப் போல இருந்த அந்த இருமல் சப்தம், அவனை வாசல் பக்கம்தான் முதலில் ஓடவிட்டது. கையில் குழலோடு ஓடி வந்தவன், அவர் மார்பை வேகமாகத் தடவி விட விரும்பி, கை வசம் இருந்த குழலை அப்படியே சட்டையை உயர்த்தி இடுப்பில் செருகிக் கொண்டான்; அவர் நெஞ்சையும் தடவிவிட்டான். அவரும் சற்று அமைதியாகி, 'சரிப்பா நீ கிளம்புப்பா.. கோமதிய எப்படியாவது மீட்டுகிட்டுவாப்பா... புறப்படு, புறப்படு..." என்றார்.

அவனும் புறப்பட்டான். அவன் விரும்பாமலே, அவனுக்குத் தெரியாமலே அந்தக் குழலும் அவனுடன் பயணப்பட்டது!

## சோலையில் குடிசை!

பைராகி அந்த மரப்பெட்டியைத் திறக்க முயன்று கொண்டிருந்தார். பற்பல வருடங்களாகத் திறக்கப்படாத நிலையில் அது இறுகிக் கொண்டிருந்தது. பக்கத்திலேயே ஒரு ஓலைப் பெட்டியில் அந்த சாளக்ராமங்களும் இருந்தன.

அங்கே வந்ததில் இருந்தே அந்தப் பெட்டியைத் திறப்பதில் குறியாக இருக்கும் பைராகியைப் பார்த்த தாண்டவராயசாமிக்கு சிரிப்புதான் வந்தது.

மன்னார்சமாதியில் கண்டெடுத்த நவரத்ன மாலை கழுத்தில் மின்னிக் கொண்டிருந்தது. கோமதி ஒரு மலைப்புறா போல ஓரமாக ஒரு பஞ்சாரக் கூடை மேல் உட்கார்ந்தபடி இருந்தாள்.

பைராகி அந்தப் பெட்டியை உடைப்பது என்கிற முடிவுக்கு வந்துவிட்டார். அதன் நிமித்தம் ஏதாவது ஆயுதம் கிடைக்காதா என்று அவர் தேடிய போதும் தாண்டவராயசாமியிடம் சிரிப்பு!

அது பைராகியை கிள்ளியது!

"எதுக்கு இப்படி நடு நடுவுல சிரிக்கறே?"

"இல்ல. நீங்க என்ன பண்றீங்கன்னு பார்த்தேன். எங்கள வேற என்னமோ கொள்ளக்காரங்க கடத்திகிட்டு போவாங்களே, அப்படிக் கடத்திகிட்டு வந்து வெச்சிருக்கீங்க..."

"அதை நினைச்சு நீ சிரிக்கக் கூடாது; சந்தோஷப்படணும். ஏன்னா எல்லாரும் காசு பணத்துக்காகவும், தங்கம், வைரத்துக்காகவும்தான் கடத்துவாங்க. ஆனா நான் உங்களை கிருஷ்ண தரிசனத்துக்காகக் கடத்தியிருக்கேன்..."

"நினைச்சேன்... அவ்வளவு ஏட்டையும் படிக்கச் சொன்னப்பவே நினைச்சேன்... நவரத்னமாலை கோள்களை வெற்றி கொள்ளக் கூடியதுன்ன உடனே, சமாதியை உடைச்சு அந்த மாலையை எடுத்துத் தரச் சொன்னீங்க; தந்தேன். காவலுக்கு இருந்த நாகத்தையும் அடிச்சுக் கொன்னேன். இப்ப பெட்டியைத் திறக்க முடியாம கஷ்டப்படறீங்க. இதுல பெரிய மந்திர, தந்திர, யந்திரக்காரன்கற பவுசு வேற..."

- தாண்டவராயசாமியின் பேச்சில் லேசான கிண்டல்.

"ஏய்... என்ன சொல்றே நீ? இப்பவே இந்தப் பெட்டியை நான் என் ஏவல் தேவதையைக் கொண்டு சுக்கு நூறா உடைச்சிடுவேன். ஆனா இங்க நான் எந்த யந்திர, மந்திர, தந்திர வித்தையையும் காட்ட விரும்பல... புரிஞ்சுக்கோ..."

"ஆனா எங்கள மட்டும் வசியப்படுத்தி, உங்க எல்லா எடுபிடி வேலைகளையும் செய்துப்பீங்க. அப்படித்தானே?"

"நீ அதிகம் பேசறே... உன்னை ஸ்தம்பிதம் பண்ணாதான் சரிப்பட்டு வருவே..."

"ஸ்தம்பிதம்னா?"

"பண்றேன் பாரு.."

- வைராகி தாண்டவராயசாமியைப் பார்த்து ஏதோ மந்திரங்களை முணுமுணுத்திட, தாண்டவராயசாமி முகத்தில் நிர்மலமான ஒரு புன்னகை. வைராகி தன் கையால் ஒரு முத்திரை ஏற்படுத்தி, ஏதோ பிரயோகிப்பதைப் போல் கையை விசையோடு அசைத்தார்.

தாண்டவராயசாமி சிரித்துக் கொண்டே இருந்தார். அப்படியே, "ஒரு பருப்பும் இனிமே வேகாது.. உன் மந்திரம், தந்திரம்லாம் மனசு தைரியமில்லாதவன் கிட்டதான். உறுதியானவனை உன்னால எதுவுமே பண்ண முடியாது."

- தாண்டவராயசாமி பேசிக்கொண்டே எழுந்து, சோள வயலுக்குள் நடக்கப் போனார்.

"நில்லு... எங்கேயும் போகாதே. நீ இப்ப என் பணயக் கைதி..." என்றார் வைராகி.

"மண்ணாங்கட்டி..." -தாண்டவராயசாமி பதிலில் எக்காளம்.

"வேண்டாம்யா... என்னை நீ ரொம்பவே சீண்டறே?"

"நீ எங்களைக் கடத்திகிட்டு வரலாம்- நான் சீண்டக் கூடாதோ?"

"நான் ஒரு நல்ல காரியத்துக்காக இப்படிச் செய்துருக்கேன்."

"கடத்தறது நல்ல காரியமா..? என்னை விடு, இந்தச் சின்னப் பொண்ணு உனக்கு எதுக்குயா?"

"கிருஷ்ணனுக்கு ஒரு நெருக்கடியை ஏற்படுத்தத்தான்..."

"இப்போதைக்கு போலீஸ"க்குத்தான் நெருக்கடி! இந்த நிமிஷம் நாம இங்கே இருப்பதை மோப்பம் பிடிச்சிருக்கும் போலீஸ். வசமா நீ மாட்டப் போறே!"

"நான் பக்கத்துலேயே இருந்தப்ப பிடிக்காத அந்தப் போலீஸ், இங்க வந்து தானா என்னைப் பிடிச்சுடும்...?"

"அது அப்ப... இப்ப நான் உன்கூட இருக்கறதால, உன்னைப் பிடிக்கறது போலீஸ"க்கு ஒரு விஷயம் இல்லை..."

"அப்ப நீ என்னை எல்லா விதத்துலயும் மீறுவேன்னு சொல்..."

"மீறிகிட்டேதானே இப்பவும் இருக்கேன்?"

"இல்ல... நீ என் வித்தையை ஏதோ ஒரு சக்தியால தடுக்கறே.. அது என்ன சக்தின்னு நான் கண்டுபிடிக்கறேன்."

"ஒரே சக்திதான். மனோ தைரியம்..."

"அது சமாதில நீ என்கூட இருந்தப்போ எங்கே போச்சு?"

"எங்கேயும் போகல. நான்தான் உன்னைப் போகவிட்டு பிடிக்கத் தீர்மானிச்சேன். அதனால உனக்குக் கட்டுப்பட்ட மாதிரி நடிச்சேன்.."

"சாத்தியமே இல்லை... உன்கிட்ட ஏதோ இருக்கு..."

"மனோ தைரியம் மட்டும்தான். வேற எதுவும் கிடையாது. என்கிட்ட மட்டுமில்ல; இந்த உலகத்துலயும்..."

"இல்ல... நான் நம்பமாட்டேன்..."

"சரி நம்பாதே... உனக்குத் தெரிஞ்ச அவ்வளவு வேலைகளையும் காட்டு. ஆனா கொஞ்ச நேரத்துல நீ போலீஸ்ல சிக்கப் போறது மட்டும் நிச்சயம்..."

"நான் கிருஷ்ணதரிசனம் நிச்சயம்னு நினைச்சா, நீ நான் கைதாகறது நிச்சயம்க்றியே... உண்மையச் சொல், யார் நீ?"

"நான் உண்மையில ஒரு நாத்திகன். பொழுதுபோக்காக சமாதியைப் பாத்துகிட்ட ஒருத்தன். கிருஷ்ணன்கறது ஒரு அழகான கற்பனை. இந்த ஊர் விஷயம், அந்த ஏடுகள், அதோட உள்ளடக்கம் -எல்லாமே காவியப் பொய்கள்! ராமாயணம், மகாபாரதமே என் வரையில கற்பனையான இலக்கியங்கள்தான்"

"அப்ப கண்ணன் வரமாட்டானா? என்னை ரட்சிக்க மாட்டானா?"

கண்ணன்கற பேர்ல போலீஸ்காரர் யாராவது இருந்தா வரச் சொல்றேன். உன்னைப் பிடிச்சுகிட்டுப் போய் வைத்தியக்கார ஆஸ்பத்திரில சேர்க்கட்டும். அதுதான் என்னால பண்ண முடியும்!"

"இல்ல... நீ என்னை மூளைச்சலவை செய்யப் பாக்கறே... உண்மையைச் சொல்... ஏய் தாண்டவராயசாமி... யார் நீ?"

"எனக்குத் தெரிஞ்ச தாண்டவராயன்னா அது பாம்பு மேல நடனம் ஆடுற, அதாவது காளிங்க நர்த்தனமாடுற அந்தக் கிருஷ்ணனைத்தான் குறிக்கும். கரெக்ட். நீ ஏன் என்னையே அந்தக் கிருஷ்ணனா நினைக்கக் கூடாது?" - தாண்டவராயசாமி கேட்ட நொடி, வைராகியிடம் ஒரு சிலிர்ப்பு!



(அடுத்த இதழில் முடியும்)

53




மன்னாரிடம் வெளிப்பட்ட உணர்வுகளை விட்டலாச்சார்யாவும் கவனிக்கத் தவறவில்லை.

"ஸ்வாமி... நீங்க நினைக்கறத பகிர்ந்துக்கலாமே?" - என்று எழுத்தாணியும், ஏடுமாகக் கேட்டார்.

"இல்லை விட்டலா... எல்லாவற்றையும் எப்போதும் பகிர்ந்து கொள்ளவே முடியாது. அப்படிப் பகிர்ந்துகொண்டால் அதைவிட ஒரு ஆபத்தும் இந்த உலகத்தில் வேறு இல்லை. உண்மையில் மௌனம்தான் உலகின் தலை சிறந்த மொழி" என்று மன்னார் கூறியது, விட்டலாச்சார்யாரை சற்று அதிருப்திக்கு ஆளாக்கியது.

'இப்படிக் கண்ணன் பாரதப் போரின்போது நினைத்திருந்தால் கீதை எப்படிக் கிடைத்திருக்கும்?' என்கிற கேள்வி எழும்பியது. அதை கேட்டும் விட்டார்.

"கீதையை எத்தனைப் பேர் அப்படியே உள்ளது உள்ளபடி புரிந்து கொண்டுள்ளனர்? அதில் பல சர்கங்களுக்குப் பலர், பல மாதிரி வியாக்யானம் அளித்துள்ளனர். இது என் கருத்து, இப்படித்தான் இருக்க வேண்டும் என்று தங்கள் யூகங்களைத்தான் முன் வைத்துள்ளனர். அதிலேயே ஒரு தெளிவில்லை. அடுத்து கீதை அனைவருக்கும் பொதுவான ஒரு உபதேசம். அதை உதாரணமாக எடுத்துக் கொள்ளக்கூடாது" என்று கூறிய மன்னார், "விட்டலா! நான் வரும் அஷ்டமி நாளில் மகா சமாதி ஆகப் போகிறேன். கண்ணனிடம் இருந்து எனக்கு அழைப்பு வந்துவிட்டது. நானாக மூச்சை நிறுத்திக்கொண்டு பரமகதி அடையப் போகிறேன். இவ்வாறு நடந்துகொள்ள நான் மறுத்தாலும் என் பிராணன் போயே தீரும். இந்த உடம்பை விட்டுப் பிராணன் விடுபட, மிகக் குறைவாக ஒரு நொடி போதும். அதை மாரடைப்பு என்று இந்த உலகம் கூறும். என் போன்ற யோகிகள், எமனுக்கு வேலையே வைக்கக்கூடாது. அவன் வரும்போது உயிரை அவன் வசம் ஒப்படைக்கத் தயாராக இருக்க வேண்டும். அதுவே அச்சமற்ற நல்ல ஞானம்..." என்று மன்னார் கூறக் கூற, விட்டலாச்சார்யாரின் கண்களில் கண்ணீர்!

"நீ எதற்கு அழுகிறாய்..? கிருஷ்ண பக்தர்கள் அழவே

இந்திரா சௌந்தர்ராஜன்

கூடாது. கிருஷ்ணன் ஞானத்தின் அம்சமாய் வந்த இறைவன். அவனது பக்தர்கள் சர்வத்தையும் அவனிடம் விட்டு விட்டு, நடப்பதை அப்படியே ஏற்கப் பழகவேண்டும்..."

"இதைச் சொல்வது உங்களுக்கு எளிதாக இருக்கலாம். ஆனால் உங்களைப் பிரியப் போவதை எப்படி சகஜமாக ஏற்க முடியும்?"

"பிறப்பவர்கள் இறந்துதானே தீரவேண்டும்?"

"அதற்காக இவ்வளவு இளவயதிலா..?"

"கர்மத்தால் வந்த பிறப்பு இது. என் மூச்சுக் காற்றின் நீளம், இந்தப் பிறப்பில் இவ்வளவுதான்!"

"எங்களுக்கு இனி யார் வழி காட்டுவார்?"

"யாரை நம்பியும் யாரும் இல்லை விட்டவா! இந்த விசாரம், கண்ணீர் எல்லாமே மாயை. இதன் ஆயுள் சில தினங்கள்தான்! பின் எல்லாம் மாறிவிடும். அதன் பின்பும் மாற்றங்கள் வந்தபடியே இருக்கும்"

"அதற்காக நீங்கள் மகா சமாதி ஆவதை மகிழ்வோடு ஏற்பது என்பது எந்த வகையில் சரி?"

"மகிழ்ச்சியும் வேண்டாம்; துக்கமும் வேண்டாம். நடுவில் இரு. ஒரு வட்டத்தைப் போன்றது வாழ்வு. மையத்தில் இருக்க முடிந்தவனுக்கு இன்பம், துன்பம் இரண்டு சமதூரம்"

அந்த உரையாடலுக்குப் பிறகு விட்டலாச்சாரியார், கண்ணன் அளித்த புல்லாங்குழலை மன்னார் தன் வசமே தருவார் என்று எதிர்பார்த்தார். ஆனால் மன்னார் அத்துடன் தான் பிறந்து வளர்ந்த தாய்-தந்தையரின் வீட்டுக்குச் சென்றபோது, மன்னாரின் தாய்க்கும் மன்னார் சமாதி ஆகப் போகும் விஷயம் எட்டியிருந்தது.

அவள் கண்ணீரோடு, "எலே ராசா.. எனக்கு கொள்ளி போட்டு வழியனுப்ப வேண்டிய நீ, என்னை முந்திக்கப் போறியா? என்னய்யா இது நியாயம்?" என்று கேட்டாள்.

"அம்மா அதுதானம்மா விதி!"

"என்னடா பொல்லாத விதி? மார்க்கண்டேயன் சிவபெருமான் கிட்ட ஆயுசைக் கேட்ட மாதிரி, நீயும் உன் கிருஷ்ணன்கிட்ட ஆயுசைக் கேளேன்."

- அவள் கண்ணீரைத் தணிக்க அப்போதைக்கு ஒரு 'ஆனந்த பைரவி' ராகம் வாசிப்பதே சரி என்று மன்னார் மனதுக்குத் தோன்றியது. அதை வாசிக்கவும் அவ்வளவு பேரிடமும் ஒரு மயக்கம், ஒரு அமைதி!

பக்கத்தில் மன்னாரின் அண்ணன் மகனும், பழைய மன்னாரின் குழலை வைத்துக் கொண்டு மன்னார் வாசித்த ஆனந்த பைரவிக்கு முயன்றதுதான் விந்தை. தன் வசம் இருந்த குழலை அருகில் வைத்துவிட்டு அண்ணன் மகனை அழைத்து முத்தமிட்டுக் கொஞ்சும் போது, அவனது கைக்குழலும் நழுவி கீழே விழுந்து மன்னாரின் கிருஷ்ண புல்லாங்குழலோடு சேர்ந்துகொண்டது.

கொஞ்சி முடித்துவிட்டு 'தனது குழல்' என்று மன்னாரின் கரங்கள் எடுத்துக்கொண்டது தனது பழைய குழலை. அந்தக் கிருஷ்ண புல்லாங்குழல் திரும்ப அந்தக் குழந்தை வசமே போய்ச் சேர்ந்தது.

மகா ஞானியாகிவிட்ட நிலையில், எதிரில் நிற்பவரின் எதிர்காலத்தை எல்லாமும் கணிக்க முடிந்த அந்த த்ரிகால ஞானிக்கு அந்த மாற்றம் உணர முடியாமல் போனதற்கு கண்ணனின் திருவுள்ளம்தான் காரணமாக இருக்க வேண்டும்.

வெளியே வந்தவரை ஊரின் புதிய விராகவான ஐயங்கார், கண்களில் கண்ணீரோடு வணங்கி நின்றார்.

அந்தக் கண்ணீரே அவருக்கும் விஷயம் தெரிந்துவிட்டதை உணர்த்தியது.

"என்ன எஜமானரே..! நான் அடங்கப் போறதை நினைச்சு உங்களுக்கும் வருத்தமா?"

- மன்னார் இடையனாக இருந்தபோது அவரை அப்படித்தான் அழைப்பான். அதே அழைப்பு!

"நான் எஜமானா ஸ்வாமி? பகவானோட அனுக்ரகம் பெற்ற நீங்கதான் எங்க எல்லோருக்கும் எஜமானர்..."

"இல்லே எஜமானன்னா, கூட இருந்து எல்லாருக்கும்

காவலா இருக்கணும். நான்தான் போகப் போறேனே..!"

"உங்க ஸ்தூலம் வேணா போகட்டும்! சூட்சமம் எங்களை எப்பவும் ரட்சிக்கட்டும்.."

"அதுதான் அவன் விருப்பம்னா நான் அதைத் தடுக்க முடியுமா?"

"அதுதான் அவன் விருப்பம்.. அதுல சந்தேகம் எனக்கில்லை. ஸ்வாமி. அந்தக் கிருஷ்ண புல்லாங்குழலை என்ன செய்யறதா உத்தேசம்?"

- ஐயங்கார் கேட்கவும் மன்னாருக்குப் புரிந்தது.

"இதுல எதுவுமில்லை.. இதயச் சுத்திலதான் எல்லாம் இருக்கு"

"இருக்கலாம்.. ஆனா என் வரைல இது வேற, அந்தக் கிருஷ்ணன் வேற இல்லை"

"அப்ப இது வேணுமா உங்களுக்கு?"

"பகவான் அனுமதிச்சா கொடுங்கோ. என் குடும்பமும் இதைக் கொண்டாடும். எதிர்காலத்துல இசையுலகத்துக்கே இது காவலாவும் இருக்கும்"

- மன்னார் அடுத்த நொடியே மனதுக்குள் 'கிருஷ்ணா கொடுக்கட்டுமா?' என்று கேட்டிட.. புறத்தில் வெகுதூரத்தில் யாரோ யாரிடமோ, 'கொடுத்துருப்பா.. அதுதான் நல்லது' என்று வேறு எதற்கோ பேசிய பேச்சு காதில் விழ, 'நிமித்தம் மூலமா பதில் வந்தாச்சு.. பிடியுங்க.' என்று மன்னாரும் அந்தக் குழலை ஐயங்காரிடம் தந்தார். அதை அருகே இருந்து பார்த்த விட்டலாச்சார்யாருக்கோ திகைப்பு!

ஐயங்கார் சிரித்தபோது அந்த தூரத்து நபரே, 'கொடுத்ததைப் பத்திரமா வெச்சுக்கோ.. இது ரகசியமும் கூட' என்று தான் பேசிய விஷயத்துக்காகவே பேசிட.. ஐயங்காரும் புரிந்துகொண்டார்.

"இதை என் தலைமுறை பரம ரகசியமா வைத்துக் கொள்ளும். இது தொடர்பான ஏடுகளும் பத்திரமாகவே இருக்கும். இதை யார் களவாடவும் விடமாட்டேன். இது கிடைக்க நான் புண்ணியம் செய்துருக்கணும்.." என்று ஐயங்கார் ஆனந்தக் கண்ணீர் விட்டார்.

அதன்பின் கழுத்தில் நவரத்ன மாலையோடு மன்னாரும் மகாசமாதி ஆகிவிட, ஒரு பிருந்தாவனம் உருவானது. கூடவே அந்தக் குழல் எங்கே போயிற்று என்ற கேள்வியும் எழும்பி அலைய ஆரம்பித்தது.

விட்டலாச்சார்யாரும் தான் எழுதிய அவ்வளவு ஏட்டுக் குறிப்புகளையும், சப்த முகூர்த்தம், ஜீவ சரித்ரம் என்கிற சகலத்தையும் ரகசியமாகவே ஐயங்காரிடம் ஒப்படைத்துவிட்டு ஜீவ சமாதியிலேயே தனது இறுதிக்காலத்தைக் கழித்தார்.

காலமும் உருளத் தொடங்கியது..!

சிலிர்த்துப் போன பைராகி தாண்டவராயசாமியை உற்றுப் பார்த்தார். கண்களில் நீர் கோர்த்துக் கொள்ளத் தொடங்கியது. "என்னய்யா பாக்கறே..? கடவுள் தான் தூண்லயும் இருக்கார், துரும்புலயும் இருக்கார்ங்காங்களே... அப்ப எனக்குள்ள அந்தக் கண்ணன் இருக்கக் கூடாதா?"

- தாண்டவராயசாமிதான் திரும்பவும் கேட்டார். அதகளமான கேள்வி அது...

பைராகிக்குள் பெரும் சிலிர்ப்பு.

முருகன் ஔவைப்பாட்டியிடம், 'சுட்டபழம் வேண்டுமா? சுடாத பழம் வேண்டுமா என்று கேட்டதைப் போன்ற ஒரு கேள்வியல்லவா இது?

தனது மந்திர தந்திர சித்துகளும் வேலை செய்திடாத நிலையில் தனக்கு எதிரில் ஒருவர் நின்று இந்த அளவு கேட்கிறார் என்றால், நிச்சயம் சாதாரண ஆள் இல்லை இவர்' என்றே மனதும் எண்ணத் தொடங்கியது.

"உண்மையைச் சொல்... யார் நீ?"

"என்னய்யா கேள்வி? இப்போதைக்கு நான்தான் கண்ணன். என்னை கண்ணனா நினைச்சுகிட்டு இந்தப் பொன்னையும், அப்புறம் இந்த மாலை, இந்தப் பெட்டி எல்லாத்தையும் ஒழுங்காத் திருப்பிக் கொடு. அதுதான் உனக்கு நல்லது..."

- தாண்டவராயசாமி மிரட்டவே தொடங்கிவிட்டார். அதே வேளையில் அருகிலுள்ள மரத்தில் ஒரு சலசலப்பு. மரத்துப் பறவைகள் தெறித்துப் பறந்திட, சோள வயலுக்குள் யாரோ நடந்து வரும் அரவம்.

பைராகி முகத்தில் புதிதாக முதல் முறையாக அச்சம் சூழத் தொடங்கியது.

"எ...ஓ... யாரோ வராங்க... யாரது?" ஒரு சராசரி மனிதர்போல பதறிட, தாண்டவராயசாமி சிரித்தபடியே, "எல்லாம் வேற யாரா இருக்கும்...? போலீஸ்தான் இருக்கும். அந்த ஆஃபீஸர் ருத்ரா ஒரு எமகாதகப் பேர்வழி. பொதுவா இந்தக் காலத்து போலீஸே ரொம்ப சாமர்த்தியசாலிங்கதான். ஒரு குற்றவாளியைப் பிடிச்சே தீரறதுன்னு அவங்க முடிவு செய்துட்டா, அவன் செத்து எமலோகமே போய்ட்டாலும் அங்கேயும் வந்து நிப்பாங்க. இங்கதானா அவங்களால வர முடியாது..?"- தாண்டவராயசாமி கொஞ்சம் மிகையாகவே பேசிட அவர்கள் எதிரில் ஷ்யாமனாவும், அன்புமணியும் வந்து நின்றனர்.

"அட நீங்கதானா..? நான்கூட போலீஸோன்னு நினைச்சுட்டேன்"- என்றார் தாண்டவராயசாமி. இருவரிடமும் ஓடி வந்த மூச்சிரைப்பு. அன்புமணியைப் பார்த்த நொடி, கோமதி எழுந்து போய் அவனை ஒட்டிக்கொண்டு நின்றாள்.

ஷ்யாமனா முறைக்க ஆரம்பித்தாள். பைராகிக்கு வெலவெலக்கத் தொடங்கியது.

"வாம்மா வா... பாவம்மா இந்த ஆள்! கொஞ்சம் இந்த ஆளை பைத்தியக்காரன்னும் சொல்லலாம். கிருஷ்ணர்சாமி வந்தாதான் எங்களை விடுவேன்னு இந்த ஆள் ஒரே அடம் பிடிக்கறாம்மா! அந்த சாமி இந்தாளுக்கு தரிசனம் தர்ற அளவுக்கு இந்த ஆள் என்னத்தைப் பெரிசா கிழிச்சுட்டாரு? அப்படியே கிழிச்சிருந்தாலும் இதெல்லாம் கடவுள் நேரல வர்ற காலமாம்மா?

சாமி பொய், கடவுள் பொய், எல்லாமே மூடநம்பிக்கை, முட்டாள்தனம்னு சொல்ற பல இயக்கங்கள் இந்தப் பூமியில இருக்கும்போதே சபரிமலைக்கும், திருப்பதிக்கும், மெக்காவுக்கும், மதீனாவுக்கும் கூட்டம் கூட்டி ஏறுது! அங்க ஜெருசலம், வாடிகன்லயும் சரியான கூட்டம். இதுல சாமி நேரல வந்துட்டா அதை ஃபோட்டோ படமாவோ, வீடியோ படமாவோ எடுத்துட்டா இந்தக் கோயிலுங்கள்லாம் தாங்குமா?

'குடிக்கற தண்ணி பாட்டில் பதினஞ்சு ரூபா விக்கற

இந்தப் பூமியில வாழ்ந்து கிழிச்சது போதும். தலையையே காணிக்கையா கொடுத்து சாமிகிட்ட போய்டுவோம். அப்புறம் சொர்கத்துல உல்லாசமா எப்பவும் இருக்கலாம்'னு நினைக்க மாட்டாங்களா? இந்த ஆளுக்கு இதெல்லாம் எதுவுமே தெரியல... தனக்கு மட்டும் கிருஷ்ண தரிசனம் கிடைச்சே தீரணும்னு அடம்பிடிச்சு, பாரு இந்த ஊரையே இப்படி பாடாப்படுத்தி வெச்சிருக்கான்..."

- தாண்டவராயசாமி சொல்லச் சொல்ல ஷ்யாமளா விடமும் ஆவேசம் அதிகரித்துக் கொண்டே சென்றது.

"உங்களால... உங்களாலதான் என் அப்பா உயிரையே விட்டார். அவருக்கு அட்டாக் வர்றதுக்கே காரணம் நீங்கதான். போதாக்குறைக்கு இந்தப் பொண்ணு, பொட்டின்னு இஷ்டத்துக்கும் கடத்தி, தப்புக்கு மேல தப்பு பண்ணியிருக்கீங்க. கேட்டா கிருஷ்ண தரிசனத்துக்காகன்னா எனக்கு சிரிப்பு மட்டுமில்ல, அழுகையும் சேர்ந்து வருது..."

- ஷ்யாமளா சீறினாள். ஆனால் அவரோ கைகளைக் கூப்பியவராக, "அம்மா திரௌபதி... நீதான் புரியாமப் பேசறே! என் பரம்பரையே கிருஷ்ண தரிசனத்துக்கு முயற்சி செய்தது. ஆனா முடியல. தவமிருந்து அவனை அடைய எங்களுக்கு ஆயுள் பலம் போதாதும்மா. அதான் இப்படி ஒரு குறுக்கு வழியில இறங்கினேன். உன் அப்பா செத்துப் போனதுக்கு நான் காரணமில்ல. அவர் செய்த தப்புதான் காரணம்.

போலி கௌரவத்தைப் பார்த்து யக்ஞனை தெருவுல விட்டவன் உன் அப்பன். அவன் அம்மா அனாதையா சாகும்போதும், உன் அப்பா மானத்துக்குப் பங்கம் வராதபடி என்கிட்ட மட்டும் யக்ஞன் பொறப்புக்கு யார் காரணம்கறத சொல்லிட்டுச் செத்துப் போனான்?

நானும் என் உபாசனா சக்தியால கிருஷ்ண புல்லாங்குழல் உன் வீட்ல இருக்கறதத் தெரிஞ்சுகிட்டு, இந்த விஷயத்தைச் சொல்லியே உன் அப்பனை மிரட்டி வழிக்குக் கொண்டு வர நினைச்சேன். ஆனா உன் அப்பன் யக்ஞனை ஏத்துக்காம, 'அவன் என் பிள்ளை இல்லை'ன்னு சாதிச்சான். காரணம், அந்த கிருஷ்ண புல்லாங்குழல்!

'என் வம்சமே அழிஞ்சாலும் புல்லாங்குழலை இழக்க மாட்டேன்'கறதுதான் உன் அப்பன் நிலை. அவனை வழிக்குக் கொண்டு வரத்தான் நான் பலவிதமா நாடகம் ஆடினேன். நீயும் புராணம் படிச்சிருப்பே.. அதுல நேர் வழியில போனவங்களவிட குறுக்குவழியில போனவங்களத்தான் அந்தக் கடவுளும் வேகமா ஆட்கொண்டிருக்கும். துர்காதேவி காலடியில கிடக்கற மகிஷன், முருகன் கையில கொடியா பறக்கற சூரபத்மன், நரசிம்மத்தோட மடியிலேயே கிடந்த ஹிரண்யன்னு நான் அநேக உதாரணங்களைச் சொல்வேன். அதனால நான் நேராப் போக முயற்சி செய்யல. இந்த வழியைத்தான் தேர்ந்தெடுத்தேன்..."

- பைராகி கொஞ்சம் ஆவேசமாகப் பேசினாலும், அது தாண்டவராயசாமியை மேலும் சிரிக்கத்தான் விட்டது.

"ஐயா சிரிக்காதே..! இந்தச் சிரிப்பு எனக்கொண்ணும் சாதாரணச் சிரிப்பாவே தெரியில. தலை பக்கம் துரியோதனனும், கால்பக்கம் அர்ஜுனனும் உட்கார்ந்தப்போ கண் திறந்து பார்த்து முதல்ல துரியோதனனுக்கும், அப்புறம் அர்ஜுனனுக்கும் வாக்கு கொடுத்துட்டு சிரிச்ச அந்தக் கிருஷ்ணன் சிரிப்புக்கும், இந்த சிரிப்புக்கும் எனக்குப் பெருசா வித்தியாசம் தெரியலை"

"அப்ப நான்தான் கிருஷ்ணன்னு ஏத்துக்கறேன்னு சொல்லு.."

"அப்படித்தான்.. அப்படித்தான் எனக்கும் தோணுது..."

"தோணட்டும்.. ரொம்ப நல்லா தோணட்டும். எப்படியோ உன் பிரச்சினை தீர்ந்தா சரி! உனக்காக நான் புல்லாங்குழல்கூட வாசிக்கறேன். அச்சு அசல் கிருஷ்ணனாவே என்னை நீ பாத்துக்கோ... மனசால நினைச்சு, கண்ணால பாக்கறதுல யாருக்கு என்ன நஷ்டம்..?"



கேள்வியோடு கேள்வியாக அன்புமணி கையில் இருந்த அந்தப் புல்லாங்குழலை வாங்கிய... இல்லையில்லை பிடுங்கிய தாண்டவராயசாமி, உடனே அதை வாசிக்கவும் செய்தார்.

வாசிப்பா அது...!

தேனும் பாலும் தேட்டையாகக் கலந்து, திமுதிமுவென்று ஒரு ஆற்று வெளியில் ஓடி வந்தால் எப்படி இருக்கும்? அப்படி இருந்தது! சோளவயலில் அநேக சோளத்தட்டைகள் நிமிர்ந்து துவண்டு, ஒடிந்தது போலக் கிடந்தன. அவை எல்லாமும் நிமிர்ந்ததுதான் ஆச்சரியம்! ஷ்யாமளாவும், அன்புமணியும் கூட அந்த இசை இன்பத்தில் தாங்கள் யார், எதற்கு வந்திருக்கிறோம், நிற்கும் இடம் எது என்கிற சகலத்தையும் மறந்து போயினர்.

பைராகியின் கண்களிரண்டிலும் ஆனந்தக் கண்ணீரின் பிரவாகம். அனிச்சையாக கைகள் சாளக்ராமத்தையும், மூங்கில் பெட்டியையும் தூக்கி ஷ்யாமளா வசம் ஒப்படைத்தன.

**(இந்த இதழில் 'தந்திரம்' நிறைவடையவில்லை.**
**அடுத்த வாரம் நிறைவு பெறும்.)**



# கிருஷ்ண தந்திரம்! 54

அழுக்கேறித் தோளில் கிடந்த துண்டை எடுத்து, இடுப்பில் கட்டிக் கொண்டார் பைராகி. ஒரு சந்நிதியில் இறைவன் திருவுருவம் முன்னால் பணிவாக நிற்பவரின் பாவனை அவரிடம் தாண்டவமாடியது. அதே சமயம் அவர் எதிரில் தாண்டவராயசாமிக்குப் பதிலாக, பத்துத் தலை நாகமான காளிங்கனின் மேல் கிருஷ்ணன் நர்த்தனம் புரிவது போல ஒரு காட்சியும் தோன்றியது. 'அது மனப்பிரமையா..? இல்லை அந்தக் கிருஷ்ணன்தான் அவர் மேல் பரிதாபப்பட்டு காட்டித் தந்தானா?' என்பதெல்லாம் பில்லியன் டாலர் கேள்விகள்.

அவர் உதடிரண்டும், 'கிருஷ்ணா... கிருஷ்ணா' என்று துடித்தன.

"எடுத்தவரை பிறப்பு போதும்.... எச்சிலும், மலமுமான உடம்பு போதும். பசியும், தாகமுமான வாழ்க்கை போதும். திரும்ப ஒரு பிறப்பு வேண்டவே வேண்டாம். என் மொத்தக் கர்மமும் கண்ணா, இந்தக் காட்சியால் தீர்ந்தது. என்னை உன் வைகுண்டத்தோட சேர்த்

துக்கோ.

என் செயல்கள் தப்பானதாக இருக்கலாம். ஆனா நோக்கத்துல ஒரு பழுதும் கிடையாது. நான் வாழ ஆசைப்பட்டு நெருக்கடிகளைக் கொடுக்கல... உன்னைச் சேர ஆசைப்பட்டே எல்லாம் செய்தேன்.

நான் எங்க செய்தேன்? இதை எல்லாம் நீதான் செய்தே! நீ ஆட்டினே... நான் ஆடினேன். இப்பகூட நீதான் என் ஆட்டத்துக்கு முற்றுப்புள்ளி வைக்கப் போறே... நான் உன் கூடவே வந்துட்றேன்.... உன் கூடவே வந்துட்றேன்..."

பைராகியின் பேச்சின் முடிவில் அவர் உடம்பு சொத்தென்று தரைமேல் விழுந்தது. கண்களிரண்டும் திறந்த நிலையில் இருக்க, கைகளிரண்டும் தாண்டவராயசாமியின் கால்களின் மேல் இருந்தன.

தாண்டவராயசாமியும் வாசிப்பை நிறுத்தினார். குனிந்துப் பார்த்தார். அன்புமணி அவர் கண்களை மூடியவனாக, "போய்ச் சேர்ந்துட்டாரு..!" என்றான். ஷ்யாமளா



வுக்கு ஏனோ அழுகை வந்தது.

"என்னம்மா... இந்தக் கிறுக்கனை நினைச்சு அழுவறியா..? அழாதே... இவன் ஒரு வகையில கொடுத்து வெச்சவன். நாம என்ன நினைக்கறோமோ அது வாதான் ஆகறோம்னு இப்பல்லாம் ரொம்பப் படிச்சவங்க சொல்றாங்க இல்லையா...? அந்த வகைல இந்த ஆளுக்கு நானே கிருஷ்ணனா தெரிஞ்சிருக்கேன் போலயிருக்கு.

அதான் கிருஷ்ணனைப் பார்த்த சந்தோஷத்துல உயிர் போயிடிச்சு. அந்த ஆள் சொன்ன மாதிரி, வழிகள் தப்பா இருந்தாலும் நோக்கம் நல்லதா இருந்ததால இவன் விருப்பம் ஈடேறிடிச்சு. எப்படியோ இனி இந்த கண்ணமங்கலத்துக்கு எந்தச் சங்கடமும் கிடையாது..."

- தாண்டவராயசாமி குரலில் எந்த வருத்தமும் தெரியவில்லை. ஆனால் ஷ்யாமளாவுக்கும், அன்புமணிக்கும் மனது இளகிவிட்டது. அது அவர்கள் கண்ணீரில் புலப்பட்ட போது, முன்பே திட்டமிட்டதுபோல ருத்ராவும் வந்து சேர்ந்தார். பைராகியின் உடம்பைப் பார்த்து கொஞ்சமாய் ஸ்தம்பித்தார்.

"என்ன போலீஸ்காரய்யா... என்ன பாக்கறீங்க...? கிருஷ்ணனைப் பாக்கணும், கிருஷ்ணனைப் பாக்கணும்னு பெனாத்து பெனாத்துன்னு பெனாத்தியே உசுரை விட்டுட்டான். பைத்தியக்கார ஆளு!

கடவுள் இருந்தா காமியை வரவிட்டிருப்பாரா?

கும்பகோணத்துல பிஞ்சுக் குழந்தைங்களைத் தான் கருகவிட்டிருப்பாரா?

கத்துக் கேணப் பயங்க இந்த ஆள்..."

- தாண்வடராயசாமியின் தொனி, அழும் பார்ப்பது போலவும் இருந்தது; அப்பட்டமாய் ஒரு உண்மையைப் பேசுவது போலவும் இருந்தது.

"அம்மாடி... போ! போய் இதை எல்லாம் எங்க வைக்கணுமோ அங்க வெச்சு, அடுத்தடுத்து என்னென்ன செய்யணுமோ அதைச் செய். நான் பாத்துகிட்ட ஜீவ சமாதியிலேயே இந்தப் பைராகி உடம்பையும் போட்டு மூடிட்டேன்.

**இந்திரா சௌந்தர்ராஜன்**



'கிருஷ்ணா கிருஷ்ணா'ன்னு கிருஷ்ணனைப் பார்த்துட்ட மாதிரியே செத்துட்ட இந்த ஆளும் ஒரு சன்யாசிதானே? மன்னார்சாமியோடு இந்த ஆள் உடம்பும் சேர்ந்து என்ன செய்யணுமோ செய்யட்டும்.

காசிக்குப் போக நினைச்சு புறப்பட்ட நான், பாதி வழியில திரும்பி வந்தேன். இப்பப் போனா எல்லா தரிசனங்களையும் முடிச்சுட்டு தான் வருவேன்.

வந்து எப்பவும் போல பிருந்தாவனத்தை நானே பார்த்துக்கறேன். நம்பிக்கை உள்ளவங்களுக்கும் ஒரு போக்கிடம் வேணும்தானே?"

- தாண்வடராயசாமியின் பேச்சு, ருத்ராவுக்கு கொஞ்சம் புதிராகவும் இருந்தது. "ஐயா! நீங்க கடவுள் இருக்கார்னு சொல்றீங்களா? இல்ல, இல்லைன்னு சொல்றீங்களா..? எனக்கு ஒரே குழப்பமா இருக்குது" -என்றார்.

"இருந்தா நல்லா இருக்கும்னு ஒரு கருத்து உண்டுதானுங்களே..?"

“ஓ... அப்ப நீங்க அந்தக் கருத்து உடைய ஒரு வரா?”

“நான் ஒரு குழப்பக்காரங்க... உண்டென்பார்க்கு உண்டு; இல்லை என்பார்க்கு இல்லைங்கற ரகம் நான். விட்டுத்தள்ளுங்க. இனி இந்தப் பேச்சே கூடாது. அதான் எல்லா குழப்பங்களுக்கும் ஒரு முடிவு வந்துடுச்சே? நீங்களும் உங்கக் கடமையை ரொம்ப அருமையாச் செய்தீங்க. ஒரு போலீஸ்காரர் உங்களைப் போலத்தான் இருக்கணும்” -என்று அவருக்கும் ஒரு பாராட்டு பத்திரம் வாசித்தார் தாண்டவராயசாமி. அப்படியே, “அம்மாடி! அந்த யக்ஞனை இனியாவது



உன் சகோதரனா சேர்த்துக்கோ. உன் அப்பாவோட அஸ்தி கரைச்ச சட்டி, ஏரிக்கரையில ஒரு மூலையில கிடந்ததைப் பார்த்தேன். அதுல கொஞ்சம் போல அஸ்தி சாம்பலும் இருந்தது. அதை யக்ஞனைக்கொண்டே ஆத்துல கரைச்சுரு. உன் அப்பாவோட ஆத்மாவுக்கும் ஒரு சாந்தி கிடைச்ச மாதிரி இருக்கும்”- என்று ஷ்யாமளாவுக்கு அவரே ஒரு வழியைக் காட்டினார்.

அப்போது கோமளாமாமியும், மாஸ்டரும் ஒரு சேர ஓடி வந்தவர்களாக நின்றார்கள்.

“அட... இவங்களும் வந்தாச்சா..? எதுக்கு இந்த ஓட்டம்? இங்க தப்பா எதுவும் நடந்துடலை. எல்லாமே நல்லபடியா முடிஞ்சிடிச்சு...” என்றார்.

“இங்க ஒருவேளை எல்லாம் நல்லபடியா முடிஞ்சிருக்கலாம். ஆனா அங்க அந்த ராகவ், ரூம் பூட்டை உடைச்சு அந்தக் கிருஷ்ண புல்லாங்குழலோட ஊரைவிட்டே போய்ட்டான். அந்தப் பிள்ளையாண்டான் இப்படி நடந்துப்பான்னு நான் கொஞ்சம்கூட எதிர்பார்க்கலை...” என்றபோது ஷ்யாமளா முகத்தில் ஒரு வறட்டுச் சிரிப்பு.

“ஷ்யாமளா! அது உனக்கே தெரியாத ரகசியம். இந்தப் பைராகி தேடி அலைஞ்ச புல்லாங்குழல், நம்ம ஆத்துலதான் இருந்தது. எனக்கே உன் அப்பா சாகறதுக்கு முந்திதான் சொன்னார். ராகவ்தான் இந்த ஆத்து மாப்பிள்ளைன்னு நான் அவன்கிட்ட சொன்னேன். ஆனா அவன் துரோகியா மாறிட்டான். உனக்கு இது அதிர்ச்சியா இல்லையா?” -என்றும் கேட்டாள்.

“குழப்பல எதுவும் இல்ல மாமி... ஷாருதயத்திலதான் எல்லாம் இருக்கு. என்னக் கேட்டா, இதோ இந்தத் தாண்டவராயசாமி கையில இருக்கற இந்தப் புல்லாங்குழல்தான் உண்மையான கிருஷ்ண புல்லாங்குழல். சித்த முந்தி இவர் வாசிச்சப்போ இங்க இருக்கற செடி, கொடியெல்லாமும் மயங்கியதை நான் பார்த்தேன். இதே குழலால்தான் அன்புமணியும் அன்னிக்கு காம்பப்டிஷனுக்கு வாசிச்சு, பரிசும் கிடைச்சது.

இது இங்க இருக்கும்போது வேற எதால என்ன பண்ண முடியும்? எனிவே ராகவ் இனி என்னைத் தொந்தரவு பண்ணமாட்டான். நான் என் நண்பன் அன்புமணியோட இசை உலகத்துல பல புதிய முயற்சிகள் செய்ய, எனக்குத் தடையும் இருக்காது. என்ன மாஸ்டர் சொல்றீங்க...?”

-மாஸ்டர் மறுப்பேதும் கூறாமல் அவன் கைகளைப் பிடித்து கண்ணில் ஒற்றிக் கொண்டார்.

தாண்டவராயசாமியும் குழலை அன்புமணியிடம் தந்து, “அன்பு! ஷ்யாமளாவே சொல்லிட்டா, இதுதான் கிருஷ்ண புல்லாங்குழல்னு. பத்ரமா வெச்சுக்கோ. ஆனா ஒன்னு. இதோட முழு வீச்சை இப்போதைக்கு நான் கொஞ்சம் அடக்கிதான் உங்கிட்ட கொடுத்துருக்கேன். ஆனா என்னிக்காவது இந்தக் குழலோட ஜீவன் விஸ்வரூபம் எடுக்கும். அன்னிக்கு உங்கிட்ட ‘மணி’யோட தேடல் நின்னு போயிடும். அன்பு மட்டும்தான் மிஞ்சியிருக்கும். ‘அன்பே சிவம்’ மாதிரியே அந்த நிலை ‘அன்பே கண்ணன்!’. ஷ்யாமளா சொன்ன மாதிரி, இசை உலகத்துல

ஒரு கலக்கு கலக்கு.. மாஸ்டர் மாதிரி மேதைக ளும் கூடவே இருக்காங்க. இனி என்ன கவலை?
"

- தாண்டவராயசாமி போட்டுத் தாளித்தார். பைராகி உடம்பும் ஸ்ட்ரெச்சர் கொண்டு வரப் பட்டு அங்கிருந்து அகற்றப்பட்டது.

"போலீஸ்காரய்யா..! இயற்கையா மூச்சடங்கி உயிர் விட்ருக்கார் பைராகி. இவர் உடம்பை அறுத்துக் கூறு போடாம அப்படியே கொடுங்க. ஏன்னா என் வரைல இவர் ஒரு யோகி. நான் சொன்ன மாதிரி ஜீவசமாதில இவரை அடக்கம் பண்ண விரும்பறேன்" என் றார். ருத்ராவிடம் எந்த மறுப்பும் இல்லை!

சில மாதங்களுக்குப் பிறகு... அன்புமணிக்கு காசியில் இருந்து ஒரு கடிதம் வந்து சேர்ந்தது. அதில்,

"அன்புள்ள அன்புமணிக்கு!

**உன் மாமனான நான், கங்கை கரையில் ஜீவ சமாதி அடையப் போவதை விசுவநாதர் உணர்த்திவிட்டார். அதற்கு முன்னதாகவே இந் தக் கடிதம். இனி நமது மன்னார் ஜீவ சமா தியை நீதான் காபந்து பண்ணவேண்டும். அது நமது கடமை. ஊரில் ஒரு பைராகியால் ஏற்பட் டுள்ள குழப்பங்கள் எல்லாம் தீர்ந்திருக்கும் என்று நம்புகிறேன். தீராவிட்டால் மன்னார்சாமி மூலம் அந்தக் கிருஷ்ணனே வந்து தீர்த்து வைப்பான். என்னையும் அவன்தான் அழைக் கிறான். எனக்கு ஊருக்கு வரவே மனமில்லை.**
**'நான் காசிக்குப் புறப்பட்டதேகூட இதற்கா கத்தானோ?' என்று தோன்றுகிறது. வீட்டில் எல் லோருக்கும் என் ஆசிகள். கோமதிக்கு நல்ல இடம் அமையும், கவலைப்படாதே! கண்ணன் எல்லோரையும் காப்பாற்றுவான்.**

**இப்படிக்கு**
**தாண்டவன்."**

- கடிதத்தைப் படித்த அன்புமணிக்கு ஒரே குழப் பமாக இருந்தது. "கோமதி, தமிழழகன் திரும ணத்தை நடத்தி வைத்ததே தாண்டவராயசாமி தான். அப்படி இருக்க எந்த அர்த்தத்தில் இப் படி எழுதியிருக்கிறார் என்று புரியாதபடி தீவிர மாக யோசிக்கத் தொடங்கினான்.

"ஒரு வேளை சித்தம் கலங்கிவிட்டதா? அத னால்தான் 'இனி காலம் முழுவதும் ஜீவசமா தியை நானே பார்த்துக் கொள்கிறேன்' என்று சொன்னவர், கங்கையில் ஜீவசமாதி ஆக முடிவு செய்தாரா? ஆமாம்... அப்படித்தான் இருக்க வேண்டும். இருந்தாலும் இப்படி ஒரு முடிவை

**"அந்த ராகவ், ரூம் பூட்டை உடைச்சு அந்தக் கிருஷ்ண புல்லாங்குழலோட ஊரைவிட்டே போய்ட்டான். அந்தப் பிள்ளையாண்டான் இப்படி நடந்துப்பான்னு நான் கொஞ்சம் கூட எதிர்பார்க்கலை..."**

அவர் எடுத்திருக்க வேண்டாம்" என்றும் நினைத்தான்.

அன்புமணி இப்போது பழைய அன்புமணி இல்லை. குர்தா, ஜிப்பா என்று மினுக்குகிறான். வாரத்தில் நான்கு நாட்கள் கச்சேரி. ஷ்யாமளா வின் வாய்ப்பாட்டுக்கு வாசிக்கிறான்; தனியாக வும் வாசிக்கிறான்.

வீட்டு வாசலிலும் கார் வந்து நின்று, அதனுள் இருந்து ஷ்யாமளா சப்தித்தாள். மௌனமாய் போய் காரில் ஏறிக் கொண்டவன், கடிதத்தைக் கிழித்துப் போட முயன்றான். ஷ்யாமளா தடுத்து, 'இது என்ன கடிதம்?' என்று கேட்டு அவளும் வாங்கிப் படித்தவளாக அவனைப் போலவே குழம்பி, "அன்பு... சாமி என்ன இப்ப டிப் பண்ணிட்டார்?" என்றாள் அதிர்ச்சியோடு.

"அவருக்கு ஏதோ ஆயிடிச்சு ஷ்யாமளா. அதான் இப்படி ஒரு முடிவுக்கு வந்திருக்காரு. நல்லவேளை! தகவல் தந்துட்டாவது போனாரே?"

"சரி, இதை உன் அப்பாகிட்டச் சொன்னியா?"

"இல்ல... அப்பாவுக்குத் தெரிய வேண்டாம். ஏன், யாருக்குமே தெரியவேணாம். யாராவது கேட்டா அவர் காசியிலேயே ஐக்கியமாயிட்டா ருன்னு நான் சொல்லிக்கிறேன். இருந்தாலும் இந்த பக்தி ஆகாது ஷ்யாமளா. இப்படியா அது முடிவெடுக்க வைக்கும்?"

- கையில் அந்தக் கிருஷ்ண புல்லாங்குழலை இறுக்கமாகப் பிடித்துக்கொண்டே அன்புமணி கேட்டதில் ஆசைகளோடு வாழ விரும்பும் ஒரு மனிதனின் பெருமூச்சும், அவஸ்தையும் இருந் தன.

"ஆமா எந்த அர்த்தத்துல கோமதிக்கு நல்ல இடம் அமையும்னு எழுதியிருக்கார்..? அதான் அமைஞ்சு, அவ அமோகமா இருக்காளே?"

"எனக்கும் அதுதான் புரியல... இவர்தானே கல்யாணமே பண்ணி வெச்சார்?"

- கார் போய்க் கொண்டேயிருக்க, இருவருக் குள்ளும் அந்தக் கேள்வியின் விஸ்வரூபம்!

அந்தக் கேள்விக்குள் புரிபடாத ஒரு விடை யாக, கிருஷ்ணன் சிரித்துக் கொண்டே தெரிவ துபோல் இருந்தது.

(முற்றும்)